ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பொய்கையாழ்வார் அருளிய

# முதல் திருவந்தாதி

[பெரியவாச்சான்பிள்ளை அருளிய வ்யாக்யானம், அப்பிள்ளையுரை, ஸுதர்சனர் இயற்றிய விவரணங்களுடன் கூடியது.]

பதிப்பாசிரியர்:—

ஸ்ரீ உ. வே. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி
( ஸுதர்சனர் )
ஆசிரியர், 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்'
3. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.



விலை Rs. 60/- 1986. [தபாற்கூலி 1-50

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

## பொய்கையாழ்வார் திருநக்ஷத்ரத் தனியன்.

तुलायां श्रावणे जातं काञ्च्यां काञ्चनवारिजात्।
द्वापरे पाञ्चजन्यांशं सरोयोगिनमाश्रये॥

துலாயாம் ஶ்ராவணே ஜாதம் காஞ்ச்யாம் காஞ்சநவாரிஜாத் 1
த்$_3$வாபரே பாஞ்சஜந்யாம்ஶம் ஸரோயோகி$_3$நமாஶ்ரயே 11

काञ्च्यां सरसि हेमाब्जे जातं कासारयोगिनम्।
कलये यः श्रियःपत्यू रविं दीपमकल्पयत्॥

காஞ்ச்யாம் ஸரஸி ஹேமாப்$_3$ஜே ஜாதம் காஸாரயோகி$_3$நம் [
கலயே ய: ஶ்ரிய: பத்யூ ரவிம் தீ$_3$பமகல்பயத் 11

### வாழித்திருநாமம்.

செய்ய துலா வோணத்திற் செகத்துதித்தான் வாழியே
திருக்கச்சி மாநகரம் செழிக்கவந்தான் வாழியே
வையந்தகளி நூறும் வகுத்துரைத்தான் வாழியே
வனசமலர்க் கருவதனில் வந்தமைந்தன் வாழியே
வெய்ய கதிரோன் தன்னை விளக்கிட்டான் வாழியே
வேங்கடவர் திருமலையை விரும்புமவன் வாழியே
பொய்கைமுனி வடிவழகும் பொற்பதமும் வாழியே
பொன்முடியும் திருமுகமும் பூதலத்தில் வாழியே

## பெரியவாச்சான் பிள்ளை திருநக்ஷத்ரத் தனியன்.

सकलद्राविडाम्नायसारव्याख्यानकारिणम्।
श्रावणे रोहिणीजातं कृष्णसंज्ञमहं भजे॥

ஸகலத்$_3$ராவிடா$_3$ம்நாயஸாரவ்யாக்$_2$யாநகாரிணம் 1
ஶ்ராவணே ரோஹிணீஜாதம் க்ருஷ்ணஸம்ஜ்ஞமஹம் ப$_4$ஜே 11

### வாழித்திருநாமம்.

தண்மை சிங்கம் ரோகிணி நாள் தழைக்க வந்தோன்வாழியே
தாரணியில் சங்கநல்லூர் தானுடையோன் வாழியே
புன்மை தவிர் திருவரங்கர் புகழுரைப்போன் வாழியே
பூதூர் எதிராசர்தாள் புகழுமவன் வாழியே
மன்புகழ் சேர் சடகோபர் வளமுரைப்போன் வாழியே
மறைநாலின் பொருள்தன்னைப் பகுத்துரைத்தான் வாழியே
அன்புடன் உலகாரியர்தம் அடியிணையோன் வாழியே
அபயப்ரதராஜர் தாள் அனவரதம் வாழியே.

---

ஸ்ரீ:

ஸுதர்சன ஸ்தாபகர் கீர்த்திமூர்த்தி
ஸ்ரீ உ. வே. K. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி ஸாதித்த

## முதற்பதிப்பின் முகவுரை

"முத்தி தரும் நகரேழில் முக்கியமாம் கச்சி' என்றும் "காசி முதலாகிய நன்னகரியெல்லாம் கார்மேனி அருளாளர் கச்சிநகர்க்கு ஒவ்வா'' என்றும் பெருமை பெற்றதும், பிரமன் அசுவமேத யாகம் செய்த இடமுமாகிய ஸத்யவ்ரதக்ஷேத்ரத்தில் சொன்ன வண்ணம் செய்த பெருமாள் (யதோக்தகாரீ) ஸந்நிதியில் பொற்றாமரைப் பொய்கையில், பதுமமலரில், பரஞ்சோதியான பதுமநாபனின் பஞ்சாயுதங்களில் பிரதமாயுதமான பாஞ்சஜந்யாம்சராய், துலா (ஐப்பசி) மாதத்தில், திருவோணத்திருநாளில் பொய்கைப்பிரான் கவிஞர் போரேறு திருவவதரித்தருளினர். எம்பெருமானும் அவருடைய பாரிஷதர்களும் வருவதைப் படைபோர்புக்கு முழங்குமப் பாஞ்சசன்னியம் காட்டுவது போல், மற்ற ஆழ்வார்களுக்கு முன் அவதரித்து, இவ்வாழ்வார் மற்றவர்கள் அவதரிக்கப்போவதைக் காட்டியருளினர். "ஸ கோ$_4$ஷோ தா$_4$ர்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருத$_3$யாநி வ்யதா$_3$ரயத்'' [அந்த கோஷம் திருதராஷ்ட்ரபுத்ரர்களின் ஹ்ருதயங்களைப் பிளந்தது.] என்கிறபடியே பரமதஸ்தர்களின் ஹ்ருதயங்களைப் பரதத்வநிர்ணயம் செய்து பேதித்தார்.

"யோ ப்$_3$ரஹ்மாணம் வித$_3$தா$_4$தி பூர்வம்
யோ வை வேதா$_3$ம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை''

என்று ச்வேதாச்வதர உபநிஷத்தில் சொல்லியபடியே தன்னுடைய நாபீகமலத்தில் நான்முகனாகிய பிரமனை முதலில் படைத்துப் பண்டைநான்மறைகளை அவனுக்கு உபதேசித்ததைப் போல், இவ்வாழ்வாரையும் பத்மத்தில் அவதரிப்பித்துப் புது மறைகளாகிய தமிழ்வேதங்களை இவ்வாழ்வாருக்கு முதலில் உபதேசித்து, இவர் மூலமாக அவற்றை அவதரிப்பித்தருளினன் நாராயணன். சக்ரவர்த்தித்திருமகனாகிய பெருமாளால் திருவாராதனம் செய்யப்பெற்ற ரங்கநாதன் பெரியபெருமாள் என்ற பெயர் பெற்றதுபோல், பரகாலகவியினால் "செந்தமிழ் பாடுவார்'' என்றும், படைத்தான் கவியாகிய நம்மாழ்வாரால் "செஞ்சொற்கவிகாள்'' என்றும், "இன்கவிபாடும் பரமகவிகள்'' என்றும் பாடப்பட்ட பெருமையும் இவருக்கு உண்டு. முதலாழ்வார்கள் மூவரிலும் முதல்வர் இவரே. "திருவோணத்தான் உலகாளும் என்பார்களே'' என்று பெரியாழ்வாரால்

மங்களாசாஸனம் செய்யப்பட்டதும், பகவானுடைய நக்ஷத்ரமானதுமான திருவோணத்தில் திருவவதரித்த பெருமை இவ்வாழ்வார் ஒருவருக்கே உண்டு. ஒடித்திரியும் யோகியான இவர் யோகாப்யாஸத்தினால் ஆயிரக்கணக்கான வருஷங்கள் எழுந்தருளியிருந்து மண்ணுய்ய, மண்ணுலகில் மனிசருய்ய, வன்பெருவானகமுய்ய அமரருய்ய ஸ்ரீவைஷ்ணவதர்மத்தைப் பரவச் செய்து, ஜ்ஞானப்ரதமான பாஞ்சஜன்யத்தைப்போல், முதல் திருவந்தாதி பாடி, ஞானச்சுடர் விளக்கேற்றி வையத்தை வாழ்வித்தருளினார். ''அடியார்கள் குழாங்களை—உடன்கூடுவதென்றுகொலோ'' என்று ஆசைப்பட்டிருக்கும் அச்சுதன் இம்முதலாழ்வார்கள் மூவரும் இடைகழியில் சேர்ந்தபோது திருமகளும் தானுமாகக்கூடி நின்று நெருக்கிய காலத்தில் முதலில் பாடப்பட்ட பெருமையையுடைய பிரபந்தம் இது. திருப்பல்லாண்டைப்போல் 'எம்பெருமான் ஸேவைஸாதிக்கும்போது அவன் முன்னிலையில் பாடப்பெற்ற பெருமை இப்பிரபந்தத்துக்கும் உண்டு. ''வருத்தும் புறவிருள் மாற்ற எம் பொய்கைப் பிரான் மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி ஒன்றத் திரித்தன்றெரித்த திருவிளக்கு'' என்று திருவரங்கத்தமுதனார் திருவாய்மலர்ந்தருளிய இராமானுச நூற்றந்தாதிப் பாசுரத்தில் இப்பிரபந்தத்தின் பெருமை பேசப்பட்டது. சுடராழியானடிக்கே சூட்டிய சொல் மாலையாகிய இப்பிரபந்தத்தின் பெருமை ''ஆராயும் சீர்மைத்தோ'' என்னும்படி இருந்தாலும் இங்கு சுருங்கச் சொல்லப்படுகிறது. 'பண்ணாகிய பூமி மாயையின் மயக்கமே; நீர்நிறைந்த கடலும் கானல் நீரே; உலகமுழ் உருவெளித் தோற்றமேயொழிய உண்மையல்ல; ஒன்றே தத்துவம்; அதற்கு ரூபம், குணம், சேஷ்டிதங்கள் முதலிய ஒன்றும் கிடையாது' என்கிறவர்களுடைய பிடரியைப் பிடித்துத் தள்ளுவதுபோலிருக்கிறது 'வையம் தகளியா' என்கிற முதற் பாசுரம். 'ஜந்மாத்யஸ்ய யத:' எனப்பட்ட ஜகத்ஸ்ருஷ்டி முதலிய தொழிலுக்கு உபகரணங்களாகிய ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வங்களாகிய குணங்களுண்டென்று உணர்த்தப்படுகிறது. 'வையம்', 'வார்கடல்' என்று லீலாவிபூதி காட்டப்படுகிறது. 'சுடராழியான்' என்று அஸாதாரணமான திவ்யமங்கள விக்ரஹம் தெரிவிக்கப்படுகிறது. நித்யவிபூதியோகமும் உணர்த்தப்படுகிறது. 'சுடராழியானடிக்கே சூட்டினேன் சொன்மாலை' என்பதினால் பாமாலை பாடுவது பரமபுருஷார்த்தம் என்னும் மறையின் முழுப்பொருள்



மாந்தர்களுக்கு உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ''நெறி வாசல் தானேயாய் நின்றானை' என்று அவனே உபாயமும் உபேயமும் என்று உரைக்கப்படுகிறது. ''இறையும் நிலனும் இருவிசும்பும் காற்றும் அறைபுனலும் செந்தீயுமாவான்'' என்றும், மற்றும் பலவிடங்களிலும் ஸர்வசரீரியாயிருப்பவன் புருஷோத்தமனென்று காட்டப்படுகிறது. ''வாயவனையல்லது வாழ்த்தாது...காணா கண் கேளா செவி'' என்றும், ''திருமாலையல்லது தெய்வமென்றேத்தேன்'' என்றும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு முக்யலக்ஷணமான மறந்தும் புறந்தொழாமை கோஷிக்கப்படுகிறது.

இந்தப் பிரபந்தத்தில் பிரதிபாதிக்கப்படும் பொருளாகிய ஸ்ரீமந்நாராயணனின் பெருமையையும், எதிர்த்தட்டாக எடுக்கப்படும் எருத்துக்கொடியுடையானுடைய எளிமையையும், ''அரன் நாரணன் நாமம் ஆன்விடை புள் ஊர்தி, உரைநூல் மறை உறையும் கோயில்—வரை நீர், கருமமழிப்பளிப்பு கையது வேல் நேமி உருவமெரி கார்மேனி ஒன்று'' என்று பலவிதமாகப் பாரோரறியப் பாடியிருக்கிறார் பொய்கையாழ்வார். அழிப்பவன் அரன்; அளிப்பவன் அச்சுதன். அரனைவிட்டு அகல வேண்டும்; நாரங்கள் சேருமிடமான நாராயணனையே நாட வேண்டும். மூடாத்மாவான மாடு மலையாளிக்கு வாஹனம்; வேதஸ்வரூபியான விஹங்கராஜன் விஷ்ணுவுக்கு வாஹனம். பசுபதியைப் பேசுவது பௌருஷேயமான பாசுபதாதி ஆகமங்கள்; விஷ்ணுவை விளங்கவைப்பவை அநாதியான, அபௌருஷேயமான வேதங்கள். 'அறுத்துத்தா பொசுக்கித்தா' என்னும் கடின ஹ்ருதயமுடைய கண்ணுதலோனுக்கு இருப்பிடமோ கடினமான கயிலை மலை; 'பத்ரம் புஷ்பம் பலம் தோயம்' என்று, பக்தியுடன் கொடுக்கும் நீர்போரும் என்கிற நீர்மையையுடைய நாராயணனுக்கு இருப்பிடம் இனிமையான பாற்கடல். கல்நெஞ்சையுடைய கயிலையம்பதிக்குக் கொலைத்தொழில். காக்கும் தொழிலினன் கண்ணபிரான். சிவனுடைய ஆயுதமோ சூலாயுதம்; அகாரவாச்யனுடைய ஆயுதமோ அருளாழி. ''ரூபமேவாஸ்யைதந்மஹிமாநம் வ்யாசஷ்டே'' [இவனுடைய உண்மை மஹிமைகளை உருவமே உணர்த்தும்.] என்றும், ''அகத்தினழகு முகத்தில் தெரியும்'' என்றும் சொல்லுகிறபடியே ''பச்சைமாமலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்'' என்கிற விக்ரஹவைலக்ஷண்யமுடையவன். கண்டவர் கண்குளிர்ந்து கண்படைத்த பிரயோசனம் பெற்றோமென்று களித்துக் கூத்தாடும்படியாயிருக்கும் இவனுடைய

வடிவழகு. "காணிலும் உருப்பொலார்' என்று பூச்சாண்டி போலிருக்கும் புராரியின் நெருப்புக்கக்கும் உருவம் காணக்கண் கூசும்படியாயிருக்கும்.

"யத்கடாக்ஷாத₃யம் ஜந்துரடநர்ஜந்மதாம் க₃த:" என்று வாதிகேஸரி அழகியமணவாளஜீயர் அருளிச்செய்தபடியே அபார கருணாம்ருத ஸாகரரான *பெரியவாச்சான்பிள்ளை* இப்பிர பந்தத்திற்கு இரண்டு படியாக வியாக்கியானம் செய்யநேர்ந்தது நமது பாக்யமே. நாலாயிர திவ்யப்ரபந்தங்களுக்கு ஸபாதலக்ஷ க்ரந்தமாகிய பாரதக்கணக்கிலே வியாக்கியானம் செய்தருளிய நாலாயிரப்பெருக்கரான ஸ்ரீமத் க்ருஷ்ணஸூரி க்ருஷ்ணத்வை பாயனராகிய வியாஸரோ அல்லது ஸ்ரீஜயந்தியில் உதித்த ஸ்ரீகிருஷ்ணரேயோ என்று இவருடைய பிரபாவத்தைப் பார்த்த பெரியோர்கள் பணித்தருள்வர்கள். "விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திலிருந்து ஸ்ரீவைஷ்ணவர்களாக உள்ளவர்களுக்கு, திருப்பல்லாண்டு முதலிய திவ்யப்ரபந்தங்களையொழிய வேறு கதியில்லை; அன்றியும் பூர்வாசார்ய ஸம்ப்ரதாய பரம்பரையாக வந்த திவ்யப்ரபந்த தாத்பர்யங்களை அறிந்துகொள்வதற்கு, பெரியவாச்சான்பிள்ளை செய்தருளின வியாக்கியானங்களை யொழிய வேறு கதியுமில்லை. ஆகையால் ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லோரும் பெரியவாச்சான்பிள்ளை ஸம்பந்தப்பட்டு அவருக்கு சிஷ்யகோடிகளாகவேயிருப்பர்கள்." என்று ஆழ்வாராசாரிய வைபவக்ரந்தத்தில் பெரியவாச்சான்பிள்ளையின் பெருமை பேசப் பட்டிருக்கிறது.

कलिवैरिकृपापात्रं कारुण्यैकमहोदधिम्।
श्रीकृष्णप्रवणं वन्दे कृष्णसूरिमहागुरुम्॥

கலிவைரிக்ருபாபாத்ரம் காருண்யைகமஹோத₃தி₄ம்।
ஸ்ரீக்ருஷ்ணப்ரவணம் வந்தே₃ க்ருஷ்ணஸூரிமஹாகு₃ரும் ॥

[கலிவைரிதாஸரென்னும் திருநாமத்தையுடைய நம்பிள்ளையின் கருணைக்குப் பாத்ரபூதரும்,காருண்யத்திற்கு ஒரே கடலாயிருப்பவரும், ஸ்ரீக்ருஷ்ணனிடமே ஈடுபட்டிருப்பவருமான பெரியவாச்சான்பிள்ளை என்னும் பேராசிரியரை வணங்குகிறேன்.]

இங்ஙனம்,

விரோதி மாசியில் திருவோணம்.

தொண்டரடிப்பொடி,
**கி. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்.**

## விவரணத்தோடு கூடிய அப்பிள்ளையுரை முதற்பதிப்புக்கு ஸுதர்சனரின் முகவுரை

காலத்தாலும் பகவத்விஷயத்திலுண்டான ஈடுபாட்டாலும் முதன்மைபெற்றிருப்பவர்கள் முதலாழ்வார்கள். "இம் மூவர்க்கும் அர்த்தம் ஒன்றே; மூன்று ரிஷிகள்கூடி ஒரு வ்யாகரணத்திற்குக் கர்த்தாக்களானாற்போலே கர்த்ருபே₄த₃ முண்டேயாகிலும் அர்த்த₂சரீரம் ஒன்று: த்ரிமுநிவ்யாகரணம் என்னுமாபோலே." என்பர் பெரியவாச்சான்பிள்ளை. முதலாழ் வாரான பொய்கையாழ்வார் "வையம் தகளியா" என்று தொடங்கி உபயவிபூதிகளையும் அநுஸந்தித்து ஜ்ஞானம் பிறந்த நிலையை வெளிப்படுத்தினார். இரண்டாம் ஆழ்வாரான பூதத்தாழ்வார் "அன்பே தகளி" என்று தொடங்கி ஜ்ஞானம் முற்றி பக்தியாகும் நிலையை வெளிப்படுத்தினார். மூன்றும் ஆழ்வாரான பேயாழ்வார் பக்திமுற்றி அவனை யொழியச் செல்லாதபடியான பரமபக்தி விளைந்திருக்கும் நிலையை வெளிப்படுத்தினார். செய்யகதிரோனும் விளக்கையும், சுடராழி யாம் சுடர்விளக்கையும் ஏற்றினார் முதல்வர். ஞானச்சுடர் விளக்கேற்றினார் இரண்டாமவர். அவ்விளக்குகளைக்கொண்டு திருக்கண்டார் பொன்மேனிகண்டார் மூன்றுமவர். ஜ்ஞானத் தைச் சொல்லுகிறது முதல் திருவந்தாதி. ஜ்ஞானம்முற்றி பக்தியானபடி இரண்டாம் திருவந்தாதி. அந்த பக்தியாலே பரமபுருஷனை ஸாக்ஷாத்கரித்தபடியைச் சொல்லுகிறது மூன் றும்திருவந்தாதி. ஆக மூன்றுதிருவந்தாதிகளும் ஜ்ஞானபக்தி ஸாக்ஷாத்காரங்களைச் சொல்லுகின்றன.

"முதலாழ்வார்கள் மூவரும் பரத்வத்திலே மண்டியிருப் பர்கள்" என்பர்கள் பூர்வாசார்யர்கள். "*வையம் தகளி*'யிலே உப₄யவிபூ₄தியோடு கூடியவன் ஸர்வேச்வரன் என்று காட்டி ஞர் முதலாழ்வார். 'ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நார ணற்கு" என்று உப₄யவிபூ₄திகளையுடையவன் நாராயணனே என்று அருளி, நாராயணசப்தத்தைக்கொண்டே பரதத்வ நிர்ணயம் செய்தார் இரண்டாமவர். 'திருக்கண்டேன்" என்று தொடங்கி லக்ஷ்மீஸம்பந்தத்தைக் காட்டிப் பரதத்வ நிர்ணயம் செய்தார் மூன்றுமவர். இந்தக்கிரமத்தை அடி யொற்றியே நம்மாழ்வாரும் "உயர்வற" என்னும் முதல் திருவாய்மொழியிலே உப₄யவிபூ₄திகளோடு கூடியவன் ஸர்வேச் வரன் என்றார். 'விடுமின்" என்னும் இரண்டாம் திருவாய் மொழியிலே "வண்புகழ் நாரணன்" என்று நாராயணசப்தத்தைக் காட்டிப் பரதத்வ நிஷ்கர்ஷம் செய்தார். "பத்துடையடிய வர்க்கு" என்னும் மூன்றும் திருவாய்மொழியிலே "திருவுடை

யடிகள்" என்று லக்ஷ்மீஸம்பந்தத்தைக் காட்டிப் பரதேவதா நிர்த்தாரணத்தைச் செய்தருளினார். இவ்வண்ணமாக நம்மாழ்வாருக்கும் வழிகாட்டியாய் நின்றவர்கள் முதலாழ்வார்கள். "அரன் நாரணன்" "முதலாவார் மூவரே அம்மூவருள்ளும் முதலாவான் மூரிநீர்வண்ணன்" "மாமதிள் மூன்றெய்த இறையான் நின்னாகத்திறை" "திருமாலையல்லது தெய்வமென்றேத்தேன்" "ஏற்றான் புள்ளூர்ந்தான்...காப்பு" "பொன் திகழும் மேனி" [முதல்திருவ] "கண்ணுதலோனன்றே தொழுந்தகையார்" "பிறையிருந்த செஞ்சடையான்...மாலைக் குறையிரந்து" "எரியுருவத் தேறேறி பட்ட விடுசாபம்... சொல்லின் கதை" "மாகடல் நஞ்சுண்டான் தனக்கும் இறையாவான் எங்கள் பிரான்" [இர-திருவ] "மாமலரான் வார் சடையான் என்றிவர்கட்கு எண்ணத்தானாமோ இமை" [மூன்-திருவ] என்று தேவதாந்தரங்களின் அபரத்துவத்தைக் காட்டிக் களையெடுப்பதிலும் உறையிலிடாதவரான திருமழிசைப்பிரானாகிற நாலாம் ஆழ்வாருக்கும் வழிகாட்டியாய் நின்றனர் இம்முதலாழ்வார்கள். இவர்கள் பரத்வத்திலே மண்டியிருக்குப்படி இதுவாகும். இவ்வண்ணமாக எல்லா ஆழ்வார்களுக்கும் வழிகாட்டியாயிருக்கும் முதன்மையைப் பெற்றிருக்கையாலும் முதலாழ்வார்கள் என்னும் பெயர் இவர்களுக்குப் பொருத்தமுடையதாகிறது,

"முதலாவார் மூவரே அம்மூவருள்ளும் முதலாவான் மூரி நீர்வண்ணன்" என்று ஆழ்வார் மும்மூர்த்திகள் விஷயத்தில் அருளியது இவ்வாழ்வார்கள் விஷயத்திலும் பொருந்தியிருக்கின்றது. ஆழ்வார்களுக்குள் முதலாவார் மூவராகவேயிருக்கின்றனர். அம்மூவருள்ளும் மூரிநீராகிற பொய்கையைத் தமக்கு நிரூபகமாகச் (வெண்ணமாகக்)கொண்ட பொய்கையாழ்வார் முதலானவராயிருக்கிறார். இவருக்குப் பலவிதங்களில் முதன்மையுண்டு. ஆழ்வார்கள் அனைவரிலும் முதலில் அவதரித்தவரிவர், திவ்யப்ரபந்தங்கள் எல்லாவற்றுக்கும் மூலமாய் முதலாவதான திருவந்தாதியை அருளிச்செய்தவர் இவர். முதலாவானான மூரிநீர்வண்ணனின் முதன்மைபெற்ற நக்ஷத்திரமான திருவோணத்தில் அவதரித்த ஆழ்வார் இவர் ஒருவரே. "முத்திதரும் நகரேழில் முக்கியமாம் கச்சி" என்கிறபடியே அவதரித்த நகரத்தாலும் முதன்மைபெற்றவர் இவரே. "ஶங்க2சக்ரக3தா3த4ர:" [ரா-யு] "ஶங்க2சக்ரக3தா3பாணே." [பார-ஸபா] "சங்குசக்கரங்கள்" [திருவாய்7-2-1] முதலான பிரமாணங்களின்படி பஞ்சாயுதங்களில் பிரதமா



வுதமான பாஞ்சஜங்யத்தின் அம்சமாய் அவதரித்த முதன்மையும் இவருக்குண்டு; இவர் அருளிய திருவந்தாதியின் முதன்மை "வருத்தும் புறவிருள் மாற்ற எம்பொய்கைப் பிரான் மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி ஒன்றத் திரித்தன்றெரித்த திருவிளக்கு" என்று அமுதனாரால் அருளிச்செய்யப்பட்டது.

இத்தகைய திருவந்தாதியானது பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளையருளிய பரமபோ4க்3யமான வியாக்கியானத்துடன் எந்தையாரால் விரோதி வருடம் மாசியில் திருவோணத்தில் வெளியிடப்பெற்றது. [இப்போதும் கிடைக்கும். விலை ரூ. 2-50.] பெரியவாச்சான்பிள்ளையின் திருவந்தாதிவ்யாக்2யானங்கள் அதிக3ம்பீ4ரமாகவும், அதிஸங்க்3ரஹமாகவும், சில விடங்களில் பொருளுணர அரியதாகவுமிருக்கையாலே மாமுனிகளின் திருவடியாய் அஷ்டதிக்கஜங்களில் ஒருவரான அப்பிள்ளை என்னும் ஆசார்யர் அருளிய அப்பிள்ளையுரையையும், இரண்டு வியாக்கியானத்தின் ஸாரத்தையும் உள்ளடக்கி எளியநடையிலேயானதொரு விவரணத்தையும் வெளியிட்டால் லோகோபகாரமாகும் என்று கருதி இந்நூல் ஸுதர்சனத்தில் தொடர்ந்து வெளியிடப்பெற்று சுபக்ருத் ஐப்பசித் திருவோணத்தில் நிறைவுபெறுகிறது. இரண்டாவது மூன்றாவது திருவந்தாதிகள் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்தோடும், அப்பிள்ளையுரையோடும், நமது எளியநடை விவரணத்தோடும் இனி ஸுதர்சனத்தில் வெளியிடப்பெற்றுச் சில வருஷங்களில் நிறைவுபெறும்,

அப்பிள்ளையுரையின் பழைய தமிழ்த் தெலுங்குலிபிப் பதிப்புகளில் பல பிழைகள் உள்ளன. பொழிப்புரையாய் அமைந்த அப்பிள்ளையுரை தாறுமாறாகப் பிரிக்கப்பட்டுப் (பழைய பதிப்புகளில்) பதவுரையாகத் தரப்பெற்றுள்ளது. இக்குறைகள் ஒன்றும் இல்லாதபடி திகழ்கின்றது இப்பதிப்பு. இதிலும் குறைகளிருந்து மஹான்கள் காட்டினால் நன்றியுடன் மறுபதிப்புகளில் திருத்தி வெளியிடுவோம். இப்பதிப்பு கோல்விழுக்காட்டாலே பொய்கையாழ்வார் அவதரித்த ஐப்பசியில் திருவோண நன்னாளிலேயே நிறைவு பெற்றது பரமபுருஷனுடைய நிர்ஹேதுக கிருபையை வெளிப்படுத்துகிறது.

சுபகிருத், ஐப்பசித் திருவோணம். (5—11—62)

இங்ஙனம்
அன்பர் தாள் தூளி,
ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.

ஸ்ரீ :



ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# இப்பதிப்புக்கு ஸுதர்சனரின் முன்னுரை

பொய்கையாழ்வார் அருளிய முதல் திருவந்தாதிக்குப் பெரியவாச்சான் பிள்ளை அருளிய வ்யாக்யானம் விரோதி வருஷம் மாசித் திருவோணத்தில் எந்தையாரால் வெளியிடப்பெற்றது; (இப்போதும் கிடைக்கிறது விலை ரூ. 2-50) சுபகிருத் ஐப்பசித் திருவோணத்தில் அப்பிள்ளையுரையோடும், அடியேனது விவரணத்தோடும் முதல் திருவந்தாதி வெளியிடப்பெற்றது: பல வருடங்களுக்கு முன்பே இது தீர்ந்துவிட்டது. அதற்குப்பின் இரண்டாவது மூன்றுவது திருவந்தாதிகள் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தோடும், அப்பிள்ளையுரையோடும், விவரணத்தோடும் ஸுதர்சனத்தில் தொடர்ந்து வெளியிடப்பெற்று தனிப் புத்தகமாகவும் வெளியாயின. நான்முகன் திருவந்தாதியும் அவ்வண்ணமே வெளியாயிற்று. முதல் திருவந்தாதியையும் இப்படியே வெளியிடவேண்டும் என்னும் எண்ணம் இருந்தது. ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியின் நியமனத்தால் உபயவேதாந்த ஆசார்ய பீட பத்திரிகையில் அவ்வண்ணம் தொடர்ந்து வெளியிடப்பெற்று இப்போது புத்தகவடிவம் பெறுகிறது. முதல் நான்கு திருவந்தாதிகளுக்கும் வ்யாக்யானமும், உரையும், விவரணமும் இப்போது தனிப் புத்தகமாகக் கிடைக்கும் நிலை ஏற்பட்டுள்ளது. திவ்யப்ரபந்த வ்யாக்யானங்களில் நம்மால் வெளியிடப்பெற்று இப்போதும் கிடைப்பவற்றின் விபரத்தை அடுத்தபடியுள்ள நமது வெளியீடுகளின் விலைப்பட்டியலில் காணலாம்.

அக்ஷய
ஆனி ஸ்வாதி
16—7—86

இங்ஙனம்,
தொண்டர் அடிப்பொடி
ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்

## ஸுதர்சனம் காரியாலயத்தில் கிடைக்கும் புத்தகங்கள் :-

ஆழ்வார் அருளிச்செயல்களுக்குப் பூர்வாசார்யர்களின் வ்யாக்யானங்கள்
(பதவுரை அரும்பதவுரை ப்ரமாணத்திரட்டுகளோடு கூடியவை)

| | க்ரந்தங்கள் | விலை | தபால் |
|---|---|---|---|
| 1. | முதல் திருவந்தாதி வ்யாக்யானம் | 2.50 | .50 |
| 2. | திருப்பள்ளியெழுச்சி வ்யாக்யானம் | 1.50 | .40 |
| 3. | பகவத்விஷயம் I (முதலிரண்டு திருவாய்மொழிகள்) | 37.00 | 5.00 |
| | ஷை II பாகம் (முதற்பத்து 3-10 ,, ) | 42.00 | 6.00 |
| | ஷை III பாகம் (இரண்டாம்பத்து முழுவதும்) | 52.00 | 7.00 |
| | II ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கு எளியநடை விவரணத்துடன் கூடிய பூர்வாசார்யர்களின் வ்யாக்யானங்கள் | | |
| 1. | சிறிய திருமடல் வ்யாக்யானம் | 4.50 | .75 |
| 2. | பெரிய திருமடல் வ்யாக்யானம் | 7.50 | 1.50 |
| 3. | முதல் திருவந்தாதி வ்யாக்யானம் | 18.00 | 1.50 |
| 4. | இரண்டாந்திருவந்தாதி வ்யாக்யானம் | 6.00 | 1.00 |
| 5. | மூன்றுந்திருவந்தாதி வ்யாக்யானம் | 6.00 | 1.00 |
| 6. | நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம் | 7.50 | 1.00 |
| 7. | திருவெழுகூற்றிருக்கை வ்யாக்யானம் | 1.50 | .40 |
| 8. | திருமாலை வ்யாக்யானம் | 16.00 | 2.00 |
| | III அருளிச்செயல்களுக்கு எளியநடை விவரணம் மாத்திரம் | | |
| 1. | திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 3.00 | .60 |
| 2. | சங்கத் தமிழ்மாலை முப்பது—திருப்பாவை விளக்கவுரை | 1.50 | .40 |
| | IV நமது மற்ற வெளியீடுகள் | | |
| 1. | ஸ்தோத்ரரத்நசது:ஶ்லோகீஜிதந்தேவ்யாக்யானங்கள் | 12.00 | 1.00 |
| 2. | சது:ஶ்லோகீ வ்யாக்யானம் [நாயனாராச்சான்பிள்ளை] | 3.75 | .75 |
| 3. | கத்ய வ்யாக்யானங்கள் | 6.75 | 1.25 |
| 4. | ஸ்ரீராமாயண தனிச்லோகம் [விவரணத்துடன்] I Part இல்லை | | |
| | ஷை இரண்டாம் பாகம் [விவரணத்துடன்] | 10.50 | 2.00 |
| 5. | பாசுரப்படி ராமாயணம் | 0.25 | — |
| 6. | முமுக்ஷுப்படி வ்யாக்யானம் | 4.50 | .75 |
| 7. | ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் முதலியவை | 18.00 | 2.50 |
| 8. | ஸ்ரீவசநபூஷண வ்யாக்யானம் 4-அரும்பதவுரைகளுடன் முதல்பாகம் | 9.00 | 1.50 |
| 9. | சாரீரககாரிகாவளீ [இரண்டாம் பாகம்] | 7.50 | 1.50 |
| 10. | ஆறுவார்த்தை | 0.50 | |
| 11. | உபயவேதாந்த ஐககண்ட்யம் | 3.00 | .60 |
| 12. | வடுகநம்பி அருளிய யதிராஜவைபவம் [விவரணத்துடன்] | 1.50 | .40 |
| 13. | திருக்குறள் ஸம்ஸ்க்ருதஶ்லோக மொழிபெயர்ப்புடன் | 10.00 | 2.00 |
| 14. | [போதாயந] ஸந்த்யாவந்தநம் பதவுரையுடன் | 1.00 | .30 |
| 15. | [போதாயந] உபாகர்மவிதி | 0.75 | .30 |
| 16. | அருளிச்செயல் ரஹஸ்யம் [வரதாசார்யஸ்வாமி தொகுத்த பூஷணத்துடன்] | 3.75 | .75 |
| 17. | புருஷஸூக்த வ்யாக்யானம் | 2.25 | .40 |
| 18. | நாராயணஸூக்த வ்யாக்யானம் | 1.50 | .40 |
| 19. | ஸ்ரீஸூக்த வ்யாக்யானம் | 3.00 | .75 |
| 20. | பூநீளா விஷ்ணுஸூக்த வ்யாக்யானங்கள் | 2.50 | .50 |
| 21. | தேஹளீஶ ஸுப்ரபாதம் | 0.50 | .25 |
| 22. | சாதிமத ஆராய்ச்சி [முதல்பாகம்] | 6.00 | 1.00 |

| | | | |
|---|---|---|---|
| 23. | ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹஸ்தவம் | 0.75 | .25 |
| 24. | விஷ்ணுசித்தவிஜயம் [முதல் பாகம்] | 7.50 | 1.25 |
| | ஷை [இரண்டாம் பாகம்] | 10.00 | 1.50 |
| | ஷை [மூன்றும் பாகம்] | 16.00 | 2.00 |
| 25. | ஸாத்விகவிஜய ஸர்வஸ்வம் | 1.25 | .40 |
| 26. | ஸந்த்4யாவந்த3நப4ாஷ்யம் | 4.50 | .75 |
| 27. | மகரநெடுங்குழைக்காதர் பாமாலையந்தாதி | 2.25 | .50 |
| 28. | ஸ்ரீகேசவமணிமாலை | 1.25 | .40 |
| 29. | அறுபதுக்கு அறுபது (ஸுதர்சனர் வைபவம்) | 1.25 | .40 |
| 30. | ஸித்3தே4ாபாயவிஜயம் & [ஸ்ரீரங்கராஜவிஜயம்] | 4.50 | .75 |
| 31. | திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி மூலம்மட்டும் | 0.75 | .25 |
| 32. | திருவாய்மொழி நூற்றந்தாதி—மூலம்மட்டும் | 0.50 | .25 |
| 33. | கீ3தா வ்யாக்2யானம் முதல்பாகம் (ஆறு அத்தியாயம்) | 15.00 | 5.00 |
| | ஷை இரண்டாவது பாகம் (7,8 அத்தியாயம்) | 12.00 | 2.00 |
| | ஷை மூன்றுவது பாகம் (9 முதல் 12 அத்தியாயங்கள்) | 20.00 | 3.00 |
| 34. | அக்3நிஹோத்ரியும் வைணவமும் | 3.75 | .75 |
| 35. | சோலைமலைக்குறவஞ்சி | 5.25 | 1.00 |
| 36. | ஸ்ரீவைஷ்ணவ மகாநாடுமலர் | 1.50 | .40 |
| 37. | ஸுதர்சனர்பதில் (ஏழு மதகங்கள்) | 25.50 | 3.00 |
| | ,, எட்டாவது மதகம் | 5.00 | .75 |
| 38. | What is Visishtadvaita System of Philosophy? (English) | 1.50 | .45 |
| 39. | பராசரவிசிஷ்ட பரமதர்ம சாஸ்திரம் | 4.50 | .75 |
| 40. | இராமலிங்க ப்ரதிஷ்டை | 0.75 | .25 |
| 41. | ஆண்டாள் சந்திரகலாமாலை | 3.00 | .60 |
| 42. | யதீந்த்ரமததீபிகை—ஸந்மதகாரிகாவளீ விவரணம் | 10.00 | 1.50 |
| 43. | சங்ககாலத் தமிழர் சமயம் | 1.50 | .40 |
| 44. | ஸ்ரீராமாநுஜ அஷ்டோத்தர சதநாம ஸ்தோத்ரம் | 1.50 | .40 |
| 45. | சரமகுருநிர்ணயம் [ப்ரமாணத்திரட்டுடன்கூடியது] | 1.50 | .40 |
| 46. | மோக்ஷோபாய ப்ரதீ3பிகை— வைகாநஸ ஸித்3த4ாந்த ஸாரம் | 10.00 | 1.50 |
| 47. | நித்யாநுசந்தானம்—சாதா ரூ. 6.00 பைண்டு | 7.00 | .75 |
| 48. | வார்த்தாமாலை (விவரணத்துடன்) | 20.00 | 2.50 |
| 49. | ப்ரபந்நாம்ருத தர்ப்பணம் | 25.00 | 3.00 |
| 50. | கோதையும் சங்கத்தமிழும் | 0.75 | .25 |
| 51. | பரப்பிரம விவேகம் | 5.00 | .75 |
| 52. | ஸ்ரீவைகுண்டஸ்தவவுரை [ஸ்ரீ P.B.A. ஸ்வாமி இயற்றியது] | 8.00 | 1.50 |
| 53. | சங்ககாலத் தமிழர் சமயமே கம்பனின் சமயம் | 8.00 | 1.00 |
| 54. | ஸ்ரீவைஷ்ணவமத விஜயம் | 1.50 | .30 |
| 55. | விஜயத்3வய ஜயத்4வஜம் | 1.00 | .30 |
| 56. | புருஷகாரம்—சிறையிருந்தவள் ஏற்றம் | 1.50 | .30 |
| 57. | மணிவிழா மலர் (மலிவுப் பதிப்பு ரூ 10 00) உயர்தரப் பதிப்பு | 20.00 | 2.00 |
| 58. | கத்யத்ரயம் (மூலம் மட்டும்—தமிழ்) | 1.00 | .25 |
| 59. | கத்யத்ரயம் (மூலம் மட்டும்—தமிழ், ஸம்ஸ்கிருதம்) | 2.00 | .40 |
| 60. | திருவாய்மொழிக்கலம்பகம் | 8.00 | 1.50 |
| 61. | முமுக்ஷுப்படி, ஸ்ரீவசனபூஷணம், ஆசார்யஹ்ருதயம் (மூலம் மட்டும்) | 4.00 | .75 |





# பாசுரங்களின் ஸூசிகை



பாசுரங்களின் ஸூசிகை





ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# முதல் திருவந்தாதி

பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த

## தனியன் வ்யாக்யாநம்

முதலியாண்டானருளிச்செய்த தனியன்

கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்துதித்த
பொய்கைப் பிரான்கவிஞர் போரேறு—வையத்
தடியவர்கள் வாழ வருந்தமிழ் நூற்றந்தாதி
படிவிளங்கச் செய்தான் பரிந்து.

### தனியன் பதவுரை

**கைதைசேர்** — தாழைகள் நெருங்கிச் சேர்ந்திருக்கிற, **பூம்பொழில் சூழ்**—அழகிய சோலைகளாலே சூழப்பட்ட, **கச்சிநகர்**—காஞ்சீநகரத்தில், **வந்து உதித்த**—திருவவதரித்த, **பொய்கைப் பிரான்**—பொய்கையாழ்வார் என்னும், **கவிஞர் போர் ஏறு**—கவி ரிஷப$_4$மானவர், **வையத்து**—இவ்வுலகிலுள்ள, **அடியவர்கள்**—அடியார்களான ஸ்ரீவைஷ்ணவர்கள், **வாழ**—வாழும்படியாக, **அருந் தமிழ் நூற்றந்தாதி**—(அர்த்த$_2$ நிர்ணயம்பண்ண) அரிதாய், தமிழிலுலான நூற்றந்தாதியை, **பரிந்து**—அன்புடன் கூடியவராய், **படி**—பூ$_4$மியிலே, **விளங்கச் செய்தான்**—பிரகாஶிக்கும்படி செய்தருளினர்.

**அவதாரிகை:**— (கைதைசேரித்யாதி$_3$) இவ்வாழ்வார்—"क इति ब्रह्मणो नाम तेन तत्राञ्चितो हरिः। तस्मात्काञ्चीति विख्याता पुरी पुण्यविवर्धनी ॥" (க இதி ப்$_3$ரஹ்மணோ நாம தேந தத்ராஞ்சிதோ ஹரி: । தஸ்மாத் காஞ்சீதி விக்$_2$யாதா புரீ புண்ய விவர்த்த$_4$நீ ॥) என்னும்படியான காஞ்சீபுரியில் புஷ்கரிணியில் புஷ்கரத்திலே விஷ்ணு நக்ஷத்ரத்திலே ஆவிர்ப்ப$_4$வித்து தி$_3$வ்ய ப்ரப$_3$ந்த$_4$ தீ$_3$பமுகே$_2$ந லோகத்தில் அஜ்ஞாநாந்த$_4$காரத்தைப் போக்கி வாழ்வித்தபடியைச் சொல்லுகிறது இதில்.

**வ்யாக்யானம்:—** (கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சி நகர் வந்துதித்த பொய்கைப்பிரான்) இத்தால் இவர் ஜந்ம வைப₄வம் சொல்லுகிறது. (கைதை) கேதகை - தாழை. "கைதைவேலிமங்கை" என்றும், "கொக்கலர்தடந்தாழை வேலி" என்றும் சொல்லுமாபோலே. அதுதான் நீர்நிலங்களிலேயாயிற்று நிற்பது. "தாழை தண்ணும்பல தடம் பெரும் பொய்கைவாய்" என்னும்படி, 'அம்பூந்தேனிளஞ் சோலை' சூழ்ந்த கச்சிவெஃகாவில் பொய்கையிலே எம்பெருமான் பொன்வயிற்றில் பூவேபோன்ற பொற்றாமரைப் பூவிலே ஐப்பசியில் திருவோணநாளாயிற்று இவரவதரித்தது. பத்₃மஜனை பூவனைப்போலேயாயிற்று பொய்கையாரான இவர் பிறப்பும். (வந்துதித்த) என்கையாலே, ஆதி₃த்யோத₃யம்போலேயாயிற்று இவருத₃யமும். "வருத்தும் புறவிருள் மாற்ற எம்பொய்கைப்பிரான்" என்னக்கடவதிறே. பொய்கையிலே அவதரிக்கையாலே அதுவே நிரூபகமாயிருக்கை. அதுதான் ஸரஸ்வதீ பயஸ்விநியாய் ப்ரவஹித்த ஸ்த₂லமாயிற்று. தத்தீரமான பொய்கையென்கை. (பொய்கைப்பிரான்)மருபூ₄மியில்பொய்கைபோலே எல்லார்க்கும் உபகாரகராயிருக்கை. தீர்த்த₂கரராய்த் திரியுமவரிறே.

கவிஞர் போரேருகையாவது:–கவிஶ்ரேஷ்ட₂ரென்றபடி. முதலாழ்வார்கள் மூவரிலும் முதலானவராகையாலே ஆதி₃



# முதல் திருவந்தாதி

## தனியன் வ்யாக்யான விவரணம

[ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி த₃ாஸன் (ஸுத₃ர்ஶனர்)]

*அவதாரிகை:—* " 'க:' என்பது பிரமனின் பெயர். அப்பிரமனாலே அவ்விடத்தில் பரமபுருஷன் பூஜிக்கப்பட்டபடியால், அந்நகரம் 'காஞ்சி' என்று பெயர் பெற்றுப் புண்ணியத்தைப் பெருக்குகிறது" [ஹஸ்திகி₃ரிமாஹாத்மியம்] என்று புகழ்பெற்ற காஞ்சி நக₃ரத்தில் ஒரு தாமரைக்குளத்தில் தாமரையிலே, விஷ்ணு நக்ஷத்திரமான திருவோணத்திலே இவ்வாழ்வார் அவதரித்ததையும், இம்முதல் திருவந்தாதியாம் விளக்காலே உலகில் அஞ்ஞானவிருளைப்போக்கி உய்வித்தபடியையும் சொல்லுகிறது இப்பாசுரத்தில்.

*வ்யா:—* (கைதை சேர் பூம்பொழில் சூழ் கச்சிநகர் வந்துதித்த பொய்கைப்பிரான்) இத்தொடரால் இவர் பிறப்பின் பெருமை சொல்லுகிறது. (கைதை) கேதகை-தாழை. "கைதை வேலி மங்கை" [?] என்றும், "கண்டல்வேலி மங்கை" [பெரியதிரு 1-3-10] [கண்டல்-தாழை] என்றும், "கொக்கலர் தடம் தாழை வேலி" [திருவாய் 4-10-8] என்றும் சொல்லப்பட்ட திருமங்கையையும், திருநகரியையும்போலே ஜலஸம்ருத்₃தி₄யுடைய தேசமாகையாலே, தாழைமலிந்திருக்கிறபடி. "தாழைதண்ணும்பல் தடம்பெரும் பொய்கைவாய்" [பெரியாழ் 2-10-8] என்கிறபடியே நீர்நிலங்களிலேயன்றோ தாழை செழிக்கும். (பூம்பொழில் சூழ்கச்சி) "அம்பூந்தேனிளஞ்சோலை" [திருவிருத்தம்-26] என்று ஜலஸம்ருத்₃தி₄யையுடைய கச்சிவெஃகாவிலன்றோ இவரும் அவதரித்தது. (கச்சிநகர் வந்துதித்த) நீர்மிக்க கச்சிநகரிலே நீர்நிறைந்ததொரு தடாகத்திலே, எம்பெருமான் பொன் வயிற்றிற் பூவேபோன்றதொரு பொற்றாமரைப்பூவிலே ஐப்பசியில் திருவோண நாளிலேயன்றோ இவர் அவதரித்தது. தாமரைப் பூவினிற்பிறந்த நான்முகனுடைய பிறப்பைப் போன்றது பொய்கையாரான இவருடைய பிறப்பும். (வந்துதித்த) என்கையாலே, சூரியனின் உதயம் போன்றது இவருடைய உதயமும் என்று உணர்த்தப்படுகிறது. "வருத்தும் புறவிருள் மாற்ற எம்பொய்கைப்பிரான்" [இராமாநுச-8] என்று அவனைப்போலே இருளைத் தொலைக்கப் பிறந்தாரன்றோ இவரும். (பொய்கைப்பிரான்) பொய்கையிலே அவதரிக்கையாலே அதுவே பெயராயிற்று. வெஃகணையாகிற அவ்விடம் — ஸரஸ்வதிதேவியானவள் பிரமனின் யாகத்தை அழிக்க நதியாய்ப் பெருகுகின்றபோது பகவான் அணையாய் நின்று தடுக்க, ஸரஸ்வதியானவள் அந்தர்வாஹினியான ஸ்தலமாகையாலே பொய்கைகள் நிரம்பியிருக்கும். (பொய்கைப்பிரான்) இவரும் பாலைவனத்திலே பொய்கைபோலே அனைவர்க்கும் உபகாரகராயிருப்பவர். "தீர்த்தகரராமின் திரிந்து" [இர-திருவ 14] என்கிறபடியே தீர்த்த₂ங்களையும் தீர்த்த₂மாக்கித் (பரிசுத்தமாக்கித்) திரியுமவரன்றோ இவர்.

(கவிஞர் போரேறு) கவிகுலரிஷப₄ர்: கவிஞர் தலைவர் என்றபடி. முதலாழ்வார்கள் மூவரிலும் முதல்வராகையாலே, ஆதி₃

கவி என்னும்படியான அதிசயத்தை உடையராயிருப்பர்.
படைத்தான் கவியாலும், பரகால கவியாலும், "செஞ்
சொற்கவிகாள்" என்றும், "செந்தமிழ் பாடுவார்" என்றும்
கொண்டாடப்படுமவராய், நாட்டிற் கவிகளுக்கும் விலக்ஷண
கவியாயிருப்பர். "இது பொய்கையார் வாக்கினிற் கண்டு
கொள்க" என்றிறே தமிழர் கூறுவது. அந்த ஏற்றமெல்லா
வற்றையும் பற்றக் "கவிஞர் போரேறு" என்கிறது.

ஏவம்வித4 வைலக்ஷண்யத்தை உடையவர், வைஷ்ண
வர்கள் வாழும்படி ஸ்நேஹத்தாலே விலக்ஷண ப்ரமாண
நிர்மாணம் பண்ணினபடி சொல்லுகிறது, - (வையத்தடிய
வர்கள் வாழ அரும் தமிழ் நூற்றந்தாதி படி விளங்கச்
செய்தான் பரிந்து) என்று. வையத்தடியவர்களாகிறார்—
பூ4ஸுரரான ஸ்ரீவைஷ்ணவர்கள். அவர்கட்கேயிறே வாழ
வேண்டுவது. வானத்தணியமரர்க்கு வாழ்வு நித்யமாயிறே
இருக்கிறது. இத்தாலே இவர்கள் வாழுகையாவது:—

---

கவி என்னும் பெருமையை உடையவராயிருப்பவர். "உலகம்
படைத்தான் கவி" [திருவாய் 3-9-10] என்ற நம்மாழ்
வாராலும், "பரகாலகவி:" [ர-ஸ்த 1-36] என்ற திருமங்கையாழ்
வாராலும், "செஞ்சொற்கவிகாள்" [திருவாய் 10-7-1] என்றும்,
"செந்தமிழ்பாடுவார்" [பெரியதிரு 2-8-2] என்றும் கொண்டா
டப்படுமவராய், உலகிலுள்ள கவிகளுக்குள் மிகச்சிறந்தவரா
யிருப்பவர். "இது பொய்கையார் வாக்கினிற் கண்டுகொள்க"
என்றன்றோ தமிழ் நூல்களின் உரையாசிரியர்கள் கூறுவது.
அந்தப் பெருமையனைத்தையும் உட்கொண்டு, "கவிஞர்
போரேறு" என்கிறார்.

இப்படிப்பட்ட பெருமையை உடையவர் ஸ்ரீவைஷ்ணவ
லோகமெல்லாம் வாழும்படி அன்பாலே மிகச்சிறந்த பிரபந்தம்
அருளிச்செய்ததைச் சொல்லுகிறார் மேலே—(வையத்தடியவர்
கள் வாழ அருந்தமிழ் நூற்றந்தாதி படிவிளங்கச் செய்தான்
பரிந்து) (வையத்தடியவர்கள்) நிலத்தேவர், வையத்தேவர்
எனப்படும் ஸ்ரீவைஷ்ணவர்கள். "வானத்தணியமரர்" [இர-
திருவ 2] என்கிற வானத்தேவராகிற நித்யஸூரிகள் என்றும்
வாழ்ச்சி பெற்றேயிருக்கிறார்களாகையாலே, வையத்தேவரான
இவர்களுக்கே வாழ்ச்சி வேண்டியிருக்கிறது. இவர்களை இந்



ஶேஷத்வ விப4வத்தை ஸ்வாநுஸந்தா4நத்தாலே உண்டாக்கு
மதான ப்ரப3ந்த4மென்கை. "நின் தாளிணைக் கீழ்வாழ்ச்சி"
என்னக்கடவதிறே. இவ்வநுஸந்தா4நமே வாழ்வாகவுமாம்.
அருந்தமிழ் நூற்றந்தாதியாவது:— அர்த்த2 நிர்ணயத்தில்
வந்தால் அரிதாய், தமிழான ப்ரகாரத்தாலே ஸுலப4மாய்,
அது தான் நூறுபாட்டாய், அந்தாதியாயிருக்கை. உடைய
வர் நூற்றந்தாதிக்கு ஏற்றம் எட்டு பாட்டாயிருக்கும்.

(அருந்தமிழ் நூற்றந்தாதி) அதுதான் வெளிறுயிருக்கை
யன்றிக்கே அரிதாய், ஸம்ஸ்க்ருதமாயிருக்கையன்றிக்கே
அஸம்ஸ்க்ருதமான த்3ராவிட3மாய், ஆயிரம் ஐந்நூறு
யிருக்கையன்றிக்கே நூறுயிருக்கை. அன்றிக்கே (வையத்
தடியவர்கள் வாழ வரும் தமிழ் நூற்றந்தாதி) என்றுகவுமாம்.
அப்போது வையத்தடியவர்கள் வாழவருமதான தமிழ் நூற்
றந்தாதி என்று நிர்வஹிக்கக்கடவது.

நூற்றந்தாதி படிவிளங்கச் செய்கையாவது:—"வையந்
தகளியா" என்றுதொடங்கி, "ஓரடியுஞ்சாடுதைத்த" முடி

---

நூல் வாழவைப்பதாவது,—சேஷத்வச் செல்வத்தை, தன்னை
அநுஸந்தி4ப்பார்க்கு உண்டாக்குகை. "நின் தாளிணைக்கீழ்
வாழ்ச்சி" [திருவாய் 3-2-4] என்கிறபடியே சேஷத்வமன்றோ
வாழ்ச்சியெனத்தக்கது. அன்றிக்கே, இந்நூலைச் சொல்லுவதே
வாழ்வாகவுமாம். ஸ்வயப்ப்ரயோஜனமென்கை. அரும்தமிழ்
நூற்றந்தாதியாவது:— இதுதான் பொருள்' என்று வரம்
பிட்டுப் பொருளுணர அரியதாய், தமிழாலானதாகையாலே,
பாமரர்க்கும் எளியதாய், மிகச்சுருக்கமும் விரிவுமல்லாமல்
நூறுபாட்டாய், மனப்பாடம் செய்யத்தக்கபடி அந்தாதியா
யிருக்கை. இதனிலும் எட்டு பாட்டை அதிகமாக உடைத்
தாயிருக்கை இராமாநுசநூற்றந்தாதிக்கு ஏற்றம். (அரும்
தமிழ் நூற்றந்தாதி) ஸாரமற்ற வெள்ளைப் பாட்டாயல்லாமல்
அரிய பொருள்களை அடக்கியதும், முரட்டு ஸம்ஸ்க்ருதமாயல்
லாமல் எளிய தமிழாயிருப்பதும், ஆயிரம் ஐந்நூறுயிராமல்
நூறு பாட்டாயிருப்பதும் இதற்கு ஏற்றம். அன்றிக்கே,
(வையத்தடியவர்கள் வாழ வரும் தமிழ் நூற்றந்தாதி) என்றும்
பாடம் கொள்ளலாம். வையத்தடியவர்கள் வாழ வருகின்ற
தான தமிழ் நூற்றந்தாதி என்று பொருள்.

வாக அருளிச்செய்த திவ்யப்ரபந்ததீபத்தாலே பூதலமெங்கும் நிர்மலமாம்படி நிர்மித்தாரென்கை; "வருத்தும் புறவிருள் மாற்ற எம்பொய்கைப்பிரான் மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையுங் கூட்டி ஒன்றத் திரித் தன்றெரித்த திருவிளக்" காகையாலே, படியிலே-பூமியிலே ப்ரகாஶிக்கும்படி செய்தருளினரென்றாகவுமாம். அன்றிக்கே, படியென்று உபமானமாய், த்ராவிடவேதத்துக்குப் படிச்சந்தமாயிருக்கும்படி செய்தருளினரென்னவுமாம். விளக்கம்-ப்ரகாஶம். படி-என்று விக்ரஹமாய், 'திருக்கண்டேன் பொனமேனிகண்டேன்" என்னும்படி கண்டறியும்படி செய்தாரென்றாகவுமாம். பரிவுடனே செய்கையாவது—சேர்ந்த விஷய ஸ்நேஹத்தாலே என்னுதல்; பரவிஷய ஸ்நேஹத்தாலே என்னுதல்; "செய்யசுடராழியானடிக்கே சூட்டினேன் சொன்மாலை" என்றாரிறே. ஸ்நேஹத்தாலேயிறே விளக்கெரிவது. இத்தால், அவர் திவ்யப்ரபந்தோபகாரகத்வத்தால் வந்த உபகாரகௌரவம் சொல்லி ஈடுபட்டதாயிற்று.

**இயற்பா முதல்திருவந்தாதியின் தனியன் வ்யாக்யானம் முற்றிற்று.**

---

(நூற்றந்தாதி படிவிளங்கச் செய்தான்) முதற்பாட்டிலிருந்து,கடைசிப் பாசுரமீறாகவான திவ்யப்ரபந்த விளக்காலே உலகெங்கும் அஞ்ஞானவிருள் நீங்கும்படி அருளிச்செய்தார் என்கை.

*"வருத்தும் புறவிருள்மாற்ற, எம் பொய்கைப்பிரான் மறையின்*
*குருத்தின் பொருளையும் செந்தமிழ்தன்னையும் கூட்டி ஒன்றத்*
*திரித்தன்றெரித்த திருவிளக்கு"* [இராமாநுச-8]

என்று இதை விளக்காகச் சொன்னாரன்றோ அமுதனாரும். *படி* — பூமியை, *விளங்கச்செய்தான்* — பிரகாசிக்கச்செய்தான் என்றபடி. அன்றிக்கே, *படி*—பூமியிலே, *விளங்கச்செய்தான்*—(இந்நூலை) விளங்கும்படி செய்தான் என்றுமாம். அல்லது *படியென்று உபமானமாய்*-தமிழ் வேதமாகிய திருவாய்மொழிக்கு உபமானமாம்படி பிரகாசிக்கச் செய்தருளினார் என்றுமாம். விளக்கம்—பிரகாசம். அல்லது 'படி'யென்று பகவானுடைய திருமேனியாய், "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" [மூன் திருவ 1] என்று பேயார் கண்டறியும்படி திருமேனியை விளங்கச் செய்யத் திருவிளக்கேற்றினார் என்றுமாம். (செய்



## முதல் திருவந்தாதி

### அப்பிள்ளையுரையின் அவதாரிகை

ஶ்ரிய:பதியாய், அவாப்தஸமஸ்தகாமனாய், ஸமஸ்த கல்யாண குணாத்மகனான ஸர்வேஶ்வரன்,நித்யவிபூதியிலே நித்யாஸங்குசிதஜ்ஞாநரான நித்யஸூரிகளை நித்யகைங்கர்யங்கொண்டு நித்யாநந்தியாயிருக்கச் செய்தேயும், அவர்களைப்போலே கைங்கர்யநிரதராய் வாழுகைக்கு இட்டுப்பிறந்து வைத்து அதுக்கு அசலாய், அவித்யாகர்மவாஸநா ருசி ப்ரக்ருதி பரவஶராய்ப் பரிப்ரமிக்கிற ஸம்ஸாரிசேதநரைத் திருத்திப் பணிகொள்ளுகைக்காக. இவர்கள் அழிந்து கிடக்கிற தஶையிலே ஸ்வாஶ்ரயணோபகரணமாகக் கரண

---

## முதல் திருவந்தாதி

### ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தாஸன் (ஸுதர்ஶனர்) இயற்றிய திவ்யப்ரபந்தஸார வ்யாக்யானம்

*அவதாரிகை;*— திருவின் நாயகனாய், வேண்டுதல் வேண்டாமை இலாதவனாய், நற்குணக்கடலான ஸர்வேச்வரன், நித்யவிபூதியான பரமபதத்தில், என்றும் சுருங்காத ஞானமுடைய நித்யஸூரிகளை என்றுமொக்கக் கைங்கரியங்கொண்டு நித்யாநந்தமுடையவனாயிருந்தபோதிலும், அவர்களைப்போலே கைங்கரியத்திலேயே ஈடுபட்டு வாழ்வதற்கு இட்டுப்பிறந்து வைத்தும், அதற்குப் புறம்பானவர்களாய், அஞ்ஞானத்திலும், அதற்குக் காரணமாகவும் காரியமாகவுமிருக்கும் கருமம், வாஸனை, ருசி, ப்ரக்ருதிஸம்பந்தம் ஆகியவற்றிலும் ஈடுபட்டு உழலும் ஸம்ஸாரி ஜீவர்களைத் திருத்திப் பணிகொள்வதற்காக, இவர்கள் ஞானமற்று அழிந்துகிடக்கும் ப்ரளயதசையிலே தன்னை அறிந்து அடைவதற்கு உறுப்பான சரீரேந்திரியங்களைத்

---

தான் பரிந்து) தம்முடன் சேர்ந்த வையத்தடியவர்களாகிற பாகவதவிஷய ஸ்நேஹத்தாலே என்னுதல்; பகவத்விஷயத்தில் பரிவாலே சொன்னதை "செய்ய சுடராழியானடிக்கே சூட்டினேன் சொன்மாலை" என்று முதற்பாசுரத்தில் காட்டினாரன்றோ. ஸ்நேஹத்தாலேயன்றோ (ஸ்நேஹம்-1. அன்பு, 2. எண்ணெய்) விளக்கு எரிவது. ஸ்நேஹத்தாலே (அன்பாலே) திருவந்தாதியாம் திருவிளக்கு எரிகிறது.

**தனியன் வ்யாக்யான விவரணம் முற்றிற்று.**

பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த

# முதல் திருவந்தாதி வ்யாக்யாநம்

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே ।
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணும் ஸுலப4ஶ் ஸ்ரீத4ரஸ்ஸதா3 ॥

## வ்யாக்யாந அவதாரிகை

ஆழ்வார்களிற்காட்டில் ப4க3வத்3விஷயத்திலுண்டான அவகா3ஹநத்தாலே, முதலாழ்வார்கள் மூவரையும் நித்ய ஸூரிகளோபாதியாக நினைத்திருப்பர்கள்.

---

களேப3ரங்களைத் தன் கருணையாலே கொடுத்தருளி, அவற்றைக் கொண்டு வ்யபி4சரியாதே நல்வழி நடக்கைக்கு உடலாக ஶ்ருத்யாதி3 ஶாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பிக்க, அவற்றைத்திரஸ்கரித்து ஸ்வைரம் ஸஞ்சரிக்கிற த3ஶை யிலே ராமக்ருஷ்ணாதி3ரூபேண வந்து அவதரித்தருளி, உப தே3ஶாநுஷ்டா2னங்களாலும், ரூபௌதா3ர்யகு3ண சேஷ்டி தங்களாலும் வஶீகரித்து இவர்களைத் திருத்தப் பார்த்த விடத்தில், அவற்றுக்கும் அகப்படாதபடி இதரவிஷயங் களிலே மண்டி இவர்கள் நஷ்டகல்பராய்ப் போகக்கண்ட படியாலே, ஆழ்வார்களைக் கொண்டு இவர்களைச் சேர்த்துக் கொள்வானாகை ஆமுதல்வரான முதலாழ்வார்களை அநந்தரம் அவதரிப்பித்தருளினான்.

---

தன் த3யையாலே அநுக்3ரஹித்து, விளக்கிலே விழும் விட்டில் கள்போலே அவற்றைக்கொண்டு ஶப்3தா3தி3 விஷயங்களிலே மண்டி அழியாமல் நல்வழி நடப்பதற்குத் துணையாக வேதம் முதலான சாஸ்திரங்களைக் காட்டிக்கொடுக்க, ஜீவர்கள் அவற்றை அலட்சியம் செய்து தம் இஷ்டப்படி நடக்கும் நிலையிலே, ராமன், கிருஷ்ணன் முதலான அவதாரங்களைச் செய்து இவ்வுலகிற்கு வந்து உபதேசத்தாலும், தன் நடத் தையாலும், தன் ரூபத்தாலும், வண்மை முதலான குணங் களாலும், செயல்களாலும் இவர்களை வசப்படுத்தித் திருத்தப் பார்த்தபோதும், இவற்றுக்கும் வசப்படாமல் சப்தாதிவிஷயங் களிலே ஈடுபட்டு இவர்கள் பெரும்பாலும் அழிந்த நிலை யிலேயே நிற்கக்கண்டு மானைக்கொண்டு மானைப் பிடிப்பாரைப் போலே, ஆழ்வார்களைக்கொண்டு இவர்களைச் சேர்த்துக் கொள்வதாகத் திருவுள்ளம்பற்றி "ஆமுதல்வன் இவன்" [திருவாய் 7-9-3] என்னத்தக்க முதலாழ்வார்களைத் தனக்கு அடுத்தபடியாக அவதாரம் செய்வித்தான்.



"இன்கவிபாடும் பரமகவிகள்", "செந்தமிழ் பாடுவார்" என்னும் இவர்களவதரித்தது ஒரோ தே3ஶங்களிலேயாகிலும் /காலப்பழமையாலே இன்னவிடமென்று நிச்சயிக்கப்போகாது. a"பேயரே எனக்கியாவரும் யானுமோர் பேயனேயெவர்க்கும்" ப4க3வத்3விஷயத்தில் அவகா3ஹியாதாரெல்லாரும் தமக்குப் பேய ராயிருப்பர். அவர்கள் நிலையில் தாம் நில்லாதபடியாலே, அவர்களுக்குத் தாம் பேயராயிருப்பர். இப்படியாலே, ப4க3வத்3 விஷயத்தில் அவகா3ஹியாதாரிருக்குமிடத்திற்காட்டில் ஸ்தா2 வரங்களுள்ள காடே அமையும் என்றிருப்பர்கள். b" ஆன்

---

இவர்களாகிறார்,—ப4க3வதா3கஸ்மிக கடாக்ஷவிஶேஷ லப்3த4மான ஜ்ஞாந ப்ரேமங்களைக் குறைவறவுடையராய், நித்யஸூரிகளைப்போலே பிறப்பேபிடித்து ப4க3வத3நுப4வத் திலே பழுத்து ஸம்ஸாரயாத்ரையிற் கண்ணற்று "இன்கவி பாடும் பரமகவிகள்" என்றும், "செந்தமிழ் பாடுவார்" என் றும் நாவீறுடைய பெருமாளும், நாலுகவிப்பெருமாளும் கொண்டாடும்படியான வேண்டப்பாடுடையராய்ப் பரத் வாதி3கள் ஐந்தையும் ஒருகாலே கண்டு மண்டி அநுப4 விக்கும் சதிரையுடையராயிருக்கச்செய்தே, ஆறு பெருக்

---

இவர்கள் பெருமை எப்படிப்பட்டதெனில்: ப4க3வானு டைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே அருளப்பெற்ற ஜ்ஞான ப4க்திகளைக் குறைவற உடையவர்களாய், நித்யஸூரிகளைப் போலே பிறந்ததிலிருந்தே ப4க3வத3நுப4வத்திலே பழுத்தவர்க ளாய், ஸம்ஸாரப்போக்கில் கண் செலுத்தாதவர்களாய் "இன் கவிபாடும் பரமகவிகள்" [திருவாய் 7-9-6] என்று நாவீறு டைய பெருமாளான நம்மாழ்வாராலும், "செந்தமிழ்பாடுவார்" [பெரியதிரு 2-8-2] என்று நாலுகவிப்பெருமாளான திருமங்கை யாழ்வாராலும் கொண்டாடப்படும் பெருமையை உடையவர் களாய், பரம், வியூஹம், விப4வம், அந்தர்யாமி, அர்ச்சை என் னும் ஐந்து நிலைகளையும் ஒரே காலத்தில் ஸாக்ஷாத்கரித்து ஈடு பட்டு இன்புறும் பெருமையை உடையவர்களானபோதிலும்,

---

/ 16-ம் பக்கத்தின் அடிக்குறிப்பு காண்க.
a பெரு-திரு 3-8. b பெரியதிரு 11-8-9.

விடையேழன்றடர்த்தாற்காளானரல்லாதார் மானிடவரல்லரென்
றென்மனத்தே வைத்தேனே'' ஸர்வேஶ்வரன் திருவுள்ளம்
ஊற்றுமறுத்தவளவிலும் க்ருபையைப் பண்ணும் தம்முடைய
மனஸ்ஸிலும் கொடுமையை வைத்தேன் என்கிறர். இனி
அவர்கள் மனுஷ்யரல்லரென்று செம்பிலும் கல்லிலும்
வெட்டிக்கொள்ள அமையும். உ "சிறந்தார்க்கெழு துணையாம்
செங்கண்மால் நாமம், மறந்தாரை மானிடமா வையேன்''
என்னும்படியே, அறிவு நடையாடாதவர்களிருக்குமிடத்தில்

---

கெடுத்து எங்குமொத்துப் போகாநிற்க, நீர்க்கு நோக்கு
ஓரிடத்திலேயாயிருக்குமாபோலே, திருவுலகளந்தருளின
விடத்திலும், திருமலையிலும் கால்தாழ்ந்து அநுப4வித்துப்
போருமவர்களாய், அறிவுண்டாயிருக்க ப4க3வத்3விஷயத்
தைக் காற்கடைக்கொண்டு இதர விஷயங்களிலே மண்டித்
திரிகிற ஸம்ஸாரிகளோட்டை ஸஹவாஸம் து3ஸ்ஸஹமாய்,
அவர்கள் வர்த்திககிற நாட்டைவிட்டு, அறிவுக்கு அடைவில்
லாத ஸ்தா2வரங்கள் வர்த்திக்கிற காட்டைவிரும்பி. அவ்விடத்
திலும் யத்ரஸாயங்க்3ருஹராய் ஒருவரையொருவர் அறியாத
படி மறைந்து வர்த்தித்தார் சில மஹாபுருஷர்களாயிற்று.

---

ஆறு கரையெல்லாம் பெருக்கெடுத்து எங்குமொத்துப் போன
போதிலும், நீருக்கு நோக்கு ஒருவழியிலேயாயிருப்பதுபோலே,
விப4வங்களிலே திருவுலகளந்தருளிய திரிவிக்கிரமனிடமும்,
அர்ச்சையிலே திருவேங்கடமுடையானிடமும் மிகவும் ஈடு
பட்டு அநுப4வித்துப்போகின்றவர்களாய், அறிவிருந்தபோதிலும்
ப4க3வத்3விஷயத்தை அலட்சியம்செய்து, மற்ற விஷயங்களிலே
ஈடுபட்டுத்திரிகிற ஸம்ஸாரிகளோடு உறவைப் பொறுக்கமுடி
யாமல், அவர்கள் வாழும் நாட்டைவிட்டு, அறிவற்ற மரங்கள்
வாழும் காட்டைவிரும்பி, அங்கும் ஒரு குடிசையை அமைத்துக்
கொள்ளாமல், ப4க3வத3நுப4வத்தோடே திரியும்போது மாலைப்
போது எவ்விடத்தில் வருகிறதோ அவ்விடத்தையே அற்றையிர
வுக்கு இருப்பிடமாகக் கொள்ளுமவர்களாய், ஒருவரையொருவர்
அறியாதபடி மறைந்து வாழ்ந்த மஹாபுருஷர்கள் இவர்கள்.





வஸிக்குமதில், காட்டிலே வர்த்திக்க அமையுமென்று காடு
களிலே வர்த்திப்பர்கள். இங்ஙனே செல்லுகிற காலத்தில்,
ஒரு மழையையும் காற்றையுங்கண்டு திருக்கோவலூரிலே ஒரு
இடைகழியிலே ஒருத்தர் புக்குக்கிடக்க, இருவராவார் சென்று,
"ஒருவர் கிடக்குமிடம் இருவர்இருக்கப் போரும்''என்று இருக்க,

---

இப்படி வர்த்திக்கிற இவர்கள் மூவரும், யாத்3ருச்சி2க
மாக ஒருநாள் திருக்கோவலூர் ப்ரதே3ஶத்திலே வந்து
ஸங்க3தராக, அவ்வளவிலே பெருமழையும், பெருங்காற்றும்
ப்ரவ்ருத்தமாக, அதைக்கண்டு மழைக்கு ஒதுங்கி, ஓரிடை
கழியிலே ஒருவர் புக்குக் கிடக்க, மற்றையவர் வந்து
'திறக்கவேணும்' என்ன, 'ஒருவர் கிடக்க இடம் போரு
மத்தனை' என்ன, 'ஒருவர் கிடந்தவிடம் இருவர்க்கு இருக்
கலாங்காணும், திறவும்' என்ன, 'ஒருவர் மூச்சு ஒருவர்
பொருத ஸம்ஸாரத்திலே இப்படிச்சொன்ன இவர் கேவல
ரல்லர்' என்று திறக்க, அவரும் புகுந்து இவ்விருவருமாக

---

இப்படி வாழ்கிற இம்முதலாழ்வார்கள் மூவரையும் கூட்டி
வைத்து, தன்னை அநுப4விப்பித்து, அவ்வநுப4வத்திற்குப் போக்கு
வீடான பிரப3ந்த4ங்களாலே தன்னையும் உலகையும் வாழ்விக்க
நினைத்த எம்பெருமானுடைய நிர்ஹேதுகக்ருபையாலே இம்
மூவரும் ஒருநாள் *திருக்கோவலூர்* என்னும் திவ்யதேசத்திலே
வந்து கூட, அப்போது, அவ்விடத்தில் பெருமழையும் பெருங்
காற்றும் பொழிய, அதைக்கண்டு மழைக்கு ஒதுங்கி மிருகண்டு
மஹரிஷியின் ஆஶ்ரமத்தின் இடைகழியிலே பொய்கையாழ்வார்
புகுந்து ஶயனித்துக்கொண்டிருக்க, பூதத்தாழ்வார் வந்து
'திறக்கவேணும்' என்று கதவைத்தட்ட, 'ஒருவர் சயனிக்கத்
தான் இடமுள்ளது' என்று பொய்கையார் உரைக்க, 'ஒருவர்
படுத்தவிடத்திலே இருவர் உட்காரலாம்: திறப்பீர்' என்று
பூதத்தார் சொல்ல, 'ஒருவர்மூச்சு ஒருவர் பொறுக்கமாட்டாத
இவ்வுலகில் இப்படிக் கூறிய இவர் ஸாமாந்யரல்லர், விலக்ஷண
ராகவேயிருக்கவேண்டும்' என்று நினைத்துக் கதவைத் திறக்க,
அவரும் உட்புகுந்து இவ்விருவருமாக இருக்கிறபோது,
பேயாழ்வாரும் வந்து திறக்கச்சொல்ல, 'நாங்களிருவரும் இருக்

மூவராவார் சென்று, "இருவர் இருக்குமிடம் மூவர்க்கு நிற்கப் போரும்" என்று மூவரும் நிற்க, இருவர் வந்து நெருக்க, a (நீயும் திருமகளும்) b "தாமரையாளாகிலும் சிதகுரைக்கு மேல் என்னடியாரதுசெய்யார்" என்னும் நீயும், உன் c பரிகரம் சென்று நலியப்புக, 1. "न कश्चिन्नापराध्यति" (ந கஶ்சிந் நாபராத்4யதி) என்று ஏறிட்டுக்கொண்டு நோக்கும் திருமகளும். a (நின்றுயால் குன்றெடுத்துப்பாயும் பனிமறைத்த பண்பாளா)

---

இருக்கிறவளவிலே மற்றையவரும்வந்து திறக்கச் சொல்ல, 'எங்களிருவர்க்கும் இருக்க இடம் போருமத்தனை' என்ன, 'இருவர் இருந்தவிடம் மூவர்க்கு நிற்கலாம் திறவும்' என்ன, 'இவரும் கேவலரல்லர்' என்று திறக்க, இவர்கள் மூவரும் கூடி நிற்கச்செய்தே, ஈஶ்வரன் தானும் பிராட்டியுமாக வந்து தனித்தனியே இவர்களைப் பின்பற்றித் திரிந்த நெஞ்சாறல் தீர இவர்கள் மூவர்க்கும் நடுவே புக்கு நெருக்க, 'நம் மூவரையுமொழிய வேறு புக்கு நெருக்குகிறவர்கள் யார்? என்று விளக்கேற்றிப் பார்க்கவேணும்' என்ன; அவர்களிலே ஒருவரான பொய்கையார் லீலாவிபூ4தியில்

---

கத்தான் இடமிருக்கிறது' என்று முதலிருவரும் சொல்ல. 'இருவர் உட்கார்ந்திருக்கும் இடம் மூவர்க்கு நிற்கலாம்; திறப்பீர்' என்று பேயார் கூற, 'இவரும் ஸத்ஸஹவாஸம் பொருத ஸாமாந்யரல்லர்; விலக்ஷணரே' என்று அறுதியிட்டுத் திறக்க, அவரும் உள்ளே புகுந்து மூவருமாகக்கூடி நிற்கும் போது, "நீயும் திருமகளும் நின்றுயால்...பூங்கோவல் இடை கழியே பற்றியினி" [ முதல்திருவ 86 ] என்று பொய்கையாழ்வார் அருளியபடியே, இவர்களைத் தனித்தனியே பின்பற்றித் திரிந்த மனவருத்தம் தீர, ஸர்வேஶ்வரன் தானும் பெரியபிராட்டியாருமாக வந்து இவர்கள் மூவரையும் நடுவிற்புகுந்து நெருக்க, 'நம் மூவரைத்தவிர வேறு யார் நம்மை நெருக்துவது என்று விளக்கேற்றிப் பார்க்கவேண்டும்' என்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொள்ள, அவர்களிலே முதல்வரான பொய்கையாழ்வார்.

---

a முதல்-திருவ 86. b பெரியாழ்-திரு 5-9-2. c பரிகரம்-ஹனுமான்.



மலையெடுத்து உடம்பிலே விழுகிற மழையைக் காத்த நீர்மையை உடையவனே! உடம்பிலே விழுந்த மழையை மலையெடுத்துப் பரிஹரித்தபோது பிறந்த ஹர்ஷம் போலேயாயிற்று இவர்கள் நெருக்குப்பெற்றபோது இவனுக்கிருந்தபடி. ( வாசல்கடை கழியாவுட்புகா காமர்பூங்கோவல் இடைகழியே பற்றியினி ) காமுகரானவர்கள், உகந்த விஷயங்களிலே போகச்சொன்ன

---

கார்யகாரணரூபமான ஸமஸ்தவஸ்துக்களும் ப4க3வத3தீ4நமாயிருக்கிறபடியைப் பரப4க்திரூபாபந்நஜ்ஞானத்தாலே த3ர்ஶித்து, அத்தை ஒரு விளக்காக ரூபித்துக்கொண்டு அநுப4வபரீவாஹரூபமான 'வையந்தகளி' அருளிச்செய்தார். அநந்தரம் ஸ்ரீபூதத்தார் வையந்தகளிகேட்கையாலே அந்தப் பரப4க்திரூபாபந்நஜ்ஞாநம்முற்றி ப4க3வத்தத்வத்தை விஶத3மாக த3ர்ஶிக்கைக்கு உபகரணமான பரஜ்ஞாநமாகிற உஜ்ஜ்வலதீ3பத்தை ஏற்றுகிற வழியாலே 'அன்பே தகளி' அருளிச்செய்தார். அநந்தரம் மூன்றுமாழ்வார், அவனை அநுப4விக்கப்பெறில த4ரித்து, பெருவிடில் மூச்சடங்கும்

---

இவ்வுலகில் கார்யமாகவும் காரணமாகவும் இருக்கும் எல்லாப் பொருள்களும் ப4க3வானுக்கு வசப்பட்டிருக்கிறபடியைப் பரப4க்தி ரூடமாயிருக்கும் அறிவாலேகண்டு, கார்யகாரணரூபமான வஸ்து ஸமூஹத்தை ஒரு விளக்காக உருவகப்படுத்திக்கொண்டு, தம் அநுப4வத்துக்குப் போக்குவீடாக "வையம்தகளி" என்று தொடங்கும் முதல்திருவந்தாதியை அருளிச்செய்தார். "வையம் தகளி"என்னும் பரப4க்திக்குப் போக்குவீடான பிரப3ந்த4த்தைக் கேட்டபடியாலே அடுத்தபடியாக பூதத்தாழ்வார், அந்தப் *பரப4க்தி* த3ஶையடைந்த ஞானம் பழுத்து, பரம்பொருளான ப4க3வானைத் தெளிவாகக் காண்பதற்கு உறுப்பான பரஜ்ஞாநமாகிற சுடர்விளக்கை, "ஞானச்சுடர் விளக்கேற்றினேன்" என்கிறபடியே ஏற்றுகிறவராய் "அன்பே தகளி" என்று தொடங்கும் இரண்டாம்திருவந்தாதியை அருளிச்செய்தார். பரப4க்தியை வெளியிடும் இதைக்கேட்டபடியாலே அதன் பக்வத3ஶையாய், பரமபுருஷனை அநுப4வித்தால் த4ரித்தும், அநுப4விக்கப்பெருவிடில் உயிர்த4ரியாமலுமிருக்கும்படியான பரமப4க்திநிலையை அடைந்த

லும் தூணைக்கட்டிக்கொண்டு நிற்குமாபோலே, இவ்வாசலுக்குப் புறம் போகமாட்டுகிறிலன்; உள்ளுப் புகுரமாட்டுகிறிலன். (இனி) இப்போது. இப்படி இருவருமாகத் தங்களை நெருக்கப்புக்கவாறே, தம்மையொழிய வேறே சிலர் நெருக்குகிறார் உண்டென்று, ஜ்ஞாநமாகிற விளக்கை ஏற்றினர். 2 "ज्ञान-दीपेन भास्वता" (ஜ்ஞாநதீ3பேந பா4ஸ்வதா) விளக்குண்டானாலும் ஜ்ஞாநமில்லையாகில் பதா3ர்த்த2ங்களை விவேகிக்கப்போகாது.

---

படியான பரமப4க்தியுடையராய்க்கொண்டு அவன் படிகளைக் கட்டடங்கக்கண்டு மண்டி அநுப4விக்கிற வழியாலே 'திருக் கண்டேன்' அருளிச்செய்தார்.

ஜ்ஞாந ப4க்தி ஸாக்ஷாத்காரங்கள் மூன்றும் ப்ரப3ந்த4 த்ரயத்துக்கும் தாத்பர்யமாக ஆசார்யர்கள் அருளிச்செய்திருக்க, விருத்3த4மாக இங்ஙனே சொல்லலாமோ? என்னில்: அதுக்குக் குறையில்லை. அங்கு ஜ்ஞாநமென்கிறது,—பரப4க்திரூபாபந்நஜ்ஞாநத்தை; ப4க்தியென்கிறது—பரஜ்ஞாந த3ஶாபந்நமான ப்ரேமத்தை; ஸாக்ஷாத்காரமென்கிறது,—பரஜ்ஞாந விபாகரூபையான பரமப4க்தியை. கர்மாநுஷ்

---

வராய், அவனுடைய ஸ்வரூப ஸ்வபா4வங்களைப் பரிபூர்ணமாகக் கண்டு, அதிலே அழுந்தி அநுப4விக்கிறவராய் "திருக்கண்டேன்" என்று தொடங்கும் மூன்றாம் திருவந்தாதியை அருளிச்செய்தார்.

"முதலாழ்வார்க்கு ஜ்ஞாநம் பிறந்தபடி சொல்லிற்று; இருவராவார்க்கு, ஜ்ஞாநம் முற்றி ப4க்தியானபடி சொல்லிற்று; மூவராவார்க்கு, ப4க்தியுடையராய், அவனையொழியச் செல்லாதவர்களுடைய ஸாக்ஷாத்காரம் பிறந்தபடி சொல்லிற்று" என்று ஆசார்ய ஶ்ரேஷ்ட2ரான *பெரியவாச்சான்பிள்ளை* மூன்று திருவந்தாதிகளுக்கும் முறையே *ஞானம், ப4க்தி, ஸாக்ஷாத்காரம்* என்னும் மூன்றையும் தாத்பர்யமாக அருளிச்செய்திருக்க, அதற்கு விருத்3த4மாக, *பரப4க்தி, பரஜ்ஞாநம், பரமப4க்தி* என்னும் மூன்றையும்அவற்றுக்கு முறையே தாத்பர்யமாக அருளிச்செய்யலாமோ? என்னில்: இவையிரண்டுக்கும் விரோத4மில்லை. பெரியவாச்சான்பிள்ளை முதல்திருவந்தாதிக்குத் தாத்பர்யமாகச்



முதலாழ்வார்க்கு ஜ்ஞாநம் பிறந்தபடி சொல்லிற்று. இருவராவார்க்கு, ஜ்ஞாநம் முற்றி ப4க்தியானபடி சொல்லிற்று. மூவராவார்க்கு, ப4க்தியுடையராய் அவனையொழியச் செல்லாதவர்களுடைய ஸாக்ஷாத்காரம் பிறந்தபடி சொல்லிற்று. இம்

---

டா2நாந்தமாக ஜ்ஞாநம் உதித்து, அது த்4யாநோபாஸநாத்3யவஸ்தா2பந்நமாய்முற்றி, அநந்தரம் "द्रष्टव्यः" (த்3ரஷ்டவ்ய:) என்னும்படி ஸாக்ஷாத்காரரூபமாய், அநந்தரம் விஷய வைலக்ஷண்யத்தை அவகா3ஹித்து ப4க்திரூபாபந்நமாய், பின்னை பரப4க்த்யாதி3களாகப் பரிபக்வமாம் ப்ராமாணிகர் படியில் இவர்களுக்கு முதலிலே அந்வயமில்லையிறே. "கர்ம ஜ்ஞாநாநுக்3ருஹீதையான ப4க்தியினுடைய ஸ்தா2நத்திலே ப4க3வத்ப்ரஸாத3ம் நின்று அநந்தரம் விளைந்த பரப4க்தி

---

சொன்ன ஞானமாவது.— "*ஶேமுஷீ ப4க்திரூபா*" [ஸ்ரீபா4ஷ்ய மங்க3ளம்] [ப4க்திரூபமான ஞானம்] என்கிறபடியே ப4க்தி நிலையையடைந்த ஞானமேயாகும். இரண்டாம் திருவந்தாதிக்குப் பொருளாகச்சொன்ன ப4க்தியாவது பரஜ்ஞானமென்னும் முற்றின நிலையையடைந்த ப4க்தியேயாகும். மூன்றாம் திருவந்தாதிக்குப் பொருளாகச் சொன்ன ஸாக்ஷாத்காரமாவது,- பரஜ்ஞானத்தின் பழுத்தநிலையாயிருக்கும் பரமப4க்தியேயாகும். ப்ரமாணங்களைக்கொண்டு உபாயாநுஷ்டா2னங்களிலே இழியுமவர்களுக்கு முதலில் கர்மயோக3த்தை அநுஷ்டி2க்கும் நிலையாய், அதற்குமேல் *ஜ்ஞாநம்* உண்டாகி, அது—தியானம், உபாஸனம் எனப்படும் நிலைகளையுடையதாகி முற்றி, அதற்குப்பின் "காணத் தக்கவன்" [ப்3ருஹ 4-4-5] என்று ஶ்ருதியிலே சொன்ன ரீதியில் நேரிலே காண்பதுபோலிருக்கும் *ஸாக்ஷாத்காரம்* ஆகி, அதற்குப் பின்னர் *ப4க்தி* என்னும் நிலையை அடைந்து, பின்னர் பரப4க்தி, பரஜ்ஞாநம், பரமப4க்தி என்னும் நிலைகளாகப்பழுக்கும். இப்படி ப்ரமாணத்தைக்கொண்டு உபாயாநுஷ்டா2னத்திலே இறங்கியவர்களல்லரே இவர்கள். திருவாய்மொழி 'வீடுமின் முற்றவும்' [1-2] ப்ரவேஶத்தில், "கர்மஜ்ஞாநங்களை அங்க3மாகக்கொண்டு உண்டாகும் ஸாத4ன ப4க்தியினுடைய ஸ்தா2னத்தில் பரமபுருஷனுடைய அருள் நின்று, அது காரணமாக உண்டான பரப4க்தி

மூவர்க்கும் அர்த்த2ம் ஒன்றே. மூன்று ருஷிகள் கூடி ஒரு வ்யாகரணத்துக்குக் கர்த்தாக்களானாற்போலே கர்த்ருபே4த3முண்டேயாகிலும் அர்த்த2 ஶரீரம் ஒன்று; த்ரிமுநிவ்யாகரணம் என்னுமாபோலே. /

---

யாய்த்து இவரது'' என்றிறே ப்ரத2மாசார்யரான ஆழ்வாருக்கு ஆசார்யர்கள் அருளிச்செய்வது; அது அல்லாத ஆழ்வார்களுக்கும் ஒக்குமிறே; அல்லாதபோது ஆழ்வார்கள் எல்லாரும் ஏகப்ரக்ருதிகள் என்னப்போகாதே. ஆகையால் விரோத2மில்லை.

---

யாயிற்று இவருடையது''என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை நம்பிள்ளையீட்டில் முதலாசார்யரான நம்மாழ்வாரைக்குறித்து அருளிச்செய்திருக்கிறார்கள் ஆசார்யர்கள். இது மற்ற ஆழ்வார்களுக்கும் பொருந்தும். இல்லாவிடில் ஆழ்வார்களனைவரும் அநந்யோபாயத்வவிஷயத்தில் ஒரே தன்மையை உடையவர்கள் என்னும் நம் கொள்கை ஒட்டாது. ஆகையால் ஜ்ஞாநப4க்தி ஸாக்ஷாத்கார பத2ங்களை முற்கூறியவாறு பரப4க்தி பரஜ்ஞாந பரமப4க்தி பரமாகவே கொள்ளவேண்டுமாகையாலே விரோத4மில்லை.

---

/ பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்2யான அவதாரிகையில்

ஓர் பாட2பே4த3ம்

பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்2யான அவதாரிகைத் தொடக்கத்தில் (பக்கம் 9) ''இவர்களவதரித்தது ஓரோ தே3ஶங்களிலேயாகிலும் காலப்பழமையாலே இன்னவிடமென்று நிச்சயிக்கப்போகாது'' என்று பாட2ம் காண்கிறது. இது ''கச்சிநகர் வந்துதித்த'' ''கடல் மல்லைப் பூதத்தார்'' என்னும் திருவந்தாதித் தனியன்களுக்கும் உபதேச ரத்தினமாலைப் பாசுரங்களுக்கும் ஒட்டாது. ஆகையால் ''காலப் பழமையாலே'' என்றதற்கு பதிலாக ''ஞானப்பெருமையாலே'' என்று ஸ்ரீ காஞ்சி ஸ்வாமி உணர்த்தும் பாட2ம் யுக்தமானதே. ''அடியார் நிலாகின்ற வைகுந்தமோ வையமோ நும் நிலையிடம்'' [திருவிருத்தம் 75] என்கிறபடியே எந்த விபூ4தியென்று நிச்சயிக்க முடியாது என்றபடி. ''மூவரையும் நித்யஸூரிகளோபாதியாக நினைத்திருப்பர்கள்'' என்று முந்திய வாக்கியத்திற்கும் மிகப்பொருந்தும்.



பரப4க்த்யாதி3கள் மூன்றும் ஓரொருவர்க்கே குறைவற உண்டாயிருக்கச்செய்தேயும் ஓரொருத்தர்க்கு ஒவ்வொன்றிலே ஊற்றமாயிருக்கும். ப4க3வத்ஸ்வரூபாதி3கள் எல்லாம் எல்லார்க்கும் அநுப4ாவ்யமாகாநிற்கச்செய்தே ஓரொன்றில் ஒவ்வொருத்தர்க்கு ஊற்றம் சொல்லுகிறாப்போலே அநுப4வாபி4நிவேஶரூபையான பரப4க்த்யாத்3யவஸ்தை2களிலும் தனித்தனியே ஊற்றம் சொல்லக் குறையில்லை. கர்த்ருபே4த3ம் உண்டாயிருந்ததேயாகிலும், ஒருவனுக்கே க்ரமத்தாலே பிறக்கக்கடவ பரப4க்த்யாத்3யவஸ்தா2த்ரயமும் தளமாக ப்ரப3ந்த4த்ரயமும் அவதரிக்கையாலே அர்த்த2க்ரமம் பார்த்தால் ஏகப்ரப3ந்த4மாய்த் தலைக்கட்டக்கடவது. பூர்வோத்தரமீமாம்ஸைகளுக்குக் கர்த்ருபே4த3ம் உண்டா

---

இனி. ''பரப4க்தி பரஜ்ஞாந பரமப4க்திகள் மூன்றும் ஒவ்வொரு ஆழ்வாருக்கும் நிறைந்திருக்கவேண்டும்; அப்படியிருக்க, ஒவ்வொருவருக்கு ஒவ்வொன்று உண்டாயிற்று என்று சொல்லலாமோ?'' எனில்: ஒவ்வொருவருக்கு ஒவ்வொன்றிலே ஊற்றமாகையாலே சொல்லலாம். ப4க3வானுடைய ஸ்வரூபரூபகு3ண விபூ4திகள் எல்லாம் எல்லாருக்கும் அநுப4விக்கத்தக்கதாயிருந்தபோதிலும், ''சிலர் ஸ்வரூபத்திலே ஈடுபடுவர்; சிலர் ரூபத்திலே ஈடுபடுவர்'' என்பது முதலான வ்யவஹாரங்கள் ஊற்றத்தைப் பற்ற உண்டாவதுபோலே, அநுப4வத்தின் பலவித4மான அபி4மான ரூபமாயிருக்கும் பரப4க்தி முதலான நிலைகளிலும் ஒவ்வொருவருக்கு ஒவ்வொன்றில் ஊற்றம் சொல்லலாம். மூன்று திருவந்தாதிகளும் தனித்தனியே மூவராலும் அருளிச்செய்யப்பட்டிருந்தபோதிலும், ஒரு சேதநனுக்குக் கிரமமாகப் பிறக்கக்கூடிய பரப4க்தி முதலான மூன்று நிலைகளையும் ஆதா4ரமாகக் கொண்டு மூன்று ப்ரப3ந்த4மும் அவதரிக்கையாலே, அர்த்த2 க்ரமத்தைப் பார்த்தால் மூன்றும் ஒரே ஶாஸ்த்ரமாக முடிகிறது. பூர்வமீமாம்ஸையை ஜைமினியும், உத்தரமீமாம்ஸையான ப்3ரஹ்மஸூத்ரத்தை வியாஸரும் அருளிச்செய்திருந்தபோதிலும் முதலது வேத3த்தின் பூர்வபா4க3த்துக்கு வியாக்கியானமாகவும், பிந்தியது உத்தரபா4க3மான உபநிஷத்துக்களுக்கு வியாக்கியான

प्रविष्टश्शास्ता जनानां सर्वात्मा" (அந்தః ப்ரவிஷ்டஶ் ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா) என்ருல், "ஸர்வஞ்சாஸ்ய ஶரீரம்" என்று தோற்றுமாபோலே, ஒருத்தன் சரீரம் என்ருல், ஒருத்தன் சரீரி என்று தோற்றுமிறே.

அவ:— ஜ்ஞாநமில்லாமையாலே இவனைஶ்வர்யமும் ஆறல்பீறல் என்கிருர்.

வ்யா:— (அரன்) சிலரை நசிப்பிக்குமவனொருவன். (நாரணன்) ததீ$_3$யத்தையொழிய உளனுகாதவனொருவன்.

என்ருல் "ஸர்வஞ்சாஸ்ய ஶரீரம்" என்று ப்ரதிகோடி வருகிருப்போலே. அன்றிக்கே, இவர்கள் ரூபம் பார்த்தால் எரிமேனியொன்று, கார்மேனியொன்று என்னவுமாம். 5.

[ஸுப$_3$ால] "அந்தர்ப$_3$ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி$_2$த:"[தை-நா] "ஶிவஶ்ச நாராயண:"[நாராயண] "ஸஶிவ:" [தை-நா] முதலான ஶ்ருதிகளிலும், 'விஷ்ணுராத்மா ப$_4$க$_3$வத: ப$_4$வஸ்ய" [பா$_4$ர-கர்ண] [பூஜ்யனுன சிவனுக்கு விஷ்ணு ஆத்மா] முதலான இதிஹாஸபுராண வாக்யங்களிலும் யார் யாருக்கு சரீரம் என்பது ஸுப்ரஸித்$_3$த$_4$மாகையாலே, இன்னுன் என்று விஶேஷிக்காமல், 'மேனி ஒன்று' என்று சொல்லுகிருர். இப்படி அந்வயிக்காமல் (உருவம் எரிமேனியொன்று கார்மேனியொன்று) என்று அந்வயித்து, இவர்களுடைய உருவத்தைப் பார்த்தால், கண்ணைக்கரிக்கும் எரிமேனியொன்று; கண்ணைக் குளிரவைக்கும் கார்மேனியொன்று என்றும் பொருள் கொள்ளலாம்.

சில அறிவாளிகள்(!)இப்பாசுரம் சிவவிஷ்ணு ஸாம்யத்தையும், ஐக்யத்தையும் குறிப்பதாகப் பேசவும் எழுதவும் செய்கிருர்கள். 'அறிவானும்?' என்று சென்ற பாசுரத்தில் சொன்னதும், 'ஏற்ருன்' [74] முதலான மற்றும் பல பாசுரங்களும் இங்கு ரூபநாமவாஹநஸ்த$_2$ாநாதி$_3$ பே$_4$த$_3$ங்களைக் காட்டியிருப்பதும் அவர்களுக்கு ஒட்டாது. ஒருவனைச் சொல்லுவது ஆக$_3$மம்; மற்றவனைச் சொல்லுவது வேத$_3$ம் என்று கூறியிருப்பது அவர்களுக்கு எவ்வகையாலும் பொருந்தாது. 5.



/ "நீயென்னையன்றியிலை". (ஆன்விடை) அநைஶ்வர்ய ஸூசகம். (புள்) † "கெருடவாகனனும் நிற்க"; இவன் ஐஶ்வர்யஸூசகம். (உரை) ஆப்தி கேட்கவேண்டில் விப்ரலம்ப$_4$ாதி$_3$தே$_3$ாஷதூ$_3$ஷிதம். (மறை) அபௌருஷேய நித்ய நிர்த்தே$_3$ாஷ ஶ்ருதி. (வரை) காடி$_2$ந்யத்துக்கு ஸத்$_3$ருஶமானவிடம். (நீர்) தண்ணளிக்குத் தக்கவிடம், (கருமம் அழிப்பு) நசிப்பிக்கை. (அளிப்பு) ரக்ஷிக்கை. (வேல்) காண வயிறழலும். (நேமி) விட்டாலும் "இன்னுரென்றறியேன்" என்னப்பண்ணும். (எரி) நெருப்பைத்தூவும். (கார்) காண ஜீவிப்பிக்கும். (மேனியொன்று) ஒன்று சரீரம்; மற்றையவன் ஶரீரியென்று தன்னடையிலே வருமிறே. அந்தர்யாமி ப்$_3$ராஹ்மணத்தை நினைக்கிருர்.

(அரன்) தன்னையொழிய ஒன்றை அழியாதே நிற்கில் ஈஶ்வரத்வமில்லை. (நாரணன்) தன்னை ஒழிந்தவற்றில் ஒன்று அழியில் ஈஶ்வரத்வமில்லை. (ஆன்) அநீஶ்வரத்வ ஸூசகம்; (புள்) ஈஶ்வரத்வ ஸூசகம். (நூல்) சொன்னவனுக்கு ஆப்தியில்லையாகில் அப்ரமாணம். (மறை) ஆப்தவாக்யமான ப்ரமாணம். (அழிப்பு அளிப்பு) இவற்றை ஸூசிப்பிக்கிறது அரன் நாரணன்; வாசகஶப்$_3$த$_3$த்துக்கு வசநக்ரியைபோலே. (வேல்) கலக்கவரிலும் ப$_4$யமாம். நேமி பிரிந்தாலும், "இன்னுரென்றறியேன்"என்னப்பண்ணும். (உருவம் எரிமேனி ஒன்று; கார்மேனி ஒன்று) இங்ஙனம் சேர்ந்திருக்கவேண்டாவோ? க்ஷேபம். அறிவுடையார்க்குச் சொல்லவேணுமோ சேர. 5.

6. ஒன்று மறந்தறியே னோதநீர் வண்ணனை நான்
இன்று மறப்பனோ வேழைகாள்—அன்று
கருவரங்கத் துட்கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருவரங்க மேயான் திசை.

பதவுரை:—அன்று—அப்பொழுது, கரு அரங்கத்துள் கிடந்து—க$_3$ர்ப்ப$_4$ஸ்த$_2$ானத்தினுள் கிடந்து, திரு அரங்கம் மேயான்—ஸ்ரீரங்கத்தில் பள்ளிகொண்டிருப்பவனுன எம்

/ நான்-திருவ 7. † திருமாலை 10.

பெருமானுடைய, **திசை**—ஸ்வபா4வங்களையெல்லாம், **கண்டேன்**—பார்த்தேன், **கை தொழுதேன்**—அஞ்ஜலிசெய்தேன், **ஒன்றும்**—( அவனுடைய ஸ்வரூபரூபகு3ணவிபூ4திகளில் ) சிறிதும், **மறந்தறியேன்** — மறந்தறியமாட்டேன் ; **ஏழைகாள்**—ப4க3வத்3விஷயமாகிற செல்வத்தை இழந்தவர்களே! **நான்**—அடியேன், **ஓதநீர் வண்ணனை**—கடல்வண்ணனான எமபெருமானை, **இன்று**—(அவனாலே அருளப்பட்ட ஞானத்தையுடையனாயிருக்கும்) இப்போது, **மறப்பனோ**—எப்படி மறப்பேன் ?

**அவ:—ஆரும்பாட்டு. அவனை ஶரீரதயா சேஷமென்றீராகில் நீரும் சேஷபூ4தரன்றோ ? நீர் உபதேசிக்கிறபடி எங்ஙனே ? என்னில்; எனக்கு அவன் ப்ரஸாத3ம் அடியாகையாலே விஸ்ம்ருதிஶங்கையில்லை என்கிறார்.**

---

**அவதாரிகை:**—"அரன் அறிவானாம்" என்று ருத்3ரனை அறிவுகேடனென்று க்ஷேபித்துச் சொன்னீர்; நீர்தாம் அவனையறிந்து பிறர்க்கு உபதே3சிக்கும்படி எங்ஙனே ? என்ன: ஸத்வம் தலையெடுத்தபோது ஸ்வயத்நத்தாலே சிறிது அறிந்தானாய், ரஜஸ்தமஸ்ஸுக்கள் தலையெடுத்தபோது "ஈஶ்வரோஹம்"என்றிருக்கும் அவனைப்போலேயோ நான் ? நிர்ஹேதுகமாக அவன் தானேகாட்டக் கண்டவனாகையாலே எனக்கு ஒரு விஸ்ம்ருதிப்ரஸங்க3மில்லை என்கிறார்.

---

*அவ:*— "அரன் அறிவானும்?" என்று உருத்திரனைத் தாழ்த்திப் பேசினீர். நீர்தாம் ஸர்வேஶ்வரனை அறிந்து பிறர்க்கும் எப்படி உபதேசிக்கிறீர் ? என்று கேட்க,— "ஸத்வகு3ணம் அதி4கமானபோது, தன் முயற்சியாலே ஸர்வேஶ்வரனுடைய பெருமையிலே சிறிது அறிந்தவனாய், ரஜஸ்தமோகு3ணங்கள் அதி4கமானபோது 'நானே ஈஶ்வரன்' என்று நினைத்து எதிரம்புகோக்கும் அவனைப்போலேயோ நான்? என்னிடம் கைம்முதலில்லாமலிருப்பதுவே காரணமாக அவன் தானே தன் கருணையாலே தன்னைக்காட்டக் கண்டவனாகையாலே, எனக்கு ஒரு போதும் ப4க3வானை மறக்க இடமில்லை" என்கிறார்.



**வ்யா:**—(ஒன்றுமறந்தறியேன்—அன்று கருவரங்கத்துட்கிடந்து கைதொழுதேன் கண்டேன்) **க3ர்ப்ப4வாஸம் பண்ணா நிற்கச் செய்தே, "ஐயோ ! நோவுபட்டாயாகாதே" என்று அவன் கடாக்ஷிக்க, அவனைக் கண்டேன். தம்முடைய விலக்காமையைக் கொண்டு ஸாக்ஷாத்கரித்ததாகச் சொல்லுகிறார்.** ( திருவரங்கமேயான் திசை ஒன்றும் மறந்தறியேன் ) **பெரியபெருமாளிடையாட்டத்தில் அவனுடைய ஸ்வரூபரூப கு3ணவிபூ4திகளில் ஒன்றும் மறந்தறியேன்.** (ஓதநீர்வண்ணனை நான் இன்று மறப்பனோ) ஶ்ரமஹரமான **வடிவையுடைய பெரியபெருமாளை இன்று மறப்பனோ ? இது தான் தே3ஹயாத்ரையாய் பரப்ரதிபாத3ந யோக்3யமான காலத்திலே மறப்பனோ ?** (ஏழைகாள்!) **இவ் விஷயத்தில் புதியதுண்டறியாதவர்களே! என்கிறார். திசை என்றது—**

---

**உரை :**— அறிவு நடையாடுகைக்கு யோக்3யதையில்லாத அன்று க3ர்ப்ப4ஸ்த2ானத்திலே கிடந்து, ஜாயமாந காலத்திலே இத்தலையில் அப்ரதிஷேத4மே பற்றாசாகக் குளிரக் கடாக்ஷித்துத் தன் படிகளைக் காட்டித்தருகையாலே, ஸம்ஸாரிகளைத் தண்ணளிபண்ணி ரக்ஷிக்கைக்காகத் தாமே கோயிலிலே வந்து பள்ளிகொண்டருளுகிற பெரியபெருமாளுடைய ஸ்வரூபரூபகு3ணாதி3 ஸமஸ்தஸ்வ

---

*வ்யா:*—*(அன்று)*"அறியாக்காலத்துள்ளே" [திருவாய் 2-3-3] என்கிறபடியே அறிவு வெளிப்படுவதற்குத் தகுதியேயில்லாமல் க3ர்ப்ப4த்திலிருந்த அன்று. *( கருவரங்கத்துட்கிடந்து )* "*ஸுகுமாரதநுர் க3ர்ப்பே4*" [வி·பு 6-5-10] என்று தொடங்கி விஷ்ணுபுராணத்தில் ஆறு சுலோகங்களாலே விவரிக்கப்பட்ட சொல்லவொண்ணா வேதனைகளை அனுப4விக்கவேண்டிய க3ர்ப்ப4ஸ்தா2னத்திலே கிடந்து. *(திருவரங்கமேயான் திசை கண்டேன்)* ஸம்ஸாரிசேதனர் விலக்காமையே காரணமாக த3யைபண்ணி ரக்ஷிப்பதற்காகத் தாமே திருவரங்கம் பெரியகோயிலிலேவந்து பள்ளிகொண்டருளிய பெரியபெருமாளுடைய ஸ்வரூபம், ரூபம், கு3ணம் முதலிய எல்லாப் பெருமைகளையும் கண்டேன். *(கருவரங்கத்துட்கிடந்து கண்டேன்.)*

அவனிடையாட்டத்திலே என்றபடி. அத்தி$_3$க்கிலே என்றும் சொல்லக்கடவதிறே.

(ஒன்றிதயாதி$_3$) கண்டவளவிலே ஒன்றும் மறந்தறியேன். உம்முடைய ஸௌஜந்யமோ? என்னில், அன்று; (ஓதநீர் வண்ணனை) மறக்கவொண்ணாத அழகு. (ஏழைகாள்!)

---

ப$_4$ாவங்களையும் ஸாக்ஷாத்கரித்து அநுப$_4$வித்தேன். காட்சிக்கு அநந்தரமான அஞ்ஜலிப$_3$ந்த$_4$ம் முதலான வ்ருத்தியிலேயும் அந்வயிக்கப்பெற்றேன். மறக்க இடமறும்படி தன்பக்கலிலே இழுத்துக்கொள்ளவற்றாய், ஓதம் கிளர்ந்த ஸமுத்$_3$ரஜலம்போலே இருண்டு குளிர்ந்த வடிவழகை

---

"ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந் மது$_4$ஸூத$_3$ந: |
ஸாத்த்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த$_2$சிந்தக: ||"

*[ப$_4$ார-சாந்தி 358-73]*

[பிறந்துகொண்டிருக்கும்போது எந்தப் புருஷனை மது$_4$ஸூத$_3$னன் பார்க்கிறானோ, அவனே ஸத்வகுணமுடையவனென்று அறியத்தக்கவன். அவனே மோக்ஷப$_2$லத்தை நினைப்பவன்.] என்கிறபடியே க$_3$ர்ப்ப$_4$த்திற்கிடக்கும்போது, என் விலக்காமையே காரணமாகக் குளிரக்கடாக்ஷித்து என்னோவெல்லாம் தீரும்படி தன் தன்மைகளையெல்லாம் காட்டித்தருகையாலே கண்டேன். *(திசை)* திக்கிலே உள்ள அனைத்தையும், அதாவது அவனுடைய ஸ்வரூபம், ரூபம், கு$_3$ணம், விபூ$_4$தி முதலான அனைத்தையும். *(கண்டேன்)* நேரே கண்டு அநுப$_4$வித்தேன். *(கைதொழுதேன்)* காட்சிக்குப் பிறகு உண்டாகும் 'கைகூப்புதல்' முதலான கைங்கர்யத்திலேயும் அந்வயிக்கப்பெற்றேன். மற்ற ஜீவர்களைப்போலே க$_3$ர்ப்ப$_4$த்திலிருந்து வெளிவந்தவுடன் மறந்துவிட்டீரோ? எனில்: *(ஒன்றும் மறந்தறியேன்)* அவனுடைய ஸ்வரூபரூபகு$_3$ணவிபூ$_4$திகளில் ஒன்றையும் ஒருகாலத்திலும் மறந்து அறியேன். இப்படி மறந்தறியாதது உம்முடைய பெருமையோ? எனில்: *(ஓதநீர் வண்ணனை)* என்பெருமையன்று; அவ்வடிவழகு என்னை மறக்கவொட்டிற்றில்லை என்கிறார். *(ஓதநீர் வண்ணனை)* மறக்கமுடியாதபடி தன்னிடம் வருவாரை இழுத்துக்கொள்ளும் இருண்டு குளிர்ந்த அலைகள் கிளரும் கடல்நீர்போன்று தன்னிடம் வருவாரை அகலவொண்



மறக்க வொண்ணாத விஷயத்தை விட்டு, நினைக்க வொண்ணாத விஷயத்தைப்பற்றி நிற்கிறவர்களே! (அன்று) "அறியாக்காலத்துள்ளே" 18. "जायमानं हि" (ஜாயமாநம் ஹி) (கருவித்யாதி$_3$) மறக்கைக்கு ஹேதுவுள்ளவிடத்திலே மறந்திலேன்; நினைக்கைக்கு ஹேதுவுள்ளவிடத்திலே இன்று மறப்பனோ? (திருவரங்கமேயான) இடையாட்டம் பரத$_3$சையிலேயோ? எல்லைநிலத்திலே.

அன்று கருவரங்கத்துட்கிடந்து, திருவரங்கமேயான் திசை கைதொழுதேன் கண்டேன்; ஒன்றும் மறந்தறியேன்; ஓதநீர்வண்ணனை, நான் இன்று மறப்பனோ ஏழைகாள்! என்று அந்வயம், 6.

7. திசையும் திசையுறு தெய்வமும் தெய்வத்
திசையும் கருமங்க ளெல்லாம் — அசைவில்சீர்க்
கண்ணன் நெடுமால் கடல்கடைந்த காரோத
வண்ணன் படைத்த மயக்கு.

---

யுடையவனை ஏகதே$_3$ஶமும் மறந்தறியேன். உத$_3$(இத?)ர விஷயங்களிலே மண்டித்திரிகிற அறிவுகேடர்காள்! மறக்கைக்கு ஹேதுவுள்ளவிடத்தில் மறவாத நான் நினைக்கைக்கு ஹேதுவுள்ள இன்று மறப்பனோ? 6.

---

ணாதபடி இழுத்துக்கொள்ளும் தன்மையையும், இருண்டு குளிர்ந்த வடிவழகையும் உடையவனை. *(நான்)* மறக்கைக்குக் காரணமுள்ள க$_3$ர்ப்ப$_4$த்திலிருந்தபோதே மறக்காத நான். *(இன்று மறப்பனோ)* நினைக்கைக்குக் காரணமான ஞானச்சிறப்பையுடைய இன்று மறப்பனோ? பிறருக்கும் உபதே$_3$ஶிக்கத் தக்க ஞானப்பெருமையை உடைய இன்று மறப்பேனோ? *(ஏழைகாள்)* மறக்கமுடியாத பெருஞ்செல்வத்தைவிட்டு, நினைக்கக்கூடாத மூதேவிபோன்ற விஷயங்களைப்பற்றித் திரியும் நித்யத$_3$ரித்$_3$ரர்களே! ப$_4$க$_3$வத்$_3$விஷயமாகிற பெருஞ்செல்வம் எப்படியிருக்கும் என்றுகூட அறியாதவர்களே! *(திருவரங்கமேயான்திசை மறப்பனோ)* பரமபத$_3$நாதனையோ நான் மறவாமலிருப்பது? எல்லைநிலமான (அர்ச்சாவதாரமான) பெரியபெருமாளிடமன்றோ நான் "அச்சுவை பெறினும் வேண்டேன்" என்று ஈடுபட்டிருப்பது. 6

**பதவுரை:— திசையும்**—தி3க்குகளுடன்கூடிய உலகங்களும், **திசை உறு தெய்வமும்**—அந்த தி3க்குகளிலிருக்கும் தே3வதைகளும், **தெய்வத்து இசையும் கருமங்கள்**—அந்தந்த தேவதைகளுக்குத் தகுந்த (ஸ்ருஷ்டி முதலிய) காரியங்களும், **எல்லாம்**—ஆகிய இவையெல்லாம், **அசைவு இல் சீர்**—அழிவற்ற கல்யாணகு3ணங்களையுடைய, **கண்ணன்**—க்ருஷ்ணனுய் அவதரித்தவனும், **நெடு மால்**—(அடியவர்களிடம்) அளவற்ற அன்பையுடையவனும், **கடல் கடைந்த**—(தேவர்கள் அபேக்ஷித்ததே ஹேதுவாக உடம்புநோவக்) கடல்கடைந்தவனும், **கார் ஓத வண்ணன்**—மேக4ம்போன்றதும், கடல்போன்றதுமான திருநிறத்தையுடையவனுமான எம்பெருமான், **படைத்த**—உண்டாக்கின, **மயக்கு**—அறிவை மயக்கும் பதா3ர்த்த2ங்கள்.

**அவ:—ஏழாம் பாட்டு. "அல்லாத தே3வதைகள் ஶரீரதயா ஶேஷபூ4தர், நிர்வாஹ்யர்; அவனே ஶேஷி, நிர்வாஹகன் என்று சொல்லும்படி எங்ஙனே. அவர்களும் ஓரோ தே3ஶங்களுக்கு ஈஶ்வரருமாய் அவர்களுக்கு ப்ரத4ானமான செயல்களுமுண்டாய்ச்செல்லாநிற்க ?" என்ன ; அதுக்கும் அடி அவனே; அது அவன் ஸ்வாதந்த்ர்யத்துக்கு வர்த்த4கம் என்கிறுர்.**

---

அவ:—இப்படியாகில், நாடடங்க எம்பெருமானைவிட்டுக் கண்ட கண்ட தே3வதைகள் காற்கீழே தலையெ(ம?)டுத்துத் திரிகைக்கு அடியென் ? என்னில்: உகவாதார் தன்னை வந்து கிட்டாமைக்கு அவன் பண்ணின மயக்குக்கள் என்கிறுர்.

---

***அவ:***— **இப்படி அவன் ஸுலப4னுகில், உலகமெல்லாம் எம்பெருமானை விட்டு, கண்டகண்ட தெய்வங்களின் காலின் கீழே தலைசாய்த்துத் திரியக் காரணமென்? என்ன, தன்னிடம் அன்பற்றவர்கள் தன்னைவந்து அடையாமலிருப்பதற்காக அவன் பண்ணிவைத்த மயக்குக்களேயாகும் என்கிறுர்.**



வ்யா:— (திசையும்) **தி3க்கோடே கூடின பூ4மியும்.** (திசையுறு தெய்வமும்) **அத்திக்கிலே வ்யாப்தரான தே3வர்களும்.** (தெய்வத்து இசையும் கருமங்களெல்லாம்)

---

**உரை:**— தி3கு3பலக்ஷிதையான பூ4மியும், அவ்வவ தி3க்குகளிலே வர்த்திக்கிற தே3வதைகளும், அத்தே3வதைகளுக்குச் சேர்ந்த ஸ்ருஷ்ட்யாதி3வ்யாபாரங்களும் யாவும்,

---

*வ்யா :— (திசையும்)* 'திசை' என்னும் சொல்லால் உபலக்ஷணமுறையாலே உணர்த்தப்பட்ட (நாற்றிசையிலும் பரந்துள்ள) பூ4மியும். *(திசையுறு தெய்வமும்)* அந்தந்த திசைகளிலே வியாபித்து நிற்கும் தெய்வங்களும். *(தெய்வத்து இசையும் கருமங்கள்)* அந்தந்த தெய்வங்களிடம் பொருந்தி நிற்கும் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்கள் முதலான தொழில்களும். *(நெடுமால் படைத்த மயக்கு)* ஸர்வேஶ்வரன் தன்னிடம் அன்பில்லாதவர்கள் தன்னைவிட்டு அகல்வதற்காகப் பண்ணிவைத்த மயங்கப்பண்ணும் பொருள்கள். எல்லாரும் மோக்ஷமடைந்துவிட்டால் லீலாவிபூ4தி ஆள் அற்றுப்போகும்; சாஸ்திரமரியாதை குலைந்துபோகும். தன்னிடம் அன்புடையார் தன்னை அடையவும் வேணும் ; அன்பற்றவர்கள் தன்னைவிட்டு அகன்று தன் லீலைக்கு விஷயமாகிப் போகவும்வேணும். இவற்றையெல்லாம் கருதிய ஸர்வேஶ்வரன் பல மயக்குகளைப் படைத்துவைத்தான். *(திசையும் மயக்கு)* பூ4மியைப் படைத்த பரமன், அதைப் படைத்தவனுன தன்னை மறைத்தான். இதனுலே சில பாபிகள், இதற்கு ஈஶ்வரன் இல்லை என்றும், மற்றும் சிலர் கண்டகண்ட தெய்வங்களைப் பரமன் என்றும் கூறிக்கொண்டு தாமும் மயங்கிப் பிறரையும் மயக்குகிறுர்கள். *(திசையுறு தெய்வமும் மயக்கு)* திக்குகள்தோறும் மறைந்துவாழும் பல தெய்வங்களையும் படைத்துவைத்தான் ; அந்த தெய்வங்களுக்கு ஸர்வேஶ்வரன் கொடுத்துவைத்த சில ஶக்திகளைக்கண்டு, 'இவையே பரதெய்வம்' என்று பலர் மயங்கினுர்கள். *(தெய்வத்து இசையும் கருமங்கள் மயக்கு)* அந்த தெய்வங்களிடத்திலே பொருந்தியிருக்கும் சில காரியங்களையும் ஏற்படுத்தினுன் ஸர்வேஶ்வரன்.

**அவ்வவ தே$_3$வதைகளுக்குப் பொருந்தின கர்மங்களெல்லாம். த்ரிபுரத$_3$ஹநாதி$_3$. ( அசைவில் சீர் ) அல்லாதாருடைய**

---

அபக்ஷயாதி$_3$தோ$_3$ஷங்களின்றிக்கே நித்யமான கல்யாண கு$_3$ணங்களை உடையனாய், அக்கு$_3$ணங்கள் ப்ரேரிக்க

---

ஒரு ஜீவனைப் பிரமன் என்னும் தேவனாகப் படைத்து, அவனை மேற்போர்வையாகக்கொண்டு மற்றுள்ள உலகத்தைப் படைக்கும் தொழிலைச் செய்கிறான். பார்ப்பவர்களுக்குப் படைப்புத் தொழில் பிரமனிடத்திலே பொருந்தியிருக்கிறது என்னும் மயக்கத்தை உண்டாக்குகிறான். இப்படியே மற்றொரு ஜீவனை உருத்திரன் என்னும் தே$_3$வதையாகப் படைத்து. அவனுக்குத் தான் ஆத்மாவாயிருந்து ஸம்ஹாரம், திரிபுரத$_3$ஹனம், ஆலகால விஷபாநம் முதலானவற்றைச்செய்து, பார்ப்பவர்களை இவ்வருஞ் செயல்களைச் செய்யும் இவனே பரம்பொருள் என்று மயங்க வைக்கிறான். அவனோடு நில்லாமல், அவன் மனைவியாகிற து$_3$ர்க்கை$_3$யே பரம்பொருள் என்றும், மகனாகிற முருகனே பரம்பொருள் என்றும், க$_3$ணபதியே பரம்பொருள் என்றும் மற்றும் பலவிதமாகவும் பலரை மயங்கவைக்கிறான். *(எல்லாம் மயக்கு)* இவை மாத்திரமோ? மற்றும் எத்தனையோ மயக்குகளைச் செய்கிறான் மாயப்பிரான். அந்தந்த தே$_3$வதைகளையே பரம்பொருளாகச் சொல்லும் ஆக$_3$மங்களையும் புராணங்களையும் ஏற்படுத்திப் பலரை மயங்கவைக்கிறான். அந்தந்த மதத்திற்கான கோயில்களையும், மதாசாரியர்களையும், தெய்வமில்லையென்பாரையும், உலகில்லையென்பாரையும், 'தெய்வத்திற்குக் கு$_3$ணமில்லை ரூபமில்லை, ஒன்றுமற்ற அறிவுதான் தெய்வம்' என்பாரையும், மற்றும் எத்தனையெத்தனையோ மதவாதி$_3$களையும் படைத்து உலகத்துச் சேதனரில் மிகப் பெரும் பகுதியினரை மயங்கவைத்துவிடுகிறான் மாயவன்.

இப்படிப் பல மயக்குகளைப் படைத்துவிடுகிறானாகில், ஒரு சிலராவது அவனை அடைந்துய்ய வழியில்லையோ? எனில்: சில பா$_4$க்$_3$யவான்களுக்குத் தன்னைக் காட்டியும் கொடுக்கிறான் என்கிறார்: ( அசைவு இல் சீர் ) *"அபக்ஷய விநாஶாப்$_4$யாம் பரிணாமர்த்$_3$தி$_4$ ஜந்மபி$_4$: வர்ஜித:"* [வி-பு 1-2-11] [குறைவு



**சீருக்கு அசைவுண்டு போலே காணும்.** (கண்ணன்) **தன்னை இதரஸஜாதீயனாக்குவது தன்னுடைய இச்சை$_2$யாலே.** (நெடுமால்) **10. "यतो वाचो निवर्तन्ते" (யதோ வாசோ நிவர்த்தந்தே) என்று ஓதப்படும் பெரியவன்.** (கடல் கடைந்த) **பெரியவன் என்றிராதே அரியன செய்து நோக்குமவன்.**

---

வந்து, க்ருஷ்ணனாய் வந்து பிறந்த ஸௌலப்$_4$யத்தையுடையனாய், ஸௌலப$_4$னானவிடத்திலும் அளவிடவொண்ணாத பெருமையையுடையனாய், தம் பெருமை பாராதே ஶரணம்புக்க தே$_3$வர்களுக்காக உடம்பு நோவக் கடலைக் கடைந்து அபேக்ஷித ஸம்வித$_4$ாநம் பண்ணுமவனாய், ரக்ஷி

---

படுதல், அழிதல், மாறுதல், வளருதல், பிறத்தல் என்னும் (மற்ற பொருள்களுக்குள்ள) தன்மைகளற்றவன் பரமபுருஷன்] என்கிறபடியே தான் மற்ற தெய்வங்களைப்போலே பிறப்பு இறப்பு முதலான மாறுபாடுகள் அற்றவன் என்பதை வேத$_3$ங்களாலும், ஸ்ம்ருதி இதிஹாஸங்களாலும், ஸாத்விகபுராணங்களாலும் காட்டிக்கொடுத்தான். *(கண்ணன்)* இப்படிப்பட்டவனாயிருந்தும், இடைச்சிக்கும் கட்டவும் அடிக்கவுமாம்படி கண்ணனாயவதரித்து, அங்நிலையிலும், பாரிஜாத கோ$_3$வர்த்த$_4$ன விருத்தாந்தத்தின்போது இந்திரனைக் காட்டிலும் மேற்பட்டவனென்றும், பா$_3$ணாஸுரயுத்$_3$த$_4$ம் முதலானவிடங்களில் சிவனைக் காட்டிலும் மேலானவனென்றும், பிரமன் பசுக்களையும், ஆயர்களையும் மறைத்தபோது தானே எல்லாமாகவும் நின்று பிரமனைக்காட்டிலும் மேலானவனென்றும் காட்டிக்கொடுத்தான். *(நெடுமால்)* திரிவிக்கிரமாவதாரசமயத்தில் நெடியமாலாக வளர்ந்து, ஒருவன் திருவடியைக் கழுவவும், மற்றொருவன் ஸ்ரீபாத$_3$தீர்த்த$_2$த்தைத் தலையாலே தாங்கவும் நின்று தானே ஸர்வாதி$_4$கன் எனக் காட்டிக்கொடுத்தான். *"நாராயணபரம் ப்$_3$ரஹ்ம"* முதலான வேத$_3$சாஸ்திரவசனங்களாலே தானே மிகப்பெரியவன் என்பதைக் காட்டிக்கொடுத்தான் என்றுமாம். *(கடல்கடைந்த)* இப்படி மிகப்பெரியவனாயிருந்தும், தம் அபி$_4$மானத்தை அகற்றி ஶரணமடைந்த தே$_3$வர்களுக்காக உடம்பு நோவக் கடல்கடைந்து, மற்றும் அரியன பலசெய்து அவர்கள்

(காரோதவண்ணன்) **நோக்காதே அழிக்கிலும் விடவொண்ணுத வடிவு.** (படைத்த மயக்கு) **ப3லஶக்தியையும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியையும் கொடுத்துவைத்தால் தன்வழி வாராதவர்களை அறிவுகெடுக்கும்படி. அல்லாதாரறியா விடுவான். 19. 'दैवी ह्येषा गुणमयी' (தை3வீ ஹ்யேஷா கு3ணமயீ).**

(தெய்வத்திசையும்) **ஸ்ருஷ்ட்யாதி3 கர்மங்கள்.** (அசைவில் சீர்) **நித்யமான கல்யாணகு3ணம்.** (கண்ணன் நெடுமால்) **ஆஶ்ரிதரை விடாத பெரும்பித்தன்.** (கடல்கடைந்த) **அபேக்ஷிப்பாரே வேண்டுவது.** (காரோதவண்ணன்) **கு3ணஹீநனுலும் விடவொண்ணுது.** 7.

---

யாதே அழியச்செய்யிலும் விடவொண்ணுதபடி கறுத்த கடல்போலே இருண்டு குளிர்ந்த வடிவை உடையனுனவன். தன்பக்கல் வாராதாரை அகற்றுகைக்கு உண்டாக்கின ப்4ராமகவஸ்துக்களாயிருக்கும். மயக்கு — மயங்கப் பண்ணும் வஸ்துக்கள். 7.

---

விருப்பத்தை நிறைவேற்றி, அதனுலும் தே3வாதி3தே3வன் தானே என்பதைக் காட்டிக்கொடுத்தான். (*காரோத வண்ணன்*) இப்படி அருஞ்செயல்கள் செய்து அளிக்காமல், அழித்தாலும் விடமுடியாத நீலக்கடல்போன்று கறுத்துக் குளிர்ந்த வடிவழகினுலும் தானே பரம்பொருள் என்பதைக் காட்டிக் கொடுத்தான். *(படைத்த மயக்கு)* இவ்வளவு செய்தும், அறிவைக் கொடுத்தும், தன்னிடம் ஈடுபடாமல் துவேஷத்தையே காட்டுமவர்கள் அறிவுகெட்டு அகலும்படியாகப் படைத்த மயங்கப்பண்ணும் பொருள்கள்தான் பூ4மியும், தே3வர்களும், அவர்களுடைய தொழில்களும்.

**"தை3வீ ஹ்யேஷா கு3ணமயீ மம மாயா து3ரத்யயா।**
**மாமேவ யே ப்ரபத்3யந்தே மாயாமேதாம் தரந்தி தே॥"**
*[கீ3தை 7-14]*

[தே3வனுகிய என்னுல் நிருமிக்கப்பட்டதும், முக்குணங்களை உடையதுமான இந்த என்னுடைய மாயை தாண்ட அரிதானது.



**8. மயங்க வலம்புரி வாய்வைத்து வானத்**
**தியங்கு மெறிகதிரோன் றன்னை—முயங்கமருள்**
**தேராழி யால்மறைத்த தென்நீ. திருமாலே**
**போராழிக் கையால் பொருது.**

**பதவுரை:— திருமாலே**—ஸ்ரீநிவாஸனே! **நீ**—(ஸத்யஸங்கல்பனுன) நீ, **முயங்கு அமருள்**—(ஸைந்யம்) நிறைந்த பா4ரத யுத்3த4களத்தில், **போர் ஆழி கையால்**—யுத்3த4ம் செய்ய ஸாத4னமான சக்கரத்தையுடைய கையால், **பொருது**—(பீ4ஷ்மருடன்) யுத்3த4ம் செய்து, **மயங்க**—(அநுகூலர்களும், ப்ரதிகூலர்களும்) மோஹிக்கும்படியாக, **வலம்புரி**—ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை, **வாய்வைத்து**—திருப்பவளத்தில் வைத்து ஊதி, **வானத்து இயங்கும்**—ஆகாயத்தில் ஸஞ்சரிக்கிற, **எறி கதிரோன் தன்னை** - கிரணங்களை வெளிவிடும் ஸூர்யனை, **தேராழியால்**—சக்கரத்தால், **மறைத்தது**—தோற்றுமல் செய்தது, **என்**—ஏதுக்காக?

**அவ:— எட்டாம் பாட்டு. இம்மயக்குப் பொதுவோ? என்னில், ஆஶ்ரிதரைத் தன்னை அழியமாறியும் நோக்கும் என்கிறுர்.**

---

**அவதாரிகை:—** இப்படி அநாஶ்ரிதரை மயங்கப்பண்ணுகிற அளவன்றிக்கே ஆஶ்ரிதவிஷயத்தில் ஸத்யஸங்கல்பனுன தன் நிலை குலைந்தும் பக்ஷபதித்து ரக்ஷிக்கும் என்கிறுர்.

---

என்னையே எவர்கள் ஶரணமடைகிறுர்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகிறுர்கள்.] என்று தானே இதை கீ3தையில் அருளிச்செய்தானன்றே. *"நைவாஸுர ப்ரக்ருதய: ப்ரப4வந்தி போ3த்3து4ம்"* [ஸ்தோ-ர 15] [அஸுரத்தன்மை பொருந்தியவர்கள் உன்னை ஒருபோதும் அறியமாட்டார்கள்] என்றும், *" தவ பரிப்3ரடி4மஸ்வபா4வம் மாயாப3லேந ப4வதாபி நிகூ3ஹ்யமாநம் பஶ்யந்தி கேசித3நிஶம் "* [ஸ்தோ-ர 16] [மயக்குகளின் ப3லத்தாலே தேவரீராலேயே மறைக்கப்பட்டபோதிலும், உன் பரத்துவத்தைச் சில மஹான்கள் எல்லாக் காலத்திலும் அறிகிறுர்கள்] என்றும் ஆளவந்தார் இப்பாசுரத்தை அடியொற்றி அருளினுர்.

வ்யா:—(மயங்க இத்யாதி$_3$) அர்ஜுநன்(னை) நிமித்தமாக நிறுத்தி யுத்$_3$த$_4$ம்பண்ணப்புக்கால், இவன் க்ரமத்தாலே தொடுத்துவிட்ட அம்புக்கு எதிரிகள் போகாதவளவில், தன் திருவாயிலே ஸ்ரீபாஞ்சஜந்யத்தை வைக்குமித்தனை; அதுக்கு ஒருத்தராலும் இருக்கப் போகாது; அநுகூலரோடு ப்ரதி கூலரோடு வாசியற எல்லாரும் மயங்குமித்தனை. உகவை யாலே மயங்குவாரும், ப$_4$யத்தாலே மயங்குவாரும். 20. "देवानां ववृधे तेजः प्रसादश्चैव योगिनां' (தே$_3$வாநாம் வவ்ருதே$_4$ தேஜ:

---

உரை:— து$_3$ர்யோத$_4$நாதி$_3$கள் பீ$_4$த்யதிஶயத்தாலே அறிவழியும்படியாக,—ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருப்பவளத் திலே மடுத்து ஊதி, மறைக்கவொண்ணாத தனனிலமான ஆகாஶத்திலே, குறிக்கவொண்ணாதபடி இதஸ்ததஸ் ஸஞ்சரிக்குமவனாய், ஸ்வதேஜஸ்ஸாலே ஸர்வரையும் அபி$_4$

---

*அவதாரிகை*:— இப்படித் தன்னை அடையாதவர்களையே மயங்கப் பண்ணுகிறான்; தன்னை அடைந்தவர்கள் விஷயத்திலோ வெனில், ஸத்யஸங்கல்பன் எனப்படும் தன் நிலையைக் குலைத்துக் கொண்டும் பக்ஷபாதம் கொண்டு ரக்ஷிக்கிறான் என்கிறார்.

*வ்யா*:— (*மயங்க வலம்புரி வாய்வைத்து*) போரிலே, "*நிமித்தமாத்ரம் ப$_4$வ*"[கீ$_3$தை 11-33][அர்ஜுனா!(இவர்களை அழிப் பதில்) நீ ஒரு வியாஜமாத்திரமாக ஆவாயாக.] என்கிறபடியே வியாஜமாத்திரமான அர்ஜுனன் தொடுத்த அம்புக்கு எதிரிகள் அசையாவிட்டால், தன் திருவாயிலே ஸ்ரீபாஞ்சஜந்யத்தைவைத்து ஊத ஆரப்பிப்பான் கண்ணன்; பீ$_4$ஷ்மர் முதலான அன்பர்கள் உகப்பாலே அறிவழிந்து மயங்கிவிடுவார்கள்; து$_3$ர்யோத$_4$னன் முதலான அன்பற்றவர்கள் ப$_4$யத்தாலே அறிவுகெட்டு மயங்கி விடுவார்கள். அர்ஜுனனுடைய அம்புகள் அடிக்கக்கூடியது ஒரு சிலரை. இவ்வொலிகேட்டால் கூண்டோடு மயங்குவார்கள்.

"யஸ்ய நாதே$_3$ந தை$_3$த்யாநாம் ப$_3$லஹாநிரஜாயத।
தே$_3$வாநாம் வவ்ருதே$_4$ தேஜ:
ப்ரஸாத$_3$ஶ்சைவ யோகி$_3$நாம்॥" [வி-பு 5-21-29]

[எந்தப் பாஞ்சஜந்யத்தின் ஒலியினால் அஸுரர்களுக்கு ப$_3$லக் குறைவு ஏற்பட்டதோ, தே$_3$வர்களுடைய தேஜஸ் விருத்தி யடைந்ததோ, யோகி$_3$களுடைய ஆநந்த$_3$ம் அதி$_4$கரித்ததோ...]



ப்ரஸாத$_3$ஶ்சைவ யோகி$_3$நாம்) என்கிறபடியே: 21. "स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत्" (ஸ கோ$_4$ஷோ தா$_4$ர்த்தராஷ்ட்ரா ணாம் ஹ்ருத$_3$யாநி வ்யதா$_3$ரயத்). 22. 'अद्यैव नष्टं कुरूणां बलमिति धार्तराष्ट्रा मेनिरे; तद्विजयाकाङ्क्षिणे सञ्जयोऽकथयत्—ईदृशी भवदीयानां विजयस्थितिरिति" (அத்$_3$யைவ நஷ்டம் குரூணாம் ப$_3$லமிதி தா$_4$ர்த்தராஷ்ட்ரா மேநிரே; தத்$_3$விஜயாகாங்க்ஷிணே ஸஞ்ஜயோऽகத$_2$யத், ஈத்$_3$ருஶீ ப$_4$வதீ$_3$யாநாம் விஜயஸ்தி$_2$தி-ரிதி). (வானத்து) மறைக்கவொண்ணாத நிலத்திலே. (இயங்கும) ஒரு க்ஷணம் ஓரிடத்தில் நில்லாதவனை. (எறி கதிரோன் தன்னை) குறித்துப் பார்க்கப் போகாதபடி கிரணங்

---

ப$_4$விக்கிற கிரணங்களையுடையனான ஆதி$_3$த்யனை, ஆஶ்ரித விஷயத்தில ஓரத்துக்கு உவாத்தான பிராட்டியார் பக்கல்

---

"ஸ கோ$_4$ஷோ தா$_4$ர்த்தராஷ்ட்ராணாம்
ஹ்ருத$_3$யாநி வ்யதா$_3$ரயத்। [கீ$_3$தை 1-19]

[அந்தச் சங்கநாத$_3$ம் திருதராஷ்ட்ரபுத்ரர்களுடைய ஹ்ருத$_3$யங் களைப் பிளந்தது] என்று சொல்லப்பட்டதன்றோ.

(*மயங்க வலம்புரி வாய் வைத்து...என்?*) து$_3$ரியோத$_4$னனிடம் 'ஆயுத$_4$ம் எடுக்கமாட்டேன்' என்று ஸங்கல்பம் செய்திருந்த நீ வீரர்கள் மயங்கும்படியாகப் பாஞ்சஜந்யத்தை ஏன் வாயிலே வைத்து ஊதினாய்? பாஞ்சஜந்யம் பஞ்சாயுத$_4$ங்களில் சேர்ந்த தன்றோ? அதைக்கொண்டு நீ செய்த காரியம் ஆயுத$_4$த்தின் தொழிலன்றோ? என்று கருத்து. நான் என் உகப்புக்குப் போக்குவீடாக ஊதியதில் அவர்கள் மயங்கினால் அதற்கு நான் என்செய்ய? என்று திருவுள்ளமாக, இவ்வொரு ஆயுத$_4$த்தை மாத்திரமோ எடுத்தது? மற்றொன்றையும் எடுக்க வில்லையோ? என்கிறார் மேலே,—(*வானத்து*) சூரியன் பூ$_4$மிக்கு வந்திருந்தபோதோ அவனை மறைத்தது? மறைக்கமுடியாதபடி தன் நிலமான ஆகாயத்தில் வெகுதூரத்திலிருப்பவனையன்றோ மறைத்தது. (*இயங்கும்*) ஆகாயத்தில்தான் நிலையாய்க் காண்கி றானோ? கிழக்குமேற்காக ஸஞ்சரிப்பவனையன்றோ மறைத்தது! (*எறி கதிரோன் தன்னை*) குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரனையோ இப்படி மறைத்தது? எவ்வளவு மறைத்தாலும்

களை விடாநின்றுள்ளவனை. (முயங்கித்யாதி$_3$) **23. "सत्य-सङ्कल्पः" (ஸத்யஸங்கல்ப:) என்கிற ஶ்ருதிக்குச் சேருமோ? 24. 'न मे मोघं वचो भवेत्' (ந மே மோக$_4$ம் வசோ ப$_4$வேத்) என்றருளிச்செய்த வார்த்தைக்குச் சேருமோ? ஈஶ்வரத்வத்துக்குச் சேருமோ?**

---

பெரும பிச்சனுனவனே! ஸகலப்ராணிகளும் யுத்$_3$த$_4$ தி$_3$த்$_3$ருக்ஷயா வந்து நெருங்கிக் கிடககிற ஸமரபூ$_4$மியிலே பொருகைக்குப் பரிகரமான திருவாழியோடேகூடின திருக்கையாலே பீ$_4$ஷ்மாதி$_3$களைத் துரத்திப் பொருது ஸத்யஸங்கல்பனுன நீ அத்தைதக்குலேத்துத் திருவாழியாலே மறைத்தருளிற்று ஏதுக்காக?

---

தன் ஒளியாலே எல்லார் கண்ணையும் கரிக்கும் கிரணங்களையுடைய மறைக்கமுடியாத சூர்யனையன்றே மறைத்தது! பூர்ண ஸூர்யக்$_3$ரஹணத்தின்போதும் கிரணங்களை மறைக்க முடிவதில்லையே! அவற்றையுமன்றே மறைத்துவிட்டாய்! (*முயங்கமருள்*) ஒருவரிருவருக்கு மறைத்துக் காண்பித்தாயோ? யுத்$_3$த$_4$த்தைக் காண்பதற்கு எல்லாப் பிராணிகளும் போர்வீரர்களும் நெருங்கிநின்ற யுத்$_3$த$_4$களத்திலுள்ள அனைவர்க்குமன்றே மறைத்தாய்! (*தேராழியால் மறைத்தது என் நீ*) சங்கம்போலே பெரும்பாலும் ஆப$_4$ரணமாயிருப்பதொன்றே? யுத்$_3$த$_4$ம் செய்வதையே தொழிலாகக்கொண்ட சக்ரத்தாலன்றே மறைத்தாய்! இதை எப்படி நீ செய்யலாம்? '*ஸத்யஸங்கல்ப:*' [ச$_2$ாந் 8-7-1] [உண்மையான ஸங்கல்பத்தை உடையவன்] என்ற வேத$_3$த்துக்குப் பொருந்துமோ நீ செய்த இக்காரியம்?

**"த்$_3$யௌ: பதேத் ப்ருதி$_2$வீ ஶீர்யேத்**
**ஹிமவாந் ஶகலீப$_4$வேத்।**
**ஶுஷ்யேத் தோயநிதி$_4$: க்ருஷ்ணே!**
**ந மே மோக$_4$ம் வசோ ப$_4$வேத்॥"** [*ப$_4$ார-உத்70-48*]

[க்ருஷ்ணையே! ஆகாயம் கீழே விழக்கூடும்; பூ$_4$மி சுக்கலாகக்கூடும்; இமயமலை தூளாகக்கூடும்; ஸமுத்$_3$ரம் வற்றக்கூடும்; என்னுடைய வார்த்தை வீணுகாது.] என்று நீ அருளிய வார்த்தைக்குத்தான் சிறிதாவது சேருமோ இது?



**(திருமாலே!) ஸத்யஸங்கல்பத்தை அழிக்குமவனைச் சொல்லுகிறது. (போராழி இத்யாதி$_3$) ஆயுத$_4$மெடுக்கவொண்ணுதென்று சொன்ன பீ$_4$ஷ்மாதி$_3$கள் முன்னே ஆயுத$_4$த்தை எடுத்துப் பொருது.**

---

ஸர்வஸாத$_4$ாரணமான உறவுக்குச் சேருமோ? ஸத்யஸங்கல்பனுயிருக்கிற இருப்புக்குச் சேருமோ? உன் பெருமைக்குப் போருமோ? இவை எல்லாவற்றையும்

---

"ஆயுத$_4$த்தைக் கையால் எடுக்கமாட்டேன்" என்றல்லவோ நான் பிரதிஜ்ஞை செய்தது? இங்கு கையால் எடுத்தேனே? ஸங்கல்பத்தாலன்றே ஆழியால் சூரியனை மறைத்தேன்? என்று திருவுள்ளமாக, சண்டை செய்வதற்காகவே கையால் எடுத்துப் போரிட்டதும் இல்லையோ? என்கிருர் மேலே, — (*போராழிக் கையால் பொருது*) போர்புரிவதற்கென்றே ஏற்பட்ட ஸுத$_3$ர்ஶனத்தைக் கையில் ஏந்தி பீ$_4$ஷ்மரையும், அவரோடு கூட நிற்பாரையும், துரத்திச் சண்டை செய்யவில்லையோ நீ? (*என் நீ*) இதை எப்படிச் செய்தாய்? து$_3$ரியோத$_4$நாதி$_3$யரோடு, பாண்ட$_3$வரோடு வாசியில்லாமல் ஸ்வாமியாயிருக்கும் உன் உறவுக்குப் பொருந்துமோ? ஸத்யஸங்கல்பனுன இருப்புக்குப் பொருந்துமோ? உன்பெருமைக்குத்தான் பொருந்துமோ? இவை எல்லாவற்றையும் காலின் கீழ் மிதித்துக்கொண்டு (அலட்சியம்செய்து) இப்படிச் செய்தது எதற்காக? (*திருமாலே*) திருமாலாகையாலே செய்தாய் என்று கருத்து. திருவாகிற பெரியபிராட்டியாரிடம் பெரிய மால் (பித்து) கொண்டிருப்பவனுகையாலே செய்தாய். அடியார்களுக்குப் பக்ஷபாதம் காட்ட வேண்டிய விஷயத்தில் அவள் உனக்கும் உவாத்தாக (உபாத்தியாயராக) இருப்பவள். அவளுடைய உபதே$_3$ஶத்தாலே செய்தாயித்தனை என்று கருத்து. இது இவனுடைய ஸத்யஸங்கல்பத்துக்குச் சேருமோ? எனில்: சேரும். பரமபுருஷனுடைய ஸங்கல்பம் எதுவும் வீணுகாது என்பது பொதுவிதி$_4$, 'எது செய்தாகிலும், எப்பாடுபட்டாகிலும் என் அடியார்களை ரக்ஷிப்பேன்' என்றும் ஒரு விஶேஷஸங்கல்பம் செய்துவைத்திருக்

(மயங்க) எல்லார்க்கும் ஆஶ்ரிதவிஷயத்தில் அவர்கள் ஸங்கல்பித்தபடியே நடத்தும் பக்ஷபாதி. (மயங்க) "ஆயுத$_4$மெடேன்" என்றுவைத்து அர்ஜுநன் அம்பாலே தனித் தனியே கொல்லப்பற்றாமே ஒருகாலே முழுக்காயாக அவிய. (வானத்து) தூரத்தே நிற்கிறவனை. (இயங்கும்) ஸஞ்சரிக்கிறவனை. (முயங்கமருள்) தனியிடத்திலல்ல; எல்லாரும் காண, எத்திறம் அறிந்தேன். (திருமால்) நாட்டார் பரிமாற்றமல்ல; அவை அந்தঃபுரத்தில் பரிமாற்றம். போரிலே ஸ்ரீபாஞ்சஜந்யத்தாலே கொன்றான்; ஆதி$_3$த்யனை மறைத்தான், ஸ்ரீபீ$_4$ஷ்மரைத் தொடர்ந்தான். (முயங்கமருள்) நெருங்கின யுத்$_3$த$_4$ம். (தேராழி) ரத$_2$ாங்க$_3$ம்; திருவாழி. 8.

9. பொருகோட்டோ ரேனமாய்ப் புக்கிடந்தாய்க்கு அன்றுன்
ஒருகோட்டின் மேல்கிடந்த தன்றே—விரிதோட்ட
சேவடியை நீட்டித் திசைநடுங்க விண்துளங்க
மாவடிவின் நீயளந்த மண்.

---

காற்கடைக்கொண்டு இங்ஙனே செய்தருளிற்று எதுக்காக? ஆஶ்ரிதவிஷயத்தில் ஓரமாகாதே! என்று வித்$_3$த$_4$ராகிறார். தேராழி — ரத$_2$ாங்க$_3$ம. 8.

---

கிறான் பரமபுருஷன். இந்த விஶேஷஸங்கல்பம் பழுதாகாமைக்காக, ஸாமாந்யஸங்கல்பங்களை மாற்றிக்கொள்வதால், ஸத்யஸங்கல்பனாயிருக்கும் தன்மை நிறைவுபெறுமேயொழியக் குறைவுபடாது. 'ஆயுத$_4$ம் எடுக்கமாட்டேன்' என்றான் கண்ணன்; 'ஆயுத$_4$ம் எடுக்கவைப்பேன்' என்றார் அன்பரான பீ$_4$ஷ்மர். அவருடைய வார்த்தையை ரக்ஷிப்பதற்காக வேறு வழியில்லாமல் தன் வார்த்தையை மாற்றிக்கொண்ட இது, ஆஶ்ரிதரக்ஷண ஸத்யஸங்கல்பம் நிறைவு பெறுவதிலேயே முடியும். *தேர்ஆழி*—தேரின் அவயவமானது சக்கரம்; அதே பெயரைக்கொண்டதாகையாலே ஸு$_{}$த$_3$ர்சனமும், 'ரத$_2$ாங்க$_3$ம்' [தேரின் அவயவம்] என்று வடமொழியிலும், 'தேராழி' என்று தமிழிலும் உரைக்கப்படுகிறது. 8.



**பதவுரை:— விரி தோட்ட சே அடியை**—மலர்ந்த இதழ்களையுடைய தாமரையைப் போன்ற சிவந்த திருவடியை, **நீட்டி**—வளரச்செய்து, **திசை நடுங்க**—எத்திசையிலுள்ளவர்களும் நடுங்கும்படியும், **விண் துளங்க**—மேலுலகத்திலுள்ளோரும் ப$_4$யப்படும்படியாகவும், **மா வடிவின்**—(திரிவிக்ரமனான) பெரிய வடிவுடன், **நீ அளந்த**—நீ அளந்துகொண்ட, **மண்**—பூ$_4$மியானது, **பொரு கோட்டு**—போர்செய்யும் த$_3$ந்தங்களையுடைய, **ஓர் ஏனமாய்**—ஒப்பற்ற வராஹமாய், **புக்கு இடந்தாய்க்கு**—(பிரளய ஜலத்தில்) முழுகி எடுத்த உனக்கு, **அன்று**—அக்காலத்தில், **உன்**—உன்னுடைய, **ஒரு கோட்டின் மேல்**—ஒரு த$_3$ந்தத்தின் நுனியில், **கிடந்ததன்றே**—அடங்கிக் கிடந்ததல்லவா?

**அவ:— ஒன்பதாம் பாட்டு. ஆஶ்ரிதரையொழியவும் ஜக$_3$த்துக்கு ஸத்தாநாஶம் வரில் பரிஹரிக்கும் என்கிறார்.**

---

**அவதாரிகை:—** இவ்வளவன்றிக்கே, ஆபத்து முதிர்ந்தவளவில் 'ஆஶ்ரிதர் அநாஶ்ரிதர்' என்று தரம் பாராதே, இருந்ததே குடியாகத் தன்னை அழியமாறி நோக்கும் ஸ்வப$_4$ாவன் என்கிறார்.

---

*அவதாரிகை :—* இப்படி அடியார்களைத்தான் இவன் ரக்ஷிப்பதோ? மற்றவர்கள் அழிந்தே போகவேண்டியதுதானோ? எனில்: அப்படியன்று; அனைவர்க்கும் ஆபத்துவரும்போது 'அடியார், அல்லாதவர்' என்று பாகுபடுத்தாமல் ஸத்தையுள்ள அனைவரையும் தன் பெருமைக்குத் தகாதவற்றைச் செய்தும் ரக்ஷிக்கும் தன்மையுடையவன் என்கிறார். மஹாப$_3$லியாலும், ப்ரளயத்தாலும் இரண்டுவித$_4$மான ஆபத்துக்கள் வந்தபோது, யாசகனாகவும், மானமிலாப்பன்றியாகவும் தன் பெருமைக்குத் தகாதபடி வந்து ரக்ஷித்தவன் இவனே என்று காட்டுகிறார்.

*வ்யா :— (விரிதோட்ட சேவடியை)* மலர்ந்த தோடாகிற இதழையுடைய தாமரைபோலே சிவந்த அடியை. விரிதோடு-மலர்ந்த தோட்டை உடைய தாமரை. இவ்வடியைக்கொண்டு

வ்யா:— (பொருகோட்டோரேனமாய்) பொராநின்ற கோட்டையுடைத்தான ஏனமாய். அத்$_3$விதீயமான ஏனமாய். ஜாதிச் செருக்காலே பூ$_4$மியை உழுதுகொடு திரியாநிற்கும். (புக்கித்யாதி$_3$) ப்ரளயங்கொண்டு, உழுகைக்கு பூ$_4$மியில்லாத அன்று தன் திருவயிற்றிலே வைத்து நோக்கும். இத்தால் சொல்லிற்றாயிற்று:— உத$_3$ாரனாயிருப்பானொருவன் நாலு பேருக்குச் சோறிட நினைத்தால் நாற்பது பேருக்கு இட்டு மிகும்படி சோறுண்டாக்குமாபோலே, ரக்ஷ்யத்தினளவன்றிறே ரக்ஷகன் பாரிப்பு. (விரிதோட்ட சேவடியை நீட்டி) விரியாநின்ற தோடுகளை உடைத்தான தாமரைபோலே இருந்துள்ள சேவடியை நீட்டி. "விரிதோட்ட" என்று, ஸம்பு$_3$த்$_3$தி$_4$யாகவுமாம். திருமேனியிலே ஒளி விரியும் தோட்டை உடையவனே! (திசைநடுங்க) திக்குகளெல்லாம் நடுங்க. (விண் துளங்க) விண்ணிலுள்ள தே$_3$வஜாதியெல்லாம் நடுங்கும்படியாக. (மாவடிவின் நீயளந்த மண்) பெரிய வடிவைக்

---

உரை:— விகஸிதமான இதழையுடைய தாமரை போலே சிவந்த திருவடிகளை வளர்த்து, தி$_3$கு$_3$பலக்ஷிதையான பூ$_4$மியிலுள்ளார் நடுங்கவும் உபரிதநலோகத்திலுள்ளார் நடுங்கவும் பெரிய வடிவையுடையையாய்க்கொண்டு, நீ அளந்து காற்கீழ் இட்டுக்கொண்ட பூ$_4$மியானது, நிலமகள் முலையில் குங்குமத்தோடு, நிலத்தோடு வாசியற

---

காடுமேடையெல்லாம் அளப்பதே! என்கை. (*விரிதோட்ட*) ஒளிவிரியும் தோடுகளை-குண்ட$_3$லங்களை-உடையவனே! என்றும் கொள்ளலாம். (*சேவடியை நீட்டி*) திருவடியை நீட்டிய இச்செயலைச் செய்து; இதன்பயனாக,— (*திசை நடுங்க*) எத்திசைகளிலேயும் பரந்திருக்கும் பூ$_4$மியிலுள்ளவர்களும் நடுங்கினார்கள்; (*விண் துளங்க*) வானத்திலுள்ள "நானே ஈஶ்வரர்" என்று அபி$_4$மானித்திருக்கும் தே$_3$வர்களும் நடுங்கினார்கள். திருவடியாலே அடிபட்டு நடுங்கினார்களோ? எனில்: (*மாவடிவின்*) அணைக்கும் திருவடி அடிக்குமோ? இப்பெரிய வடிவைக்கண்டு ப$_4$யந்து நடுங்கினார்கள். (*நீ அளந்த மண்*) இப்படி அளந்து



கொண்டு நீ அளந்த மண். ஆஶ்ரிதர் கார்யம் பெரிய வடிவைக்கொண்டு புக்குச்செய்யிலும் செய்யும்; சிறிய வடிவைக் கொண்டு பெரியனாய்ச்செய்யிலும் செய்யும்.

(பொரு) ஆபந்நராய் விலக்காதார்க்கும், தன்னைக் கொண்டு கார்யங்கொள்ளுவார்க்கும் செய்யும்படி. (விரிதோட்ட) விரிகிற தோட்டை உடையவைபோலே இருந்துள்ள. (விண் துளங்க) அபி$_4$மாநிகளான தே$_3$வர்கள்

---

எங்கும் ஜாத்யுசிதமான செருக்காலே பொருதுகொடு வருகிற கொம்புகளையுடைத்தாய், அழகுக்கு அத்$_3$விதீயமான வராஹவேஷத்தை உடையனாய்க்கொண்டு, ப்ரளய

---

சுவாதீ$_4$னப்படுத்திக்கொண்ட மண்ணன்றோ இது! இதில் வேறொருவர் உரிமை கொண்டாடமுடியுமோ? என்று கருத்து.

பெரிய வடிவையெல்லாம்கொண்டு அளக்கவேண்டியிருந்த இந்த பூமி, வராஹாவதாரத்தில் உன் பல்லின் நுனிக்குக்கூடக் காணவில்லையே! என்று ஆஶ்சரியப்படுகிறார் மேலே.—(*பொரு கோட்டு ஓர் ஏனமாய்*) பன்றியாய் அவதரிக்கையாலே, அந்த ஜாதிக்குரிய செருக்கோடு கண்டவிடமெல்லாம் த$_3$ந்தத்தாலே குத்தித் திரிந்தான்! நிலமகள் நாயகனாகையாலே, அவளுடைய ஸ்தனகுங்குமத்திலே உழுது திரிவதில் பொருத்தமுண்டு. அதோடுநில்லாமல் அவளுடைய திருமேனியெல்லாம் குத்தித் திரிந்தான்! அவதாரத்தில் மெய்ப்பாடு இருந்தபடி! (*ஓர் ஏனமாய்*) மிகத்தாழ்ந்த பன்றியாய்ப் பிறந்தபோதிலும், அழகுக்கு ஒப்பில்லை. (*புக்கு இடந்தாய்க்கு*) பிரளயஜலத்திலே முழுகி அண்டச்சுவரினின்றும் குத்தி எடுத்துக்கொண்டேறின உனக்கு. (*ஏனமாய்ப்புக்கு இடந்தாய்க்கு*) நீரிலும் சேற்றிலும் அஞ்சாமல்சென்று பூ$_4$மியைப் பிரித்தெடுக்கவேண்டிய காரியமாகையாலே, அதற்கேற்பப் பன்றியுருவைக் கொண்டான் என்று கருத்து. (*அன்று*) அக்காலத்திலே. (*உன் ஒருகோட்டின் மேல் கிடந்ததன்றே*) உன்னுடைய த$_3$ந்தத்தின் ஒரு நுனியிலே ஒரு மறுப்போலே இருந்ததன்றோ இந்த பூ$_4$மி. "களிறு மருப்பின் நாப்பண் புள்ளி நிலனும்" [பரிபாடல் 2-32, 33, 34] [களிறு-

நடுங்க. பெரிய வடிவாலே அளந்த மண் / திருவெயிற்றுக்கு ஒரு நீலரத்நம் போலேயிருப்பதே! என்ன ஆஶ்சர்யம்! 9.

---

ஜலத்திலே முழுகி, அண்டபி₄த்தியினின்றும் இடங்தெடுத்துக்கொண்டேறின உனக்கு, அக்காலத்தில் உன் எயிற்றின் ஏகதே₃ஶத்திலே ஒரு மறுப்போலே கிடந்ததொன்றன்றோ.

ஆபத்து வந்தால் தலையாலே சுமந்து நோக்குதல், தலையிலே காலை வைத்து நோக்குதல் செய்யுமவனன்றோ நீ? ரக்ஷ்யவர்க்க₃த்தை நோக்குமளவில் உனக்கு ஒரு நியதி உண்டோ? என்று உகந்து அநுப₄விக்கிறார். விரிதோட்ட என்று, விஸ்த்ருதமாய், ப்ரகாஶிக்கிற திருத்தோடுகளை உடையவனே! என்று ஸம்போ₃த₄நமாகவுமாம். 9.

---

வராஹம்] என்றனர் சங்கத் தமிழரும். இப்படிப்புள்ளி போன்ற பூ₄மியை எடுக்கப் பெரியதான வராஹவடிவைக் கொள்ள வேணுமோ? எனில்: வண்மை மிக்கவன் ஒருவன் நாலு பேருக்குச் சோறிட நினைத்தால், நாற்பது பேருக்கும் கண்டு மிகும்படியாகச் சோற்றைச் சமைத்து வைப்பதுபோலே, ரக்ஷ்யத்தை (காக்கப்படவேண்டியதை) விஞ்சிநிற்கும் தன் ரக்ஷணமநோரத₂த்தாலே மிகப்பெரிய வடிவுகொண்டான் என்பர் பரமரஸிகரான பெரியவாச்சான்பிள்ளை.

இவ்வளவால், ஆபத்து வந்த காலத்தில், இவர்களுடைய விலக்காமையையே பற்றிநின்று வராஹாவதாரத்திற்போலே தலையாலே சுமந்தும் ரக்ஷிப்பான்; திரிவிக்கிரமாவதாரத்திற்போலே தலையிலே காலைவைத்தும் ரக்ஷிப்பான் என்றும், ரக்ஷிக்கும்போது பெரிய வடிவையோ, சிறிய வடிவையோ, உயர்ந்த வடிவையோ, தாழ்ந்த வடிவையோ கொண்டுதான் ரக்ஷிக்கவேண்டும் என்னும் நிர்ப்ப₃ந்த₄ம் இவனுக்கு இல்லை என்றும் காட்டி மிகவுகந்து அநுப₄வித்தாராயிற்று. 9.

---

/ (பா) எயிறு - த₃ந்தம்.



10. மண்ணும் மலையும் மறிகடலும் மாருதமும்
விண்ணும் விழுங்கியது மெய்யென்பர்—எண்ணில்
அலகளவு கண்டசீ ராழியாய்க்கு அன்றிவ்
வுலகளவு முண்டோவுன் வாய்.

பதவுரை:— **மண்ணும்**—பூ₄மியும், **மலையும்**—பர்வதங்களும், **மறிகடலும்**—அலையெறியும் ஸமுத்₃ரங்களும், **மாருதமும்**—காற்றும், **விண்ணும்**—ஆகாசமும் ஆகிய இவற்றையெல்லாம், **விழுங்கியது**—அமுது செய்தது, **மெய் என்பர்**—உண்மையென்று (ரிஷிகள்) சொல்லுவர்; **எண்ணில்**—(இதை) ஆராய்ந்தால், **அலகு அளவுகண்ட சீர் ஆழியாய்க்கு**—எண்ணிக்கைகளை எல்லைகண்ட (எண்ணிறந்த) கல்யாணகு₃ணங்களையும், திருச்சக்கரத்தையும் உடைய உனக்கு, **அன்று**—அப்போது, **உன் வாய்**—உன்னுடைய திருவாய், **இவ்வுலகளவும் உண்டோ?**— இவ்வுலகளவு பரப்பையுடையதாய் இருந்ததோ?

அவ:— பத்தாம் பாட்டு. (மண்ணுமித்யாதி₃) சேராதன செய்தும் ஆஶ்ரிதரை நோக்குமவன் என்கிறார்.

---

அவ:— இப்படி பெரியவடிவைக்கொண்டு சிறிய செயலைச் செய்து நோக்குமளவன்றிக்கே, சிறிய வடிவைக் கொண்டு பெரிய செயலைச்செய்து நோக்கிலும் நோக்கும் என்கிறார்.

---

அவ: — முன் பாசுரத்தில் சொன்னபடி பெரிய வராஹ வடிவைக்கொண்டு, பல்லிடுக்கிற்கும் போராத பூ₄மியைத் தூக்கும் சிறிய செயலைச்செய்து ரக்ஷிப்பது மாத்திரமல்லாமல், சிறியதோர் ஆலந்தளிரில் சிறுகுழந்தைவடிவோடு எல்லா உலகையும் விழுங்குவதாகிய பெரிய செயலைச் செய்து இவன் ரக்ஷிப்பதும் உண்டு என்கிறார். ரக்ஷிக்கும்போது இன்ன செயலைச்செய்து ரக்ஷிப்பதெனும் நியமமில்லை. சேராத செயல்களைச் செய்தும் ரக்ஷிப்பவன் நீயன்றோ என்கிறார்.

வ்யா:— (மண்ணுமித்யாதி3) ஆத4ாரமான மண்ணும், அதற்கு உறுதியான மலையும், வேலியான கடலும், த4ாரக மான காற்றும், அவகாஶப்ரத3ாநம் பண்ணும் ஆகாசமும். (விழுங்கியது மெய்யென்பர்) ஐந்த்3ரஜாலிகர் செயல்போலே பொய்யன்று இது; ஆப்தரான ஆழ்வார்கள் மெய்யென்பர்கள்.

---

உரை:— ஸர்வாத4ாரமான பூ4மியும், அதுக்கு த4ாரக மான குலபர்வதங்களும், அத்தைச் சூழ்ந்து கிடந்து அலை யெறிகிற ஸமுத்3ரங்களும், தத3ந்தர்வர்த்திகளுக்கு உச்ச்2 வாஸாதி3ஹேதுவான காற்றும், அதுக்கு அவகாஶப்ரத3 மான ஆகாஶமும், இவற்றையடையத் திருவயிற்றிலே ஒரு புடையிலே அடங்கும்படி அமுதுசெய்தருளின இத்தை, பரமார்த்த2மென்று உன் ஶக்திஸாமர்த்2யத்தைத் தறை காணவல்ல வைதி3கபுருஷர்கள் சொல்லாநின்றார்கள்.

---

*வ்யா :— (மண்ணும்)* உலகிலுள்ள எல்லாப் பொருள்க ளுக்கும் ஆத4ாரமான பூ4மியும். *(மலையும்)* அதற்கும் உறுதியை அளிப்பவையாகையாலே ஆத4ாரமாய் பூ4த4ரம் எனப்படும் மலைகளும். *(மறிகடலும்)* அந்த பூ4மியைச் சூழ்ந்துநின்று அலைவீசுகிற கடல்களும். *(மாருதமும்)* அந்த பூ4மியிலிருக்கும் ஜீவராசிகளுக்கு மூச்சுவிடுதல், உயிர்த4ரித்தல் முதலான வற்றுக்குக் காரணமான காற்றும். *(விண்ணும்)* முற்கூறிய மண்ணும், மலையும், மறிகடலும், மாருதமுமான பொருள்கள் இருக்க இடமளிக்கும் ஆகாயமும், *(விழுங்கியது மெய்யென்பர்)* இவையெல்லாவற்றையும், வெண்ணெய் விழுங்குவதுபோலே, திருவயிற்றில் ஒரு மூலையிலே அடங்கும்படி அமுதுசெய்தருளின இச்செயல் உண்மையானதே என்று உண்மையே உரைக்கும் ரிஷிகளும் ஆழ்வார்களும் உரைப்பார்கள். *(மெய்யென்பர்)* உன் சக்தியையும், ஸாமர்த்தியத்தையும், கடலில் தரைகாண்பது போலே காணவல்ல மார்க்கண்டே3யர் முதலான மஹான்கள், *'' தத3பஶ்யமஹம் ஸர்வம் தஸ்ய குக்ஷௌ மஹாத்மந: ''* [ப4ார-ஆரண்ய] [அந்த எல்லா உலகையும் அந்த மஹாபுருஷனின் வயிற்றில் நான் பார்த்தேன்.] என்று உரைப்பர்; *(மெய் என்பர்)* இந்திரஜாலம்போல் பொய்யன்று; உண்மைக்காட்சியே என்பர்.



(எண்ணில்) ஆராயில். (அலகளவு கண்ட சீராழியாய்க்கு) எண்ணிறந்த கு3ணங்களையும் திருவாழியையுமுடையனான உனக்கு. அலகாவது—பரிச்சே2த3கமிறே. அத்தை அளவு கண்ட சீர்—அபரிச்சே2த்3யமான அலகைப் பரிச்சி2ந்நமாக் கின சீர். (இவ்வுலகளவுமுண்டோ உன் வாய்) இந்த ரக்ஷ ணத்தில் த்வரைதான் சிறிய வடிவிலே பெரிய ஜக3த்தை வைத்தான்.

(மண்ணுமித்யாதி3) சேராச்சேர்த்தியானவை அடைய மெய்யென்பர். இந்த்3ரஜாலமென்னப்பெற்றதோ? ருஷிகள் கூப்பிடாநிற்பர்கள். (எண்ணிலலகளவுகண்ட) எண்ணை அளவுபடுத்தும் கு3ணங்கள். 25. " गुणानामाकरः " (கு3ண

---

உன் படியைப் பரிச்சே2தி3த்து அநுஸந்தி4க்குமளவில் அளவிடுகைக்குப் பரிகரமான ஆயுத4ங்களையும் பரிச் சே2தி3த்து எல்லைகண்டிருக்கிற அஸங்க்2யாதமான கல் யாணகு3ணங்களையும், திருவாழியையும் உடையையான உனக்கு இவற்றையெடுத்துத் திருவயிற்றிலே வைத் தருளின அன்று இஜ்ஜக3த்தோபாதியும் பெருமை யுடைத்தோ உன்னுடைய திருப்பவளமானது?

---

*(எண்ணில்)* உன் தன்மையை அளவிட நினைத்தோமாகில், *(அலகு)* அளக்கும் ஆயுத4ம் (*கருவி*) 'அலகு' எனப்படும். அது லக்ஷம், கோடி, ஶங்க2ம், மஹாஶங்க2ம், பத்3மம், குமுத3ம் என்று பலவகைப்படும். தமிழரும் பரிபாடலிலே "நெய்தலும், குவளையும், ஆம்பலும், சங்கமும், மையில் கமலமும் வெள் ளமும்'' என்று இவ்வலகுகளைக் குறிப்பிட்டனர். *(அலகு அளவுகண்ட சீர்)* அவ்வலகுகளையே எல்லைகண்ட எண்ணிக்கை யற்ற கு3ணங்களையுடையவன் நீ. '' பல அடுக்கல் ஆம்பல் இணைத்தென எண்வரம்பு அறியா '' [பரிபாடல் 3-45] என்றனர் சங்கத்தமிழரும்.

த4ாதூநாமிவ ஶைலேந்த்3ரோ கு3ணாநாமாகரோ மஹாந் ।
*[ரா-கி 15.21 தாராவாக்கியம்]*

நாமாகர:) 26. "बहवो नृप कल्याणगुणाः" (ப$_3$ஹவோ ந்ருப கல்யாணகு$_3$ணா:). (ஆழியாய்க்கு) கு$_3$ணங்களும் அப்படியே சீரிய கை. (உலகளவுமுண்டோ) ரக்ஷகத்வப் பாரிப்புக்கு அடைவில்லாமை. 10.

**11. வாயவனை யல்லது வாழ்த்தாது கையுலகம்**
**தாயவனை யல்லது தாந்தொழா—பேய்முலைநஞ்**
**சூணாக வுண்டா னுருவொடு பேரல்லால்**
**காணாகண் கேளா செவி.**

---

இந்தச் சிறிய திருப்பவளத்தைக்கொண்டு பெரிய ஜக$_3$த்தை அமுதுசெய்தருளின இவ்வாஶ்சர்யம் என்னாயிருக்கிறதோ ? என்று ஈடுபடுகிறார். 10.

---

[ஒரு சிறந்த மலை தா$_4$துக்களுக்கெல்லாம் இருப்பிடமாயிருப்பது போல், ஸ்ரீராமபிரானும் கு$_3$ணங்களுக்கெல்லாம் பெரியதோர் இருப்பிடமாவர்.]

**தே தமூசுர் மஹாத்மாநம் பௌரஜாநபதை$_3$ஸ் ஸஹ ।**
**ப$_3$ஹவோ ந்ருப கல்யாணகு$_3$ணா: புத்ரஸ்ய ஸந்தி தே ॥**
[*ரா-அ* 2-26]

[நக$_3$ரத்திலும், கிராமங்களிலும் உள்ள ஜனங்களுடன் கூடிய அவர்கள் மஹாத்மாவான அந்த த$_3$ஶரத$_2$ரிடம் (பின்வருமாறு) சொன்னார்கள் :—"அரசே ! உம்முடைய புத்திரனிடம் பல கல்யாணகு$_3$ணங்கள் இருக்கின்றன"] என்றது ஸ்ரீராமாயணம். *( ஆழியாய்க்கு )* கு$_3$ணங்களை மாத்திரமல்லாமல் ஸு$_3$த$_3$ர்சனம் முதலான ஆயுத$_4$ங்களையும் உடைய உனக்கு. *( அன்று )* இவற்றை விழுங்கிய அன்று. *( இவ்வுலகளவும் உண்டோ உன் வாய்)* சிறு குழந்தையான உன் வாய், மிகப்பரந்துகிடக்கும் இவ்வுலகளவு பெரிதாயிருந்ததோ ? இல்லையே ! மிகச்சிறிய வாயாலே. மண்ணும் மலையும் மறிகடலும் மாருதமும் விண்ணுமான மிகப்பெரிய பொருள்களை விழுங்கி இவற்றைப் பிரளயத்தில் நோவுபடாதபடி ரக்ஷித்த ஆஶ்சர்யத்தை என்னென்று சொல்வது ? என்று ஈடுபடுகிறார். 10.



**பதவுரை:—வாய்**—(என்னுடைய) வாயானது, **அவனை அல்லது** — எம்பெருமானைத் தவிர, **வாழ்த்தாது** —(மற்றொன்றை) வாழ்த்தாது; **கை தாம்**—கைகளோவெனில், **உலகம் தாயவனை அல்லது**—உலகங்களையெல்லாம் தாவி அளந்துகொண்ட திரிவிக்கிரமனைத்தவிர, **தொழா**-(வேறொருவனைத்) தொழமாட்டா; **பேய் முலை நஞ்சு** — பேயான பூதனையின் முலையிலிருக்கும் விஷத்தை, **ஊணாக உண்டான்**-(தா$_4$ரகமான) உணவாக நினைத்து அமுதுசெய்த பெருமானுடைய, **உருவொடு பேரல்லால்** — திருவுருவத்தையும், திருநாமத்தையுமல்லது (வேறெதையும்), **கண் காணா, செவி கேளா**—கண்கள் பார்க்கமாட்டா; காதுகள் கேட்கமாட்டா.

**அவ:— பதினோராம் பாட்டு.** (வாய்) **இவனுடைய ரக்ஷகத்வத்தில் த்வரையைக்கண்டு தம்முடைய இந்த்$_3$ரியங்கள் வ்யாகுலமானபடி சொல்லுகிறது,**

---

**அவ:—** இப்படி அவன்படிகளை அநுப$_4$வித்துக்கொண்டு போருகிற வழியாலே, தமக்கு அவன்பக்கலுண்டான அபி$_4$நிவேஶத்தைப் பேசினார் கீழ்; இப்போது கரணியான தம்மிலுங்காட்டில் தம்முடைய கரணங்களுக்கு அவன்பக்கல் உண்டான அபி$_4$நிவேஶாதிஶயத்தைப் பேசுகிறார்.

---

*அவ:—* இவ்வண்ணமாகச் சென்ற பத்துப் பாசுரங்களில் அவன் பெருமைகளை அநுப$_4$வித்துக்கொண்டு போகும் வழியாலே, தமக்கு அவனிடமுள்ள பேரன்பைப் பேசினார். இப்போது கரணங்களை (இந்திரியங்களை) உடையவனான தம்மைக் காட்டிலும் தம்முடைய கரணங்களுக்கு அவனிடம் அன்பு விஞ்சியிருக்கிறபடியைக் காட்டுகிறார். "முடியானே" [திருவாய் 3-8] என்னும் திருவாய்மொழியில் நம்மாழ்வாருக்கு உண்டான நிலை இவருக்கும் உண்டானபடியைப் பேசுகிறது இப்பாசுரம்.

*வ்யா:— (வாய்)* என்னைக் காட்டிலும் பேராவலோடு 'அவன் எங்கேயிருக்கிறான் ?' என்று தேடும் என்னுடைய வாய்.

வ்யா:— (வாயித்யாதி3) நீ அளவிதாம்படி அமையுங் காண் என்றாலும் கேளாது. (கையித்யாதி3) திருவுலகளந் தருளினவனுடைய நீர்மையைக்கண்டால், நான் வேண்டா வென்னிலும் தொழுதல்லது நில்லாது. (பேயித்யாதி3) பேய் நஞ்சாகக் கொடுத்தால், இவன் தா4ரகமாக உண் டான். அவள் தன் நெஞ்சில் தண்மையாலே முடிந்தா ளத்தனை. (உருவித்யாதி3) அவனுருவல்லது கண்கள் காணா; அவன் பேரல்லது செவிகள் கேளா. ஆஶ்ரிதவிஷயத்திலும் ஸாமாந்யவிஷயத்திலும் இருக்குமிருப்பிலே ஸர்வேந்த்3ரியங்க ளும் அபஹ்ருதமானபடி.

(வாயித்யாதி3) தான் புறம்பே வாழ்த்தப் பார்க்கிலும் தாம் செய்யா. (உலகம் தாயவனை) தொழாதார் தலையிலும் இருந்து தொழுவித்துக்கொள்ளும் திருவடிகளை உடையவனை யல்லது. (தாம் தொழா) அவனும் ஏறவாங்கிலும் நானும் ஏறவாங்கிலும். (ஊணாகவித்யாதி3) கொடாவிடில் பிழையே னென்று கொடுக்க, உண்ணாவிடில் பிழையேனென்று உண் டான். அநந்யார்ஹமாயிற்று. ஹ்ருஷீகேஶனன்றோ. 11.

---

உரை:— என்னிலுங்காட்டில் 'அவனெங்குற்றான்' என்று பார்க்கிற என்னுடைய வாகிந்த்3ரியமானது அவனை யொழியப் புகழாது. கைகளானவை தரதமவிப4ாகம் பாராதே, இருந்ததே குடியாக லோகத்தையடைய அநா யாஸேந அளந்துகொண்ட ஶீலாதி4கனானவனையொழியத் தாம் தொழப்பாராது. பூதனையுடைய முலையில் விஷத்தை தா4ரகமாக விரும்பி அமுதுசெய்தவனுடைய வடிவை யொழியக் கண் காணாது; கு3ணசேஷ்டிதங்களுக்கு வாசக மான திருநாமங்களையொழியச் செவி கேளாது. 11.

---

*(அவனையல்லது வாழ்த்தாது)* அவனைத்தவிர வேறொருவனைப் புகழாது. நான் வாழ்த்த இசைந்தாலும் என் வாய் அவனைத் தவிர மற்றொருவனை வாழ்த்தாது. வாய்மாத்திரமே இப்படியோ? எனில்: *(கை உலகம் தாயவனையல்லது தாம் தொழா)* உயர்ந்தார் தாழ்ந்தார் என்னும் வித்தியாசம் பாராமல் உலகையெல்லாம் விளையாட்டாகத் தாவியளந்துகொண்ட நீர்மைமிக்க திரிவிக்கிர மனைத் தவிர மற்றொருவனை என் கை தொழாது. *(தாம்)* நான் தொழச்சொன்னாலும் என் கைகள் மறந்தும் புறந்தொழா. *(தாயவனையல்லது தாம் தொழா)* தொழாதவர் தலைகளிலும் திருவடியை வைத்துத் தொழுவித்துக்கொள்ளுமவனை, நான் வேண்டாவென்றாலும், அவனே வேண்டாவென்றாலும் தொழா மலிருப்பதில்லை. *(பேய் முலைநஞ்சு ஊணாக உண்டான் உருவொடு பேரல்லால் காணா கண் கேளா செவி)* பேயான பூதனை முலை யிலே நஞ்சைத் தடவிவந்து, அதைக் கொடாவிடில் தான் உயிர்த4ரிக்கமாட்டாதவள்போலே நஞ்சைக்கொடுக்க, அதை உண்ணாவிடில் உயிர்த4ரிக்கமாட்டாதவன்போலே அந்நஞ்சையும் அவளுயிரையும் உடன் உண்டவனுடைய வடிவழகையொழிய மற்றொன்றைக் கண் காணாது; அவனுடைய கு3ணங்களையும் செயல்களையும் சொல்லும் திருநாமங்களைத் தவிர செவிகள் மற்றொன்றைக் கேட்கமாட்டா. *(நஞ்சு ஊணாக உண்டான்...)* அடியார்க்காகத் திருவுலகளந்தருளியதில்தான் ஓரிந்திரியம் ஈடு பட்டதென்றால், அன்பற்ற பூதனையை முடித்ததிலும் சில இந்திரி யங்கள் ஈடுபட்டன. ஹ்ருஷீகேஶனாகையாலே—(ஹ்ருஷீகங்கள் எனப்படும் இந்திரியங்களுக்கு ஈஶனாகையாலே)—இப்படி எல்லா இந்திரியங்களும் அவனுக்கே உரிமைப்பட்டவையாயின. 11.



12. செவிவாய்கண் மூக்குடலென் றைம்புலனும் செந்தீ
புவிகால்நீர் விண்பூத மைந்தும் — அவியாத
ஞானமும் வேள்வியும் நல்லறமு மென்பரே
ஏனமாய் நின்றார்க் கியல்வு.

பதவுரை:— **செவி வாய் கண் மூக்கு உடல் என்று ஐம் புலனும்** — காது, வாய், கண், மூக்கு, த்வக் என்னும் ஐந்து ஞானேந்திரியங்களும், **செந்தீ புவி கால் நீர் விண் பூதம் ஐந் தும்** — அக்3னி, பூ4மி, காற்று, ஜலம், ஆகாசம் என்னும் பஞ்சபூ4தங்களாலான தே3ஹமும், **அவியாத ஞானமும்** — நாசமற்றதான ப4க்திரூபமான ஞானமும், **வேள்வியும்** — (இந்த ப4க்திக்கு ஸாத4னமான) அக்3நிஹோத்ரம் முதலிய

கர்மங்களும், **நல்லறமும்** —(ப₄க்திக்கு வ்ருத்₃தி₄யைச் செய்யும்) விவேகம், விமோகம் முதலான ஆத்மகு₃ணங்களும், **ஏனமாய் நின்றார்க்கு** — (அபேக்ஷையை எதிர்பாராமல் தானே ரக்ஷித்தருளிய) வராஹமூர்த்தியான எம்பெருமானை அடைவதற்கு, **இயல்வு என்பரே** — ஸாத₄னம் என்று சொல்லுகிறார்களே! (என்ன அறிவுகேடு!)

**அவ:— பன்னிரண்டாம் பாட்டு.** (செவி) **தம்முடைய அநுப₄வமான ப₄க்தியைச் சொல்லுகிறதென்னவுமாம்; ப₄க்தியை விதி₄க்கிறதென்னவுமாம்.**

---

**அவ:**— கீழ் ஸமாஶ்ரயணீயனைச் சொன்னவனை ஆஶ்ரயிக்குமிடத்தில் தத₃நுரூபமான ஸாத₄நம் ப₄க்தியென்கிறார்.

**உரை:**— ஶ்ரோத்ர ஜிஹ்வா சக்ஷுர் க்₄ராண த்வக்குகளாகிற ஜ்ஞானேந்த்₃ரியங்களைந்தும், தேஜ: ப்ருதிவீ வாயு ஜலாகாஶங்களாகிற பூ₄தபஞ்சகமும், தது₃பலக்ஷிதமான ஶரீரமும், இந்தக் கரணகளேப₃ரங்களால ஸாதி₄க்கப்படுமதாய் அவிச்சி₂ந்ந ஸ்ம்ருதிஸந்தாநரூபமான ப₄க்திரூபாபந்நஜ்ஞாநமும், ப₄க்த்யுத்பத்தி விவ்ருத்₃தி₄ஹேதுவாகப் யாலே காட்டுகிறது: "ஶரீரமாத்₃யம் க₂லு த₄ர்மஸாத₄நம்" [குமாரஸம்ப₄வம் 5-33] [ஶரீரமே முதல் த₄ர்மஸாத₄னமாகும்.]

---

*அவ :*— கீழ்ப்பாட்டில், அடையத்தக்க ப்ராப்யமாகச் சொல்லப்பட்டவனை அடையும்போது, அவனை அடைவிக்கத் தகுந்த ஸாத₄னம் ப₄க்தி என்கிறார். தம்முடைய ஸாத்₄ய ப₄க்தியைச் சொல்லுவதாகவுமாம்; தானே உபாயமாகவும், உபேயமாகவுமிருக்க, சிலர், ப₄க்தியை இவனையடையும் உபாயமாகக் கொள்வதே! என்று கூறுகிறாராகவுமாம். ப₄க்திபரமான முதல் நிர்வாஹத்தை முதலிலும். ப்ரபத்திபரமான பின் நிர்வாஹங்களைப் பின்பும் காட்டுவோம்.

*வ்யா:*— *(செவி வாய் கண் மூக்கு உடல் என்று ஐம்புலனும் இயல்வு)* மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐந்து ஞானேந்திரியங்களும், ஞானவிஶேஷமான (அறிவுருபமான) ப₄க்திக்கு உபகரணமாயிருப்பதன்மூலம் பரமபுருஷனையடைய உபாயமாகின்றன. ஐந்து ஞானேந்திரியங்களைச் சொன்னது கருமேந்திரியங்களைந்துக்கும், மனமாகிற இந்திரியத்திற்கும் உபலக்ஷணம். *(செந்தீ புவி கால் நீர் விண் பூதம் ஐந்தும் இயல்வு)* தீ, நிலம், காற்று, நீர், ஆகாயம் என்னும் ஐந்து பூ₄தங்களும், இவற்றாலேயான *ஶரீரத்தை* உபலக்ஷணமுறை



வ்யா:— (வேள்வியும்) **ப₄க்தி விவ்ருத்₃த்₄யர்த்த₂மாகவும் பாபக்ஷயத்துக்காகவும் அநுஷ்டி₂க்கிற கர்மங்கள். 27.** "अग्नि-होत्रादि तु तत्कार्यायैव तद्दर्शनात्" **(அக்₃நிஹோத்ராதி₃ து தத்கார்யாயைவ தத்₃த₃ர்ஶநாத்), 28.** "आ प्रयाणात् तत्रापि हि दृष्टं" **(ஆ ப்ரயாணாத் தத்ராபி ஹி த்₃ருஷ்டம்) என்றும், 29.** "यज्ञेन दानेन तपसाऽनाशकेन ब्राह्मणा विविदिषन्ति" **(யஜ்ஞேந**

---

என்கிறபடியே *ஶரீரமும்*, இந்திரியங்களுமிருந்தால்தான் ப₄க்தி செய்யமுடியுமாகையாலே ப₄க்திக்கு உதவும் இவை எம்பெருமானையடைய உபாயங்களெனப்படுகின்றன. *(அவியாத ஞானமும் இயல்வு) "தைலதா₄ராவத₃விச்சி₂ந்ந ஸ்ம்ருதிஸந்தாநரூபம் த்₄யாநம்"* [எண்ணெய்த் தாரைபோலே இடைவிடாத நினைவுத் தாரையாயிருப்பது ப₄க்தி] என்று எம்பெருமானார் ஸ்ரீபா₄ஷ்யத்தில் ஜிஜ்ஞாஸாதி₄கரணலகு₄ஸித்₃தா₄ந்தத்தில் அருளியபடியே இடைவிடாத ஞானரூபமாயிருக்கும் ப₄க்தியே எம்பெருமானையடைய உபாயமென்பர். *(அவியாத ஞானமும்)* கர்மயோக₃த்திலடங்கிய ஞானமும் என்றுமாம். *(வேள்வியும் இயல்வு என்பர்)*

**"அக்₃நிஹோத்ராதி₃ து தத்கார்யாயைவ தத்₃த₃ர்ஶநாத்"** [ப்₃ர-ஸூ 4-1-16]

[அக்₃நிஹோத்ரம் முதலிய ஆஶ்ரமகர்மம், ப₄க்தியின் உத்பத்தியாகிற கார்யத்தின் பொருட்டே அநுஷ்டி₂க்கப்படவேண்டும்; அப்படியே *ஶ்ருதி* காணப்படுவதால்.]

**"ஆப்ரயாணாத் தத்ராபி ஹி த்₃ருஷ்டம்"** [ப்₃ர ஸூ 4-1-12]

[(வித்₃யை) சாகும் வரையில் அநுஷ்டி₂க்கப்பட வேண்டியதே; அந்த எல்லாக் காலங்களிலும் (உபாஸநவிதி₄) காணப்படுகிறதன்றோ.]

**"தமேதம் வேதா₃நுவசநேந ப்₃ராஹ்மணா விவிதி₃ஷந்தி**
**யஜ்ஞேந தா₃நேந தபஸாऽநாஶகேந"** [ப்₃ருஹ 6-4-22]

தா3நேந தபஸாऽநாஶகேந ப்3ராஹ்மணா விவிதி3ஷந்தி) என்றும் சொல்லுகிறபடியே. (நல்லறம்) விவேகாதி3கள்; (என்பரே ஏனமாய் நின்றார்க்கியல்வு) ஏனமாய் நின்றாரைப் பெறுகைக்குப் பண்ணும் ப்ரவ்ருத்தி இவை என்பர். ஆபத்தே அடையாளமாகத் தானே ரக்ஷிக்குமென்கையாலே, 'அவன் உபாயமாகத் தம்முடைய அநுப4வமான ப4க்தியைச் சொல்லுகிறது' என்றுமாம்.

---

ப2லஸங்க3கர்த்ருத்வத்யாக3பூர்வகமாகப் பண்ணும் யாகா3தி3 கர்மங்களும், நாள்தோறும் ப4க்தியை வளர்க்கக்கடவ விவேக விமோகாதி3களும், ஆந்ருஶம்ஸ்ய தா3நாதி3களு மாகிற விலக்ஷண த4ர்மமும், ஸர்வஸுலப4னாய், ஆபத்ஸக2 னாய் நின்ற ஸர்வேஶ்வரனுக்கு ஸத்3ருஶஸாத4னம் என்று வேத3வைதி3கபுருஷர்கள் சொல்லாநின்றார்கள். "भक्तितः" (ப4க்தித:) என்றும், "भक्त्या त्वनन्यया शक्यः" (ப4க்த்யா த்வநந்யயா ஶக்ய:) என்றும் சொல்லக்கடவதிறே.

---

[ப்3ரஹ்மஜ்ஞானிகள், இந்தப் பரமாத்மாவை வேதா3த்4யயனத்தி னாலும், யஜ்ஞத்தினாலும், தா3னத்தினாலும், (ப2லத்தில்) ஆசை யற்ற தபஸ்ஸினாலும் அறிய விரும்புகின்றார்கள்.] என்று சொல்லுகிறபடியே, ப4க்தியோக3ம் உண்டாவதற்காகவும், வளர்வதற்காகவும், ப2லத்தில் பற்றும், 'நான் செய்கிறேன்' என்னும் எண்ணமுமில்லாமல் செய்யப்படும் யாக3ம் முதலான வையான கர்மயோக3மும் பரமபுருஷனையடைய உபாயமென்பர். *(நல்லறமும் இயல்வு என்பர்)* "*தல்லப்3தி4ர் விவேக விமோகாப்4யாஸ க்ரியா கல்யாண அநவஸாத3 அநுத்3த4ர்ஷேப்4ய:*" [1. அந்நஶுத்3தி4யாலுண்டாகும் *ஶரீரஶுத்3தி4*யாகிற விவேகம், 2. விருப்பங்களில் பற்றற்றிருக்கையாகிற விமோகம். 3. ப4க3 வத்3விஷயத்தில் பலகால் பழகுகையாகிற *அப்4யாஸம்*. 4. பஞ்ச மஹாயஜ்ஞம் முதலியவற்றை இயன்றவரையில் அநுஷ்டி2க்கை யாகிற *கிரியை*. 5. உண்மை, நேர்மை, இரக்கம். கொடை, கொல்லாமை, பேராசையின்மை ஆகிய *கல்யாணங்கள்*, 6. மனவருத்தமின்மை, 7. அதிஸந்தோஷமின்மை என்னும் ஏழு ஸாத4னங்களாலும் ப4க்தியுண்டாகிறது.] என்று வாக்யகாரரால் சொல்லப்பட்ட நல்ல த4ர்மங்களாகிற விவேகம் விமோகம் முதலியவையும் எம்பெருமானையடைய உபாயமென்பர்.



அவ:—(செவி) கீழ் ப்ராப்யஶிக்ஷை பண்ணினார்; இனி ப்ராபகம் சொல்லுகிறார்.

வ்யா:— (செவியித்யாதி3) ஸர்வேந்த்3ரியங்களுக்கும் உபலக்ஷணம். (செந்தீயித்யாதி3) ஆக இருபத்துநாலுக்கும் உபலக்ஷணம். (அவியாத இத்யாதி3) கர்மயோகா3ந்தர்க3தமான ஜ்ஞானம். ப்ரக்ருதி ஹேயதயா ஜ்ஞேயை; ஆத்மா உபாதே3யதயா ஜ்ஞேயன்; ஈஶ்வரன் உபாதே3யதமனாய்க்

---

அங்ஙனன்றிக்கே, தமக்கு போ4கோ3பகரணமான ப4க்தியை உபாஸகர் உபாயமாக அநுஷ்டி2க்கும் கட்டளை யைச் சொல்லி, ப4க்தியை க்ஷேபித்து ப்ரபத்தியை அருளிச்

---

உலகில் நல்லோரனைவராலும் நல்ல த4ர்மங்களாக இசையப்பட்ட இரக்கம், கொடை முதலானவற்றை 'நல்லறம்' என்கிறாராகவு மாம். (*ஏனமாய் நின்றார்க்கு இயல்வென்பர்*) அனைவர்க்கும் எளியவனாய், ப்ரளயாபத்தில் பூ4மியை ரக்ஷித்தவனான வராஹ மூர்த்தியை அடைய இவற்றையெல்லாம் உபாயமென்பர். இயல்வு என்பது ப்ரகாரத்தைச் சொல்லுவதாய், இங்கு அவனை யடையும் ப்ரகாரமான (வழியான) உபாயத்தைச் சொல்லுகிறது. *(இயல்வு என்பர்)* அவனையடையத்தக்கவழி என்று வேத3மும் வைதி3கர்களும் சொல்லுவர்கள். "*தமேவம் வித்3வாநம்ருத இஹ ப4வதி*" [பு-ஸூ] [அவனை இப்படி அறிபவன் இப்பிறப்பில் மோக்ஷமடைகிறான்] "*ப4க்த்யா த்வநந்யயா ஶக்ய:*" [கீ3தை 11-54] [அநந்ய ப4க்தியினாலேயே நான் அடையத்தக்கவன்] "*ப4க்திக்ரீதோ ஜநார்த்த3ந:*" [ப4க்தியினால் விலைக்கு வாங்கப் படுபவன் ஜநார்த்த3னன்] என்று சொல்லப்பட்டதன்றோ. "என்பரே" என்ற ஏகாரம் சாஸ்திரங்களில் பிரஸித்3தி4யைக் காட்டுகிறது.

ஆழ்வார்கள் ப்ரபத்திநிஷ்ட2ர்களாகையாலே, இப்பாசுரம் ஸாத4நப4க்தியைச் சொல்லுகிறது என்று கொள்ளாமல், ஆழ்வா ருடைய அநுப4வத்துக்கு உறுப்பான ஸாத்4யப4க்தியைச் சொல்லுகிறது என்று கொள்வதும் உண்டு. முன் பாசுரத்திற் சொன்ன செவி வாய் கண் முதலான ஐந்து இந்திரியங்களும்,

கொண்டு ஜ்ஞேயன். 13. 'சஞ்சல் ஹி" (சஞ்சலம் ஹி). (வேள்வி) கர்மயோக$_3$ம். (நல்லறம்) ஆந்ருஶம்ஸ்யாதி$_3$ த$_4$ர்மங்கள். (என்பர்) வேத$_3$ஶாஸ்த்ரங்களிலே ப்ரஸித்$_3$தி$_4$. (ஏனமாய் நின்றார்) தளர்ந்தபோது எடுக்குமவன். "என்பரே!"

---

செய்கிறாராகவுமாம். அப்போதைக்கு, "ஏனமாய் நின்றார்க்கு நல்லறமான இவை இயல்வு என்பர்; தானே வந்து ஸங்

---

புவி கால் நீர் முதலான ஐந்து பூ$_4$தங்களாலான ஶரீரமும், கர்மங்களும், ஆத்மகு$_3$ணங்களும், இவற்றைத் துணைகொண்ட ஞானரூபமான ப$_4$க்தியும் "மயர்வற மதிநலமருளினன்" [திருவாய் 1-1-1] என்கிறபடியே ப்ரபந்நாதி$_4$காரிகளுக்கு, ஆபத்துக்காலத்தில் நிர்ஹேதுகமாக பூ$_4$மிக்கு உதவிய அவனுடைய நிர்ஹேதுககிருபையாலே உண்டாகின்றன. இவையெல்லாம் அவனையனுப$_4$விப்பதற்கு உறுப்பாகின்றன என்று கருத்து. இயல்வு-என்றது அவனையனுப$_4$விக்கும் ப்ரகாரம் என்றபடி. என்பரே என்றது இவ்வர்த்த$_2$மும் வேத$_3$வைதி$_3$க கோ$_3$ஷ்டி$_2$யில் பிரஸித்$_3$த$_4$ம் என்றபடி.

மூன்றாவதொரு வித$_4$மாகவும் இப்பாசுரத்துக்குப் பொருள் கொள்ளலாம். ஆபத்துக் காலத்தில் அபேக்ஷையை எதிர்பாராமல் தானே உதவும் உறவுடையவனைப் பெறுவதற்கு —வேலை செய்து கூலி கொள்வாரைப்போலே, நமக்கு அவனையனுப$_4$விக்க உறுப்பான ப$_4$க்தியை ப$_4$க்திநிஷ்ட$_2$ர்கள் உபாயமாக அனுஷ்டி$_2$த்துப் ப$_2$லன்பெறும் முறையைச்சொல்லி, ஸாத$_4$ன ப$_4$க்தியை நிந்தி$_3$த்து, அர்த்த$_2$ாத் ப்ரபத்தியை அருளிச்செய்கிறார் என்கை.

(*ஏனமாய் நின்றார்க்கு*) ஆரபேக்ஷித்து ஆபத்துக் காலத்தில் மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப் பன்றியுருவையும் எடுத்து ரக்ஷித்தான்? ஸ்வப்ராப்தி விரோதி$_4$யான ப்ரவ்ருத்தியினின்றும் நிவ்ருத்தியடைவதையே கொண்டு உதவுமவனைப்பெற, ப்ரவ்ருத்தியிலே கைவைப்பதே! *'செவி வாய் கண் மூக்குடலென்றைம்புலனும்.. பூதமைந்தும், அவியாத ஞானமும் வேள்வியும் நல்லறமும் இயல்வு என்பரே)* அவனை அனுப$_4$விக்க உறுப்பாக *அவன்* கொடுத்த இந்திரியங்கள், *ஶரீரம்* முதலானவற்றை அவனையடையத் தகுந்த ஸாத$_4$னம் என்று சிலர் கருதி அவற்



என்று க்ஷேபமானபோது. ப்ரவ்ருத்திகொண்டு புகுவதைக் கைவாங்கினவன்று எடுக்கவிருக்க. "ஞானப்பிரானையல்லாலில்லை". "அறிவானும்" என்றாற்போலே. (இயல்வு) உபாயம். 12.

13. இயல்வாக வீன்துழா யானடிக்கே செல்ல
முயல்வா ரியலமரர் முன்னம்—இயல்வாக
நீதியா லோதி நியமங்க ளால்பரவ
ஆதியாய் நின்றா ரவர்.

பதவுரை:— **முன்னம்**—அநாதி$_3$காலமாக, **இயல் அமரர்**—யோக்$_3$யதையை உடையவரான நித்யஸூரிகள், **ஈன் துழாயான் அடிக்கே செல்ல** — அழகிய திருத்துழாயை அணிந்துள்ள புருஷோத்தமனுடைய திருவடிகளிலே அணுகுவதற்கு, **இயல்வாக** — தகுதியாக, **முயல்வார்**— முயற்சி செய்வார்கள்; **இயல்வாக** — (மற்றவர்களுக்கும்) தகுந்தபடி, **நீதியால் ஓதி** — முறைப்படி திருநாமங்களைச் சொல்லி, **நியமங்களால் பரவ** — ஶாஸ்த்ரநியமங்களாலே புகழும்படியாக, **அவர்**- அந்த எம்பெருமான், **ஆதி ஆய் நின்றார்**—(சேதனனை விஷயீகரிப்பதில்) முற்பாடராயிருந்தார்.

---

நிஹிதனுய் ரக்ஷிக்குமவனைப் பெறுகைக்கு இவற்றை ஸத்$_3$ருஶஸாத$_4$நமென்று சொல்லாநிற்பர்கள்: என்ன அறிவிலிகளோ !" என்று க்ஷேபமாகக் கடவது. "ஞானப்பிரானையல்லால் இல்லை நான்கண்ட நல்லது" என்றிறே தம்முடைய ஸித்$_3$த$_4$ாந்தம். 12.

---

றில் கைவைக்கிறார்களே ! இது என்ன அறிவுகேடு! (*ஏனமாய் நின்றார்க்கு இயல்வு என்பரே*) ஆபத்துக்காலத்தில் அபேக்ஷாநிரபேக்ஷமாகத் தானே தகாத செயலைச் செய்தும் ரக்ஷிப்பவனைப்பெற இவற்றை ஸாத$_4$னமென்பதே! "*அரன் அறிவானும்*" [முதல்திருவ-4] என்று தாமே அருளியதுபோலவும், "*ஏனத்துருவாயிடந்த பிரானையல்லால் இல்லை நான்கண்ட நல்லதுவே*" [திருவிருத்தம் 99] என்ற நம்மாழ்வாரைப்போலும் அருளுகிறார். இவருடைய ஸித்$_3$த$_4$ாந்தமும் இதுவேயன்றோ. 12.

**அவ:—பதின்மூன்றும் பாட்டு.** (இயல்வாக) **"வாயவனை யல்லது வாழ்த்தாது" என்னும்படியாயிருந்தது உம்மது; அல்லாதார்க்கு அவனை ஆஶ்ரயிக்கும்போது அவத4ாநம் வேணும்; எங்ஙனே கூடும்படி? என்னில்; ப்ரக்ருத்யா ஆஶ்ரயித்திருப்பர்கள் நித்யஸூரிகள்; அல்லாதாரும் ஆஶ்ர யிக்கும்படி தானே ப்ரத2மப4ாவியாம் என்கிறார்.**

**வ்யா:—** (இயல்வாக) **ஸத்3ருஶமாக.** (ஈன் துழாயா னடிக்கே செல்ல) **ஆகமுதலியாகத் தோள்மாலை இட்டி ருக்கிறவதுக்குப் போரும்படியாக.** (முயல்வாரியலமார்

---

**அவ:—** அவனை நேர்கொடு நேரே கிட்டிப் பரிமாறு கைக்கு அதி4காரிகள் நித்யஸூரிகளே; இப்படியிருக்கச் செய்தேயும், ஸம்ஸாரிகளான நம்போல்வார்க்கும் ஆஶ்ர யிக்கலாம்படி தன்னை ஸுலப4னாக்கிவைக்கும் என்கிறார்.

**உரை:—** ஐஶ்வர்ய ஸூசகமான அழகிய திருத்துழாயை உடையனான ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே கிட்ட

---

*அவ:—* அவனை உள்ளபடி அறிந்து அநுப4விப்பதற்கு அதி4காரிகள் நித்யஸூரிகளும், "வாயவனையல்லது வாழ்த்தாது" என்னும்படியான நீரும் ஆகக்கூடும். ஸாமாந்யரான ஸம்ஸாரிகள் மிகப்பெரியவனான அவனை எப்படி ஆஶ்ரயிப்பது? எனில்: அவர்களும் தன்னை அடையலாம்படி தான் முற்படுவான் என்கிறார். அநுப4விக்க உபகரணங்களையும் கொடுத்து, ருசி யையும் உண்டாக்கி, உபாயமாகவுமாகி, ப2லனையும் தானே அளிப்பான் அவன் என்கிறார்.

*வ்யா:— (ஈன் துழாயானடிக்கே செல்ல)* சக்ரவர்த்திகள் மாலையிட்டிருப்பார்கள். உப4யவிபூ4திக்கும் ஏகசக்ராதி4பதி தானே என்பதை உணர்த்தும் இனிய திருத்துழாயைத் தோள் மாலையாக உடைய ஸர்வேஶ்வரன் திருவடிகளை அடைய. *(இயலமரர்)* இயற்கையிலேயே அறிவையுடைய நித்யஸூரிகள். *(முன்னம் இயல்வாக முயல்வார்)* தாங்களே முற்பட்டு அவ னுடைய பெருமைக்குத் தகுதியாகப் பெருமுயற்சிசெய்வர். சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி நன்னீர் ஆட்டி அந்தூபம் தராநிற்பர்கள். *(இயல்வாக)* இதுவே யாத்ரையாயிருப்பர்



முன்னம்) **இயற்றியை உடையரான நித்யஸூரிகள் முன்னே மஹாயத்நம் பண்ணுவர்கள். விஷயப்ரவணராய் அவனை அறியாதவர்களும்,** ( இயல்வாக ) **ஸத்3ருஶமாக.** (நீதியா லோதி) **முறையாலே திருநாமங்களைச் சொல்லி.** (நியமங்க ளால் பரவ) **பரவும்படிக்கீடாக. ஶாஸ்த்ரங்களில் சொல்லு கிற நியமங்களாலே பரவஶராய்ப் பரவும்படிக்கீடாக.** (அவர் ஆதியாய் நின்றார்) **அவர் தாமே ப்ரத2மஸுக்ருதமானார்.**

---

ஸத்3ருஶமாக உத்3யோகி3ப்பார் முந்துறமுன்னம் அதுக் கீடான யோக்3யதையுடையரான நித்யஸூரிகள்; அல்லாத நம்போல்வாரும் ஸ்வரவர்ணாதி3களுக்கு நழுவுதல் வாராத படி அழகிதாகக்கொண்டு ஶாஸ்த்ரோக்தமான வ்ரதநிய மாதி3 க்ரமங்களோடே அத்4யயநத்தைப்பண்ணி, அதீ4த மான வேத3த்தின அர்த்த2த்தை ஆசார்யன் பக்கலிலே கேட்டு மநநம்பண்ணி அர்ச்சநப்ரணாமகீர்த்தநாதி3களோடே

---

என்றுமாம். *(முன்னம் இயலமரர்)* அநாதி3காலமாக இயற்கை யறிவையுடைய நித்யஸூரிகள் என்றுமாம்.

'இயலமரரான அவர்களிப்படியிருக்கக் குறையில்லை. ஸம் ஸாரிகள் அறப்பெரியவனான அவனை அடைவதெப்படி?' எனில்: அவர்கள் விஷயத்தில் இவன் முற்படுவான் என்கிறார். (இயல் வாக) தங்கள் ஶக்திக்குத் தக்கபடி, *"மந்த்ரோ ஹீந: ஸ்வரதோ வர்ணதோ வா யஜமாநம் ஹிநஸ்தி"* [பாணிநிஶிக்ஷா] [ஸ்வரத்தி லாவது, எழுத்திலாவது நழுவின மந்திரம் சொல்லுபவனைக் கெடுக்கும்] என்கிறபடியே ஸ்வரம், வர்ணம் முதலானவற்றில் நழுவாதபடி அழகாகத் துதிக்க என்றுமாம். *(நீதியால் ஓதி)* சாஸ்திரத்தில் சொன்ன விரதம், நியமம் முதலான முறைகள் தப்பாதபடி அத்4யயநம்செய்து. *(நியமங்களால் பரவ)* ஓதிய வேத3த்தின் உட்பொருளை ஆசாரியனிடம் கேட்பது, அதை மனனம் செய்வது, அர்ச்சிப்பது, வணங்குவது, நாமஸங்கீர்த் தனம் செய்வது, ப4க3வத், ப4ாக3வத பாத3ஸேவைசெய்வது முதலானவற்றோடு அவனை எப்போதும் தியானிப்பதாகிற நிய மங்களாலே ப4க்திபரவஶர்களாகத் துதிக்கும்படியாக. *(பரவ)* துதிப்பதைச் சொன்னது மனோவாக்காயங்கள் மூன்றாலும்

அவ:— உபகரணங்களையும் கொடுத்து, ருசியையும் ஜநிப்பித்து உபாயமுமாய், தானே பலப்ரதானம்பண்ணும் என்கிறார்.

வ்யா:— (இயலமரர்) இயற்றியையுடைய அமரர். (முன்னம்) முந்துற முன்னம். (இயல்வாக) இதுவே யாத்ரையாக. (ஈன்துழாயான்) பரிபூர்ணன். (அடிக்கே செல்ல) திருவடிகளுக்கேசேர. (முயல்வார்) யத்நம் பண்ணுவார். (இயல்வாக) ஸத்ருஶமாக. (நீதியாலோதி) ஶாஸ்த்ரோக்தமானபடியே. (நியமங்கள்) ஶ்ரவணாதிகள். (பரவ) ஆஶ்ரயித்து. (ஆதியாய் நின்றார்) அவர்களுக்கு உபேயத்துக்கு அடியானாற்போலே வேண்டினவிடத்துக்கு இவர்களுக்கு உபாயத்துக்கு அடியாய் நின்றால் ஆஶ்ரயிக்கவொண்ணாதோ? அவனே இதுக்கும் வேண்டினபின்பு அவனையே பற்ற அமையாதோ? என்றுமாம். 13.

---

கூட அநவரதபாவனை பண்ணுகையாகிற நியமங்களாலே பக்திபரவஶராய்ப் பரவும்படிக்கீடாக அப்படிப்பட்ட பெருமையுடையரானவர், "பூர்வஜ" (பூர்வஜ) எனகிறபடியே ருச்யுத்பாதகராய்க்கொண்டு முற்பாடராய் நின்றார். ஆகையாலே நமக்கெல்லாம் ஆஶ்ரயிக்கக் குறையில்லை எனறு கருத்து. இயலமரர் - இயற்றியை உடையரான - யோக்யதையை உடையரான நித்யஸூரிகள் என்றபடி. 13.

---

ஆஶ்ரயிப்பதற்கு உபலக்ஷணம். (*பரவ ஆதியாய் நின்றார் அவர்*) நித்யஸூரிகளும் பெருமுயற்சிசெய்து ஆஶ்ரயிக்கவேண்டிய மிகப்பெரியவர், ஸம்ஸாரிகளான நம்மைப்போல்வாரும் ஆஶ்ரயிக்கலாம்படி முற்பட்டுநின்றார். "*பூர்வோ யோ தேவேப்யோ ஜாத:*" [பு-ஸூ] [எவன் தேவர்களுக்காக முற்பட்டுப் பிறந்தானோ] "*மஹாபுருஷ பூர்வஜ*" [ஜிதந்தே 1-1] [மஹாபுருஷனே! முற்படப் பிறப்பவனே!] என்கிறபடியே, தானே முற்பட்டு உயிரளிப்பான் எந்நின்றயோனியுமாய்ப் பிறந்து, மனிசர்க்காப் படாதனபட்டு, இவர்களுக்கு ப்ரதமஸூக்ருதத்தை உண்டாக்கி, தன் விஷயத்தில் ருசியை உண்டாக்கி, அநுபவிக்க உபகரணங்களையும் கொடுத்து, உபாயமாகவும் நின்று, பலத்தைக் கொடுக்கவுமிருக்கிறான்; ஆகையாலே நமக்கும் ஆஶ்ரயிக்கக் குறையில்லை என்கிறார். 13.



14. அவரவர் தாந்தா மறிந்தவா றேத்தி
இவரிவ ரெம்பெருமா னென்று—சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்தும் தொழுவர், உலகளந்த
மூர்த்தி யுருவே முதல்.

பதவுரை — **அவரவர்** — ரஜோகுணத்தையும், தமோகுணத்தையுமுடைய சிலர், **தாம் தாம் அறிந்தவாறு** — தங்களுடைய குணங்களுக்குத் தகுந்தபடி தாங்கள் அறிந்தவிதமாக, **இவர் இவர் எம்பெருமான் என்று ஏத்தி** — 'இவர்கள் எமக்கு ஸ்வாமிகள்' என்று (சில தெய்வங்களைக் குறித்துச்) சொல்லிப் புகழ்ந்து, **சுவர் மிசை சார்த்தியும்** — சுவரின மேல் எழுதியும், **வைத்தும்** —(விக்ரஹமாக) ப்ரதிஷ்டைசெய்தும், **தொழுவர்** - வணங்குவார்கள்; (ஆனால்), **உலகு அளந்த** —(தொழுமவர்களுடைய தலையிலும், தொழப்படுமவர்களுடைய தலையிலும் திருவடியைவைத்து) உலகத்தையெல்லாம் அளநதுகொண்ட, **மூர்த்தி உருவே** — திரிவிக்கிரமமூர்த்தியின் திருவடிவே, **முதல்** — ப்ரதானமானது.

**அவ·— பதினாலாம் பாட்டு. ப்ரக்ருத்யா ஆஶ்ரயிக்குமவர்களையும் சொல்லி, ஆஶ்ரயிப்பித்துக் கொள்ளுமவனையும் சொல்லிற்று; இது ஒன்றும் பெருதாரைச் சொல்லுகிறது.**

---

அவ: — இப்படி ருச்யுத்பாதகனாய்க்கொண்டு முற்பாடனாய் நிற்கிறவனைவிட்டு, ஸம்ஸாரிகள் க்ஷுத்ரதேவதா ஸமாஶ்ரயணம் பண்ணாநின்றார்களே? என்னில்: அவர்கள் அப்படி செய்தார்களேயாகிலும் அந்த ஆஶ்ரயணீயரான தேவதைகளுக்கும் ஆஶ்ரயணீயன் அவனே என்கிறார்.

---

*அவதாரிகை:*—இப்படி ருசி முதற்கொண்டு உண்டாக்கி, முற்பட்டு நிற்கிற ஸர்வேஶ்வரனைவிட்டு, ஸம்ஸாரிகள் கண்ட கண்ட தேவதைகளின் காலில் விழுந்து திரிகிறார்களே! என்னில்: அறிவிலிகளான அவர்கள் அப்படிச்செய்தாலும் அவர்களால் ஆஶ்ரயிக்கப்படும் தேவர்களாலும் ஆஶ்ரயிக்கப்படுமவன் இவனே என்கிறார்.

*வ்யா:— (அவரவர்)* உலகில் சிலருக்கு ரஜோகுணம் அதிகமாயிருக்கும்; சிலருக்குத் தமோகுணம் அதிகமாயிருக்கும், அவர்களால் பரமஸாத்விக தேவதையை எப்படிப்பற்றமுடியும்?

**வ்யா:—** (அவரவர்) **ரஜ:ப்ரசுரரும், தம:ப்ரசுரரும்** (தாந்தாமறிந்தவாறேத்தி) **கு3ணநுகு3ணமாக வெளிச்செறிந்தபடி ஏத்தி.** ( இவரிவரெம்பெருமானென்று ) **ரஜஸ் தமஸ்ஸுக்கு விஷயமானுரை என்னுடைய ஸ்வாமியென்று.** (சுவரித்யாதி3) **ஸர்வேஶ்வரன்பக்கல் " எவ்வண்ணம் சிந்தித்திமையாதிருப்பர்" என்கிற செயலில் பி4த்தியிலே எழுதியும் வைத்தும் தொழுவர்.**

---

**உரை:—** ரஜஸ்தம:ப்ரசுரராய், பி4ந்நருசிகளான அவ்வவ் வதி4காரிகள், *ஶா*ஸ்த்ரமுக2த்தாலன்றிக்கே கு3ணநுகு3ணமாகத் தாந்தாம அறிந்த ப்ரகாரங்களாலே வாய்விட்டுப்

---

*" ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேய: "* [ப4ாரதம்] என்கிறபடியே கருவிலே திருவுடைய ஸாத்விகர்கள்தானே உண்மையான பரம்பொருளைப் பற்றமுடியும். (*அவரவர்*) *"லோகோ பி4ந்ந ருசி:"* [உலகினர் வெவ்வேறு ருசிகளை உடையவர்கள்] என்கிற படியே சிலருக்குத் தாமஸாஹாரங்களிலும் தாமஸச் செயல்களிலுமே ருசியிருப்பதையும், சிலருக்கு ராஜஸாஹாரங்களிலும் ராஜஸச்செயல்களிலுமே ருசியிருப்பதையும், ஒருசிலருக்கே ஸாத்விகாஹாரத்திலும், ஸாத்விகச் செயல்களிலும் ஈடுபாடிருப்பதையும் காண்கிறோம். தே3வதாவிஷயத்திலும் இப்படித்தானேயிருக்கும். இதை உணராமல் சில மேத4ாவிகள் எந்த தெய்வத்தை உபாஸித்தாலும் ஒன்றுதான் என்று உரைப்பது தான் ஆஶ்சர்யம்! *(தாம் தாம் அறிந்தவாறு ஏத்தி)* மனிதர்களுடைய அறிவை எடுத்துக்கொண்டாலும், அது ஒரே தரமுடையதாயிருப்பதில்லை. (இதற்குக் காரணமும் ரஜஸ்தமோ கு3ணங்களே.) ஆகையால் தம் தம் அறிவுக்குத் தக்கவாறு பற்பல தாழ்ந்த தே3வதைகளைத் துதிப்பவர்களாகவே உள்ளனர் உலகினர். *(தாம் தாம் அறிந்தவாறு)* ஸத்வகு3ணம் விஞ்சியிருந்ததாகில் *"ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்"* [கீ3தை] என்கிறபடியே சாஸ்திரவிசாரம்செய்து ஞானத்தெளிவை அடைந்திருப்பார்கள். அதில்லாமையாலே 'மனமே ராஜா மதியே மந்திரி' என்று தம்முடைய புல்லறிவுக்குத் தக்கபடி ஒரு தெய்வத்தைப் பரம்பொருளாக நிஶ்சயித்துக்கொண்டு அதைத் துதிக்கிறார்கள். *"புடைப்பல தானறி தெய்வம் பேணுதல் தனாது புல்லறிவு ஆண்மை பொருந்தக் காட்டி"* [ திருவாசிரியம்-6 ] என்றார் பரம்பொருளை நேரே கண்ட நம்மாழ்வாரும்.



(உலகித்யாதி3) **இவர்களுடையவும் ஆஶ்ரயணீயங்களுடையவும் தலையிலே அடியை வைத்தவனே ப்ரத4ாநம்.** (மூர்த்தியுருவே முதல்) **ஸர்வேஶ்வரனுடைய திருமேனியே ப்ரத4ாநம்.**

**அவ:—** **அவனை வேண்டாதார் படுகிற பாடு பாரீர் !** (அவரவர்) **பி4ந்நருசிகள்.** (தாந்தாமறிந்தவாறு) ***ஶா*ஸ்த்ரத்தின் பின் செல்லார்.** (இவரிவர்) **ஸக3ரபுத்ரர்கள், கண்டாரை, "என் குதிரை பிடித்தாய்" என்று பிடிக்குமாபோலே தோற்றி**

---

புகழ்ந்து, தாங்களுகந்த கு3ணங்களையுடைய ஐயன், து3ர்க்கை3 தொடக்கமாக ருத்3ரன் முடிவாக உண்டான இவர்கள் நமக்கு ஆஶ்ரயணீயரான ஸ்வாமிகள் என்று ஆத3ரித்துக் கொண்டு ஒவ்வொரு தே3வதைகளை ஓரோர் பி4த்திகளிலே

---

*(இவர் இவர் எம்பெருமான் என்று)* தம்மைப்போலவே ரஜோ கு3ணத்தையும், தமோகு3ணத்தையும் அதி4கமாக உடைய தே3வதைகளில் ஒருவரை 'எம் ஸ்வாமி' என்று அபி4மானித்து. (*இவரிவர்*) "ஸக3ரபுத்ரர்கள் கண்டாரை 'என் குதிரை பிடித்தாய்' என்று பிடிக்குமாபோலே, தோற்றினுரை *(பற்றுகை)*" என்று பெரியவாச்சான்பிள்ளை. (*இவரிவர்*) ஒரு கணக்கில்லை; ஒருவன் பிரமன் உஷஸ்ஸிடம் கலந்துபெற்ற உருத்திரனை எம்பிரான் என்றான். மற்றொருவன் 'அவன் மனைவியான பராசக்தியே பரம்பொருள்' என்றான். பிறிதொருவன் அவன் மூத்தபிள்ளையான பிள்ளையாரையே பரதத்துவம் என்றான். வேறொருவன் 'அவன் இளையபிள்ளையான முருகனே மெய்ப்பொருள்' என்றான். இன்னமொருவன் அவனுடைய காமாவேஶத்தால் வீரியம் விழுந்து உண்டான ஐயனுரை அறுபொருள் என்றான். இன்னம் கறுப்பு, காட்டேரி, முதலானவற்றுக்கு எல்லையேயில்லை. என்னே அறிவுகேடு! ஒருவனுவது தான் சொல்லும் தே3வதை தன்னைப்போலவே பிறப்பையுடையதே என்பதையும், பிரகிருதிஸம்ப3ந்த4முள்ளதே என்பதையும் சிந்தித்துப் பார்க்கிறனல்லன். இதை அறிவாளியொருவன் எடுத்துச் சொன்னால் துவேஷியென்று அவனைத்தூற்றவும்,

னரை. (உலகளந்த) **ஸமாஶ்ரயிப்பார் தலையிலும், ஸமாஶ்ரயணீயர் தலையிலும் ஒக்கத்துகைத்த ஸர்வேஶ்வரன்.** (உருவே முதல்) **வடிவே முதல். 14.**

---

சித்ரரூபேண எழுதியும். க்3ருஹந்தொடக்கமான ஓரொரு இடங்களிலே ப்ரதிமாரூபேண ப்ரதிஷ்டி2த்து வைத்தும் ஆஶ்ரயியாநிற்பர்கள். இவர்கள் இப்படி செய்தாலும், ஆஶ்ரயிக்கிறவர்களோடு, ஆஶ்ரயணீயராக இவர்கள் விரும்புகிற அத்தே3வதைகளோடு வாசியற எல்லாரும் தன் காற்கீழே துகையுண்ணும்படி ஜக3த்தையடைய அளந்து கொண்ட ஸர்வேஶ்வரன் திருமேனியே ப்ரதா4நம். 14.

---

அவன் வணங்கும் அருமறைமுதல்வனை திருமாலைத் தாழ்த்திப் பேசவும் தயங்குவதில்லை. *''அஜாயமாநோ ப3ஹுதா4 விஜாயதே''* [பு-ஸூ] என்று வேத3மும், ''பிறப்பில் பல் பிறவிப் பெருமான்'' என்று ஆழ்வார்களும், ''பிறவாப் பிறப்பிலே பிறப்பித்தோர் இலையே'' என்று மத்4யஸ்த2ர்களான பழந் தமிழரும் திருமாலைக்குறித்துச் சொல்லியிருப்பதைக் காண்பதுமில்லை. (*சுவர்மிசைச் சார்த்தியும் வைத்தும் தொழுவர்*) அந்த தே3வதைகளை அபி4மானத்தாலே சுவர்மீது சித்திரமாக எழுதியும், வீடு, ஆலயம், குன்று முதலானவிடங்களிலே விக்3ரஹமாக வைத்தும் தொழுகின்றார்கள். (*உலகளந்த மூர்த்தியுருவே முதல்*) இவர்கள் பக்ஷபாதத்தாலே கண்டகண்ட தே3வதைகளைத் தொழுதாலும் உண்மை மாறிவிடாதே. ஆஶ்ரயிக்கின்ற இவர்களோடு, இவர்கள் ஆஶ்ரயிக்க விரும்புகின்ற அந்த தே3வதைகளோடு வித்தியாசமில்லாதபடி எல்லாரும் தன் காலின் கீழே மிதிபடும்படி உலகனைத்தையும் அளந்து கொண்ட ஸர்வேஶ்வரனுடைய திருமேனியே ஜக3த்காரணமானது. (*உலகளந்த*) இதை இன்று நான் சொல்லவில்லை; பக்ஷபாதிகளான சில சேதனர் சொல்லவில்லை. அபௌருஷேயமான வேத3ம் ஆயிரக்கணக்கான இடங்களில் சொல்லியிருக்கின்றது என்று கருத்து. (*உலகளந்த மூர்த்தி உருவே முதல்*)

**''ஏக: ப்ராஸீஸரத் பாத3ம் ஏக: ப்ராசிக்ஷளந்முத3ா ।**
**அபரோऽப்யத4ரந் மூர்த்4நா கோऽதி4கஸ்**
**தேஷு க3ண்யதாம் ॥''**



**15. முதலாவார் மூவரே(ர்), அம்மூவ ருள்ளும்**
**முதலாவான் மூரிநீர் வண்ணன்—முதலாய**
**நல்லா னருளல்லால் நாமநீர் வையகத்துப்**
**பல்லா ரருளும் பழுது.**

**பதவுரை:— மூவரே**—பிரமன், விஷ்ணு, சிவன் என்னும் இம்மூவரே, **முதலாவார்**—முக்கியமானவர்கள்; **அம்மூவருள்ளும்**—அந்த மும்மூர்த்திகளுக்குள்ளும், **மூரி நீர் வண்ணன்** — பரந்த கடல்போன்ற நிறத்தையும், ஸ்வப4ாவத்தையுமுடையவனான எம்பெருமானே, **முதலாவான்**—காரணபூ4தனாவான்; **முதலாய** — ஸர்வகாரணனும், **நல்லான்**—உபகாரகனுமான அவனுடைய, **அருள் அல்லால்**—அருளைத்தவிர, **நாம நீர் வையகத்து**—ப்ரஸித்3த4மான கடல் சூழ்ந்த மண்ணுலகில், **பல்லார்**—மற்ற பலருடைய, **அருளும்**—கிருபையும், **பழுது**—வீணானது.

**அவ:— பதினைந்தாம் பாட்டு.** (முதலாவார்) **அவ்வோ தே3வதைகளும் ஆஶ்ரயணீயராய்ச் சொல்லாநிற்கச்செய்தே.**

---

அவ:—நீர் அவனையே ப்ரதா4நனாகச் சொல்லாநின்றீர். புறம்பே ஆஶ்ரயிப்பார் சிலரும். ஆஶ்ரயித்தார்க்குப் ப2லங்

---

[ஒருவன் (விஷ்ணு) திருவடியை நீட்டினான்; வேறொருவன் (பிரமன்) உகப்புடன் அதைக்கழுவினான்; மற்றொருவன் (உருத்திரன்) அந்நீரைத் தலையில் த4ரித்தான். இவர்களில் எவன் பெரியவன் என்பதை நீங்களே நடுநிலை நின்று எண்ணிப்பாருங்கள்.] என்றாற்போலே சொல்லுகிறார். 14.

*அவதாரிகை:—* நீர் 'உலகளந்த மூர்த்தியே முதல்வன்' என்கிறீர். சிலர் காளி, கருப்பன், காட்டேறி முதலான வேறு தெய்வங்களை முதல்வராகச் சொல்லுகின்றனர். சிலர் மும்மூர்த்திகளில் பிரமன், உருத்திரன் ஆகிய மற்றிருவரையும் முதல்வராகச் சொல்லுகின்றனர். இத்தெய்வங்கள் தங்களுக்குப் ப2லன் கொடுப்பதையும் சான்று காட்டுகின்றனர். வேறு சிலர் இம்மூன்று மூர்த்திகளிலும் மேற்பட்டதொன்றுதான்

'அவர்கள் அப்ரதா4நர், இவன் ப்ரதா4நன்' என்று சொல்லுகிறது உம்முடைய பக்ஷத்தாலேயிறே என்ன; 'அர்த்த2 தத்வமிருந்தபடியைப் பார்க்கலாகாதோ' என்கிருர்.

வ்யா:— (முதலாவார் மூவரே) இருந்ததே குடியாக ஆ*ஶ்*ரயணீயரன்றிறே, மூவரிறே ப்ரதா4நர். (அம்மூவ

---

கொடுப்பார் சிலருமாயன்ரே நாட்டில் நடந்துபோருகிறது? என்ன, 'அவையடங்கலும் வ்யர்த்த2ம' என்கிருர்.

உரை:—'இவர் இவர்' என்று இருந்ததேகுடியாக ஆ*ஶ்*ரயணீயரென்று ப்4ரமியாதே ஸ்ருஷ்ட்யாதி3கார்யங்களை அதுக்

---

பரதெய்வம் என்கின்றனர். அவ்வொன்று எது? என்று கேட்டால், சிலர் பரமசிவன்தான் என்கின்றனர்: சிலர் பராசக்திதான் என்கின்றனர். சிலர் மஹாகணபதி என்கின்றனர். சிலர் ஸுப்3ரஹ்மண்யன்தான் என்கின்றனர். 'ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்கு எளிது' என்கிற கணக்கிலே இவர்களுக்குள்ளேயுள்ள இச்சண்டையைப் பயன்படுத்திக்கொண்டு, வேறு சில மேதா4விகள் 'இவையெல்லாமும், நீயும் நானுங்கூடப் பரம்பொருள்தான்' என்று வழக்குரைக்கின்றனர். இப்படியிருக்கும்போது 'உலகளந்த மூர்த்தியுருவே முதல்' என்று நீர் உரைப்பது எப்படி? எனில்: 'இவையெல்லாம் வேத3விருத்3த4மான பேச்சுக்கள், நானுரைப்பதே வேத3சாஸ்திரங்களோடு ஒட்டியது' என்கிருர்.

*வ்யா:— (முதலாவார் மூவரே)* வேத3சாஸ்திரங்களைக் கொண்டு பார்ப்போமானல், ஸ்ருஷ்டியைச் செய்பவனுய் அறியப்படும் பிரமனும், ரக்ஷணத்தைச் செய்பவனுக அறியப்படும் விஷ்ணுவும், ஸம்ஹாரத்தைச் செய்பவனுக அறியப்படும் ருத்3ரனும்தான் முக்கியமானவர்கள் என்று எளிதில் அறிந்து கொள்ளலாம். நீயும் நானும் பரம்பொருளாகில் இவ்வுலகில் நாம் துன்பங்களை அனுப4விப்பதும், அதற்குக் காரணமான *ஶ*ரீர ஸம்ப3ந்த4மும் கூடாது. ஆகையால் நீயும் நானும் பரம்பொருளாக முடியாது. கறுப்பும், காட்டேறியும்,



ரித்யாதி3) ப்3ரஹ்ம ருத்3ராதி3களுக்கு ஜீவவ்யவதா4நத்தாலே

---

கடைத்த வடிவெடுத்து நடத்திக்கொண்டுபோருகிற ப்3ரஹ்ம விஷ்ணுருத்3ரர்களாகிற மூவருமே ஜக3த்துக்கு ப்ரதா4நர்

---

காளியும், முருகனும், க3ணபதியும், ஐயனும் வேத3ங்களில் எங்குமே பரம்பொருளாகச் சொல்லப்படவில்லை. பரம்பொருளின் காரியமான ஸ்ருஷ்டி ஸ்தி2தி ஸம்ஹாரங்களாகிற முத்தொழில்களிலும் இவர்களுக்கு எவ்வித ஸம்ப3ந்த4மும் லோகவேத3ங்களில் காணப்படவில்லை, ஆகையால், ஸ்ருஷ்டி ஸ்தி2தி ஸம்ஹாரங்களைச் செய்பவரான பிரமவிஷ்ணு ருத்3ரர்களே தே3வதைகளுள் முக்கியமானவராவர். முதலாவார் மூவரே என்ற இதற்கு ஆக்ஷேபமாக துரீய (நான்காவது) ப்3ரஹ்மவாதி3கள் சொல்லுவதாவது:— லோகவேத3ங்களில் பிரமன் விஷ்ணுவின் உந்தித்தாமரையில் பிறப்பதாகப் பிரஸித்3தி4யுள்ளது. உருத்திரனும், பிரமனுக்குப் பிறந்தவன் என்று பல வேத3வாக்கியங்கள் உரைக்கின்றன. "*ப்3ரஹ்ம விஷ்ணு ருத்3ரேந்த்3ரா: தே ஸர்வே ஸம்ப்ரஸூயந்தே*" (அத2ர்வசிகை2) என்று சில வேத3வாக்கியங்கள் இவர்களோடு கூட விஷ்ணுவுக்கும் பிறப்பை ஓதுகின்றன. ஆகையால் இம்மூன்றிலும் மேற்பட்டதான ஒன்றுதான் பரம்பொருளாக வேண்டும்—என்று துரீய ப்3ரஹ்மவாதி3கள் உரைக்கின்றனர். அவ்வொன்று எது? என்று கேட்டால், *ஶி*வனிடம் பக்ஷபாதங்கொண்டவர்கள் அது பரமசிவன்தான் என்கின்றனர். *ஶ*க்தியிடம் பக்ஷபாதம் கொண்டவர்கள் பரா*ஶ*க்திதான் என்கின்றனர். இப்படியே பலரும் பலவிதமாகச் சொல்லுகின்றனர். இவையெல்லாம் வேத3விருத்3த4ம். பரம்பொருளை *ஶி*வ*ஶ*ப்3த3த்தால் சொல்லியிருப்பதைக்கொண்டு, கர்மபரவ*ஶ*னன ருத்3ரனைக் காட்டிலும் மேலான ஒரு *ஶி*வனைக் கற்பிக்கப் புகுந்தால், பரம்பொருளை இந்த்3ர*ஶ*ப்3த3த்தாலும், ஆகா*ஶஶ*ப்3த3த்தாலும், வாயு *ஶ*ப்3த3த்தாலும் சொல்லியிருப்பதுகொண்டு பரமேந்திரன், பரமாகா*ஶ*ம், பரமவாயு என்னும் தத்துவங்களையும் கற்பித்து அவையே பரம்பொருள் என்றும் சொல்லவேண்டி வரும். வேத3வாக்கியங்களெல்லாம் பரஸ்பர விருத்3த4மாய் முடியும். மும்மூர்த்திகளைக் காட்டிலும் மேலான

**அந்தர்யாமியாயும் தன் பக்கலிலே ஸ்வேந ரூபேண நின்றும்**

ஆவர்; அம்மூவர் தம்மில் ஸமரென்றும, மூவருங்கூட ஒன்றென்றும், மூவர்க்கும் அவ்வருகே ஒருவன் ப்ரத4ான

தொரு தே3வதை முத்தொழில்களைச் செய்வதாக வேத3த்தில் எங்குமே சொல்லப்படவில்லை. "தே3வர்களுக்குள் விஷ்ணுவே மிகமிக மேலானவன்; அக்3னியே கீழானவன்" என்று ஒரு வேத3வாக்கியம் கோ4ஷிக்கிறது. "நாராயணனே பரப்3ரஹ்மம்" "நாராயணனிடமிருந்து பிரமன் உருத்திரன் முதலிய எல்லாம் உண்டாகின்றன" "எல்லாவற்றினுள்ளும் புறமும் வியாபித்திருப்பவன் நாராயணன்" "பிறப்பற்றவனாயினும் பலபடியாகப் பிறக்கிறான்" [பு-ஸூ] என்று பல வேத3வாக்கியங்கள் பறைசாற்றுகின்றன. இதிலிருந்து விஷ்ணுவுக்கு மேல் ஒருவரில்லையென்பதும், விஷ்ணுவின் பிறப்பு தன்னிச்சை2யாலேயேயொழியக் கர்மஸம்ப3ந்த4த்தாலல்ல என்பதும் ஏற்படுகிறது. ஆகையால் துரீயப்3ரஹ்மவாத3ம் வேத3விருத்3த4மாகும். மேலும், உலகத்திலும் கர்ம பரவசனான உருத்திரன் வேறு, பரமசிவன் வேறு என்று வழக்கில்லை; ருத்3ர பத்னியான பார்வதி வேறு பராசக்தி வேறு என்றும் வழக்கில்லை. முக்கண்ணனாய், சூலமேந்தியவனாய், திரிபுரஸம்ஹாராதி3கார்யம் செய்தவனான உருத்திரனைத்தான் சைவர்கள் வழிபடுகிறார்கள். 'உருத்திரனுக்கு வேத3ங்களில் தாழ்வு சொல்லியிருக்கிறதே' என்று கேட்டால்தான் 'அவன் வேறு, எங்கள் சிவன் வேறு' என்னும் வாத3த்தில் மனஸ்ஸாக்ஷிவிருத்3த4மாக இறங்குகிறார்கள். இப்படியே பராசக்தி ப4க்தர்களும் செய்கிறார்கள். ஆகையால் துரீய பஞ்சமாதி3 ப்3ரஹ்மவாத3ம் லோகவிருத்3த4மும் ஆகும். ஆகையால் மும்மூர்த்திகளே உலகிலுள்ள மற்ற அனைவரையும் விட முக்கியமானவர்கள் என்று ஸித்3தி4த்தது. 'மூவரே' என்று ஏகாரத்தினாலே கண்டகண்ட தெய்வங்களைப் பரம்பொருளாகச் சொல்லுவாரையும், துரீய பஞ்சமாதி3 ப்3ரஹ்மவாதி3களையும் தள்ளினாராயிற்று. மூவர் என்னும் பாட2த்திலும் ஏகாரம் அர்த்த2ஸித்3த4ம்.

இனி, இம்மும்மூர்த்திகளும் ஒருவரே என்றும் இம்மும்மூர்த்திகளும் ஸமானமானவரே என்றும் கூறும் திரிமூர்த்தி



**காரணமாவான். (மூரிநீர்வண்ணன்) பொன்னுருவும் தீயுருவு**

னென்றும் ப்4ரமியாதே, அந்த மூவரிலும் வைத்துக்கொண்டு ப்ரத4ானனாவான் ப்3ரஹ்மாதி3களை இடுக்கி ஸ்ருஷ்ட்யாதி3களை

ஐக்ய ஸாம்யவாதி3களைத் தள்ளி ப4க3வத் பரத்வத்தை நிச்சயிக்கிறார் — (*அம்மூவருள்ளும் முதலாவான் மூரிநீர் வண்ணன்*) இம்மூவரும் ஒன்றென்னலும், ஸமரென்னலும் கூடாது. ஏனெனில்: வேத3ங்களில் "*நாராயணாத் ப்3ரஹ்மா ஜாயதே நாராயணாத்3 ருத்3ரோ ஜாயதே*" [நாராயணோபனிஷத்] [நாராயணனிடமிருந்து பிரமன் பிறக்கிறான்; நாராயணனிடமிருந்து உருத்திரன் உண்டாகிறான்] என்று நாராயணனிடமிருந்து மற்றிருவர்க்கும் பிறப்பும், "*ஸோரோதீ3த்*" [*சதபத2ம்*] [உருத்திரன் அழுதான்] "*ஸோப்3ரவீத் அநபஹத பாப்மா வாஹம்*" [*சதபத2ம்*] [நான் பாபம் நீங்கப்பெறாதவனாயிருக்கிறேன் என உருத்திரனுரைத்தான்.] "*வரம் வ்ருணே அஹமேவ பசூநாமதி4பதிரஸாநீதி*" [யஜுர்வேத3ம்] [நானே பசுபதியாகக்கடவேனென்று வரம் வேண்டுகிறேன் என்றான் உருத்திரன்] என்றும், "*ஸோபி3பே4த்*" [ஸுபா3ல] [மிருத்யுவைக்கண்டு பிரமன் ப4யந்தான்] "*உஷஸி ரேதோ ஸிஞ்சத்*" [சதபத2ம்] [பிரமன் உஷஸ்ஸென்னும் தன் தே3வியிடம் வீர்யத்தை விட்டான்] என்றும் பிரமருத்திரர்களுக்குப் பாபப4யஸம்ப3ந்த4மும், ப்ராக்ருத சரீரஸம்ப3ந்த4மும், அபூர்ணத்வமும் வேத3ங்களில் ஓதப்படுகையாலும், நாராயணனெனும் விஷ்ணுவை இவர்களைப் படைத்தவனாகவும், நியமிப்பவனாகவும், எவ்விதத் தாழ்வுமற்றவனாகவும் ஓதுகையாலும் இம்மூவரும் ஸமராகவோ ஒன்றாகவோ முடியாது. "*ஸ ப்3ரஹ்மா ஸ சிவ:*" [தை-நா 11:] [அவனே பிரமனாகிறான்; அவனே சிவனாகிறான்] "*ப்3ரஹ்மா நாராயண; சிவச்ச நாராயண:*" [பிரமனும் நாராயணனே; சிவனும் நாராயணனே] என்று வேத3ங்கள் ஓதியிருக்கிறபடியால் இம்மூவரும் ஒன்றெனத் தோற்றுகிறதே? எனில்: இவர்களை மாத்திரம் வேத3ங்கள் நாராயணனோடு ஒன்றாகப்படிக்கவில்லை; "*ஸேந்த்3ர:*"[தை-நா:11] [இந்திரனும் அவனே] "*சக்ரச்ச நாராயண:*" [இந்திரனும் நாராயணனே] என்று மும்மூர்த்திகளிலும் தாழ்ந்தவனும்

**மானவர்களன்று; பரப்பை உடைத்தான கடல்வண்ணன்.**

நிர்வஹித்துப் போருமவனுய், ஸஞ்சரியாநின்றுள்ள கடல்போலேயிருக்கிற வடிவையுமுடையவனுனவன்.

“*அஹல்யாயை ஜார:*” என்று வேத3த்திலும், ஸ்ரீராமாயணாதி3களிலும் பரதா3ரக3மனம் செய்தவனுக ஸுப்ரஸித்3த4னுமான இந்திரனையும் நாராயணனென்றே படித்தது. “*சக்ஷுஶ்ச த்3ரஷ்டவ்யஞ்ச நாராயண:*” [ஸுப3ால] [கண்ணும் காண்பனவும் நாராயணனே] “*தி3ஶஶ்ச நாராயண: விதி3ஶஶ்ச நாராயண: ஸர்வம் நாராயண:*” [நாராயண] [தி3க்குகளும் நாராயணனே; விதி3க்குகளும் நாராயணனே; எல்லாம் நாராயணனே] “*புருஷ ஏவேத3ம் ஸர்வம்*” [பு ஸூ] [எல்லாம் புருஷனே] “*விஶ்வமேவேத3ம் புருஷ:*” [தை-நா] [இவ்வுலகெல்லாம் பரம புருஷனே] “*ஸர்வம் க2ல்வித3ம் ப்3ரஹ்ம*” [சா2ந் 3-14-1] [இது எல்லாம் ப்3ரஹ்மமே] என்று துன்பத்தில் உழலும் எல்லாச் சேதனரையும், அறிவற்ற அசேதனத்தையுங்கூட நாராயணன் என்றே வேத3ங்கள் படித்தன. இப்படி எல்லாவற்றையும் ஒன்றென ஓதுவதற்குக் காரணத்தையும், “*ஏஷ ஸர்வபூ4தாந்தராத்மா தி3வ்யோ தே3வ ஏக ஏவ நாராயண:*” [ஸுப3ால] *[எல்லா பூ4தங்களிலும் அந்தராத்மாவாயிருக்கும் அப்ராக்ருதனுன தே3வன் நாராயணன் ஒருவனே]* “*அந்தர்ப3ஹிஶ்ச நாராயண:*” [நாராயண] “*அந்தர்ப3ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி2த:*” [தை-நா 11] [எல்லாப் பொருள்களையும் உள்ளும்புறமும் வியாபித்து விளங்குகிறுன் நாராயணன்] “*விஶ்வாத்மாநம் பராயணம்*” [தை-நா 11] [ஸர்வாத்மாவாயிருப்பவன் நாராயணன்] “*ஸ பூ4மிம் விஶ்வதோ வ்ருத்வா*” [பு-ஸூ] [பரமபுருஷன் பூ4மியை முழுவதும் வியாபித்தான்] “*தஜ்ஜலாந்*” [சா2ந்-3-14-1] [ப்3ரஹ்மத்திடமே எல்லாம் தோன்றி வாழ்ந்து மறைவதால் எல்லாம் ப்3ரஹ்மமென்றது] என்று அருகிலேயே அந்தந்த வேத3வாக்கியங்கள் படித்து வைத்தன. “*அந்யஶ்ச ராஜந் ஸ பர:, தத2ாந்ய: பஞ்சவிம்ஶக:। தத்ஸ்த2த்வாத3நு பஶ்யந்தி ஹ்யேக ஏவேதி ஸாத4வ:॥*” [பா4ரதம்] *[அரசனே! பரமாத்மா வேருனவன்; ஜீவனும் வேருனவனே. ஆயினும்,*



(முதலாய) **காரணமான.** (நல்லானருளல்லால்) **அறவனுனவன் அருளல்லால்.** (நாமமித்யாதி3) **அவனுடைய அருளொழிய அல்லாதார் எல்லாருடைய அருளும் பழுது.**

ஜக3த்காரணபூ4தனுமாய். ஸர்வவிஷயமான வாத்ஸல்யததையுமுடையனுனவனுடைய க்ருபையொழிய, ப்ரஸித்3த4

பரமன் ஜீவனில் அந்தர்யாமியாய் நிற்பதால் இருவரையும் ஒருவராகவே நல்லோர்கள் காண்கிறுர்கள்.] “*ஸர்வம் ஸமாப்நோஷி ததோऽஸி ஸர்வ:*” [கீ3தை 11-40] [நீ எல்லாவற்றையும் வியாபித்திருப்பதால் எல்லாமுமாகிறுய்] “*ஸர்வக3த்வாத3நந்தஸ்ய ஸ ஏவாஹமவஸ்தி2த:*” [வி-பு 1-19-85] [அநந்தன் எங்கும் பரவியிருக்கையால் நானும் அவனுகவேயிருக்கிறேன்.] என்று இவ்வர்த்த2ம் உபப்3ரும்ஹணங்களிலும் விவரிக்கப்பட்டது. ஆகையால் மும்மூர்த்திகளும் ஒன்றென்பது வேத3ஶாஸ்த்ர விருத்3த4மேயாகும். ‘ஸ்ருஷ்டி ஸ்தி2தி ஸம்ஹாரங்களைச் செய்யும் இம்மூவரும் ஒத்தவர்; மூவரும் சேர்ந்தே பரம்பொருள் என்னலாமே?’ எனில்: “*யதோ வா இமாநி*” முதலான வேத3வாக்கியங்களில் முத்தொழில்களையும் செய்பவன் ஒருவனே என்று ஓதியிருப்பதும், “*ஏகமேவாத்3விதீயம்*” [சா2ந்-6-2-1] “*ஏக ஏவ நாராயண:*” [ஸுப3ால] “*ஏக ஏவாக்3ர ஆஸீத்*” [ஐதரேயம் 1-1-1] “*ஈஶதே தே3வ ஏக:*” [ஶ்வே-1-10] “*ஏகஸ் ஸ்வதந்த்ரோ ஜக3தோ ப3பூ4வ*” “*ஏக: ஶாஸ்தா ந த்3விதீயோஸ்தி ஶாஸ்தா*” [பா4ர - ஆஶ்வ 27-1] “*ஏக ஏவ ஜநார்த்த3ந:*” [வி-பு] முதலான நூற்றுக்கணக்கான ஶ்ருதிஸ்ம்ருதிவாக்கியங்களில் ஜக3த்காரணப்பொருள் ஒன்றே என்று ஓதியிருப்பதும், “*நாராயண பரம் ப்3ரஹ்ம*” “*நாராயணுத் ப்3ரஹ்மா ஜாயதே. நாராயணுத் ருத்3ரோ ஜாயதே*” முதலான வாக்கியங்களில் நாராயணனைப் பரம்பொருளாகவும், மற்ற இருவரையும் படைப்பவனுகவும் ஓதியிருப்பதும் ஒட்டாது. ஆகையால் நாராயணன் ஒருவனே நேரேயும், பிரமருத்திரர்களுக்கு அந்தர்யாமியாயிருந்தும் ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைச் செய்கிறுன் என்றும், விஷ்ணுவாய்

*மு-தி 13*

அதி4காரிகளாகையாலே அவர்களை முற்படச்சொன்ன வித்தனை; பழுதாமிடத்தில் அவர்களோடு அல்லாதாரோடு வாசியில்லை. அவனுக்கு வஶராய்க்கொண்டு ப2லம் தரிலோ? என்னில், இரண்டும் வ்யர்த்த2ம்.

---

மான நீரையுடைத்தான ஜக3த்திலுள்ள பலருடைய ப்ரஸாத3மும் வ்யர்த்த2ம்.

---

அவதரித்து ரக்ஷணத்தைச் செய்கிறன் என்றும் கொண்டே தீரவேண்டும். வேறு வழியில்லை. ஆகையால் மும்மூர்த்திகளும் ஒன்றென்றும் ஒத்தவரென்றும் சொல்லும் வாத3ங்கள் வேத3ஶாஸ்த்ரவிருத்3த4மேயாகும். வேத3ஶாஸ்த்ரங்களை நடுநிலைநின்று ஆராய்வார்க்கு நாராயணன் ஒருவனே பரம்பொருள் என்று தெற்றென விளங்கும் என்று கருத்து. (*அம்மூவருள்ளும் முதலாவான் மூரிநீர்வண்ணன்*) ஸ்ருஷ்டிஸ்தி2திஸம்ஹாரங்களைச் செய்வதால் உலகிலுள்ள மற்றுள்ளாரிலும் முக்கியரான அம்மூவருக்குள்ளும் முதல்வனாயிருப்பவன் அலையெறிகின்ற கடல்போன்ற நிறத்தையும் தன்மையையுமுடைய நாராயணனே. (*மூரிநீர்வண்ணன் முதலாவான்*) பொன்னுருவமும் செந்தீயுருவமும் ஜக3த்காரணமன்று. மாகடலுருவமே ஜக3த்காரணம். *"நீலதோயத3மத்4யஸ்தா2 வித்3யுல்லேகே2வ"* [தை-நா] என்று வேத3ம் புகழ்ந்த வடிவே ஜக3த்காரணம். (*மூரிநீர் வண்ணன்*) நீரானது உலகெங்கும் வியாபித்திருப்பது போலே பிரமன் உருத்திரன் முதலான எல்லா தே3வதைகளையும் வியாபித்திருப்பவன். மேலே மற்ற தே3வதைகளைப் பேசும் போதும் 'நாமநீர் வையகத்துப் பல்லார்' என்று நீர் சூழ்ந்த வையகஸ்தா2னத்திலே அவர்களை வைத்துப் பேசினரன்றே.

பிரமன், உருத்திரன் முதலான மற்ற தே3வதைகளும், தங்களை அடைவார்க்கு அருள்புரிந்து ப2லன் கொடுப்பதாக வேத3ஶாஸ்த்ரங்களில் படிக்கிறோமே? என்னில், அவர்கள் கொடுக்கும் ப2லன்களெல்லாம் ப3ந்த4கமாகையாலும் அல்பாஸ்தி2ரமாகையாலும் வீணானவை; நிலையானதும், மிகச்சிறந்ததுமான மோக்ஷப2லத்தைத் தர அவர்களால் இயலாது என்



(முதலாய நல்லான்) பெற்ற தாயாகையாலே பரிவன். 30. "𑌧𑌰𑍍𑌮𑌜𑍍𑌞𑌶𑍍𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌵𑌤𑍍𑌸𑌲𑌃" (த4ர்மஜ்ஞஶ்ஶரணாக3தவத்ஸல:). முலைப்பாலிருக்க விஷபாநம் பண்ணுவரோ? (நாமம்) நாம

---

இவனையொழிந்த மற்ற இருவருடைய அருளோடு கீழ்ச்சொன்னவர்களோடு வாசியற ஸர்வமும் வ்யர்த்த2ம்.

---

கிறார் மேலே, — (*முதலாய நல்லான் அருளல்லால்*) *"காரணம் து த்4யேய:"* [அத2ர்வஶிகை2] [காரணவஸ்துவே தியானிக்கத் தக்கது] என்கிறபடியே காரணவஸ்துவிடம் ப4க்தி செய்து பெறும் அருளே பயனுடையது. கார்யமானவரின் அருள் வீணானது. (*நல்லான் அருளல்லால்*) முக்குணமற்றவனாய், ஸத்வகு3ணத்தையும் ஸமஸ்த கல்யாண கு3ணங்களையுமுடையவனான நாராயணனுடைய அருளே பயனுடையது. ரஜஸ் தமஸ்ஸுக்களுடைய பிரமருத்திரர்களின் அருள் வீணானதேயாகும். ராவணன், இரணியன் முதலானார்க்கு அருள்புரிந்தான் பிரமன். அவ்வருள் அவர்களையும் அழிவிலே கொண்டு போய்விட்டது, வரங்கொடுத்த இவனையும், உலகையும் வருத்திற்று. ப4ஸ்மாஸுரன், பா3ணாஸுரன் முதலானார்க்கு வரங்கொடுத்தான் உருத்திரன். அவ்வருள் அவர்களுக்கும், வரங்கொடுத்த இவனுக்கும் ஆபத்து விளைத்தது, நல்லானான நாராயணனே அவ்வாபத்திலிருந்து பிரமருத்திரர்களை ரக்ஷிக்க வேண்டி வந்தது. இவனுடைய அருள் அப்படிப் பழுதுபட்டது என்பதற்குச் சரித்திரமே கிடையாது. (*நாமநீர் வையகத்துப் பல்லாரருளும் பழுது*) முதலாவாரான பிரமருத்திரர்களுடைய அருளே இத்தகையதாயிருக்க, உலகிலுள்ள மற்ற தே3வதைகளின் அருளைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? (*நாமநீர் வையகத்துப்பல்லார்*) பிரஸித்3த4மான நீர் சூழப்பெற்றதான உலகிலுள்ள மற்ற தே3வதைகள். "மூரி நீர் வண்ணன்" [வியாபித்திருக்கும் நீர் போன்ற தன்மையையுடையவன்] என்று அவனைச் சொல்லுகையாலே, "நாமநீர் வையகத்துப்பல்லார்" என்று நீர் சூழப்பெற்ற வையகமாக வைத்து இவர்களைப் பேசுகிறார். இப்படி இவர்களையும் வியாபித்திருப்பவனாகையாலே, இவர்களுடைய அரு

மாத்ரரான பல்லாரென்னுதல்; ப்ரஸித்$_3$த$_4$மான நீர் வையக மென்னுதல். (பல்லார்) கீழ்ச்சொன்ன ப்$_3$ரஹ்மருத்$_3$ராதி$_3$

---

அன்றிக்கே, 'நீர் சூழ்ந்த பூ$_4$மியில் நாமமாத்ரமான பல்லா ரருளும் பழுது' என்னவுமாம். தான் ப$_2$லியாதவளவன்

---

ளும் உண்மையில் அவனுடைய தூண்டுதலாலேயே உண்டா வது என்று உணர்த்துகிறார். (*பல்லார் அருளும் பழுது*) ரஜஸ் தமம் கலந்த அவர்களிடமிருந்து உண்டாகும் அருளாகை யாலே, அதனால் கிடைக்கும் ப$_2$லன், அண்டினவர்களை மேலும் மேலும் ஸம்ஸாரத்திலேயே கட்டிவைப்பதாகவும், அல்பமாகவும் (தாழ்ந்ததாகவும்), அஸ்தி$_2$ரமாகவும் (நிலையற்ற தாகவும்) இருக்கும். ஆகையால் அவர்களுடைய அருள் வீணனதே. நாராயணன் ஒருவனுடைய அருளே பயனுடை யது என்கிறார்.

" யோ யோ யாம் யாம் தநும் ப$_4$க்த: ஶ்ரத்$_3$த$_4$யார்ச்சிது
மிச்ச$_2$தி।
தஸ்ய தஸ்யாசலாம் ஶ்ரத்$_3$த$_4$ாம் தாமேவ வித$_3$த$_4$ாம்யஹம்॥
ஸ தயா ஶ்ரத்$_3$த$_4$யா யுக்தஸ் தஸ்யாராத$_4$நமீஹதே।
லப$_4$தே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந் ॥
அந்தவத்து ப$_2$லம் தேஷாம் தத்$_3$ப$_4$வத்யல்பமேத$_4$ஸாம்।
தே$_3$வாந் தே$_3$வயஜோ யாந்தி மத்$_3$ப$_4$க்தா யாந்தி மாமபி ॥"
[*கீ$_3$தை 7-21, 22, 23*]

[என்னுடைய ஶரீரமாயிருக்கும் எந்தெந்த தே$_2$வதைகளிடம் ப$_4$க்திசெய்யும் எவனெவன் சிரத்தையுடன் அவர்களை அர்ச்சிக்க விரும்புகிருனே, அவனவனுக்கு நான் அந்த சிரத்தையையே நழுவாதபடி செய்கிறேன்; அந்த சிரத்தையோடு கூடிய அவன் அந்தந்த தேவதையை ஆராதிக்கிறன். என்னலேயே கொடுக்கப்படும் (அல்பாஸ்தி$_2$ர) காமங்களை அந்த தே$_2$வதை யிடமிருந்து பெறுகிறன். *புல்லறிவாளர்களான அவர்கள் பெறும் பலன் நிலையற்றதாகிறது*. மற்ற தே$_2$வதைகளைத் துதிப்பவர்கள் (நிலையற்றவரும் தாழ்ந்தவருமான) அந்த தே$_2$வதைகளையே அடைகின்றனர். என்னிடம் ப$_4$க்தி செய்ப வர்கள் (நிலையானவனும், மிகச்சிறந்தவனுமான) என்னை



கள் அகப்பட. தனித்தனியும் திரளவும். (பழுது) வ்யர்த்த$_2$ம். 15.

16. பழுதே பலபகலும் போயினவென்று அஞ்சி
அழுதே னரவணைமேற் கண்டு—தொழுதேன்
கடலோதம் காலலைப்பக் கண்வளரும் செங்கண்
அடலோத வண்ண ரடி.

---

றிக்கே ப$_4$க$_3$வத்ப்ரஸாத$_3$த்தையும் விலக்குகையாலே 'பழுது' என்கிறார். 15.

---

அடைகின்றனர்.] என்று கீ$_3$தையில் கண்ணனும் இதை மிகத்தெளிவாக அருளிச்செய்தான். (*நீர் வையகத்து நாமம் பல்லாரருளும் பழுது*) என்று கூட்டி, நீர் சூழ்ந்த பூ$_4$மியிலே *வெறும் பெயர் மாத்திரமான* மற்ற தே$_3$வதைகளின் அருள் கள் வீணனவை என்றும் கொள்ளலாம். 'அருள்' என்று பெயரேயொழிய, உண்மையில் இவை அருளல்ல என்று கருத்து. தான் அநந்த ஸ்தி$_2$ரப$_2$லத்தைக் கொடுக்காததோடன்றி யில், அதைக் கொடுக்கவல்ல ப$_4$க$_3$வானுடைய அருளையும் தடைசெய்கையாலே 'பழுது' (*வீணனது*) என்கிறார். நிற்க. "*அரன் நாரணன்*" என்னும் பாட்டு சிவவிஷ்ணு ஸாம்யத்தைச் சொல்லுகிறது என்று மனந்துணிந்து சொல்லும் மேத$_4$ாவிகள் இப்பாசுரத்திற்கு என்ன பொருள்கொள்கிறார்கள் என்று தெரியவேண்டும். [கீ$_3$தையிலும் தே$_3$வதாஸாம்யம் சொல்லியிருக்கிறது என்னுமிவர்கள் மேலே எடுத்த கீ$_3$தா ஶ்லோகங்களுக்கும் பொருளுரைக்க வேண்டும்.]

"மூவருள்ளும் முதலாவான் மூரிநீர்வண்ணன்" என்கை யாலே, கடல் நீர் வையகத்தை வியாபித்திருப்பதுபோலே பிரமருத்திரர்களை வியாபித்திருப்பவன் என்றும், கடல்நீரே மேக$_4$மாகவும், நதிகளாகவும் உருவெடுப்பதுபோலே, தான் விஷ்ணு முதலான அவதாரங்களைச் செய்து உலகளிப்பவன் என்றும் உணர்த்தப்படுகிறது. 15.

**பதவுரை:— கடல் ஓதம்** — திருப்பாற்கடலில் அலைகளானவை, **கால் அலைப்ப**—(தன்) திருவடிகளிலே அடிக்க, **கண்வளரும்**—(அதனாலே) துயிலுமவனாய், **செம் கண்**— சிவந்த திருக்கண்களை உடையவனாய், **அடல் ஓத வண்ணர்**— நெருங்கிய அலைகள்போன்ற நிறத்தையுடையவனான எம் பெருமானுடைய, **அடி** — திருவடிகளை, **அரவு அணைமேல் கண்டு**— திருவநந்தாழ்வானாகிய படுக்கையின்மேல் கண்டு, **தொழுதேன்**—(இன்று) வணங்கினேன் ; **பல பகலும்**— (முன்சென்ற) அநாதி$_3$காலமும், **பழுதே போயின என்று**— வீணாகக் கழிந்தன என்று, **அஞ்சி அழுதேன்**—பயந்து அழுதேன்.

அவ:— **பதினாறும் பாட்டு.** (பழுதே) **நல்லானருள் பெற்ற எனக்கு ஶோகமுண்டாயிற்று என்கிறார்.**

---

**அவதாரிகை:—** இதரதே$_3$வதைகளைப் பற்றி இவ்விஷயத்தை இழந்த நாட்டார் இழவைப் பரத்வநிஷ்கர்ஷமுக$_2$த்தாலே பரிஹரித்தவர், அநாதி$_3$காலம் இதரதே$_3$வதைகளையும் இதரஸாத$_4$னங்களையும் பற்றி இவ்விஷயத்தை அகன்று திரிந்த தம்மிழவை நினைத்து ஶோகிக்கிறார்.

**உரை:—**ஸௌகுமார்யாநுரூபமாகக் கடலின் சிறுதிவலைகளானவை, துடைகுத்துவாரைப்போலே அநுகூலமாகத்

---

*அவதாரிகை:—* மற்ற தெய்வங்களைப் பற்றி ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தை இழந்த உலகினர் இழப்பை, சென்ற பாசுரத்தில் ப$_4$க$_3$வத்பரத்வநிர்ணயம் செய்து போக்கியவர், தாமும் அநாதி$_3$ காலமாக மற்ற தே$_3$வதைகளையும், மற்ற உபாயங்களையும் பற்றி ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தை விட்டு அகன்று திரிந்து தன் புற்றதை நினைத்து வருந்துகிறார்.

*வ்யா:— (கடலோதம் காலலைப்ப)* "புஷ்பஹாஸ:" [விஷ்ணுஸஹ] [மலரின் மெல்லியவன்] என்கிற திருநாமத்திற் சொல்லப்பட்ட திருமேனியின் மென்மைக்குத் தக்கவாறு கட



**வ்யா:—** (பழுதே பலபகலும் போயினவென்றஞ்சியழுதேன்) **போனகாலம் அநாதி$_3$; வருங்காலம் அநந்தம்; இத்தோடொத்த காலமிறே போயிற்று என்று அழுதேன்.**

---

திருவடிகளை ஸ்பர்ஶிக்க, அத்தாலே பள்ளிகொண்டருளுமவனாய், வாத்ஸல்யத்தாலும், ஐஶ்வர்யத்தாலும் குதறிச் சிவந்த திருக்கண்களை உடையனுமாய், அநுப$_4$விக்கப்புக்கவர்களை அபி$_4$ப$_4$வித்து எழ வீசுகிற ஸௌந்த$_3$ர்யதரங்க$_3$ங்களோடு கூடின வடிவையுடையனுமானவனுடைய திருவடிகளை, வெளுத்த நிறத்தையுடையனான திருவனந்தாழ்வா

---

லின் சிறுதிவலைகள், துடையைப் பிடித்துவிடுவாரைப்போலே திருவடிகளைப்பிடித்துவிடுகின்றன. *(கண்வளரும்)* அதனாலே மெய்மறந்து கண்வளர்ந்தருளுகிறான் ஸர்வேஶ்வரன். *(செங் கண்)* கண்வளர்ந்தருளும்போதும் சேதனரிடம் வாத்ஸல்யத்தால் ஜக$_3$த்$_3$ரக்ஷண சிந்தையிலே ஈடுபட்டிருக்கிறான் ஸர்வேஶ்வரன். உலகில் வாத்ஸல்யமும், ஐஶ்வர்யமும் மிக்கிருப்பவர்களுக்குக் கண்கள் சிவந்திருப்பதைக் காண்கிறோம். எல்லாச் சேதனருக்கும் ஈஶ்வரனாகவும், எல்லாரிடமும் வாத்ஸல்யமுடையவனாகவுமிருக்கும் இவனுக்கு யோக$_3$நித்திரை செய்யும் சமயத்திலும் கண்கள் செந்தாமரைபோலே குதறிச் சிவந்திருப்பதில் வியப்பில்லையன்றோ. *(அடலோத வண்ணர்)* தன்னை அநுப$_4$விக்கப்புகுந்தவர்களின் மீது மோதி அவர்களை முழுகவைத்து வெல்கின்றன இவனுடைய திருமேனியின் அழகலைகள். *அடல் ஓத வண்ணர்* – வெற்றி கொள்கின்ற அழகலைகளோடு கூடிய வடிவையுடையவர். *(கடலோதம் கண்வளரும் அடலோதவண்ணர்)* பாற்கடல்மேலே ஓர் கருங்கடல் பள்ளிகொண்டாற்போலேயிருக்கை. *(அடி)* கைக்குழந்தைக்குத் தாய் முலைபோலே ஶேஷபூ$_4$தர்க்கு தா$_4$ரகமான திருவடிகளை. *(அரவணைமேல் கண்டு)* பொன்தகட்டில் பதித்த மாணிக்கம்போலே, வெள்ளைநிறத்தையுடைய ஆதி$_3$ ஶேஷனாகிற படுக்கையின் மேலே இருப்பதை, அவன் மயர்வற அருளிய மதிநலத்தாலே கண்டு அநுப$_4$விக்கப்பெற்றேன். *(கண்டு தொழுதேன்)* கண்டால் தொழுதல்லது நிற்கவொண்

**இழவுக்கு அழுதாராகில் அச்சமாவதென் ? வருமத்தைக் குறித்தன்றோ அஞ்சிற்று என்னில்; அதி4காரி நாளுகில் போனகாலம்போலே ஆகிறதோ வருகிற காலமும் என்கிருர்.**

---

ஞகிற படுக்கையின்மேலே ஜ்ஞானஸாக்ஷாத்காரமுகே2ந கண்டுஅநுப4வித்துத் தத2நந்தரப4ாவியான தொழுகையிலும் அந்வயிக்கப்பெற்றேன். இப்படி அநுப4வத்தோடே அடிக் கழஞ்சுபெற்றுச் செல்லுகைக்குறுப்பான கீழ்க்கழிந்த கால மெல்லாம் ஒன்ருெழியாதபடி வ்யர்த்த2மே போய்விட்டதே! என்று கண்ணநீர் வெள்ளமிடவிருந்து ஶோகித்தேன்.

---

ணுதே ! *“யதா2ர்ஹம் கேஶவே வ்ருத்திம் அவஶா: ப்ரதி பேதி3ரே”* [பா4ர ஸபா4 75] [தங்களையும் மீறிக் கேசவனிடத்தில் உசிதமான மரியாதைகளைச் செய்தனர்.] என்று துரியோதனன் முதலான எதிரிகளையும் கண்டவுடன் ஈடுபடுத்தும் வடிவழகு என்னை ஈடுபடுத்தச் சொல்லவேணுமோ ?

*(பலபகலும் பழுதே போயினவென்று அழுதேன்)* பலநாட்கள் வீணுகவே போய்விட்டனவே என்று கண்ணீர்விட்டு அழுதேன். (பலபகலும்) ஒருநாளா ? இரண்டுநாளா ? அநாதி, யான காலமெல்லாம் போயிற்றே என்று அழுதேன். (பழுதே) ஒரு பகுதி பழுதாகவும், ஒருபகுதி பயனுள்ளதாகவுமாகவோ கழிந்தது ? எல்லாக்காலமும் வீணுகத் தொலைந்தன்ரோ போயிற்று! *(போயின)* அணைக்குக் கிழக்குப்பட்ட நீரை மீட்க முடியாததுபோலே, போனநாள் போனதுதானே ! மீட்க வொண்ணுதே ! *(அஞ்சி அழுதேன்)* போனநாளைக்கு அழுதது ஙியாயமே; ப4யப்படுவது எதற்காக? எனில்: இத்தனை நாளையும் இழக்கவிட்டவன் நான்; என் கர்மமும் குறியழியாமல் கிடக்கிறது; வருகின்ற காலத்தையும் இழக்கவிட்டுவிடுவேனே ? என்று வருங்காலத்தைக் குறித்து அஞ்சுகிருர்.

“காலேஷ்வபி ச ஸர்வேஷு திக்ஷு ஸர்வாஸு சாச்யுத ।
ஶரீரே ச க3தௌ சாபி வர்த்ததே மே மஹத்3ப4யம் ॥”
*[ஜிதந்தே 1-9]*



**31.** “यश्च रामं न पश्येत्तु यं च रामो न पश्यति। निन्दितस्स वसेल्लोके स्वात्माप्येनं विगर्हते॥” (யஶ்ச ராமம் ந பஶ்யேத்து யம் ச ராமோ ந பஶ்யதி । நிந்தி3தஸ்ஸ வஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விக3ர்ஹதே ॥) என்று **சொல்லுகிறது பெருமாளுடைய ஒருநாளை இழவுக்கிறே.** (கடலோதம் காலலைப்ப) **திருவடிகளை, கடலோதமானது துடைகுத்து மாபோலே அலைப்ப.** (கண்வளருமித்யாதி3) (அரவணைமேல் கண்டு தொழுதேன்) **தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே.**

**அவ:—பண்டு உபாயாந்தரங்களிலும் தே3வதாந்தரங்களிலும் ப்ரவணனுயிழந்தேன் என்று சொல்லுகிருர்.**

---

கீழ் இழவுக்கடியான நம்முடைய கர்மம் இப்போதும் குறியழியாதே கிடக்கையாலே, மேலுள்ள காலத்திலும்

---

[அடியவர்களை நழுவவிடாதவனே! (மோக்ஷோபாயங்களான) எல்லாப் புண்யகாலங்களிலும், எல்லா திசைகளிலுமுள்ள புண்யக்ஷேத்ரங்களிலும், (த4ர்மஸாத4னமான) சரீரத்திலும், சரீராந்தரக3தியிலும் அடியேனுக்கு மிகுந்த ப4யமிருக்கிறது.] என்கிறபடியே காலத்தைக் குறித்தும் அஞ்சுவதுண்டன்ரோ. (அழுதேன்) அயோத்தியில் வசிக்கும் ஜனங்கள்

“யஶ்ச ராமம் ந பஶ்யேத்து யஞ்ச ராமோ ந பஶ்யதி ।
நிந்தி3தஸ் ஸ வஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம்
விக3ர்ஹதே ॥” [ரா அ 17-14]

[எவனொருவன் ராமனைப் பார்க்கவில்லையோ, எவனை ராமனும் கடாக்ஷிக்கவில்லையோ, அவன் உலகத்தில் நிந்திக்கப்பட்டவனாய் வாழ்வான். தன்னுடைய மனமும் இவனை நிந்திக்கும்.] என்கிறபடியே, பெருமாளுடைய ஒருநாளைப் பிரிவுக்கு இப்பாடுபட்டால், காலமெல்லாம் இழந்ததற்குக் கண்ணீர்விடச் சொல்லவேண்டுமோ ?

“யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதே3வோ ந
சிந்த்யதே ।
ஸா ஹாநிஸ்தந் மஹச்சி2த்3ரம் ஸா ப்4ராந்தி: ஸா ச
விக்ரியா ॥”

வ்யா:— (பழுதே) பழுதும் பழுதல்லாததும் கூடப் பெற்றேனே? (பலபகல்) இழந்த அநாதி$_3$காலம் பலவாய் அதுக்கு அநந்தரம் அநந்தகாலமானபடி. (போயின) போன நீர்களைக் கோலவோ? வரும் காலமும் பழைய காலமும் ஒன்று; பழைய நானே இன்னம் அப்படியாகில் செய்வதென்? என்கிறார். 32. "कालेऽपि च" (காலேஷ்வபி ச) (அரவணை மேல்கண்டு) பர்யங்கவித்$_3$யையிற்படியே பூர்ணமாகக் கண்டேன். (கண்டுதொழுதேன்) கண்டால் செய்யும் தொழில். (காலைப்ப) சிறு திவலை துடைகுத்த. (செங்கண்) வாத்ஸல்யம் தோற்றுகை. (அடலோதம்) நெருங்கின ஓதம். 16.

17. அடியும் படிகடப்பத் தோள்திசைமேற் செல்ல
முடியும் விசும்பளந்த தென்பர்—வடியுகிரா
லீர்ந்தான் இரணியன தாகம் இருஞ்சிறைப்புள்
ஊர்ந்தான் உலகளந்த நான்று.

பதவுரை:— **வடி உகிரால்**—கூர்மையான நகத்தால், **இரணியனது ஆகம்**—இரணியனுடைய மார்பை, **ஈர்ந்தான்**—பிளந்தவனாய். **இரு சிறை புள்**—பெரிய இறகுகளையுடைய பக்ஷியாகிய கருடனை, **ஊர்ந்தான்**—நடத்துபவனான எமபெருமான், **உலகளந்த நான்று**—திருவுலகளந்தருளின போது, **அடியும்**—திருவடியும், **படி கடப்ப**—பூ$_4$மியை அளந்து கொள்ள, **தோள்**—திருத்தோள்கள், **திசைமேல் செல்ல**—திக்குகளுக்கு மேலே செல்ல, **முடியும்**—கிரீடமும், **விசும்பு**—ஆகாசத்தை, **அளந்தது**—வியாபித்தது, **என்பர்**—என்று (ஞானிகள்) சொல்லுவார்கள்.

---

இவ்வநுப$_4$வத்துக்குக் குறைத்தல் வரில் செய்வதென்? என்று பயப்பட்டு அழுதேன். 16.

---

[ஒரு முஹூர்த்தமாவது, க்ஷணமாவது வாஸுதே$_3$வன் நினைக்கப் படாமலிருந்தானாகில் அதுவே பேரிழவு; அதுவே பெருந் துக்கம்; அதுவே பெருமயக்கம்; அதுவே மாவிகாரம்] என்று ரிஷிகள் இப்பாடுபடும்போது ஆழ்வார்கள் அழுவதற்குக் கேட்கவேணுமோ? 16.



அவ:— பதினேழாம் பாட்டு. "ஸம்ஸாரத்தில் நினைத்த படியெல்லாம் அநுப$_4$விக்கப்போமோ? பரமபத$_3$த்திலே போனாலன்றோ அநுப$_4$விக்கலாவது" என்ன; "இங்கே வெள்ள மிட்டவன்றுதான் பெற்றேனோ!" என்கிறார்.

---

அவதாரிகை:— திருப்பாற்கடலிலே சென்று கிட்ட வேண்டும்படி தூ$_1$ரமாய் நானிழந்தேனோ? அவன்தானே எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்து தூ$_4$ளித$_3$ாநம் பண்ணுநிற்கச்செய்தேகிடீர் நான் இழந்தேன் என்கிறார்.

உரை:— கூர்மையான திருநகத்தாலே ஹிரண்யாஸுர னுடைய—தே$_3$வர்கள் வரப$_3$லத்தாலே மிடியற வளர்ந்த முரட்டுடலை அநாயாஸேந கிழித்துப்பொகட்டவனாய், பெரிய சிறகையுடையவனான பெரியதிருவடியை மேற் கொண்டு ஸ்வைரமாக நடத்தியருளினவன் ஆஶ்ரிதனான

---

*அவதாரிகை:*— அடலோத வண்ணரடியைத் தொழாமல் பழுதே பல பகலும் போயினவென்று அழுதேன் என்றார் கீழ்ப்பாட்டில். "அத்திருப்பாற்கடலாவது வெகுதூரத்திலிருப்பதால் இழந்தாலுமிழக்கலாம்; அவனே எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்து அடிப்பொடித்தானம் செய்தபோது மன்றோ நான் இழந்துவிட்டேன் பாவியேன்" என்கிறார் இப்பாசுரத்தில்.

*வ்யா:— (வடியுகிரால் இரணியனதாகம் ஈர்ந்தான்)* கூர்மையான திருநகத்தாலே இரணியனுடைய மார்பைக் கிழித்தான். *(வடியுகிரால் ஈர்ந்தான்)* ஓர் ஆயுத$_4$ம் தேவையாயிருந்ததில்லை. நகத்தைக்கொண்டு நாரைக் கிழிப்பதுபோலே கிழித்தான். எதைக் கிழித்தான்? எனில்: *(இரணியனது ஆகம்)* தேவர்களிடமிருந்து பெற்ற வரப$_3$லத்தாலே குறை வில்லாமல் கொழுத்து வளர்ந்திருக்கும் இரணியனுடைய முரட்டு மார்பை. *(ஈர்ந்தான்)* விளையாட்டாகக் கிழித்தவன். *(இருஞ்சிறைப் புள் ஊர்ந்தான்)* க$_3$ஜேந்திராழ்வானைப் போன்ற அடியாரை ரக்ஷிப்பதற்காகப் பலகால் பெரிய சிறகையுடையவனான க$_3$ருட$_3$னின் மேல் ஏறி வந்தவன். *(உலகளந்த நான்று)*

வ்யா:— (அடியும் படி கடப்ப) ''கோலமாமென் சென்னிக்கு'' என்னும் திருவடிகளைக்கொண்டு காடுமோடையும் அளப்ப. (தோள் திசைமேல் செலல) திருத்தோள்கள் தி$_3$க்குகளிலே செல்ல. (முடியுமித்யாதி$_3$) திருவபி$_4$ஷேகமும் அண்ட$_3$பி$_4$த்தியளவும் நிமிர்ந்தது. (வடியித்யாதி$_3$) கூரிய உகிராலே ஹிரண்யனுடைய மார்வைப் பிளந்தான். (இரும் சிறையித்யாதி$_3$) பெரியதிருவடி முதுகிலிருக்கப் பொருத ம்ருது$_3$வான திருவடிகளைக்கொண்டு உலகளந்த அன்று – அடியும் படி கடப்பத் தோள் திசைமேற்செல்ல முடியும் விசும்பளந்தது என்கிறார். நான் கேட்டார்வாய் கேட்டுப்போமத்தனை என்கிறார்.

---

இந்த்$_3$ரன் கார்யம் செய்கைக்காகத் திருவுலகளந்தருளின காலத்திலே ''கோலமாம் என்சென்னிக்கு'' என்கிறபடியே, என் தலைக்கு அலங்காரமாக நான் ஆசைப்பட்டிருக்கும் திருவடிகள், காடும் ஓடையுமான பூ$_4$மியை அளந்து கொள்ள, பிராட்டியைப் பரிஷ்வங்கி$_3$க்கக்கடவ திருத்தோள்களானவை இடமடையும்படி தி$_3$க்குகளின்மேலே வளர்ந்துசெல்ல, திருவபி$_4$ஷேகமும், அபரிச்சே$_2$த்$_3$யமான ஆகாஶத்தை முசிவற நிமிர்ந்து அளவுபடுத்திக்கொண்டது என்று தத்வவித்துக்களான ருஷிகள் சொல்லாநிற்பர்கள்.

---

இந்திரன் காரியம் செய்வதற்காகத் திருவுலகளந்தருளின போது. *(அடியும் படிகடப்ப)* ''கோலமாம் என் சென்னிக்கு உன் கமலமன்ன குரை கழலே'' [திருவாய் 4-3-6] என்கிற படியே என் தலைக்கு அலங்காரமாக நான் ஆசைப்படும் திருவடிகள் காடும் ஓடையுமான பூ$_4$மியையெல்லாமன்றோ அளந்து கொண்டது! *(தோள் திசைமேல் செல்ல)* பெரிய பிராட்டியாரை அணைக்கும் தோள் தி$_3$க்குகளின்மேலே வளர்ந்து செல்ல. *(முடியும் விசும்பளந்தது என்பர்)* திருமுடியும் அளவிட முடியாத ஆகாசமனைத்தையும் வருத்தமில்லாமல் நிமிர்ந்து அளந்து கொண்டது என்று உண்மையறிந்த ரிஷிகள் உரைப்பார்கள். தானே வந்து அனைவர் தலையிலே



அவ:— 'பழுதென்?' என்னில், 'இன்று கதை கேட்கவிருந்தேன்' என்பாரிறே.

வ்யா:—(அடியும் படி கடப்ப) சென்று காணவேண்டும் திருவடிகள் தானே வந்து பூ$_4$மியை அகப்படுத்திக்கொண்டது. தோள் திக்குகளை எல்லை கண்டது. முடியும் அபரிச்சே$_2$த்$_3$யமான ஆகாஶத்தை அளவுபடுத்திற்று. நின்றார் நின்றபடியே வெற்றிகொள்ளுமாபோலே. (வடியித்யாதி$_3$) ஓரிடத்திலே விரோதி$_4$நிரஸநம் பண்ணி ஓரிடத்திலே சென்று முகம் காட்டுமளவன்றிறே ஜக$_3$த்துக்கெல்லாம் ஏககாலத்திலே உதவின இது. 17.

18\. நான்ற முலைத்தலை நஞ்சுண்(டு) உறிவெண்ணெய்
தோன்றவுண் டான்வென்றி சூழ்களிற்றை—யூன்றிப்
பொருதுடைவு கண்டானும் புள்ளின்வாய் கீண்டானும்
மருதிடைபோய் மண்ணளந்த மால்.

பதவுரை:— **நான்ற முலை தலை**—தொங்குகிற ஸ்தனத்திலிருக்கிற, **நஞ்சு உண்டு**—விஷத்தை அருந்தி, **உறி**—உறியில் வைத்த, **வெண்ணெய்**—வெண்ணெயை, **தோன்ற**

---

'தானேவந்து தலையிலேயிருந்தவன்று இழந்து இன்று கேட்டார் வாய் கேட்பதே நான்' என்று வெறுக்கிறார். 17.

---

யும் இருந்தவன்று இழந்த பாவியேன் என்று பெறப்போகிறேன்? *(என்பர்)* அன்று அனுப$_4$விக்கப்பெறுமல் இன்று கதை கேட்கவன்றோ இருந்தேன் என்று தன்னைத்தானே வெறுத்துக் கொள்ளுகிறார். *(இரணியனதாகம் ஈர்ந்தான் புள் ஊர்ந்தான் உலகளந்த நான்று)* ஓரிடத்திலே ஓரடியானுக்கு விரோதி$_4$யை யழித்து உதவின நரசிம்மாவதாரத்தின்போது இழந்ததில் வியப்பில்லை; கஜேந்திரனுக்குப் புள்ளூர்ந்து காட்சியளித்தபோது இழந்ததிலும் வியப்பில்லை. எல்லார் தலையிலும் திருவடியை வைத்த திரிவிக்கிரமாவதாரத்தின்போதுமன்றோ இழந்துவிட்டேன் என்கிறார். 17.

**உண்டான்**—(திருடி) எல்லாரும் அறியும்படியாக அமுது செய்தவனும், **வென்றி சூழ் களிற்றை**-வெற்றியையும் சூழ்ச்சியையுமுடைய யானையாகிற குவலயாபீட$_3$த்தை, **ஊன்றி பொருது**—த$_4$ரித்து நின்று சண்டைசெய்து, **உடைவு கண்டானும்**—அழித்தவனும், **புள்ளின் வாய்**—கொக்காய் வந்த ப$_3$காஸுரனுடைய வாயை, **கீண்டானும்** — கிழித்தவனும, **மருது இடை போய்**—இரட்டை மருதமரங்களின் நடுவே தவழ்ந்துபோய், **மண்ணளந்த** — உலகங்களை அளந்து கொண்ட, **மால்**—ஸர்வாதி$_4$கனன எம்பெருமானேயாவான்.

**அவ:— பதினெட்டாம் பாட்டு. திருவுலகளந்ததிலேயோ இழந்தது, அத்தோடொக்க வரையாதே தீண்டிப் பரிமாறின க்ருஷ்ணவதாரத்திலும் இழந்திலேனோ? என்கிறார்.**

**வ்யா:— (**நான்ற இத்யாதி$_3$**) இவன் தன்னுடைய வாயை முலையிலே வைக்க ஸ்வரூபாபத்தியைப் பெற்றாள் அவள்.**

---

**அவதாரிகை:**— கடலிற்கிடையிலும் அங்குநின்றும் வந்து ஞாலத்தூடே நடந்தவிடத்திலும் இழந்தவளவோ? இடக்கை வலக்கையறியாதாரும் வாழும்படி இடைக்குலத்திலே வந்து பிறந்தவிடத்திலும் இழந்தேனிறே! என்று ஶோகிக்கிறார்.

**உரை:**—பேய் வடிவை மறைத்துத் தாய்வடிவுகொண்டு வந்த பூதனையுடைய பாலின் க$_4$நத்தாலே சரிந்து நாலுகிற

---

*அவதாரிகை:*— கடலிற் கிடந்தபோதும், அங்கிருந்து வந்து ஞாலத்தூடே நடந்தபோதும் இழந்தது மாத்திரமோ? இடக்கை வலக்கை அறியாத இடையரும் வாழும்படி இடைக்குலத்திலே ஸர்வஸுலப$_4$னாக வந்து பிறந்தபோதும் இழந்தேனன்றோ! என்று வருந்துகிறார்.

*வ்யா:*— *(நான்ற முலைத்தலை நஞ்சுண்டு)* பேய் வடிவை மறைத்துத் தாய்வடிவைக் கொண்ட பூதனையின் தொங்கும்



**ஆரேனுமாக இவனை ஸ்பர்ஶித்தார்க்கு ஸ்வரூபாபத்தி தப்பாது; எல்லாருக்கும் வந்தேறி போம். 33. "स्वेन रूपेणाऽभि-निष्पद्यते" (ஸ்வேந ரூபேணாऽபி$_4$நிஷ்பத்$_3$யதே) என்கிறபடியே.** (உறிவெண்ணெய் தோன்றவுண்டான்) **உறியிலே சேமித்து வைத்த வெண்ணெயைக்கண்டு எட்டி உண்டு. களவு தோற்றும்படி உண்டான்.** (வென்றி சூழ்களிற்றை) **வென்றி மிக்க களிற்றை. வெற்றியை உடைத்தாய், இவனைச்சூழ்க்க நினைத்த களிற்றை என்றுமாம்.** (ஊன்றி) **"ஆனைப்பூசல்" என்றிராதே கிட்டி. "மருப்பொசித்த பாகன்" என்னும்படியே.**

---

முலையிலுண்டான நஞ்சை அவள் பிணமாய் விழும்படி அமுதுசெய்து, உறிகளிலே சேமித்துவைத்த வெண்ணெயை ஶிஶுபாலாதி$_3$கள் கோ$_3$ஷ்டி$_2$யிலும ப்ரஸித்$_3$த$_4$மாபடி அமுதுசெய்தருளினவனாய், வெற்றியையுடைத்தாய், எதிர்த்தவர்களைத் தப்பாமல் சூழ்த்துக்கொள்ள வல்ல குவலயாபீட$_3$த்தை க$_3$ஜயுத்$_3$த$_4$த்துககு தே$_3$ஶிகரான

---

முலையிலுள்ள விஷத்தை அவளுடைய உயிரோடு உண்டு. *(நான்ற முலை)* பாலின் மிகுதியாலே சரிந்து தொங்குகிறபடி. வஞ்சகப்பாலைக் கண்ணன் உறிஞ்சியவுடன் பண்டை வடிவு பெற்ற பேய்ச்சிமுலை பைபோலே தொங்கியபடியைச் சொல்லுவதாகவுமாம். *(உறி வெண்ணெய் தோன்ற உண்டான்)* உயரமான உறிகளிலே ஆய்ச்சியர் நன்கு ரக்ஷித்துவைத்த வெண்ணெயை—உபாயங்களாலே எட்டிப்பிடித்து உண்டான்; அன்றிக்கே, பார்ப்பவர்களுக்கெல்லாம் இவனே கள்வன் என்று தோற்றும்படியாக உண்டான் என்றுமாம். களவு செய்து உண்டதுதான் உண்டான், களவு வெளிப்படாதபடி ஒளித்துண்ணத் தெரியவில்லையே! சிசுபாலன் முதலானோரும் ஏசும்படி அனைவர்க்கும் தெரியும்படியன்றோ வெண்ணெய் களவு செய்துண்டது! இதென்ன சிறு பிள்ளைத்தனம்! *(தோன்ற உண்டான்)* எதிரிகளுக்கும் தோன்ற உண்டபோதும் தோற்றவில்லையே பாவியேனுக்கு! *(வென்றி சூழ்களிற்றை)* வெற்றியை உடையதாய், எதிர்த்தவர்களைத் தவருதபடி சூழ்ந்துகொள்ளவல்ல குவலயாபீட$_3$ யானையை. தன்னைச் சூழ்ந்துகொள்ள நினைத்த யானையை என்றுமாம். வெற்றிமேல் வெற்றியாகப் பெற்றதாய், தோல்வியறியாத

(பொருதுடைவு கண்டானும்) பசலைக்கலம்போலே உடையும்படி கண்டவன். "இடைவுகண்டான்" என்றுமாம். (புள்ளின் இத்யாதி$_3$) "மண்ணளந்த மால்" என்று—திருவுலகளந்தருளின நீர்மை பின்னாட்டுகிறது. க்ருஷ்ணாவதாரத்துக்கும் திருவுலகளந்தருளினவிடத்துக்கும் அழகும் மௌக்$_3$த்$_4$யமும் ஆஶ்ரிதபக்ஷபாதமுமுள்ளிட்டவை இரண்டிடத்துக்கும் ஒத்திருக்கும்.

---

வர்களைப்போலே உறைக்க நின்று பொருது தலையெடுக்க மாட்டாமல் உருவழிந்து உளுக்காம்படி பண்ணினவனும், தன்னை விழுங்க வந்த ப$_3$காஸுரன் வாயைக் கிழித்துப் பொகட்டவனும் யமளார்ஜுனங்களின் நடுவே அவை வேர்பறிந்து விழும்படி தவழ்ந்துபோய் பூ$_4$மி முதலான லோகங்களை அளந்துகொண்ட ஸர்வாதி$_4$கன் கிடீர்!

---

யானையை என்றுமாம். வெற்றியையும், சூழ்ச்சியையும் உடைய யானையை என்னவுமாம். (*ஊன்றிப் பொருது உடைவு கண்டானும்*) யானைப்போரில் வல்ல யானைப்பாகர்களைப் போலே உடையச்செய்தவனும். "மருப்பொசித்த *பாகன்*" [திருச்சந்த 52] என்றாரன்றோ மழிசைப்பிரானும். (*உடைவு கண்டானும்*) மறுபடி தலையெடுக்க முடியாதபடி உருவழிந்து, உளுத்துப்போன மூங்கில்போலே உடைந்து போகும்படி செய்தவனும். "இடைவுகண்டான்" என்று பாட$_2$மாய், சிதைந்து உளுத்துப்போம்படி பண்ணினான் என்றுமாம். ஆயுத$_4$த்தை உருவினவுடன் உறை சுருங்கிப்போவதுபோலே, கொம்பைப் பிடுங்கியவுடன் இவ்வானை சுருங்கிப்போகும்படி பண்ணினான் என்றுமாம். (*புள்ளின் வாய் கீண்டானும்*) தன்னை விழுங்கவந்த ப$_3$காஸுரன் [கொக்குருவோடு வந்தவன்] வாயைக் கிழித்துப் போட்டவனும். (*மருதிடைபோய்*) இரட்டை மருத மரங்களினிடையே, அவை வேர் பறிந்து விழும்படித் தவழ்ந்துபோய். (*மண்ணளந்தமால்*) திரிவிக்கிரமாவதாரத்தில் பூ$_4$மி முதலான உலகங்களை அளந்துகொண்ட ஸர்வேஶ்வரனன்றோ. (*மண்ணளந்தமால்*) "உலகளந்த நான்று" என்று சென்ற பாசுரத்தில் சொன்ன நீர்மை பின்னாட்டுகிறபடி.



(நான்ற இத்யாதி$_3$) தன் க்ருத்ரிமமான பால் போனவாறே அந்த முலை பையானபடி. (தோன்றவுண்டான்) சிசுபாலாதி$_3$களும் ஏசும்படி (வென்றியித்யாதி$_3$) வெற்றியையும் சூழ்ச்சியையும் உடைய. (ஊன்றி) த$_4$ரித்து நின்று. (உடைவு) கருவிப்பைபோலே ஆக்கினபடி. (மண்ணளந்த மால்) பின்னாட்டினபடி. 18.

19. மாலும் கருங்கடலே என்னோற்றாய் வையகமுண்
டாலி னிலைத்துயின்ற வாழியான்—கோலக்
கருமேனிச் செங்கண்மால் கண்படையுள் என்றும்
திருமேனி நீதீண்டப் பெற்று.

பதவுரை:— **வையகம் உண்டு**—உலகத்தை உண்டு. **ஆலினிலை**—ஆலமரத்தின் இலையில், **துயின்ற**—கண்வளர்ந்தருளியவனும், **ஆழியான்**—ஸமுத்$_3$ரசாயியாயிருப்பவனும், **கோல கருமேனி**—அழகிய கறுத்த மேனியையும், **செங்கண்**—சிவந்த திருக்கண்களையுமுடையவனும், **மால்**—

---

வரையாதே தீண்டுகையும், அழகும், ஆனைத்தொழிலும் முதலான ஸ்வப$_4$ாவஸாத$_4$ர்ம்யத்தாலே க்ருஷ்ணனோடே த்ரிவிக்ரமனைச் சேர்க்கிறார். இவள் முலையைப் பற்றி அமுதுசெய்தவாறே பழைய பேய் வடிவோடே நான்ற முலையும் தானுமாய் விழுந்தாள் என்னவுமாம். 'பொருதிடைவு கண்டானும்' என்று பாட$_2$மாய், இடைந்து உளுக்காம்படி கண்டவன் என்றுமாம். 18.

---

கண்ணனைச் சொல்லிக்கொண்டே வந்தவர் "மண்ணளந்த மால்" என்று திரிவிக்கிரமனைச் சேர்ப்பானேன்? எனில்: உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்னும் பாகுபாடு பாராமல் அனைவரையும் அணைப்பது, அழகு, அதிமாநுஷ்செயல்களைச் செய்வது, சிறுபிள்ளைத்தனம், அடியார் பக்கல் வாத்ஸல்யத்தாலே தன்னை அழிய மாறுவது முதலான கு$_3$ணங்கள் திரிவிக்கிரமனுக்கும், கண்ணனுக்கும் ஒத்திருக்கையாலே இருவரையும் சேர்த்துப்பாடுகிறார். 18.

(அடியார்களிடம்) அன்புடையவனுமான எம்பெருமான், **கண்படையுள்** — பள்ளிகொள்ளும்போது, **என்றும்** — எக் காலத்திலும், **திருமேனி** — (அவனுடைய) தி$_3$வ்யமங்க$_3$ள விக்$_3$ரஹத்தை, **தீண்டப்பெற்று**-ஸ்பர்ஶிக்கப்பெற்று, **மாலும்**-(அந்த ஆனந்த$_3$த்தாலே) மயங்குகிற, **கருங்கடலே**—கறுத்த ஸமுத்$_3$ரமே! **நீ என் நோற்ருய்**—நீ என்ன நோன்பை அனுஷ்டி$_2$த்தாய்?

அவ:— **பத்தொன்பதாம் பாட்டு.** (மாலும்) **அவதார மொழியப் பெற்ருரும் உண்டு கிடீர்! என்கிருர்.**

**வ்யா:**— (மாலும்) **மது$_4$பாநமத்தரைப்போலே பிச்சேரு நின்ற.** (கருங்கடலே) **பெற்ற பேறு உன்னுடம்பே கோட்**

---

**அவதாரிகை:**— காத$_3$ாசித்கமான அநுப$_4$வமும் கிடையாமையால், நான் கண்ணநீர் விழவிடாநிற்க, அவனே மடியிலே சாயவிட்டு முழுநோக்குச்செய்து நித்யாநுப$_4$வம் பண்ணி வாழுகிற நீ என்ன ப$_4$ாக்$_3$யம் பண்ணிஞய்? என்கிருர்.

**உரை:**—ஜக$_3$த்தையடைய ப்ரளயத்தில் அழியாதபடி திருவயிற்றிலே எடுத்துவைத்து, ஓராலந்தளிரிலே கண் வளர்ந்தருளினவஞய், ப்ரளயம் வரில் இரு துண்டமாக

---

*அவதாரிகை:*— "நான் எக்காலத்திலும் தீண்டப் படாமல் கண்ணீர் விடுகின்றேன். இப்பூமி மண்ணளந்த ஒரு சமயத்திலே தீண்டப்பெற்றது. அவனே மடியிலே சாயவிட்டுக் கொண்டு எப்போதும் கண்டு தீண்டி நிற்கும் நீ என்ன தவம் செய்தாயோ?" என்று கடலை நோக்கிக் கூறுகிருர்.

*வ்யா:*— *(வையகமுண்டு)* பிரளயஜலத்தில் அழியாதபடி உலகனைத்தையும் சிறிய திருவயிற்றிலே எடுத்துவைத்து. *(ஆலினிலைத்துயின்ற)* அப்போதே தளிர்விட்ட ஓராலிலையில் கண்வளர்ந்தருளியவன். உலகெல்லாம் இவன் திருவயிற்றில்; இவன் ஓராலந்தளிரில். இதென்ன அக$_4$டிதக$_4$டநாஸாமர்த்$_2$யம்! *(ஆழியான்)* ப்ரளயம் தன்னையும் முழுகடிக்கவந்தால் அதை



**சொல்லுகிறதில்லையோ? இல்லையாகில் உடம்பு வெளுத்தி ராதோ?** (என் நோற்ருய்) **ஆசையை விட்டு நானும் நோற்கும்படி சொல்லாய்.** (வையகமித்யாதி$_2$) **சிறு வயிற்றிலே பூ$_4$மி எல்லாவற்றையும் அடக்கி, பவஞன ஆலிலையிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரனுடைய திருமேனியைத் தீண்டப்பெற்று.**

அவ:— (மாலுங்கருங்கடலே) **நான் தீண்டப்பெருதே மயங்காநின்றேன்; நீ தீண்டப்பெற்றுப் பரவஶமாகாநின்ருய். பூ$_4$மியைப்போலே ஒருகாலன்றியே நித்யஸம்ஶ்லேஷம் பெறுவதே கடல்! என்று கொண்டாடுகிருர்.**

---

விடுகைக்குப் பரிகரமான திருவாழியை உடையனுமாய், அழகிய கறுத்த நிறத்தையுடைய திருமேனியையும் அதுக்குப் பகைத்தொடையாம்படி வாத்ஸல்யத்தாலே குதறிச் சிவந்த திருக்கண்களையும் உடையஞய், ஆஶ்ரித வ்யாமுக்$_3$த$_4$ஞனவன் கண்வளர்ந்தருளுகிறவிடத்தில், ஸர்வ

---

ஆழியால் இரண்டு துண்டாக்குவேன் என்பவன்போலே திருவாழியிலே கைவைத்துத் துயின்ருன். *(கோலக் கருமேனி)* அழகிய கறுத்த திருமேனியையுடையவன். *(செங்கண்)* அத் திருமேனிக்கு வர்ணச்சேர்த்தியழகைக் கொடுக்கும் சிவந்த கண்ணையுடையவன். வாத்ஸல்யத்தாலும் ஐஶ்வர்யத்தாலும் குதறிச்சிவந்திருக்கை. *(மால்)* அடியாரிடம் மயக்கங்கொண்டவன். ஸர்வேஶ்வரன் என்று பெருமையைச் சொல்லுகிறதாகவுமாம். *(கண்படையுள்)* "கிடந்ததோர் கிடக்கை" [திருமாலை 23] என்கிறபடியே அழகு முழுவதும் காணலாமான பள்ளிகொள்ளுமிடத்திலன்ரே கண்டு அநுப$_4$வித்தது. "பள்ளிகொள்ளுமிடத்து அடி கொட்டிட" [நாச் திரு-4] என்று நாய்ச்சியார் ஆசைப்பட்ட பேற்றையன்ரே பெற்றிருப்பது! *(என்றும்)* அன்புடையார் ஒருநாள் ஒருபோது பெற ஆசைப்படும் பேற்றையன்ரே எப்போதும் பெற்றிருப்பது. *(திருமேனி)* பெரியபிராட்டியார் ஆசைப்படும் மேனியையன்ரே பெற்றது. *(தீண்டப்பெற்று)* பார்ப்பது மட்டுமல்லாமல்

**வ்யா:—** (மாலும்) **மது4பாநமத்தரைப்போலே பிச்சேறு கிற கடலே!** (கருங்கடலே) **உடம்பு வெளுக்கவேண்டாவே.** (ஆழியான்) **ஏகார்ணவத்திலும், திருப்பாற்கடலிலும் துயின்ற தாதல். * ஆசிலே கையை வைத்து ப்ரளயத்தை இரு துண்டமாக விடுவேன் என்றிருக்கும் என்றுமாம். பிராட்டி மாரோடு || ஊடினபோதும் உனக்குப் பிரிவில்லை. கடலும் எம்பெருமானும், ஸ்ரீப4ரதாழ்வானும் பெருமாளும்போலே நிறம். / ப்3ரஹ்மப்ராப்தி ப2லமாய், கைங்கர்யம் ஆநுஷங்கி3கம் ஆனாற்போலே, திருமேனி தீண்டுகை ப்ராப்யம்; கைங் கர்யம் // அவகா4தத்தில் ஸ்வேத3ம்போலே; உபாயத்திலும் ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தால் வ்யவஸாயம் ஆநுஷங்கி3கம். 19.**

---

சாலத்திலும் அவன் திருமேனியை நீ அநுப4விக்கப்பெற்று, அந்த ஸ்பர்ஶஸுக2த்தாலே மயங்காநிற்பதாய், அவன் வடிவின் நிழலீட்டாலே கறுத்த நிறத்தையுடைய கடலே! இப்பேறு பெறுகைக்கு என்ன ஸாத4நாநுஷ்டா2நம் பண்ணினாய்? அத்தைச் சொல்லமாட்டாயோ நானும் அநுஷ்டி2த்துப் பார்க்கைக்கு? என்று கருத்து.

'மால்' என்று பெருமையைச் சொல்லுகிற தென்னவுமாம். 19.

---

தீண்டவும் பெற்றாய். கண்ணோடு ஸ்பர்ஶேந்திரியமும் பசி தீரப் பெற்றாய். *(மாலும் கருங்கடலே)* அவனுடைய ஸ்பர்ஶ ஸுக2த்தாலே மயங்கி நிற்கும் கருங்கடலே! என்னைப்போலே உடம்பு வெளுக்காமையிலிருந்தே நீ பேறுபெற்றமை தோற்று கிறதே! திருப்பாற்கடலைக் கருங்கடல் என்னலாமோ? எனில்: அவன் வடிவில் கருமை நிழல்பட்டுக் கறுத்திருக்கிற படி. "நீலக்கடல் கடைந்தாய்" [திருவாய் 10-10-7] என்றா ரன்றோ ஆழ்வாரும். அன்றியிலே, பிரளய ஜலத்தைச் சொல்லு வதாகவுமாம். *(மாலும்)* மது4பானம் பண்ணினாரைப்போலே மயங்கிநிற்கை. *(நீ என் நோற்றாய்)* இப்பேறு பெறுவதற்கு நீ என்ன தவம் செய்தாயோ? அதைச் சொல்லமாட்டாயோ நானும் அநுஷ்டி2த்துப் பலன் பெறுவதற்கு? என்று கருத்து. 19.

---

* ஆசு - ஆயுதத்தின் பிடி; || ஊடுதல் - ப்ரணய கலஹம். / இது உபாஸகர்கள் விஷயம். // நெல் குத்தினால் வியர்வை வடிவது போலே தன்னடையே வருவது.



**20.** **பெற்றார் தளைகழலப் பேர்ந்தோர் குறளுருவாய்ச்**
**செற்றார் படிகடந்த செங்கண்மால்—நற்றா**
**மரைமலர்ச் சேவடியை வானவர்கை கூப்பி**
**நிரைமலர்கொண் டேத்துவரால் நின்று.**

**பதவுரை:—பெற்றார்**—தாய் தந்தையர்களாகிய தேவகி வஸுதேவர்களுடைய, **தளை கழல**—கால் விலங்கு கழலும் படியாக, **பேர்ந்து**—(திருப்பாற் கடலினின்றும்) கிளம்பி, **ஓர்**—ஒப்பற்ற, **குறள் உருவாய்**—வாமனவேஷத்தையுடைய வனாய், **செற்றார் படி**—ஆஶ்ரிதனான இந்திரனுக்கு விரோதி4 யான மஹாபலி தன்னுடையதாக அபி4மானித்திருந்த உலகத்தை, **கடந்த**—அளந்தவனும், **செம் கண் மால்**— சிவந்த கண்களை யுடையவனும், ஆஶ்ரிதபக்ஷபாதியுமான எம்பெருமானுடைய, **நல் தாமரை மலர் சே அடியை**— அழகிய கமலம் போலிருக்கிற சிவந்த திருவடியை, **வானவர்**—தேவர்கள், **கை கூப்பி நின்று**—அஞ்ஜலி செய்து கொண்டு நின்றவர்களாய், **நிரை மலர் கொண்டு**— தொடுத்த மலர்களைக்கொண்டு, **ஏத்துவர்**—புகழுவார்கள்; **ஆல்**—ஐயோ! (எனக்கு அப்படிப்பட்ட பேறு கிட்ட வில்லையே! என்றபடி)

**அவ:— இருபதாம் பாட்டு. "பெற்றார் தளைகழல" என்கிற இத்தால் க்ருஷ்ணாவதாரம் சொல்லவுமாம்; வாமநாவ தாரந்தன்னையே சொல்லுகிறதாகவுமாம்.**

---

**அவதாரிகை:—** கடல் அவனைப்பெற்றுக் களித்த அளவேயோ? அப்படுக்கையைவிட்டு இங்கே வந்து அவ தரித்த விடத்திலும் சில பா4க்3யாதி4கர் கிட்டி அனுப4விக்கப் பெற்றார்கள் கிடா! என்கிறார்.

---

*அவதாரிகை:—* கடல் அவனைத் தீண்டப்பெற்றுக் களித் ததுமாத்திரமோ? அப்படுக்கையைவிட்டு அவதரித்தவிடத்தி லும் சில ஸம்ஸாரிகளுக்கும், தே3வதாந்தரங்களுக்கும் தன்னை அனுபவிக்கும் பாக்கியத்தை அருளினனே! நான் ஒருவனே இழந்துவிட்டேன்! என்கிறார்.

**வ்யா:— (பெற்றார் தளை கழலப்பேர்ந்து) பிறந்து என்று மாம். ஆரேனுமாக ஸ்பர்ஶிக்கப் பெற்றார்க்குத் தளை கழல. (பேர்ந்தோர் குறளுருவாய்ச் செற்றார் படி கடந்த) இந்த்$_3$ர னுக்கு அன்றுஆகாத ஶத்ரு தனக்கு ஆகாதே. 34. "द्विषदन्नं न**

---

உரை:— தன்னைப் பிள்ளையாகப்பெற்ற ஸ்ரீவஸுதே$_3$வர் தே$_3$வகியாருடைய காலிலிட்ட விலங்கு நீங்கும்படியாகப் பரமபத$_3$த்தினின்றும் பேர்ந்து, இங்கே க்ருஷ்ணனாய வந்து அவதரித்து அவ்வளவில நில்லாமல் அழகுக்கு அத்$_3$விதீய

---

*வ்யா:— (பெற்றார் தளை கழல)* "தந்தை காலில் விலங் கற வந்து" [பெரியதிரு 8-5-1] என்கிறபடியே தன்னைப் பிள்ளையாகப்பெற்ற தே$_3$வகிவஸுதே$_3$வர்களின் கால்விலங்கு நீங்கும்படியாக. *(பேர்ந்து)* பரமபத$_3$த்தினின்றும் பேர்ந்து இங்கே கண்ணனாய் அவதரித்து. திருப்பாற்கடலினின்றும் பேர்ந்து என்றுமாம். *(பெற்றார்)* நிதி எடுக்கப்பெற்றார் என்னு மாப்போலே இவர்களன்றோ பயன் பெற்றவர்கள் என்கிறார். *(பெற்றார்)* 'என் பிள்ளை கண்ணன்; இவனைப் பெற்றோம் நாம்' என்று அபி$_4$மானித்தவர் தளை கழலாநிற்க, "அடியோம்" என்னும் நம் தளை கழலாநிருக்குமோ? *(பெற்றார் தளை கழலப் பேர்ந்து)* பிற்பகுதியைப்போலே வாமனனையே சொல்லவுமாம். தன்னை ஸ்பர்ஶிக்கப்பெற்றவர்களுடைய ஸம்ஸாரவிலங்கு கழலும்படியாக அடியெடுத்துவைத்து என்று பொருள். *(ஓர் குறளுருவாய்)* அழகிலே ஒப்பற்ற வாமனவேஷத்தைக் கொண் டவனாய். பெரிய வடிவழகையெல்லாம் சிறிய வடிவிலே அடக்கி வைத்திருக்கையாலே, கண்ணாலே முகந்து அநுப$_4$விக்கலா யிருக்கை. *(ஓர் குறள்)* ஒப்பற்ற வாமனன். உலகில் வாமனர் களெல்லாம் இவனோடு ஒப்பிடும்போது திரிவிக்கிரமர்கள் என்னலாம்படியான வாமனன். *(செற்றார் படி கடந்த)* தன் விரோதி$_4$யான மஹாப$_3$லி முதலானார் 'எம்முடையது' என்று அபி$_4$மானித்திருந்த பூ$_4$மியை விளையாட்டாகத் தாவி அளந்து கொண்ட. *(செற்றார்)* அடியானான இந்திரனைத் துன்புறுத்து கையாலே தனக்கு விரோதி$_4$யாக நினைத்திருந்தான் என்று கருத்து.



**भोक्तव्यं" (த்$_3$விஷத$_3$ந்நம் ந பே$_4$ாக்தவ்யம்). 35. "यस्त्वां द्वेष्टि स मां द्वेष्टि" (யஸ்த்வாம் த்$_3$வேஷ்டி ஸ மாம் த்$_3$வேஷ்டி) (செற்றாரிதய ாதி$_3$) மஹாப$_3$லி, "என்னது" என்று அபி$_4$ மாநித்த பூ$_4$மியை அளந்த ஸர்வேஶ்வரன. (நல்தாமரை மலர்ச் சேவடியை) செவ்வி மாறாதே இருந்துள்ள திருவடி**

---

மாய், கண்ணாலே முகந்து அனுப$_4$விக்கலாயபடியான வாமந வேஷததை உடையனாய், ஆஶ்ரிதனான இந்த்$_3$ரனை நெருக்கு கையாலே தனக்கு ஶத்ருவான மஹாப$_3$லிபோல்வார் என்ன தென்று அபி$_4$மானித்திருந்த பூமியை அநாயாஸேந அளந்து

---

"த்$_3$விஷத$_3$ந்நம் ந பே$_4$ாக்தவ்யம் த$_3$விஷந்தம் நைவ
பே$_4$ாஜயேத் ।
பாண்ட$_3$வாந் த்$_3$விஷஸே ராஜந்! மம ப்ராணா ஹி
பாண்ட$_3$வா: ॥" [ப$_4$ார-உத்$_3$ 91-27]

[த்$_3$வேஷிப்பவனின் அன்னம் பு$_4$ஜிக்கத்தக்கதன்று; த்$_3$வேஷிப் பவனை பு$_4$ஜிப்பிக்கவும் கூடாது. அரசனே! நீ பாண்ட$_3$வர்களை த்$_3$வேஷிக்கிறாய். பாண்ட$_3$வர்கள் எனக்குப் பிராணனன்றோ.]

"யஸ்த்வாம் த்$_3$வேஷ்டி ஸ மாம் த்$_3$வேஷ்டி யஸ்த்வாமநு
ஸ மாமநு ।
அபே$_4$தே$_3$நாத்மநோ வேத்$_3$மி த்வாமஹம் பாண்டு$_3$நந்த$_3$ந॥"
[விஷ்ணுத$_4$ர்மம் 37-2]

[பாண்டுபுத்திரனே! எவன் உன்னை துவேஷிக்கிறானோ அவன் என்னை துவேஷிக்கிறான்; எவன் உன்னைப் பின்பற்றி நிற்கிறானோ, அவன் என்னைப் பின்பற்றி நிற்கிறான்; என்னைக் காட்டிலும் வேறுபடாதவனாக உன்னை நினைக்கிறேன்.] என்று சொல்லு கிறபடியே அடியார்களுடைய எதிரியைத் தன் எதிரியாகவே கருதுபவனன்றோ இவன். *(செங்கண்மால்)* விரும்பியது பெற்ற உகப்பின் மிகுதியாலே கண்கள் சிவக்கப்பெற்ற ஸர் வேஶ்வரன். *(மால்)* தே$_3$வர்கள் தலையிலும் காலைவைத்த ஸர் வேஶ்வரன், *(மால்)* அடியார் திறத்தில் அன்புடையவனாகை யாலே தன் ஸ்வரூபத்தை அழித்துக்கொண்டு யாசகனாகித் தொழில் புரிந்தான் என்றுமாம். *(நல் தாமரை மலர்ச் சேவடியை)* சிவப்பு, அழகு, குளிர்த்தி, மென்மை, மணம் முதலான

களை. (வானவர் கைகூப்பி நின்ற நிரைமலர் கொண் டேத்துவர் ஆல்) **திரள நின்று பூவைக்கொண்டு ஏத்துவர் என்னவுமாம்; தொடுத்த மாலைகொண்டு ஏத்துவர் என்னவுமாம்.**

அவ:— **படுக்கையாய்க் கிடந்த கடலுக்குத் தன்னைக் கொடுக்கச் சொல்லவேணுமோ தே$_3$வதாந்தரங்களுக்குத் தன்னைக் கொடாநிற்க? என்கிறார்.**

---

கொண்டவனாய், அததால் வந்த ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே சிவந்த திருக்கண்களை உடையவனாய், ஆஶ்ரிதவ்யாமுக்$_3$த$_4$னானவனுடைய அழகிய தாமரைபூப்போலேயிருக்கிற சிவந்த திருவடிகளை, இந்நீர்மை ஏறிப்பாயாத ஸ்வர்க்க$_3$த்திலே வர்த்திக்கிற இந்த்$_3$ராதி$_3$தே$_3$வதைகள் இச்செயலுக்குத் தோற்று அஞ்ஜலிப$_3$ந்த$_4$த்தைப் பண்ணி, தொடைவாய்த்திருந்துள்ள செவ்விப்பூக்களைப் பணிமாறிக் கொண்டு ஸ்தோத்ரம் பண்ணி ஆஶ்ரயிக்கப் பெறுவர்களாம். பாவியேன்! நாமே இழப்போம்! என்று வெறுக்கிறார். 20.

---

வற்றாலே நல்ல தாமரை மலர்போன்ற சிவந்த திருவடிகளை. உலகிலுள்ள தாமரைகள் இக்குணங்களில் திருவடியின் அருகும் செல்லமாட்டாவாகையால், லோகவிலக்ஷணமான *நல்* தாமரை மலரைத்தேடி ஒப்பிடுகிறார் என்றும்கொள்ளலாம். *(வானவர்)* இந்நீர்மை ஏறிப்பாயாத மேட்டு நிலமான சுவர்க்கத்தில் வாழும் இந்திராதி தேவர்களன்றோ பெற்றார்கள்! கீழ் நிலத்திலிருக்கும் நான் பெறப்பெற்றிலேனே! *(கைகூப்பி நின்று)* அபி$_4$மானிகளாயினும் அழகனைக் கண்டவுடன் கை தானே கூப்புகிறது.

**"த்$_3$ருஷ்ட்வா க்ருஷ்ணம் தத$_2$ாயாந்தம் ப்ரதபந்தமி**
**வௌஜஸா।**
**யத$_2$ார்ஹம் கேஶவே வ்ருத்திமவஶா: ப்ரதிபேதி$_3$ரே ॥"**
[ப$_4$ார-ஸப$_4$ா-75]

[தன்னுடைய வீர்யத்தினால் (பிறரைக்) கொளுத்துபவன்போல் அப்படி எழுந்தருளும் கண்ணனைப் பார்த்துப் பரவசமடைந்த அவர்கள் கேசவனாகிற அவன் விஷயத்தில் நமஸ்காரம் முதலிய காரியங்களைத் தகுந்தபடி செய்தார்கள்.] என்றாற்போலே.



வ்யா:— (பெற்றார்) **நிதி$_4$ எடுக்கப்பெற்றார் என்னுமாபோலே. "என் பிள்ளை" என்று அபி$_4$மானித்தால் தனை கழலாநின்றால், "அடியோம்" என்றார் தனை கழலச் சொல்லவேணுமோ?** (போந்து) **ஸ்ரீவைகுண்ட$_2$த்தினின்றும் என்னவுமாம். திருப்பாற்கடல் நின்றும் வந்தானாகவுமாம்.** (ஓர் குறள்) **நாட்டில் வாமநர்கள் இவன் வளர்ந்தருளின இடத்தோடொக்கும்.** (செறனார்) **தன்னைச் செற்றார். 34. "मम प्राणा हि" (மம ப்ராணா ஹி).** (படி கடந்த) **இக்காடு மோடையும் அளந்த. பிறரது பெற்றாற்போலே இருப்பதே!** (செங்கண்) **அபேக்ஷிதம் முடிக்கப்பெறுகை.** (மால) **செய்தது போராது என்று இருக்கை.** (நல்தாமரை) **செவ்விக்கும், அழகுக்கும், குளிர்த்திக்கும் ஸத்$_3$ருஶமான தாமரை தேடுகிறார்.** (வானவர்) **எட்டாதபடி பரணிட்டுக்கொண்டிருக்கிற.** (கைகூப்பி) **36. "अवशाः प्रतिपेदिरे" (அவஶா: ப்ரதிபேதி$_3$ரே)** (நிரைமலர்) **ஏற்கவே தொடையொத்த துளபம் கொண்டிருந்தார்களோ?** (ஏத்துவரால்) **இப்படி பிறந்தார் பெருதொழிவதே!** (நின்று) **/ கிண்ணகத்து எதிர்த்து நின்று. 20.**

**21. நின்று நிலமங்கை நீரேற்று மூவடியால்**
**சென்று திசையளந்த செங்கண்மாற்கு—என்றும்**
**படையாழி புள்ளூர்தி பாம்பணையான் பாதம்**
**அடையாழி நெஞ்சே யறி.**

---

*(நிரை மலர்கொண்டு ஏத்துவரால்)* தொடுத்த மாலையைக் கைக்கொண்டு துதிப்பார்கள். 'நிரை வானவர்' என்று கூட்டினால், வரிசைவரிசையாக நிற்கும் தே$_3$வர் கூட்டங்கள் பூக்கொண்டு துதிப்பார்கள் என்று பொருள்படும். *(நின்று)* நம்மைப் போலே காலாழ்ந்து கண்சுழன்று நெஞ்சழியாமல் அழகு வெள்ளத்தை எதிர்த்து நிற்கப்பெற்றார்களே! என்ன பாக்கியம்! என்று வியக்கிறார். ஆல்-வியப்பைக் காட்டுகிறது. தான் பெறவில்லையேயென்னும் வருத்தத்தைக் காட்டுவதாகவுமாம். 20.

---



*/ கிண்ணகத்து—ப்ரவாஹத்தில்.*

**பதவுரை:— நின்று** – (மாவலியினருகில்) நின்று, **நிலம்**— பூ$_4$மியை, **அம் கை**— அழகிய கையினுல், **நீர் ஏற்று**—த$_3$ானம் வாங்கி **மூ அடியால்**—மூன்று அடிகளாலே, **சென்று திசை அளந்த**—நடந்தபடி சென்று தி$_3$க்குகளையெல்லாம் அளந்து கொண்ட, **செம் கண் மாற்கு**—சிவந்த கண்களையுடைய ஸர்வாதி$_4$கனுக்கு, **என்றும்**—எக்காலத்திலும், **படை** – ஆயுத$_4$ம், **ஆழி**— சக்கரம்: **புள்**—கருடாழ்வான், **ஊர்தி**—வாஹனம்; **ஆழி நெஞ்சே**— க$_3$ம்பீ$_4$ரமான மனமே! **அறி**—(இதைக்) கேட்பாயாக:—. **பாம்பு அணையான்**—திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய எம்பிரானுடைய, **பாதம்**—திருவடிகளை, **அடை**—அடைந்திடுவாயாக.

**வ்யா:— இருபத்தோராம் பாட்டு.** (நின்று) **ஸர்வேஶ்வரனானவன் அர்த்தி$_2$த்வம் தோற்றும்படிக்கீடாக நின்று.** (நிலம் அங்கை நீரேற்று) **கொடுத்து வளர்ந்த அழகிய**

---

**அவ:—** அவன பெருமையைப் பார்த்துப் பிற்காலியாதே, ஆஶ்ரிதஸம்ஶ்லேஷைகஸ்வப$_4$ாவன என்றறிந்து அவன் திருவடிகளைக் கிட்டப்பார்கிடாய் நெஞ்சே! எனகிருர்.

**உரை:—** மஹாப$_3$லி யஜ்ஞவாடத்தளவும் நடந்து சென்று, அவனமுன்னே ‘அபி$_4$மதம் பெற்றன்றிப் போகேன்’ என்று மலையாளர் வளைப்புப்போலே அர்த்

---

*அவதாரிகை :—* அவனுடைய பெருமையைப் பார்த்துப் பின்வாங்காமல், ‘அடியாருடன் கலப்பதையே இயல்வாக உடையவன்’ என்றறிந்து ‘அவன் திருவடிகளைக் கிட்டப்பாராய் என்நெஞ்சே!’ என்கிருர்.

*வ்யா:-(சென்று)* மஹாப$_3$லியின் யாக$_3$சாலைவரையில் நடந்து சென்று ; அடியார்க்காகத் தன்னை அழியமாறிச் சென்ருன். *(நின்று)* ‘நான் விரும்பியது கிடைத்தாலல்லது போகமாட்டேன்’ என்று அவன் முன்னே மலையாளர் வளைப்புப்போலேயும், கல்லுளிமங்கன் போலேயும் பழிகிடந்தான். *(அம் கை நீரேற்று)*



கையிலே பூ$_4$மியை நீரேற்று. (மூவடியித்யாதி$_3$) தி$_3$க்குகள் தோறும் சென்று அளந்து. அத்தாலே அலப்$_4$யலாப$_4$ம் பெற்ருனுயிருக்கிறவனுக்கு. (என்றுமித்யாதி$_3$) எல்லாவற்றையும் உடையவன் கிடீர் இரந்தான். கையிலே திருவாழியைப் பேராதே பிடிக்கவல்லவனும், திருவடி முதுகிலே நற்றரிக்க/ இருக்க வல்லவனும், திருவநந்தாழ்வானுகிற படுக்கையிலே சாயவல்லவனும் ஸர்வேஶ்வரனுகிருன். (பாதமடையாழி நெஞ்சேயறி) மஹாப$_3$லியைப்போலே ஆகாதே.

---

தி$_2$தவம் தோற்ற நின்று, எல்லாருக்கும குறைவறக் கொடுத்துப்போந்த அழகிய திருக்கையிலே பூ$_4$மியை நீரேற்று வாங்கிக் கொண்டு, ஓரடிக்கு அவனைச் சிறையிட்டு வைப்பதாக மூன்று திருவடிகளாலே தி$_3$க்குகளோடே கூடின ஸகலலோகங்களையும் அளந்துகொண்டவனுய், அத்தால் வந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே சிவந்த திருக்கண்களை உடையனுமான ஸர்வாதி$_4$கனுக்கு ஸர்வ காலத்திலும் ரக்ஷணபரிகரமான தி$_3$வ்யாயுத$_4$ம் திருவாழி. மேற்கொண்டு நடத்துகிற வாஹநம் பெரிய திருவடி.

---

கொடுத்து வளர்ந்த அழகிய கையிலே த$_3$ானநீரேற்ருன். *(நிலம் நீரேற்று)* தன் நிலத்தைத் தானே நீரேற்றுப் பெற்ருன் ! *(மூவடியால் திசையளந்த)* உலகளந்த இரண்டடிகளே போதுமாயிருக்க, அவனை மூன்ருமடியாலே பாதாளத்தழுத்திச் சிறைவைப்பதற்காக. மூவடி வேண்டிப்பெற்று எல்லாத்திசையையும் அளந்தான் கிடீர்! *( சென்று திசையளந்த )* என்றும் கூட்டலாம். திக்குகள் தோறும் சென்றளந்தன திருவடிகள் என்கை. *(செங்கண் மாற்கு)* தாய் சேயைத் தழுவினுற்போலே அதனுல் உண்டான உகப்பாலே கண்கள் சிவந்த ஸர்வேச்வரனுக்கு. *(என்றும் படை ஆழி)* அடியாரை ரக்ஷிக்கக்கருவியான ஆயுதமாயிருப்பது ஸுத$_3$ர்சனம். அப்படியிருந்தும் சக்கரத்தால் தலைகொள்ளாதே யாசித்துப் பெற்ருன் மாவலியிடம். ஏனெனில்: அடியானுன அவனையும் கைவிடக் கூடாதென்று.

---

/ நற்றரிக்க—*(நல் + தரிக்க)* நன்ருகத் தங்கும்படி.

அவன் திருவடிகளை அடை. (ஆழி நெஞ்சேயறி) அளவுடைய நெஞ்சே! அறி. / ஓலக்கவார்த்தை என்றிராதே இத்தை பு$_3$த்$_3$தி$_4$பண்ணி இரு.

அவ:— இரண்டு பாட்டாலும் ஸர்வேஶ்வரன் கிடீர் ஆஶ்ரிதார்த்த$_2$மாக இப்படி எளியனானான்! என்று சொல்லிற்றாய் ஈடுபடுகிறார்.

வ்யா:— (நின்றித்யாதி$_3$) பிராட்டியை ஸ்ரீஜநகராஜன் நீர்வார்க்கப்பெற்றாப்போலே சென்று நின்று என்னுதல்.

---

திருவனந்தாழ்வானைப் படுக்கையாக உடையவனாகை யாலே, ஆஶ்ரிதஸம்ஶ்லேஷைகஸ்வப$_4$ாவனானவனுடைய திருவடிகளைக் கிட்டி அநுப$_4$விக்கப்பார். க$_3$ம்பீ$_4$ரஸ்வப$_4$ாவமான நெஞ்சே! இததை, ஓலக்கவார்த்தையென்றிராதே நன்றாக பு$_3$க்$_3$தி$_4$பண்ணு. 21.

---

*(புள் ஊர்தி)* மேலேறிச் செலுத்துகிற வாஹனம் கருடனாவான். அப்படியிருந்தும் அடியார்க்காக நடந்து சென்றானே! *(பாம்பணையான்)* எப்போதும் திருவனந்தாழ்வானாகிற படுக்கையைப் பிரியாமலிருப்பவன். இப்படி ஓரடியானைக் கையிலும், ஒருவனைக் காலின்கீழும், ஒருவனைப் பிரியாமலும் கொண்டிருக்கையாலே அடியாரோடு கலப்பதையே இயல்வாகக்கொண்டவன் இவன் என்று விளங்குகிறது. *(பாதம் அடை)* இப்படிப்பட்டவனுடைய திருவடிகளை நீ அடைவாய்; மஹாப$_3$லியைப் போலே அவன் திருவடி உன்னைத்தேடிவர இராமல், நீ அவன் திருவடியைத் தேடிப்போ. *(ஆழி நெஞ்சே)* கடல்போலே க$_3$ம்பீ$_4$ரமான நெஞ்சே! எனக்கும் உபதேசிக்கவல்ல உனக்கு நான் உபதேசிக்கவேணுமோ? *(அறி)* ஸபையிலே டம்பமாகச் சொல்லும் வார்த்தையாக இதை நினையாமல், நன்றாக அறிந்து நடப்பாயாக. *(அடை—அறி)* அடியார்க்காகத் தன்னை அழியமாறுமவன், அடியாரோடு கலப்பதையே இயல்வாக உடையவன் என்பதை அறிந்தாயாகில் உன் தாழ்வை நினைத்துப் பின்வாங்காமல் நீ அவனை அடையலாம் என்று கருத்து. 21.

---

/ ஓலக்கவார்த்தை — ஸபை$_4$யில் ட$_3$ம்ப$_4$மாகச் சொல்லும் வார்த்தை.



(சென்று) நடந்தபடி சென்று அளந்தது என்னுதல், (செங்கண்மால்) தந்தாமது பெற்றாலும் இனியராக வேணுமோ? (என்றும்) பரிபூர்ணன் கிடீர்! (பாதம் அடையாழி நெஞ்சே) என்னை ஓதுவிக்கவல்ல நீ, என் செல்லாமை அறி. அல்லாத வார்த்தை போலல்ல; இத்தை பு$_3$த்$_3$தி$_4$பண்ணு. /[சீரால் பிறந்து] அன்று அறுபதினாயிரம் ஸம்வத்ஸரம் தபஸ்ஸு பண்ணினவன் வயிற்றிலே, 37. "पितरं रोचयामास" (பிதரம் ரோசயாமாஸ) என்று, ஆசைப்பட வந்து பிறக்கை. /[சிறப்பால் வளராது] வெண்ணெயையும் பெண்களையும் களவுகண்டு மூலையடியே வளருகை. /[பேர்வாமனாகாக்கால்] நாராயணனானாலாகாதோ? /[பேராளா] ஐஶ்வர்யத்திலே இளைப்பாறவேணுமோ? /[மார்வித்யாதி$_3$] பருத்திபட்ட பன்னிரண்டும் பட்ட பூ$_4$மி. 21.

22. அறியு முலகெல்லாம் யானேயு மல்லேன்
பொறிகொள் சிறையுவண மூர்ந்தாய் —வெறிகமழும்
காம்பேய்மென் தோளி கடைவெண்ணெ யுண்டாயைத்
தாம்பேகொண் டார்த்த தழும்பு.

பதவுரை:— **பொறி கொள் சிறை**—பல வர்ணங்களையுடைய சிறகுகளைக்கொண்ட, **உவணம்**—கருடாழ்வானை, **ஊர்ந்தாய்** ஏறி நடத்துமவனாய், **வெறி கமழும்**—மணம் வீசப்பெற்றவளும், **காம்பு ஏய் மென் தோளி** மூங்கிலை ஒத்த மெல்லிய தோளை உடையவளுமான யசோதைப் பிராட்டியினால், **கடை வெண்ணெய்** — கடையப்பட்ட வெண்ணெயை, **உண்டாயை** — அமுது செய்தவனான உன்னை, **தாம்பே கொண்டு** — ஒரு சிறு கயிற்றையே கொண்டு, **ஆர்த்த** — கட்டினதாலுண்டான, **தழும்பு** — தழும்பை, **யானேயும் அல்லேன்** —நான் ஒருவனே அறியவல்லலேன்; **உலகெல்லாம் அறியும்**—உலகத்திலுள்ளவர்களெல்லாரும் அறிவார்கள்.

---

/ பெரிய திருவ-16.

வ்யா:— இருபத்திரண்டாம் பாட்டு. (அறியும்) ஆஶ்ரிதார்த்த$_2$மாக எளியவனானான் என்னும்படி நீர் அறிந்தபடி எங்ஙனே ? என்னில்; (உலகெல்லாம அறியும் யானேயுமல்லேன்) சிசுபாலன்கூட அறியானோ ! (பொறியித்யாதி$_3$) பொறிகொண்டிருந்துள்ள சிறகையுடைத்தான திருவடியை ஊர்ந்த உன்னை. (வெறி கமழும்) பிள்ளைமுகம் வாடவொண்ணாதென்று எப்போதும் ஒப்பித்தபடியே இருக்கையாலே பரிமளம் கமழாநின்ற. (காம்பு ஏய் மென் தோளி) மூங்கிலோடொத்த ம்ருது$_3$வான தோளை உடையவள்.

---

அவ:— நீர் நம்மை 'ஆஶ்ரிதஸம்ஶ்லேஷைகஸ்வபா$_4$வன்' என்று அறிந்தபடி எங்ஙனே? என்ன, 'நான் ஒருவனுமேயோ? லோகமடைய அறியாதோ?' என்கிறார்.

உரை:— சித்ரபடம்போலே நாநாவர்ணமான சிறகையுடைய பெரியதிருவடியை நடத்தும் ஸ்வபா$_4$வனாய், பிள்ளை அனுங்காதபடி ஸுக$_3$ந்த$_4$த்$_3$ரவ்யத்தாலே அலங்கரித்துக்கொண்டிருக்கையாலே பரிமளம் அலையெறியா நிற்பாளாய், பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் ஒழுகு

---

*அவதாரிகை:—* 'அடியாரோடு கலப்பதையே இயல்வாக உடையவன்' என்று நீர் என்னை எப்படி அறிந்தீர் ? என்று எம்பெருமான் கேட்க, "நான் ஒருவன்தானோ அறிந்தேன் ? உலகமெல்லாம் அறியுமே உன் தழும்பைக்கொண்டு!" என்கிறார்.

*வ்யா:—(பொறிகொள் சிறை உவணம் ஊர்ந்தாய்)* பலவர்ண நூல்களால் நெய்யப்பெற்ற வர்ணவஸ்திரம்போலே பல வர்ணங்களையுடைய சிறகை உடைய கருடாழ்வானை வாஹனமாக ஊர்ந்தவனே! உவணம்-பருந்து; (இங்கு) கருடன். ஊர்ந்தவனாய், வெண்ணெயுண்டவனான உன்னை என்று மேலோடே கூட்டவுமாம். *(வெறி கமழும்)* பிள்ளை முகம் வாடக்கூடாது என்பதற்காக எப்போதும் க$_3$ந்த$_4$மால்யாதி$_3$களால் அலங்கரித்தபடியே இருக்கையால், மணம் கமழாநிற்கிறாள் யசோதை. *(காம்பு ஏய் தோளி)* மூங்கில்போன்ற பசுத்து



(கடைவெண்ணெயுண்டாயை) அவள் மார்த்த$_3$வம் பாராதே கடைந்த வெண்ணெயுண்டாயை. (தாம்பித்யாதி$_3$) கைக்கெட்டிற்றொரு தாம்பாலே கட்டின தழும்பு. (அறியுமுலகெல்லாம்) கயிற்றை நீட்டவொண்ணாது; உரலைச் சிறுக்கவொண்ணாது; இவனுடம்பிலே இடங்காணுமித்தனையிறே.

அவ:— ஆஶ்ரிதபக்ஷபாதம்போலே ஆஶ்ரிதப$_4$வ்யதையும்.

வ்யா:— (உலகெல்லாம்) சிசுபாலனையிட்டுச் சொல்லவேணுமோ? (யானேயித்யாதி$_3$) அநுக்$_3$ரஹமுடைய நானேயல்லேன். (பொறியித்யாதி$_3$) நிரபேக்ஷனாய் அர்த்தி$_2$க்கப்

---

நீட்சிக்கும வேய்போலேயாய், அதில் வ்யாவ்ருத்தமான மார்த்த$_3$வத்தையுடைய தோளையுடையளுமான யஶோதைப பிராட்டி உடம்புநோவக் கடைந்து திரட்டி வைத்த வெண்ணெயை அமுது செய்தருளின உன்னை, கைக்கெட்டிற்றொரு அறுதல் தாம்பையேகொண்டு உறைக்கக் கட்டுகையால் வந்த தழும்பு நான் ஒருவனுமேயல்லேன், நாடடங்க அறியுங்காண் ! 'உவணம்' என்று பருந்துக்குப் பேர். 22.

---

நீண்டு உருண்டுதிரண்ட தோளை உடையவள். *(மென்தோளி)* மூங்கிலைப்போலே முரடாயிராமல் மென்மைமிக்க தோளையுடையவள் யசோதைப்பிராட்டி. *(கடை வெண்ணெயுண்டாயை)* தன் மென்மையையும் பாராமல் அவள் உடம்பு நோவக் கடைந்துவைத்த வெண்ணெயை உண்ட உன்னை. *(தாம்பே கொண்டார்த்த தழும்பு)* கைக்கெட்டினதொரு அறுந்த தாம்பையேகொண்டு அழுத்திக்கட்டியதாலுண்டான தழும்பை. *(யானேயுமல்லேன் உலகெல்லாமறியும்)* நான் மாத்திரமோ அறிவேன்? உலகனைத்தும் அறியும். அன்புடைய நான்மாத்திரமல்லேன்; வெறுப்புடைய சிசுபாலாதி$_3$களும் அறிவர் 'தாமோதரன்' என்று பெயர் சுமக்கும்படி பிரசித்தமன்றோ இது. ஆகையால் நீ அடியாரோடு கலப்பதையே இயல்வாக உடையவனென்பது நாடறிந்த விஷயமென்று கருத்து. 22.

பிறந்த நீ. (வெறி) ஸ்வாப$_4$ாவிகமென்னுதல்; பிள்ளை || முசியாமைக்கு என்னுதல். (காம்பு) பசுமையும், திரட்சியும், செவ்வையும். (வென்தோளி கடைவெண்ணெயித்யாதி$_3$) இருவர்க்கு த$_4$ாரகம்; அப$_3$லை கட்டிலே கட்டுண்பதே! (தாமபே கொணடு) குறுங்கயிற்றைக்கொண்டு. 22.

23. **தழும்பிருந்த சார்ங்கநாண் தோய்ந்தவா மங்கை**
**தழும்பிருந்த தாள்சகடம் சாடி - தழும்பிருந்த**
**பூங்கோதை யாள்வெருவப் பொன்பெயரோன்**
**வீங்கோத வண்ணர் விரல்.** [மார்பிடந்த

**பதவுரை:—** **அம் கை**—அழகிய கைகளில் **சார்ங்க நாண்**—சார்ங்கவில்லின் நாணி, **தோய்ந்த**—படிந்ததினலேற்பட்ட, **தழும்பு**—தழும்பானது, **இருந்த ஆம்**—இருககின்றனவாம்; **தாள்**—திருவடிகளில், **சகடம் சாடி**—சகடாஸுரனை உதைத்ததினலுண்டான, **தழும்பு இருந்த**—அடையாளம் இருக்கினறது; **பூம் கோதையாள்**—அழகிய மயிர்முடியையுடைய பிராட்டி, **வெருவ**—(உலகுக்கு என வருமோ என்று) அஞ்சும்படியாக, **பொன் பெயரோன்**—ஹிரண்யன் என்ற பெயரையுடைய அஸுரனுடைய, **மார்பு இடந்த**—மாா்பைப் பிளந்த, **வீங்கு ஓத வண்ணர்**—பெருகும் அலைகளையுடைய கடலைப்போனற திருநிறத்தை யுடைய எம்பெருமானுடைய, **விரல்**—திருவிரல்களிலே, **தழும்பு இருந்த**—தழுமபுகள் இருக்கின்றன.

---

**அவ:—** "நாம் சிலருக்கு அஞ்சுகையாவதென்? கட்டுண்கையாவதென்? அத்தைப் பின நாடறிகையாவதென்?" என்று அத்தை மறைகசப்புக்கான். "ஒரு தழும்பாகிலன்றோ மறைக்கலாவது; உன் உடம்படங்கலும் ஆஶ்ரிதர்கார்யம் செய்கையால் வந்த தழும்பன்றோ?" என்கிருர்.

---

*அவதாரிகை:—* "ஸர்வேஶ்வரனை நாம் ஒருத்திக்குப் பயப்படுவதாவது? அவளிடம் கட்டுப்படுவதாவது? அதை உலகெல்லாம் அறிவதாவது?" என்று கூறிக்கொண்டு தழும்பை வார்த்தையாலும், வஸ்திரத்தாலும் மறைக்கப் பார்த்தான் எம்பெருமான். "ஒரு தழும்பாயிருந்தால் மறைத்துவிடலாம்; உன் உடம்பெல்லாம் அடியார்காரியம் செய்து பட்ட தழும்பாயிருக்கிறது; பிரானே! இதில் எதை மறைப்பாய்?" என்கிருர்.

---

|| முசியாமை - இளையாமை.



அவ:— இருபத்துமூன்ரும் பாட்டு. ஒரு செயலைக் கொண்டு சொல்லும்படியென்? என்னில்; ஒரு செயலிலேயோ? ஒரு அவதாரத்திலேயோ தழும்பு சுமந்தது? என்கிருர்.

வ்யா:— (தழும்பிருந்த இத்யாதி$_3$) **பிராட்டியுங்கூடக் கூசி ஸ்பர்சிக்கவேண்டும் அழகிய கை — சார்ங்கநாண் தோய்ந்த தழும்பிருந்தவாம். / ஜ்யாகிணத்தாலே கர்க்கஶமாயிருக்கும். தாள் சகடம் சாடித்தழும்பிருந்த** (பூங்கோதையாள் வெருவப் பொனபெயரோன் மார்விடந்த) **"அடலரியாய்ப்பெருகினனை" என்கிறபடியே.** (விரல் தழும்பிருந்த)

---

**உரை:—** அழகிய திருக்கையானது—ஶ்ரீஶார்ங்க$_3$த்தினுடைய நாணறைவால் வநத தழும்பைச் சுமந்தன. அதிஸுகுமாரமான திருவடிகளானவை—அஸுராவிஷ்டமான ஶகடத்தை முறிந்து விழும்படி உதைத்து, அத்தாலெழுந்த தழும்பைச் சுமந்தன. கிளர்ந்து அலையெறிகிற கடல்

---

*வ்யா:— (அம் கை சார்ங்கநாண் தோய்ந்த தழும்பிருந்தவாம்)* பிராட்டிமாரும் தொடக்கூசவேண்டிய அழகிய கையிலே சார்ங்க$_3$மென்னும் வில்லின் நாண் படிந்தமையாலுண்டான தழும்புகளிருந்தன. கை தழும்பைச் சுமந்தது என்றுமாம். அடியார்க்காக அசுரரரக்கர்களைக் கொல்லும்போது, கையில் சார்ங்க$_3$நாண் உரசியதாலுண்டான தழும்பை மறைக்கமுடியுமோ? என்கை. *(சகடம் சாடி தாள் தழும்பிருந்த)* அறியாப்பருவத்திலே ஶகடமாய் ஓரசுரன் நிற்க, தாய்ப்பாலுக்காகக் காலை உதைத்துக்கொண்ட கண்ணனின் மென்மைமிக்க கால்பட்டு அவ்வசுரன் அழிந்துவிழுந்தான். இப்படி அடியார்க்குத் தன்னை நோக்கிக்கொடுத்த தாளிலேயும் ஶகடம் சாடியதினுல் உண்டான தழும்பிருந்தது. இதைத்தான் மறைக்கக்கூடுமோ? *(சகடம் சாடி)* குழந்தை பாலுக்காகக் காலை உதைத்துக் கொண்டவித்தனை; அரிய செயலாக இவர் கருதுகையாலே '*சகடம் சாடி*' என்கிருர். *(பூங்கோதையாள் வெருவப் பொன் பெயரோன் மார்விடந்த வீங்கோதவண்ணர் விரல் தழும்பிருந்த)*

---


/ ஸ்தோ-ர 33.

**கால் தழும்பு, கை தழும்பு, அவாந்தராவயவமான விரல் தழும்பு; ஒன்றேயோ தழும்பாயிற்று? என்கிறார்.**

(பூங்கோதையாள் வெருவ) **"ஆஶ்ரிதருடைய கார்யம்" என்றால் உகக்கும் அவளும் ப₄யப்படும்படி உடம்படையத் தழும்பு.** (சாடி) **அவன் மூரிநிமிர்ந்தான். இவர்க்குக் குவாலாயிருக்கிறபடி.** (பூங்கோதையாள் வெருவ) **பொறுதென்றிருக்குமவள். வீரவாசி அறியுமவள். ருஷிவேஷத்தோடே திரியவேணும் என்னுமவள்.** (வீங்கோதவண்ணா விரல்) **வளர்த்தியும் குளிர்த்தியும். "महाविष्णु" (மஹாவிஷ்ணும்) விக்₃ரஹ வ்யாப்தியாயிற்று.** **23.**

---

போலேயிருந்துள்ள வடிவையுடையவருடைய திருவிரல்களானவை—அழகிய மயிர்முடியையுடைய பிராட்டி 'என்னுகத் தேடுகிறதோ?' என்று நடுங்கும்படியாக, ஹிரண்யன் மார்வைப் பிளந்து பொகட்டத்தால் வந்த தழுமபைச் சுமந்தன. விரல் தழுமபு, கால் தழும்பு, கைத்தழும்பு இவற்றை எங்ஙனே உன்னுல் மறைக்கும்படி? என்கை. 23.

---

'அடியார் காரியம்' என்றால் உகக்கும் அவளும் பயப்படும்படி 'பொன்னன்' (ஹிரண்யன்) என்னும் அசுரனின் மார்வைப் பிளந்த பொங்குங்கடல்வண்ணனின் விரல்களிலும் பிரஹ்லாதனுக்குக் காரியம் செய்ததைக் காட்டும் தழும்பிருந்தன. வயிற்றில் தழும்பைத்தான் வஸ்திரத்தையிட்டு மறைத்துவிடலாம். கையில் தழும்பையும், தாளில் தழும்பையும், விரலில் தழும்பையும் எங்ஙனே மறைப்பாய் பிரானே! என்கிறார். (*பூங்கோதையாள்*) அழகிய மயிர்முடியையுடைய பெரியபிராட்டியார். (*வெருவ*) 'பிரளயகாலமே வந்ததோ?' என்று நடுங்கும்படியாக. "*வெருவத் தழும்பிருந்த*" என்றும், "*வெருவ மார்விடந்த*" என்றும் கூட்டிப் பொருள்கொள்ளலாம். (*வீங்கோதவண்ணர்*) "*அடலரியாய்ப் பெருகினனை*" [பெரியதிரு 2-5-8] என்கிறபடியே திசைகளெங்கும் வளர்ந்தானுகையாலே பொங்கும் கடலை உவமிக்கிறார். "*மஹாவிஷ்ணும்*" என்று நரஸிம்ஹ அநுஷ்டுப் மந்த்ரத்திலும் இவ்விக்₃ரஹவ்யாப்தியானது குறிக்கப்பட்டதன்றே. வளர்த்தியிலும், குளிர்த்தியிலும், நிறத்திலும், ஆழங்காணவொண்ணு



**24. விரலொடு வாய்தோய்ந்த வெண்ணெய்கண்டு ஆய்ச்சி**
**உரலோ டுறப்பிணித்த நான்று—குரலோவா**
**தேங்கி நினைந்தயலார் காண விருந்திலையே**
**ஓங்கோத வண்ணு வுரை.**

**பதவுரை:— விரலொடு வாய் தோய்ந்த**—உன்னுடைய விரல்களிலும் வாயிலும் படிந்திருந்த, **வெண்ணெய்**—வெண்ணெயை, **ஆய்ச்சி**—யஶோதைப்பிராட்டி, **கண்டு**—பார்த்து, **உரலோடு**—உரலுடன், **உறப் பிணித்த நான்று**—நன்ருகக் கட்டி வைத்தபோது, **குரல் ஓவாது**—அழுகுரல் நீங்காமல், **ஏங்கி**—ஏங்கிக்கொண்டு, **நினைந்து**—(அப்போதும்) வெண்ணெய் திருடுவதை நினைத்துக்கொண்டு, **அயலார்** — மற்றவர்களெல்லாரும், **காண** — வேடிக்கை பார்க்கும்படி, **இருந்திலையே** — இருக்கவில்லையா? **ஓங்கு ஓத வண்ணு** — கிளர்ந்தெழுந்த அலைகளையுடைய கடல் போன்ற திருமேனியை உடையவனே! **உரை**—நீயே உண்மையைச் சொல்.

---

**அவதாரிகை:**—நாம் வெண்ணெய் களவு காணப்புககுக் கட்டுண்டோமாகவேணுமோ? என்ன; களவுகண்டு கட்டுண்டிருக்கும்படி அறியாயோ? என்கிறார்.

---

**மையிலும், ஒளியலைவீசும் அழகிலும் கடலை ஒத்திருக்கையாலே 'வீங்கோதவண்ணர்' என்கிறார். நீ ஆஶ்ரிதபக்ஷபாதியென்பதற்கு உன்திருமேனியிலேயே இத்தனை அடையாளங்களிருக்கும்போது, உன்னுல் அதை எப்படி மறைக்கமுடியும்? என்று கருத்து.** 23.

*அவதாரிகை:*— **என்பெருமையைக் காட்டும் இத்தழும்புகளிருக்கட்டும்; "கடைவெண்ணெயுண்டாயைத் தாம்பேகொண்டார்த்த தழும்பு-உலகெல்லாம் அறியும்" (22) என்று, நான் வெண்ணெயைத் திருடித்தின்னும்போது கட்டுண்டதாக ஒன்று சொன்னீரே! என் எளிமையைக் காட்டும் இது உண்மையோ? என்று எம்பெருமான் திருவுள்ளமாக, "வெண்ணெய் திருடிக் கட்டுண்டிருந்ததை நீயே அறியாயோ" என்கிறார்.**

**வ்யா:— இருபத்தினாலாம் பாட்டு.** (விரல் இத்யாதி$_3$) **விரல் வாயிலே தோய்ந்தவளவிலே. "வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு" என்றும் சொல்லா நின்றது; "விரலொடு வாய்தோய்ந்த" என்றும் சொல்லா நின்றது; இவை எங்ஙனே சேரும்படி? என்று பிள்ளை திருநறையூரரையர் ப$_4$ட்டரைக் கேட்க; "இவனுக்கு என்றும் திருப்பணி இதுவன்றோ? ஒருநாள் அங்ஙனுமாகிறது. ஒரு நாள் இங்ஙனுமாகிறது." என்று அருளிச்செய்தார். "வைகலும் வெண்ணெய் கைகலந்துண்டான்" என்கிற**

---

**உரை:—** திருக்கையாலே அளளித் திருப்பவளததிலே வைதத வெண்ணெயை அமுதுசெய்தருளுவதுக்குமுனபே வாயதுகையதாகக்கண்டு இடைச்சியானவள் களவுக்குப்

---

*வ்யா:— (விரலொடு வாய்தோய்ந்த வெண்ணெய்கண்டு)* திருக்கையாலே அள்ளி, திருவாயிலே வைத்தவித்தனை; அமுது செய்யவும் பெறவில்லை; அதற்குள் தடுத்துவிட்டாளே தாயாயிருந்தவள்! அமுதுசெய்தபின்பு கட்டுப்பட்டாலும் ஆறியிருக்கலாமே! வாயில்படுப்போது வாயது கையதாகக் கட்டிவிட்டாளே! "'வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு அதன் ஓசைகேட்கும் கண்ணபிரான் கற்ற கல்வி' [பெரியாழ்திரு 2-9-1] என்று வெண்ணெய் முழுவதையும் உண்டதாகவும் சொல்லுகிறது; 'விரலொடு வாய் தோய்ந்த' என்று வாயில் தோய்ந்தவித்தனையேயொழிய உண்ணவில்லை என்றும் சொல்லுகிறது; இவையிரண்டும் எப்படிப் பொருந்தும்?" என்று பிள்ளை திருநறையூரரையர் ப$_4$ட்டரைக் கேட்க, "'வைகலும் வெண்ணெய் கைகலந்துண்டான்' [திருவாய் 1-8-5] என்கிறபடியே, இவனுக்கு வெண்ணெய் களவுசெய்து உண்பதுதானே திருப்பணி; ஒருநாள் உண்ட பின்பும் பிடிபடுவான்; ஒருநாள் வாயில்வைத்தவுடனும் பிடிபடுவான்" என்று ப$_4$ட்டர் அருளிச்செய்தாராம். இவ்வை திஹ்யம் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்$_2$யானத்திலுள்ளது. வெண்ணெயை உண்டானென்றால், 'திருமேனிக்குச் சேருமோ' என்று பதறுவதும், வாய்தோய்ந்தவுடன் பிடிபட்டானென்



**படியே.** (உரல் இத்யாதி$_3$) **உரலென்றும் அவனென்றும் பிரித்துக்காணப் போகாதபடி கட்டின அன்று.** (குரலோவாதேங்கி) **அழப்புக்க த்$_4$வநி மாறாதே; ஏங்கின ஏக்கம் கீழ் விழாதே.** (நினைந்து) **இப்படி அழாநிற்கச் செய்தேயும் பெரிய திருப்பணிகளாயிற்று நினைப்பது. வெண்ணெய் களவு காணும்படி நினைந்து.** (அயலார் காண இருந்திலையே) **ஐந்துலக்ஷங்குடியில் பெண்களில் காணாதாருண்டோ? இவனாலே நெஞ்சு புண்பட்டாரெல்லாம் இவன் பட்டபாடு**

---

பெருநிலைநின்ற உரலேடோயெடுத்து உறைக்ககடடின வன்று கூப்பிடுகிற கூப்பீடு உச்சிவீடுவிடாதபடி வாயவிட்டு அழமாட்டாமல் விம்மல் பொருமலாய் ஏங்கிக்கொண்டு அவ்வளவிலும் 'வெண்ணெயெங்கேயிருக்கிறது? அது களவு காணுமபடி எங்ஙனே?' என்று இத்தையே உருவ நினைத்துக்கொண்டு, உன்னாலே புணபட்ட இடைப்

---

னால். 'உண்ணவும் பெற்றானில்லையே' என்று வயிறெரிவதும் ஆழ்வார்களுக்குப் பணியாகையாலே இரண்டுவிதமாகவும் அநுஸந்தி$_4$க்கக் குறையில்லை. *(உரலோடு உறப்பிணித்த நான்று)* இவன் வெண்ணெய் களவுகாண்பதைக்கண்டு உரல்பேசாமலிருந்த குற்றத்திற்காக, இருவருக்கும் தண்டனையாக, இருவருக்கும் வாசிதெரியாதபடி ஒன்றாகப் பிணைத்துவைத்த போது. *(குரலோவாது)* அழும்போது த்$_4$வனி மாறுபடாமல்; ஒரே ஸ்வரத்துடன். *(ஓவாது ஏங்கி)* என்றுமாம். ஏங்கின ஏக்கம் கீழ்விழாதபடி என்கை. *(ஏங்கி)* அழப்புக்கவுடன் கோலை எடுத்துக்காட்டுவாளாகையாலே, அழவும்முடியாமல், விம்மல் பொருமலாய் ஏங்கின்றபடி *(நினைந்து)* இந்நிலையிலும் பெரிய திருப்பணிகளையாயிற்று நினைத்திருப்பது. 'எங்கெங்கு வெண்ணெயிருக்கிறது; அதை எப்படியெப்படிக் களவுகாணலாம்?' என்றாயிற்று நினைத்திருப்பது. களவிலே தழும்பேறியவன் எனக்காட்டும்படி. வயிற்றில் தழும்பேறக் களவுகண்ட தா$_3$மோத$_3$ரனன்றோ. *(அயலார் காண இருந்திலையே?)* ஆய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடியிற் பெண்களில் காணாதார் ஒருவர் உண்டோ? உன்னாலே புண்பட்ட இடைப்பெண்கள் அத்தனை

காணவருவர்களிறே. 38. "अत्युत्कटैः पुण्यपापैरिहैव फलमश्नुते" (அத்யுத்கடை: புண்யபாபைரிஹைவ ப₂லமஶ்நுதே) இறே. (ஓங்கோதவண்ணவுரை) இவனைக் கட்டிவைத்தது ஒரு கடலைத் தேக்கிவைத்தாற்போலே காணும். (உரை) இவ் வடிவு காணவேணும்; இவ்வடிவோடே கூட வார்த்தையும் கேட்கவேணும்; பொய்யாகில் உரலோடேகூட இழுத்துக் கொண்டு புறப்படுவனோ?

(விரல இத்யாதி₃) வயிறுவளர்த்து அகப்படப்பெற்றோமோ? மிடற்றுக்குக் கீழிழியப்பெற்றோமோ? (உரலோடு) உரலோடு தன்னோடு வாசியில்லாமை, (குரலோவாது)

---

பெண்கள் எல்லாரும் 'கள்ளனுக்கு இத்தனையும் வேணும்' என்று சிரித்துககொண்டு வந்து காணும்படியாக, க்ருதார்த்த₂னாய்கொண்டு இருந்திலையோ? கட்டுண்ணப் பெற்ற ஹர்ஷத்தாலே ஓதங்கிளர்ந்த கடல்போன்ற வடிவையுடையவனே! நீ இத்தை உண்மையாகச் சொல்லிக் காண!

---

பேரும் 'கள்ளனுக்கு இதுவும் வேணும்; இன்னமும் வேணும்' என்று சிரித்துக்கொண்டு காணும்படி இருக்கவில்லையோ நீ? (இருந்திலையே ?) பெருப்பயன் பெற்றவன்போலே இருக்கவில்லையோ நீ? இவ்வெளிவரவைக்கண்டு நான் உகப்பேனோ? என்ன,— (ஓங்கோதவண்ணா) இதை நான் சொல்லுவதைக் கேட்கும்போதே ஓதங்கிளர்ந்த கடல்போலே ஒளிவீசும் நீ, அக்காலத்தில் எத்தனை உகந்திருப்பாய்? அடியார் கையால் கட்டுண்கையாலே, அணைகட்டிய ஆறுபோலே அலைவீசுகிற படியைச் சொல்லுகிறது. *(உரை)* "*அந்ருதம் நோக்தபூர்வம் மே ந ச வக்ஷ்யே கதா₃சந*" [ரா-கி 7-22] [நான் முன் பொய் சொன்னதுமில்லை; ஒருபோதும் இனிச் சொல்லவும் மாட்டேன்.]

த்₃யௌ: பதேத் ப்ருதி₂வீ ஶீர்யேத் ஹிமவாந் ஶகலீப₄வேத் |
ஶுஷ்யேத் தோயநிதி₄: க்ருஷ்ணே! ந மே மோக₄ம் வசோ
ப₄வேத் || [பா₄ர-உத்-70-48]



அழப்புக்கவாறே, "இக்கோலுண்டு பார்" என்ன; ஏங்கி நின்றார். (நினைந்து) வெண்ணெயை நினைந்திருக்கை. (அயலார்காண) பஞ்சலக்ஷம் குடியில் பெண்களடைய; அவர்களை ப₃ந்தி₄த்துத் தான் அகப்படாதிருக்கும்; அவர்கள் இவன் அகப்படவல்லனோ என்றிருப்பர்கள், (இருந்திலையே) ராமஶரத்தை ராவணன் மறக்கில் மறக்கலாம். (ஓங்கோத வண்ணா) நெருக்குண்கையாலே வந்த பூர்த்தி. (உரை) 24. "न मे मोघं" (ந மே மோக₄ம்) என்னும் நீ சொல்லிக் காண். அவாப்த ஸமஸ்தகாமன் குறையாய் அழுவதே! ஸர்வஶக்தி மிடுக்கின்றியொழிவதே! ஸர்வஜ்ஞன் புரையறுவதே! 24.

25. உரைமேற்கொண் டென்னுள்ள மோவாதுளப் போதும்
வரைமேல் மரதகமே போல—திரைமேல்
கிடந்தானைக் கீண்டானைக் கேழலாய்ப் பூமி
யிடந்தானை யேத்தி யெழும்.

---

இவர்க்கு இவன வடிவு காணவேணுமென றும், வார்த்தை கேட்கவேணுமென்றும்போலேகாணும் ஆசை! 24.

---

[க்ருஷ்ணையே! ஆகாயம் கீழ் விழக்கூடும்; பூ₄மி சுக்கலாகக்கூடும்; ஹிமாசலபர்வதம் தூளாகக்கூடும்; ஸமுத்₃ரம் வற்றக்கூடும்; என்னுடைய வார்த்தை வீணாகாது] என்னும் ஸத்யவாக்யனான நீயே உரைப்பாயாக. *(உரை)* இது எப்படிப் பொருந்தும் என்பதை நீயே உரைப்பாய் என்றுமாம். அவாப்தஸமஸ்தகாமனாய் (வேண்டுதல் வேண்டாமையிலாதவனாய்) இருப்பவன் ஒன்றைப் பெறாமல் அழுவதே! ஸர்வஶக்தியுடையவன் ஓரப₃லைகையாலே கட்டுண்பதே! எல்லாமறிந்தவன் அவிழ்க்க வழியறியாமற்போவதே! பிரானே! இவையெல்லாம் எங்ஙனே சேரும்படி?—என்பதை நீயே உரைப்பாயாக. *(ஓங்கோதவண்ணா உரை)* அப்போது உன்மேனியழகு எப்படியிருந்தது என்பதை ஒருபுடை கண்டேன்; அப்போது உன் சொல்லழகு எவ்வண்ணமிருந்தது என்று காணலாம்படி ஒருவார்த்தை சொல்லுவாய் என்பதாகவும் கொள்ளலாம். 24.

பதவுரை:— **வரைமேல்** — மலையின்மேலே, **மரதகமே போல**—மரதகமணி பதிந்திருப்பது போல, **திரை மேல்**—பாற்கடலின் மேலே, **கிடந்தானை** —பள்ளிகொண்டவனாய், **கேழலாய்**-வராஹரூபியாய், **பூமி**-உலகத்தை, **கீண்டானை**-(அண்ட$_3$பி$_4$த்தியில் நின்றும் ஒட்டு விடுவித்து,**இடந்தானை**—எடுத்தவனான எம்பிரானை, **என் உள்ளம்**—என் மனமானது **ஓவாது**—இடைவிடாமல், **எப்போதும்**—எல்லாக் காலத்திலும், **உரைமேற்கொண்டு**—உரைப்பதில் ஈடுபட்டு, **ஏத்தி**—(அவனுடைய கல்யாணகு$_3$ணங்களைப்) புகழ்ந்து, **எழும்**—உய்ந்துபோகும்.

அவ:— இருபத்தைந்தாம் பாட்டு. இவனுடைய இந் நீர்மை அநுப$_4$வித்தால் வேறொன்றால் போதுபோக்க வொண்ணாது என்கிறார்.

---

**அவதாரிகை:**— அவன் ஓவாதே அழுதபடியைககண்டு இவரும ஓவாதே ஏத்தத் தொடங்கினார்.

**உரை:**— ஒரு மலையின்மேலே ஒரு மரதககி$_3$ரி படிந்தாற் போலே ஸ்வஸந்நித$_4$ாநத்தாலே அலையெறிகிற திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனாய், சிறுக்கன் ஆர்த்தி தீர்க்கைக்காக நரஸிம்ஹமாய்த் தூணிலேவந்து தோற்றி ஹிரண்யனைப் பிளந்து பொகட்டவனாய், மஹாவராஹமாய்

---

*அவதாரிகை:*—அவன் விடாமல் அழுதபடியைக் கண்டு ஈடுபட்டு, இவர் விடாமல் துதித்தபடியைச் சொல்லுகிறார்.

*வ்யா:*—*(வரைமேல் மரதகமேபோல)* ஒரு மலையின்மேலே ஒரு மரதகமலை படிந்திருப்பதுபோலே. *(திரைமேல் கிடந்தானை)* தன் ஸ்பர்ஶத்தாலே அலையெறியும் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனை. *(கீண்டானை)* பிரஹ்லாதனை சிறுவனைப்பெற்ற தந்தையே துன்புறுத்த, அவ்வருத்தம் போகைக்காக நரசிங்கமாய்த் தூணிலே தோற்றி, இரணியனைப் பிளந்தவனை. *(பூமி கீண்டானை இடந்தானை)* என்று கூட்டி வராஹசேஷ்டிதமாகவும் கொள்ளலாம்.



வ்யா:— (உரைமேல்கொண்டு) மேலான உரையைக் கொண்டு; அதாவது — வாக்குக்கு விஷயமானத்தைக் கொண்டு. அன்றிக்கே, உரைக்கையிலே மேற்கொண்டு; அதாகிறது—சொல்லிச்செல்லுகையிலே கிளர்ந்து. (என்னுள்ளமோவாதெப்போதும்) என்னுடைய ஹ்ருத$_3$யமானது உச்சிவீடுவிடக்கடவதன்றிக்கே. ஸ்வரூபம் ஒரு காலாக அழியுமோ? ஒருமலையிலே ஒரு மரதக கி$_3$ரியானது பரப்புமாறப் படிந்தாற்போலேயாயிற்று திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினபோது இருக்கும்படி. ஸர்வேஶ்வரனாய், ஸர்வஶக்தியானவனுடைய ஸௌலப்$_4$ய சரிதங்களைச் சொல்லுகைக்கு.

(என்னுள்ளம் இத்யாதி$_3$) த$_3$ாஸவ்ருத்திகனான என்னுடைய மநஸ்ஸானது இடைவிடாது. (எப்போதும் இத்யாதி$_3$) ஒரு பர்வத ஶிக$_2$ரத்திலே இந்த்$_3$ரநீலமணி இருந்

---

ப்ரளயத்திலே கரைந்து அண்ட$_3$பி$_4$த்தியிலே ஒட்டின பூ$_4$மியை இடந்தெடுத்துக்கொண்டு ஏறினவனை என்னுடைய ஹ்ருத$_3$யமானது உரைக்கையிலே தத்பரமாய்க் கொண்டு உச்சிவீடுவிடாதே ஸர்வகாலத்திலும் இவ்வபதா$_3$னங்களைச் சொல்லிப் புகழ்ந்து உஜ்ஜீவியாநிற்கும்.

---

*(கேழலாய் பூமி இடந்தானை)* மஹாவராஹமாய்,— பிரளயத்திலே துன்புற்று அண்ட$_3$ச்சுவரிலே ஒட்டின பூ$_4$மியைக் குத்தி எடுத்துக்கொண்டுவந்தவனை. *(கேழலாய்க் கீண்டானை பூமியிடந்தானை)* என்று கூட்டி, வராஹமாய், பூ$_4$மியை அண்ட$_3$ச்சுவரிலிருந்து பிளந்து, பின்னர் குத்தியெடுத்து ஸ்வஸ்த$_2$ானத்திலே வைத்தவனை என்றும் கொள்ளலாம். *(கிடந்தானை கீண்டானை)* துன்புற்றவரைக் கண்டால் படுக்கை அடிக்கொதிக்கும்படி. "கீண்டானை பூமியிடந்தானை" என்கையாலே ஸர்வேஶ்வரன் என்றும், ஸர்வஶக்தியென்றும் உணர்த்தப்படுகிறது. "கேழலாய்" என்றதால் ஸௌலப்$_4$ய ஸௌசீல்யங்கள் காட்டப்படுகின்றன. *(என் உள்ளம்)* இக்கு$_3$ணங்களிலே ஈடுபட்டுள்ள என் நெஞ்சு; அடியானான

தாற்போலே விளங்குகிற ஸமுத்$_3$ரஶாயியானவனை. (கிடந்தானைக் கீண்டானை) ஆர்த்தரைக் கண்டால் படுக்கை அடிக்கொதிக்கும்படி. (ஏத்தி எழும்) ஸ்துதித்து உஜ்ஜீவிக்கும்.

அவ:— (உரைமேல்கொண்டு) இவனுக்கு நினைவும் பேச்சும் வெண்ணெயிலே ஆனாற்போலே, ஆழ்வார்க்கு நினைவும் பேச்சும் இவன் பக்கலிலே ஆனபடி சொல்லுகிறது.

வ்யா:— (உரைமேல்கொண்டு) வாக்குக்கு விஷயமாகக் கொண்டு. வாக்$_3$வ்ருத்தியை மேற்கொண்டு என்னவுமாம். (என்னுள்ளம் இத்யாதி$_3$) ஒரு மலைமேலே மரதகம் கிடந்தாற்போலே திரைமேலே கண்வளர்ந்தருளுகிறவனை. (கீண்டானை இத்யாதி$_3$) வராஹரூபியாய்ப் புக்கு அண்ட$_3$பி$_4$த்தியில்நின்றும் ஒட்டுவிடுவித்து பூ$_4$மியை இடந்தவனை. (ஏத்தியெழும்) ஏத்தி உஜ்ஜீவியாநின்றது. 25.

---

''உரைமேற்கொண்டு' என்று மேலான உரையைக் கொண்டு. உத்க்ருஷ்டமான ஶப்$_3$த$_3$ங்களைக்கொண்டு என்னவுமாம். ''சேழலாய்க் கீண்டானைப் பூமியிடந்தானை'' என்று இரண்டையும் இங்கேயாக்கி, அண்ட$_3$பி$_4$த்தியிலே ஒட்டின இத்தை முதல் கீண்டு, பின்னை இடந்தெடுத்துக் கொண்டு ஏறினபடியைச் சொல்லிற்றாகவுமாம் 25.

---

என் நெஞ்சு; என்னிலும் முன்னிற்கும் என் நெஞ்சு, (உரைமேற்கொண்டு) உரைக்கப்புக்கு வேறொன்றை நினையாதே, உரைக்கையிலேயே ஈடுபட்டு, மேன்மேலே சொல்லி என்றுமாம். மேலான உரைகளான வேத$_3$ம் முதலானவற்றைக் கொண்டு என்றுமாம். (ஓவாது) இடைவிடாமலும் ஸ்வரத்தில் சிறிதும் குறையாமலும். (ஏத்தி எழும்) இந்த கு$_3$ணங்களையும் செயல்களையும் சொல்லிப்புகழ்ந்து உயர்வடையும். என் நெஞ்சம் இதனாலேயே உய்வுபெறும் என்று கருத்து. (ஏத்தி எழும்) ''முடியானே'' [திருவாய் 3-8] என்னும் திருவாய்மொழியிற் போலே சேதநஸமாதி$_4$யாலே என் நெஞ்சு என்னிலும் முன் நின்று உய்வடைந்தது என்கை. 25.



26. எழுவார் விடைகொள்வா ரீன்றுழா யானை
வழுவா வகைநினைந்து வைகல்—தொழுவார்
வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடமே வானோர்
மனச்சுடரைத் தூண்டும் மலை.

**பதவுரை:—எழுவார்**—(செல்வத்தைப் பெற்று) அகலுமவர்களான ஐஶ்வர்யார்த்தி$_2$களும், **விடைகொள்வார்**—(எம்பெருமானைவிட்டு நித்யமாகப்) பிரிந்துபோகும் கைவல்யார்த்தி$_2$களும், **ஈன் துழாயானை**—இனிய துழாய்மாலையையுடைய எம்பெருமானை, **வழுவா வகை நினைந்து**—பிரியாமலிருக்கவேண்டுமென நினைத்து, **வைகல்**-தினந்தோறும், **தொழுவார்**—வணங்குமவர்களான ப$_4$க$_3$வத் ப்ராப்திகாமர்களுமாகிய இம்மூவருடைய, **வினைச் சுடரை**—(அவரவர்களுடைய ப்ராப்யத்துக்கு விரோதி$_4$யான) பாபத் தீயை, **நந்துவிக்கும்**—அவிக்கும், **வேங்கடமே**-திருவேங்கடமலையே, **வானோர்**—நித்யஸூரிகளுடைய, **மனச்சுடரை**—திருவுள்ளமாகிற விளக்கை, **தூண்டும் மலை**-தூண்டுகின்ற மலையாகும்.

**அவ:—இருபத்தாறும்பாட்டு.** (எழுவார்) **எல்லார்க்கும் நினைவும் செயலும் ஒக்கப் பரிமாறலாவது பரமபத$_3$த்திலேயன்றோ? என்னில்; நித்யஸூரிகளுங்கூட அவனுடைய ஸௌலப்$_4$யம் காண வருகிறது திருமலையிலேயன்றோ என்கிறார்.**

---

**அவதாரிகை:—** அவ்வவதாரங்களுக்குப் பிற்பாடரானார் இழவைப் பரிஹரிக்கைக்காகத் திருமலையிலே வந்து ஸந்நிஹிதனானான் என்கிறார்.

**உரை:—** ''போற்றியென்று ஏற்றெழுவர்'' என்கிற படியே, 'எங்களுக்கு அபி$_4$மதமான த்$_3$ருஷ்டைஶ்வர்யத்தைத்

---

*அவதாரிகை:—* வராஹ நரஸிம்ஹாத்$_3$யவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களுடைய குறையைப் போக்குவதற்காகத் திருமலையிலேவந்து, அனைவர்க்கும் அருகில் நிற்கிறான் என்கிறார்.

*வ்யா:— (எழுவார்) ''பொருள் கையுண்டாய்ச் செல்லக் காணில் போற்றி என்று ஏற்றெழுவர்''* [திருவாய் 9-1-3]

வ்யா:—(எழுவார்) ஐஶ்வர்யம் வேணுமென்று மேலே மேலே ப்ரார்த்தி2க்குமவர்கள். (விடைகொள்வார்) ஆத்ம ப்ராப்தியே அமையும்; நீ வேண்டாவென்று இவன் பக்க லில்நின்றும் அகலுமவர்கள். (ஈன்றுழாயானை இத்யாதி3)

---

தரலாகாதோ?' என்று ப்ரயோஜனத்துக்குக் கையேற்றுக் கிளர்ந்து, அது கைப்பட்டவாறே விட்டகன்றுபோம் ஐஶ்வர்யார்த்தி2களும், 'உன் அநுப4வம் வேண்டா; எங்க ளாத்மாவை அநுப4வித்துக்கொண்டு, ஒருநாளும் உன் முகத்திலே விழியாதிருக்கும்படி விடைகொள்ளுகைக்குத்

---

எனகறபடியே நாங்கள் விரும்பும் இம்மைச் செல்வத்தைத் தரக்கூடாதா?' என்று இம்மைப்பயனுக்காகக் கையேற்று எழுந்து. அது கிடைத்தவுடன் கொடுத்தவனைவிட்டு எழுந்து செல்லுமவர்கள். ஐச்வர்யார்த்தி2களைச் சொன்னபடி. (விடை கொள்வார்) நிரந்தரமாக எம்பெருமானிடம் விடைபெறும் கைவல்யார்த்தி2கள். பரமபுருஷனை நேரில் கண்டும், அவன் இனிமையில் நெஞ்சுசெலுத்தாமல், சாணிச்சாற்றைப்போலே, தங்களைப் பரிஶுத்3த4ப்படுத்தினவன் என்றே நினைத்து, "உன் அநுப4வம் எங்களுக்குத் தேவையில்லை. எங்களுடைய ஆத் மாவை அனுப4வித்துக்கொண்டு, ஒருநாளும் உன் முகத்தில் விழிக்காதிருக்கும்படி விடைகொள்ளுகைக்கு உன் கையாலேயே நீ அனுமதிச்சீட்டுக் கொடுக்கவேணும்" என்று ப்ரார்த்தி2த்து, ஸ்வாத்மாநுப4வத்தைப்பெற்று நித்யமாக விடைகொண்டு போமவர்களன்றோ கைவல்யார்த்தி2கள். (ஈன் துழாயானை வழுவாவகை நினைந்து வைகல் தொழுவார்) மிகவினிய திருத் துழாயாலே அலங்கரிக்கப்பட்டவனுகையாலே தானே மேலான பயனுயிருப்பவனை. தாழ்ந்தவையான ஐஶ்வர்யகைவல்யங்களைப் பெற்றகலாமல், ஒருநாளும் விட்டுநீங்காமல் அருகிலிருந்து அநுப4விக்கும் முறையை நினைத்து, எல்லாக் காலமும் அநு ப4விக்குமவர்களான ப4க3வச்சரணார்த்தி2களான ஜ்ஞானிகளைச் சொல்லுகிறது. 'வைகல் தொழுவார்' என்று தைலதா4ரையைப் போல் இடைவிடாத ப4க்தியைச் சொல்லுகிறது. 'வழுவாவகை' என்று பரமபத3த்தில் விட்டுப்பிரியாமல் அனுப4விப்பதைச்



இவனை நாங்கள் பிரியாதொழியவேணும் என்று நினைத்து. காலமெல்லாம் தொழுவார்கள். (வினை இத்யாதி3) ப4க3வத் ப்ராப்திவிரோதி4, ஆத்மப்ராப்திவிரோதி4, ஐஶ்வர்ய ப்ராப்திவிரோதி4 ஆன பாபங்களை, எரிகிற நெருப்பை அவித்தாற்போலே நஶிப்பிக்கும் வேங்கடமே. (வானோர் இத்யாதி3) நித்யஸூரிகளுடைய கிளர்ந்த மனஸ்ஸை 'அவ னுடைய ஸௌலப்4யம் காணப்போரிகோள்' என்று கிளர்த்தா நிற்கும் திருமலை. காலாந்தரமன்று; ஸந்நிஹிதம்.

(எழுவார்) ப்ரயோஜநம் கைபுகுந்தவாறே போவார் ஐஶ்வர்யார்த்தி2கள். (விடை கொள்வார்) ப2லம் நித்ய மாகையாலே மீட்சி இல்லை கேவலர்க்கு. (வினை இத்யாதி3)

---

திருக்கைச் சிறப்பிட்டருளவேணும்' என்று விடைகொண்டு போம் கைவல்யார்த்தி2களும், நிரதிஶயபோ4க்3யமான திருத்துழாயாலே அலங்க்ருதனாய், பரமப்ராப்யபூ4தனான வனை ஒருநாளும் விட்டுநீங்காதே கிட்டிநின்று அநுப4விக்கும் ப்ரகாரத்தை அநுஸந்தி4த்து ஸர்வகாலமும் அநுப4விக்கக் கடவர்களாயிருக்கும் ப4க3வச்சரணார்த்தி2களுமான இவ் வதி4காரிகளுடைய தத்தத்புருஷார்த்த2 ப்ரதிப3ந்த4கமான

---

சொல்லுகிறது. ஆக, இவ்வளவால், கீ3தையில் ஆர்த்தனென் றும், அர்த்தா2ர்த்தி2யென்றும் சொல்லப்பட்ட ஐஶ்வர்யார்த்தி2 களும், 'ஜிஜ்ஞாஸு' எனப்படும் கைவல்யார்த்தி2யும், 'ஜ்ஞானீ' எனப்பட்ட ப4க3வத்3ப4க்தனும் எடுக்கப்பட்டனர். (வினைச் சுடரை) முன் சொல்லப்பட்ட மூவகைப்பட்ட அதி4காரிகளுக் கும் அவரவருடைய பயனை அடையத் தடையாயிருக்கும் பாபங்களாகிற நெருப்பை. (நந்துவிக்கும் வேங்கடமே) உருத் தெரியாதபடி கணத்திலே அவிக்கும் திருவேங்கடமே கிடீர். (வானோர் மனச்சுடரைத் தூண்டும் மலை) பாபத்தின் வாஸனையும் தொடமுடியாதபடி பரமபத3த்திலிருக்கும் நித்யஸூரிகளின் திருவுள்ளமாகிற விளக்கைத் தூண்டும் மலை. ஒரு சுடரை அவிப்பதே ஒரு சுடரைத் தூண்டுவதாயிருப்பதே! (மனச் சுடரைத் தூண்டும் மலை) பரமபத3த்திலிருக்கும்போது அவ

இம் மூவர்க்கும் உத்3தே3ஶ்ய விரோதி4களைப் போக்கும். நந்துவிக்கை - அவிக்கை. (வானோர் இத்யாதி3) இங்குள்ளார் ||"ஒழிவில் காலம்" என்ன, அங்குள்ளார் /அகலகில்லேன் என்னச் சொல்லும். 26.

27. மலையால் குடைகவித்து மாவாய் பிளந்து
சிலையால் மராமரமேழ் செற்று—கொலையானைப்
போர்க்கோ டொசித்தனவும் பூங்குருந்தம் சாய்த்தனவும்
கார்க்கோடு பற்றியான் கை.

**பதவுரை:- மலையால்**-கோ3வர்த்த4னகி3ரியைக்கொண்டு, **குடை கவித்து**—குடையாகக் கவித்தும், **மா வாய் பிளந்து**—குதிரையாய் வந்த கேஶி என்னும் அஸுரனின் வாயைப் பிளந்தும், **சிலையால்**—வில்லாலே, **மராமரம் ஏழ் செற்று**—ஏழு மராமரங்களையும் துளைத்தும், **கொலை யானை**—கொல்லுவதற்காக நிறுத்தின யானையின், **போர் கோடு ஒசித்தனவும்**-சண்டைசெய்யும் த3ந்தங்களை ஒடித்தவையும், **பூங்குருந்தம் சாய்த்தனவும்** — பூத்த குருந்தமரத்தைத் தள்ளினவையும், **கார் கோடு** — மேக4ம்போல் முழங்கும் ஶங்க2த்தை, **பற்றியான்** — பிடித்தவனுடைய, **கை** — திருக்கைகளேயாகும்.

---

பாபாக்3னியை உருத்தெரியாதபடி நஶிப்பிக்கும் திருமலையே காணும், அஸ்ப்ருஷ்ட பாபக3ந்த4ரான நித்யஸூரிகளுடைய திருவுள்ளமாகிற விளக்கை, அவன் ஶீலாதி3கு3ணநுப4வத்தின் ஶ்ரத்3தை4யை வர்த்தி4ப்பித்துக்கொண்டு ப்ரேரியாநிற்கும் மலை. 26.

---

னுடைய ஸௌலப்4ய ஸௌஶீல்ய வாத்ஸல்யாதி3கு3ணங்கள் பகல்விளக்குப்போலே ப்ரகாஶமற்றிருக்குமாகையாலே, அவற்றை அநுப4விக்காத குறையாலே ஸூரிகளின் மனச்சுடரும் மங்கியிருக்கும். இங்கு அவை இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாஶிக்கையாலே, அக்கு3ணங்களை விஶேஷமாக அநுப4விக்கச் செய்வதன்மூலம் திருவேங்கடமலை ஸூரிகளின் மனச்சுடரையும் தூண்டுவதாகிறது. 26.

---

|| திருவாய் 3-3-1. / திருவாய் 6-10-10.



அவ:—இருபத்தேழாம் பாட்டு. (மலை இத்யாதி3) திருவேங்கடமுடையானுடைய திருக்கையைப் பார்த்தார்போலே.

வ்யா:—(மலையால் குடைகவித்து) வர்ஷத்துக்குக் குடை அபேக்ஷிதமிறே. இந்த்3ரன் ஆஸுரப்ரக்ருதியல்லாமை

---

**அவதாரிகை:**—இங்கே எழுந்தருளிநிற்கிற திருவேங்கடமுடையானுடைய தோளின் துடிப்பைக் கண்டபோதே அவதாரங்களில் விரோதி4வர்க்க3த்தைப் பொடிபடுத்தின வீரப்பாடடங்கலும் காணலாம் என்கிறார்.

**உரை:**— இந்த்3ரன் ப்ரவர்த்திப்பித்த சல்வர்ஷத்தில் ரக்ஷ்யவர்க்க3ம் அழியாதபடி கைக்கெட்டிற்றொரு மலையாலே

---

*அவதாரிகை:*—திருமலையிலே எழுந்தருளிநிற்கிற திருவேங்கடமுடையானுடைய தோளின் துடிப்பைக் காணும்போதே அவதாரங்களில் எதிரிக்கூட்டங்களைப் பொடியாக்கின வீரச்செயல்கள் எல்லாவற்றையும் காணும்படியாயிருக்கும் என்கிறார்.

*வ்யா:*—*(மலையால் குடை கவித்து)* ஆயர்களை ரக்ஷிக்கும் விஷயத்தில் இந்த்3ராதி3 தே3வர்களோடு, ஒரு மலையோடு வாசியில்லை என்று உணர்த்துவதற்காக, இந்திரனுக்கிட்ட சோற்றை மலைக்கிடும்படி கண்ணன் நியமிக்க, அவன் நியமனப்படி ஆயர்கள் மலைக்குப் பூசையிட, பசிப்பிணியாலே கோபங்கொண்ட இந்திரன் பொழிந்த கல்மலையாலே கன்றுகளும், பசுக்களும், கோ3பிகளும், இடையர்களுமான திருவாய்ப்பாடி முழுவதுமே நோவுபட, அவை அழிந்துபோகாதபடி கோ3வர்த்த4னகி3ரியைக் குடையாகப் பிடித்து ரக்ஷித்ததைச் சொல்லுகிறது. *(மலையால்)* கைக்கெட்டினது அந்த கோ3வர்த்த4ன மலையேயாகையால் அதைக்கொண்டு ரக்ஷித்தான். *(குடை கவித்து)* குடைபிடிப்பாரைப்போலே, மலையைத் தலைகீழாக்கிக் குடையாகப்பிடித்து, மழையால் ஆய்ப்பாடியிலுள்ளார் நலிவுபடாதபடி ரக்ஷித்து. மழையென்றால் குடைதானே வேண்டியது. ஒருவரிருவரல்லாமல் பஞ்சலக்ஷம் குடியாகையாலே மலையைக் குடையாகப் பிடித்தான். "இந்திரன் அசுரத்தன்மை கொண்ட

**யாலே பசிக்$_3$ராஹத்தாலே செய்தானாகில், மலையை எடுத்து நம்மை நோக்கிக்கொள்வோமென்று மலையைக் குடையாகக் கவித்து.** (மாவாய் பிளந்து) **பண்ணின ப்ராதிகூல்யத்தின் க$_4$னத்தாலே கேஶியைக் கொன்று.** (*சிலை* இத்யாதி$_3$)

குடைபிடிப்பாரைப்போலே கீழதுமேலதாக மறித்து [illegible]க்ஷித்துத் தன்னை விழுங்குவதாக வந்த கேஶியாகிற குதிரையினுடைய வாயை இருபிள்வாகக் கிழித்துப் பொகட்டு, க்ஷத்ரியத்வத்துக்கு ஏகாந்தமாகவெடுத்த திருவில்லாலே ஓராஶ்ரிதனை விஶ்வஸிப்பிக்கைக்காக மராமரங்களேழையும் இழியச்செய்து, எதிர்த்தவர்களைக் கொன்று விழவிடும்

வனல்லன்; பசிப்பிணியாலே செய்தான் பாவம்; அவன் பா$_3$த$_4$கனாகும்போது இம்மலையும் ரக்ஷகமாகக்கூடும் என்று இவர்களுக்குக் காட்டுவோம்'' என்னும் திருவுள்ளத்தாலே, இந்திரனை தண்டிக்காமல், மலையைக்கொண்டு ஆயர்களைக் காத்தான் கண்ணன். (*மலையால் குடைகவித்து*) அக$_4$டிதக$_4$டநாஸமர்த்த$_2$னான இவன் நினைத்தால் மலையைக் குடையாகவும் ஆக்குவான் என்று கருத்து. (*மாவாய் பிளந்து*) நிஷ்காரணமாகக் கண்ணனையே விழுங்கவேணும் என்று குதிரையுருக்கொண்டு வந்த கேஶியின் வாயை வாடிய நாரைக் கிழிப்பதுபோலே விளையாட்டாக இரு பிளவாகக் கிழித்து. இந்திரன் பசிப்பிணியாலே நலிந்தானாகையாலே அவனை தண்டிக்காமல் தமரைத் தானே நோக்கினான். கேஶி காரணமில்லாமல் கொல்லவந்தானாகையாலே, அவனை அழித்தேவிட்டான். (*சிலையால் மராமரமேழ் செற்று*) க்ஷத்திரியனாய் அவதரித்த ராமாவதாரத்திலே, க்ஷத்திரியர்களுக்குரிய வில்லாலே, எய்யவொண்ணாதபடி கூட்டமாக நின்ற ஏழு மராமரங்களையும் ஓரம்பாலே, ஸுக்$_3$ரீவனுக்குத் தன் ப$_3$லத்திலே நம்பிக்கை பிறப்பதற்காகத் துளைத்து விழச்செய்து. இதுவும் அக$_4$டிதக$_4$டநாஸாமர்த்$_2$யத்தைக் காட்டுகிறது. (*மலையால்...செற்று*) இடையர் செய்யும் பால்கறப்பது, தயிர் கடைவது முதலான செயல்களெல்லாம் முன் கை உரத்தாலே யாயிருக்கும்; அந்த ஜாதியிலே பிறந்தமைக்கேற்பக் கண்ணன் தன் முன்கையுரத்தைக் காட்டும்படியாக மலையைக் குடையாகப் பிடிப்பது, மாவாய்பிளப்பது ஆகிய காரியங்களைச் செய்தான்;



**அவதாரத்துக்கடுத்த ஆயுத$_4$த்தாலே மராமரமேழையும் செற்று.** (கொலையித்யாதி$_3$) **கொல்லக்கடவதாக நிறுத்தின குவலயாபீட$_3$த்தினுடைய பொராநின்ற கோட்டை அநாயாஸேந முறித்தனவும்.** (பூங்குருந்தம் சாய்த்தனவும்) **பூப் பறித்தனவும்.** (கார்க்கோடித்யாதி$_3$) **ஶ்ரமஹரமாய் முழக்கத்தை உடைத்தாயிருக்கும் என்கை. அன்றிக்கே, திருக்கையிலே ஸ்ரீபாஞ்சஜந்யம் இருந்தபோது மேக$_4$த்தைப்பற்றி**

குவலாபீட$_3$த்தினுடைய பொருகைக்குப் பரிகரமான கொம்பைப் பிடுங்கிப் பொகட்டனவும், கண்டார்க்கு ஆகர்ஷகமாம்படி முட்டாக்கிடப் பூத்துக்கிடக்கிற குருந்தை வேர்

க்ஷத்ரியர் செய்யும் அருஞ்செயல்களெல்லாம் வில்லாலேயாயிருக்கும்; அந்த ஜாதியிலே பிறந்தமை தோற்ற இராமன் வில்லாலே ஏழு மராமரங்களையும் வீழ்த்தினான் என்னும் அவதாரத்தில் மெய்ப்பாட்டைக் காட்டுகிறது. அக$_4$டிதக$_4$டநாஸாமர்த்$_2$யத்தோடு அவதாரத்தில் மெய்ப்பாடும் கலந்திருக்கை. முன்கையுரத்தாலே கண்ணன் செய்த மற்றும் சில காரியங்களையும் காட்டுகிறார். (*கொலையானைப் போர்க்கோடு ஒசித்தனவும்*) எதிரிகளைக் கொல்வதையே தொழிலாகக்கொண்ட குவலயாபீட$_3$ம் என்னும் யானையுடைய த$_3$ந்தத்தைக் கையாலே பிடுங்கினவையும், (*கொலையானை*) கண்ணனைக் கொல்வதற்காகக் கம்ஸன் நிறுத்தின யானை என்றுமாம். (*போர்க்கோடு*) யுத்$_3$த$_4$ம் செய்வதற்குக் கருவியான த$_3$ந்தம். (*ஒசித்தனவும்*) வாழைத் தண்டை ஒடிப்பதுபோலே ஒடித்தபடி. (*பூங்குருந்தம் சாய்த்தனவும்*) கண்டவர்களை மயக்கும்படி மரம் நிறையப் பூத்துக் குலுங்கிய குருந்தமரத்தைப் பிடுங்கிப்போட்ட செயலைச்செய்தவையும், (*பூங்குருந்தம்*) பூப்பறித்தாற்போலே விளையாட்டாகச் செய்தபடி. இவற்றையெல்லாம் செய்தது எது? எனில்: (*கார்க்கோடு பற்றியான் கை*) குளிர்த்தி, தாபத்தை ஆற்றும் தன்மை, பெருமை, முழக்கம் முதலிய கு$_3$ணங்களால் மேக$_4$த்தை ஒத்திருக்கும் ஶங்க$_2$த்தைப் பற்றியிருப்பவனுடைய கைகளே இவ்வருஞ்செயல்களைச் செய்தன. (*கார்க்கோடு*) மேக$_4$த்தை

யிருந்த சங்குபோலே இருந்ததென்கை. இடையர் செய்வ தெல்லாம் முன்கை உரத்தாலே, க்ஷத்ரியர் என்றும் வில் லாலே என்னுமிடம் தோற்றுகிறது. ஸ்ரீபாஞ்சஜந்யம் பிடிக்க வும் பொருத ம்ருது$_3$வான கையைக்கொண்டு கிடீர் இதெல் லாம் செய்தது.

அவ:— சேஷ்டிதங்களிலே உருகுகிருர். ஸுகுமாரமான கையைக் கொண்டே இப்பெரிய செயல்களைச் செய்வதே! செய்யாநின்ருல் அநாயாஸேந செய்வதே!

வ்யா:— (மலையித்யாதி$_3$) மலையாக விநியோக$_3$ங் கொண்டானே? (மாவாய் பிளந்து) நாரத$_3$ாதி$_3$கள் கூப் பிடும்படி வந்த கேசியை நெட்டிக்கோரை கீண்டாற்போலே கீண்டு. (சிலையித்யாதி$_3$) எய்யவொண்ணுதபடி திரளநின்ற மராமரங்களை. (கொலையித்யாதி$_3$) கொலையிலே உற்ற ஆனை. (பூங்குருந்தம்) தழைத்துப் பூத்து நின்ற. (கார்க்கோடு) குளிர்ந்து ஶ்ரமஹரமாய்ப் பெருத்து முழங்குகை. ஸ்ரீபாஞ்ச ஜந்யம் தொடப்பொருத கைகிடீர்! 27.

28. கைய வலம்புரியும் நேமியும் கார்வண்ணத்
தைய மலர்மகள்நின் னுகத்தாள்—செய்ய
மறையான் நின்னுந்தியான் மாமதிள் மூன்றெய்த
இறையான் நின்னுகத் திறை.

---

பறியும்படி தள்ளி விழவிட்டனவும், குளிர்ந்து முழங்குகிற ஸ்வப$_4$ாவத்தாலே மேக$_4$த்தோடு ஒத்திருந்துள்ள ஸ்ரீபாஞ்ச ஜந்யத்தை த$_4$ரித்தருளினவனுடைய திருக்கைகள் கிடீர். 27.

---

ஒத்திருக்கும் ஶங்க$_2$ம், கார்மேகவண்ணனின் திருமேனியைப் பற்றியிருக்கிறதாகையாலே. மேக$_4$த்திலேயுள்ள சங்கு என்கிற தாகவுமாம். (*பற்றியான்கை*) ஸ்ரீபாஞ்சஜந்யத்தைப் பிடித்தாலும் கன்றிப்போகும் கையைக்கொண்டு கிடீர் இவ்வருஞ்செயல்களைச் செய்தது! 27.



பதவுரை:— **கார்**—மேக$_4$ம் போன்ற, **வண்ணத்து**—திருநிறத்தையும் ஸ்வப$_4$ாவத்தையுமுடைய, **ஐய** — எம் பிரானே! **வலம்புரியும்** — ஸ்ரீபாஞ்சஜந்யமும், **நேமியும்**—திருவாழியாழ்வானும், **கைய**—கையிலிருக்கின்றன; **மலர் மகள்**—பூவில் அவதரித்த பெரியபிராட்டியார், **நின்**—உன்னுடைய, **ஆகத்தாள்** — திருமார்பில் இருக்கிருள்; **செய்ய மறையான்**—உன்னைக் காட்டுகையாகிற செம்மை யையுடைய வேத$_3$த்தை ஓதும் நான்முகன், **நின்**—உன் னுடைய, **உந்தியான்**—திருநாபி$_4$யிலே பிறந்தவன்; **மா மதிள்**—பெரிய மதிள்களை உடைய, **மூன்று**—முப்புரங்களை யும், **எய்த**—அம்பெய்து அழித்தவனுய், **இறையான்**—தன்னை ஈஶ்வரனுக அபி$_4$மானித்திருக்கும் ருத்$_3$ரன், **நின் ஆகத்து**—உன்னுடைய திருமேனியில், **இறை**—ஒரு மூலை யைப் பற்றிக் கிடக்கிறவன்.

அவ:— இருபத்தெட்டாம் பாட்டு. (கையித்யாதி$_3$) ஐஶ் வர்யம் சொல்லுகிறதென்னவுமாம். நீர்மை சொல்லுகிற தென்னவுமாம்.

---

**அவதாரிகை:**— திருமலையிலே எழுந்தருளிநிற்கிற திரு வேங்கடமுடையான் திருமேனியில் அழகும் ஐஶ்வர்யமும் ஶீலாதி$_3$கு$_3$ணங்களும் நிழலிட்டுத் தோற்றுநின்றது கிடீர் என்கிருர்.

---

*அவதாரிகை:*— திருமலையிலே எழுந்தருளிநிற்கிற திரு வேங்கடமுடையான் திருமேனியிலே அழகும், ஐஶ்வர்யமும், ஶீலம் முதலான கு$_3$ணங்களும் ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்றன என்கிருர்.

*வ்யா:*— (*கார் வண்ணத்தைய*) மேக$_4$ம்போலே தாபங்களை ஆற்றும் வடிவையுடைய ஸ்வாமியே! (*கார் வண்ணம்*) கைம் மாறு வேண்டாத வண்மை முதலான கு$_3$ணங்களாலும் மேக$_4$த்தை ஒத்திருப்பவன். வடிவிலேயே கு$_3$ணங்கள் பிரகாஶிக்கிறபடி. (*ஐய*) கைம்மாறு கருதாமல் உதவுமவனு யிருப்பதிலிருந்தே நீ இயற்கையிலேயே அனைவர்க்கும் ஸ்வாமி

வ்யா:— (கைய வலம்புரியும் நேமியும்) **கைய-கையிலே யுள்ள.** ( கார்வண்ணத்தைய ) ஶ்ரமஹரமான **வடிவை யுடைய ஸ்வாமியானவனே!** (மலர்மகள் நின்னாகத்தாள்) **கோலமலர்ப்பாவை நின்திருமார்விலாள்.** (செய்யவித்யாதி3) **நேரே உன்னைக் காட்டவற்றான வேத3த்தையுடைய** ப்3ரஹ்மா **உன் திருநாபீ4கமலத்திலானன்.** (மாமதிளித்யாதி3) **தரிபுர**

---

**உரை:**— மேக4ம்போலே ஶ்ரமஹரமான வடிவையுடைய நிருபாதி4கப3ந்து4வானவனே! ஸ்ரீபாஞ்சஜந்யமும் திருவாழி

---

யாயிருப்பவன் என்று வெளியாகிறது. (*கைய வலம்புரியும் நேமியும்*) ஸ்ரீபாஞ்சஜந்யமும் திருவாழியும் தேவரீருடைய திருக்கையிலேயுள்ளன. ஐஶ்வர்யத்தையும், அழகையும் காட்டு மவையிவை. வலம்புரிச்சங்கு அரசர்க்கேயுரியது; சக்கரமும் ஏகசக்ராதி4பதிகளுக்குரியது. இப்படி ஸர்வலோகைக சக்ர வர்த்தியிவன் என்பதைக் காட்டுகையாலே ஐஶ்வர்யத்தையும் காட்டுகின்றன. பரபா4க3ரஸம் எனப்படும் வர்ணச்சேர்த்தி யழகாலே அழகையும் காட்டுமவையிவை. (*மலர்மகள் நின் ஆகத்தாள்*) அலர்மேல்மங்கையான ஸ்ரீதே3வி உன் திருமார் பிலே "அகலகில்லேனிறையும்" [திருவாய் 6-10-10] என்று கணநேரமும் பிரியகில்லாதவளாய் உறைகின்றாள். திருவுடைய தே3வன் இவனேயென்கையாலே ஐஶ்வர்யமும், அழகின் செல்வியைத் திருமார்பில் கொண்டவன் என்கையாலே அழகும் உணர்த்தப்படுகிறது. (*செய்ய மறையான் நின் உந்தியான்*) உன்னை உள்ளபடி அறிவிக்கையாகிற செவ்வையை உடைய வேத3த்தை முதலில் எம்பெருமானிடம் ஓதிப் பிறர்க்கு ஓது வித்தவனாகையாலே 'மறையான்' என்று அவ்வேத3த்தை யிட்டே நிருபிக்கப்படும் பிரமன் உன் உந்தியிலே தோன்றிய வன். (*மாமதிள் மூன்றெய்த இறையான் நின் ஆகத்து இறை*) பெரிய மதிள்களையுடைய திரிபுரங்களை எரிந்துவிழும்படி ஓரம்பாலே எய்தவனாய், 'நான் ஈஶ்வரன்' என்னும் அபி4மான முடைய உருத்திரன் உன் திருமேனியில் ஒருமூலையிலே வாழ்ந்து ஸத்தை பெறுகிறான். (*மா மதிள் மூன்றெய்த இறை யான்*) "ஊரைச் சுட்டுப் பேரைப் படைத்தான், கோட்



**த3ஹநம் பண்ணி ஈஶ்வராபி4மாநியாயிருக்கிற ருத்3ரன் உன் திருமேனியைப்பற்றி இறையாயிற்று. அன்றியே,** (நின்னாகத்திறை) **என்று திருமேனியில் ஏகதே3ஶத்திலே என்னவுமாம்.**

(கையித்யாதி3) **ஐஶ்வர்யமாதல்; அழகாதல்.** (கார் வண்ணம்) **வேறே வேணுமோ ? வடிவே அமையாதோ?** (ஐய) **என்னது என்னலாயிருக்கை.** (மலர்மகள் நின்னாகத்

---

யும் திருக்கைகளிலே உளவாயிராநின்றன. அலர்மேல் மங்கையானவள் உன்னுடைய திருமார்விலே "இறையும் அகலகில்லேன்" என்று உறையாநின்றாள். உன்னை உள்ள படி காட்டும் செவ்வையையுடைய வேத3த்தைத் தனக்கு நிரூபகமாகவுடைய ப்3ரஹ்மாவானவன் உன்னுடைய திரு

---

சொல்லி ப்ரஸித்3த4ராமாபோலே" என்பர் பெரியவாச்சான் பிள்ளை. (*இறையான்*) தமோகு3ணம் விஞ்சியபோது தன்னையே ஈஶ்வரனாக அபி4மானித்து எதிரம்புகோக்கவும் வல்லவன். (*நின்னாகத்து இறை*) "வலத்தனன் திரிபுரம் எரித்தவன்" [திருவாய் 1-3-9] "ஒருவிடமும் எந்தை பெருமாற்கரனேயோ" [திருவாய் 2-5-2] என்கிறபடியே உன்திருமேனியின் வலப்புறத் திலே ஒரு மூலையைப் பற்றிநின்று ஸத்தை பெற்றான்.

**"பஶ்யைகாத3ஶ மே ருத்3ராந் த3க்ஷிணம் பார்ஶ்வமாஶ்ரிதாந்"**

[பா4ர-மோக்ஷத4ர்மம் 166-58]

[என் வலப்புறத்திலுள்ள பதினொரு உருத்திரர்களையும் காண்பாய்] என்றும்

**"தபஸா தோஷிதஸ்தேந விஷ்ணுநா ப்ரப4விஷ்ணுநா।**
**ஸ்வபார்ஶ்வே த3க்ஷிணே ஶம்பே4ார் நிவாஸ: பரிகல்பித:॥"**

[சிவனுடைய தவத்தால் உகந்த ஸர்வேஶ்வரனான விஷ்ணுவாலே தன் திருமேனியின் வலப்புறத்தில் வஸிக்குமிடம் ஏற்படுத்தப் பட்டது.] என்றும் இதிஹாஸ புராணங்களில் சொல்லப்பட் டதை நினைக்கிறார். (*மலர்மகள் நின் ஆகத்தாள் செய்ய மறையான் நின் உந்தியான் மாமதிள் மூன்றெய்த இறையான் நின் ஆகத் திறை*) "ஏறாளும் இறையோனும் திசைமுகனும் திருமகளும்

தாள்) அலர்மேல் மங்கையுறைமார்வன். (மாமதிளித்யாதி$_3$) ஊரைச்சுட்டுப் பேரைப்படைத்தான்; கோட்சொல்லி ப்ரஸித்$_3$த$_4$ராமாபோலே. ஆகத்தில் ஏகதே$_3$ஶத்தைப் பற்றினு னென்னுதல். ஆகத்தைப்பற்றி இறையானுனென்னுதல். 28.

29. இறையும் நிலனு மிருவிசும்பும் காற்றும்
அறைபுனலும் செந்தீயு மாவான்—பிறைமருப்பில்
பைங்கண்மால் யானை படுதுயரம் காத்தளித்த
செங்கண்மால் கண்டாய் தெளி.

---

மேனியைப் பற்றி லப்$_3$த$_4$ஸத்தாகனுயிராநின்ருன். பெரிய மதிளையுடைய த்ரிபுரத்தை த$_3$க்$_3$த$_4$மாம்படி எய்துவிழவிட்ட ஈஶ்வராபி$_4$மானியான ருத்$_3$ரன் உன் திருமேனியில் ஏகதே$_3$ஶத்தைப் பற்றி லப்$_3$த$_4$ஸ்வரூபனுகாநின்ருன். 28.

---

கூருளும் தனியுடம்பன்'' [திருவாய் 4-8-1] ''ஏறனைப் பூவனைப் பூமகள் தன்னை வேறின்றி விண் தொழத் தன்னுள் வைத்து'' [திருவாய் 2-2-3] என்று நம்மாழ்வாரைப்போலே அந்யபரரான பிரமருத்திரர்களுக்கும், அநந்யையான பெரியபிராட்டியாருக்கும் ஒக்கத் திருமேனியிலே இடங்கொடுத்த ஶீலகு$_3$ணத்தை நினைத்து வியக்கிருர். ''ப்$_3$ரஹ்மாதி$_3$கள் எப்போதும் திருமேனியைப் பற்றியிருப்பார்களோ?'' என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்க, ''ஓரோ ஆபத்துக்களிலே திருமேனியிலே இடங்கொடுக்க ஆழ்வார்கள் அத்தையே வாய்புலற்றுகிருர்களித்தனையிறே'' என்று பட்டர் அருளிச்செய்தாராம். திருவாய்மொழியீட்டில் (2-2-3) எடுக்கப்பட்டது இவ்வைதிஹ்யம். (*இறையான் நின் ஆகத்து இறை*) ஈஶ்வரனென்று பெயர்பெற்ற ஶிவன் உன் திருமேனியை உபாஸித்து ஈஶ்வரனுனன் என்றும் கொள்ளலாம். ப்$_3$ரஹ்மருத்$_3$ராதி$_3$களும் தன்னைப்பற்றி நின்று ஸத்தை பெறுவார்கள் என்றதாலே இவனுடைய ஐஶ்வர்யமும், ''தாள தாமரையான், உனதுந்தியான் வாள்கொள் நீள் மழுவாளியுன் ஆகத்தான் நாளும் என்புகழ்கோ உன *சீலமே?*'' [திருவாய் 9-3-10] என்கிறபடியே ஶீலகு$_3$ணமும் உணர்த்தப் படுகின்றன. 28.



பதவுரை:— **இறையும்** — பரமபத$_3$நாத$_2$னுகவும், **நிலனும்**—பூ$_4$மியும், **இரு விசும்பும்**—பரந்த ஆகாஶமும், **காற்றும்**—வாயுவும், **அறைபுனலும்**—ஶப்$_3$தி$_3$யாநிற்கும் ஜலமும், **செந்தீயும்**—சிவந்த அக்$_3$னியுமாகவும், **ஆவான்**—ஆகின்றவன், **பிறை மருப்பில்**—இளஞ்சந்திரன் போன்ற த$_3$ந்தத்தையும், **பைம் கண்**—அழகிய கண்களையுமுடையதான, **மால் யானை**—பெருத்த யானையுடைய, **படு துயரம்**—பெரும் துயரத்தை. **காத்து**—போக்கி, **அளித்த**—ரக்ஷித்த, **செம் கண் மால் கண்டாய்**—செந்தாமரைக் கண்ணனுன பரமபுருஷன் கிடாய்; **தெளி**—(மனமே!) இதை நன்ருக அறி.

அவ:— இருபத்தொன்பதாம் பாட்டு. (இறையும்) ஐஶ்வர்யம் கண்டு அஞ்சவேண்டா; ஆஶ்ரிதபாரதந்த்ர்யமே அவனுக்கு ஸ்வரூபம் என்கிருர்.

வ்யா:— (இறையும்) பரமபத$_3$த்திலிருப்பைச் சொல்லுகிறது. (நிலனுமித்யாதி$_3$) ஜக$_3$த$_3$ாகாரனுய் லீலாவிபூ$_4$தி

---

அவதாரிகை:—'' நெஞ்சே! உப$_4$யவிபூ$_4$திநாத$_2$னுயிருக்கிற அவன் பெருமையை நினைத்துப் பிற்காலியாதே; அவன் ஆஶ்ரித பரதந்த்ரன் கிடாய்! இத்தை நன்ருக பு$_3$த்$_3$தி$_4$பண்ணு'' என்கிருர்.

உரை:— பரமபத$_3$த்திலே ஸர்வஸ்வாமித்வம் தோற்ற எழுந்தருளியிருக்கிற ஸ்ரீவைகுண்ட$_2$நாத$_2$னுமாய், பூ$_4$மியும்,

---

*அவதாரிகை:*— முற்பாட்டில் ஐஶ்வர்யத்தை அனுஸந்தி$_4$த்தவுடன் நெஞ்சம் பின்வாங்க, ''நெஞ்சே! உப$_4$யவிபூ$_4$திநாத$_2$னுயிருக்கும் அவன் பெருமையை நினைத்துப் பின்வாங்காதே; அவன் அடியார்க்கு அடிமைப் பட்டிருப்பவனன்றே; இதை நன்ருக அறிவாயாக'' என்கிருர்.

*வ்யா:*— (*இறையும்*) பரமபத$_3$த்திலே அனைவருக்கும் ஸ்வாமியாய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீவைகுண்ட$_2$நாத$_2$னுமாய். இத்தால் நித்யவிபூ$_4$தி யோக$_3$ம் சொல்லிற்று. (*நிலனும் இரு விசும்பும் காற்றும் அறை புனலும் செந்தீயும் ஆவான்*) பஞ்ச

**யுக்தனானபடி சொல்லுகிறது.** (பிறைமருப்பிலித்யாதி$_3$) **பிறைபோலும் கொம்பையுடைத்தாய், ஜாத்யுசிதமான கண்ணை யுடைத்தாய், பெருத்த ஆனையினுடைய.** (படுதுயரம் காத் தளித்த) **ஆனைக்குப் போரும்படியான துயரைப்போக்கி ரக்ஷித்த.** (செங்கண்மால்கண்டாய் தெளி) **வாத்ஸல்யாம் ருதத்தை வர்ஷியாநின்ற கண்ணையுடையனான ஸர்வேஶ்வரன்.** (தெளி) **இவனுக்கு ஆஶ்ரிதபாரதந்த்ர்யமே ஸ்வரூபம் என்னு மிடத்தை பு$_3$த்$_3$தி$_4$ பண்ணு.**

---

பரப்பையுடைத்தான ஆகாஶமும், வாயுவும், அலையெறிய ஜலமும், சிவந்த நிறத்தையுடைய தேஜஸ்தத்வமுமாகிற பஞ்சபூ$_4$தாரப்$_3$த$_4$மான லீலாவிபூ$_4$தியை ப்ரகாரதயா ஶேஷ மாக உடையவனுமாயிருக்கிற பெருமையையுடையவன்.

---

பூ$_4$தங்களாலான லீலாவிபூ$_4$தியாகவிருப்பவனும் இவனே. இத் தால் லீலாவிபூ$_4$தியோக$_3$ம் சொல்லுகிறது. *(நிலனும்)* உயிர்க ளுக்கு இருப்பிடமான பூ$_4$மியும். *(இருவிசும்பும்)* நாலுபூ$_4$தங் களும் இருக்க இடமளிப்பதாகையாலே அவற்றைக் காட்டிலும் விஸ்தாரமான ஆகாஶமும். *(காற்றும்)* ஸர்வப்ராணிகளும் உயிர்வாழக் காரணமான வாயுவும். *(அறைபுனலும்)* அலை யெறிகிற ஜலமும், ஸர்வர்க்கும் த$_4$ாரகமாயிருப்பதொன்று, *(செந்தீயும்)* காண்பது சமைப்பது முதலானவற்றுக்கு உதவும் சிவந்த தேஜஸ்தத்வமும். *(ஆவான்)* இவையெல்லாம் அவ னுக்கு ப்ரகாரமாகையாலே இவையெல்லாமாகுமவன் அவனே என்கிறது.

இப்படி உப$_4$யவிபூ$_4$தியுக்தனாகில், அவனை அணுகமுடி யுமோ? என்ன, நெஞ்சை நோக்கிக் கூறுகிறார்:— *(பிறை மருப்பில் பைங்கண் மால்யானை)* பிறைச்சந்திரன் போல் வெளுத்து வளைந்திருக்கும் கொம்பையும், ஆனைச்சாதிக்குரிய பசுமையான கண்ணையும் உடையவனாய், அடிமை செய்வதில் பெரும் பித்தையுடையவனான ஸ்ரீக$_3$ஜேந்த்$_3$ராழ்வானுடைய, *(மால் யானை)*

**"நாஹம் களேப$_3$ரஸ்யாஸ்ய த்ராணார்த்த$_2$ம் மது$_4$ஸூத$_3$ந।**
**கரஸ்த$_2$கமலாந்யேவ பாத$_3$யோரர்ப்பிதும் தவ ॥"**



**அவ:— ஐஶ்வர்யம் கண்டு வெருவாதே ஶீலத்தை அநுஸந்தி$_4$ என்கிறார்.**

**வ்யா:—** (இறையும்) **நியாமகனாய்க்கொண்டு பரம பத$_3$த்திலிருக்கும்.** (நிலனுமித்யாதி$_3$) **இந்த விபூ$_4$தியை உடையனாயிருக்கிற இருப்பு.** (மால்யானை) **உடம்பில் பெருமை பாடாற்ற ஒண்ணாமை.** (அளித்த) **புண்பட்டத்தை**

---

பிறைபோலேயிருக்கிற கொம்பையும், ஜாத்யுசிதமான பசுமையையுடைய கண்ணையுமுடையனாய், அடிமை செய்கையிலே பெரும்பிச்சனுமாயிருக்கிற ஸ்ரீக$_3$ஜேந்த்$_3$ராழ் வானுடைய, முதலையின்கையிலே அகப்பட்டுப் பட்ட து$_3$:க்க$_2$த்தைப் பரிஹரித்து, கையில் பறித்த பூச்செவ்வி யழிவதற்கு முன்னே திருவடிகளிலே பணிமாறுவித்துக் கொண்டு ரக்ஷித்தருளின வாத்ஸல்யஸூசகமான சிவந்த திருக்கண்களையுடைய வ்யாமுக்$_3$த$_4$ன் கிடாய்! இத்தை

---

[மது$_4$ஸூத$_3$னனே! இந்த ஶரீரத்தை ரக்ஷித்துக்கொள்வதற்காக நான் கரைகின்றேனல்லேன்; உன் ஆராத$_4$னத்துக்காக எடுக்கப் பெற்று என் கையிலிருக்கும் தாமரைகளை உன் திருவடிகளில் ஸமர்ப்பிக்கவே ஓலமிட்டேன்.] என்கிறபடியே அடிமையிலே பெருங்காதல் பூண்ட யானையன்றோ. பெருத்த யானை என்று மாம். உடம்பில் பெருமையாலே பாடாற்ற முடியாது என்று கருத்து. *(படுதுயரம்)* விரலுக்குத் தகுந்த வீக்கம் என்பது போலே பெருத்த யானைக்குத் தகுந்ததாயிருக்குமன்றே துயரம். *(படுதுயரம் காத்து)* முதலை வாயிலே அகப்பட்டுப் பட்ட துன்பத்தைப் போக்கி. *(அளித்து)* அதுவிரும்பியதை அளித்து ரக்ஷித்த. அதாவது:—யானை கையால் பறித்த பூவானது வாடு வதற்குள் அதைத் திருவடிகளிலே ஸமர்ப்பிக்கச் செய்து ரக்ஷித்தான் என்று கருத்து. புண்பட்ட இடத்தைத் தடவிக் கொடுத்து ரக்ஷித்ததைச் சொல்லுவதாகவுமாம். ஸர்வேஶ்வரன் ஓர் விலங்கின் காலைப்பிடிப்பதே! என்கை. இப்படிச் செய்யக் காரணமென்ன? எனில்: *(செங்கண்மால் கண்டாய்)* வாத்ஸல்யத் தாலே சிவந்த கண்களையுடைய பெரும் பித்தன் கிடாய்!

ஸ்பர்ஶித்தருளினபடி. (செங்கண்) வாத்ஸல்யம். (மால்) அரைகுலையத் தலைகுலைய வந்து தோற்றினபடி. அவன், தம்மை 39."मा शुचः" (மா ஶுச:) என்ன, திருவுள்ளத்தைத் தாம் 39. "मा शुचः" (மா ஶுச:) என்கிறார். வாசலைத் திறந்து வைப்பாரைப்போலே பெறுகைக்கு அங்கும் போக வேண்டா; இசைவே வேண்டுவது; ஆர்த்தியே வேண்டுவது. அவனே வாராவிடில் ஸமாப்4யதி4க த3ரித்3ரனே அவன்? மற்று அவனைப்பெற உபாயமுண்டோ? வாஸனையாலே "அம்மே" என்பாரைப்போலே அழைத்ததித்தனை. 29.

30. தெளிதாக வுள்ளத்தைச் செந்நிறீஇ ஞானத்
தெளிதாக நன்குணர்வார் சிந்தை - எளிதாகத்
தாய்நாடு கன்றேபோல் தண்டுழா யானடிக்கே
போய்நாடிக் கொள்ளும் புரிந்து.

பதவுரை:— **தெளிதாக** — கலக்கம் நீங்கும்படியாக, **உள்ளத்தை**—மனஸ்ஸை, **செம் நிறீஇ**—நன்கு நிறுத்தி, **ஞானத்து**—ஞானத்தாலே, **எளிதாக**—ஸுலப4மாக, **நன்கு உணர்வார்**—நன்ருக அறிபவர்களுடைய, **சிந்தை**—மநஸ்ஸானது, **எளிதாக**—ஸுலப4மாக, **தாய்நாடு**—(பசுக்கூட்டத்தின் இடையே உள்ள தன்) தாயை அடைகிற, **கன்றே போல்**—கன்றுக்குட்டியைப்போல், **தண் துழாயான் அடிக்கே**-குளிர்ந்த திருத்துழாய்மாலையையுடைய ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளையே, **புரிந்து**—விரும்பி, **போய்**—அடைந்து, **நாடிக் கொள்ளும்**—சேர்ந்து கொள்ளும்.

---

அழகிதாக பு2த்3தி4டண்ணு. "மால்" என்று அரைகுலையத் தலைகுலைய வந்து தோற்றினபடி. 29.

---

(*மால்*) "*அதந்த்ரித சமூபதி*" [ர-ஸ்த 2-57] என்று தொடங்கும் ஶ்லோகத்திலே ப4ட்டர் அருளியபடியே அரையிற்சாத்திய பீதாம்ப3ரமும், தலையில் த4ரித்த முடியும் குலையும்படியாக அதிவேக4மாக வந்த பெரும்பித்தன் என்கை. (*தெளி*) இவ் வாஶ்ரிதபாரதந்திரியத்தை அழகாக அறிவாயாக. அவனுடைய ஐஶ்வர்யத்தை நினைத்துப் பின்வாங்காதே என்று கருத்து. 29.



அவ:— முப்பதாம் பாட்டு. (தெளிதாக) ஸம்ஸாரத்திலே ஸமாஶ்ரயணீயர் பலர் உண்டென்று ப்4ரமிக்கவேண்டா; ஸம்ப3ந்த4ஜ்ஞாநமுண்டாகவே நெஞ்சுதானே அவனை ஆராய்ந்து பற்றும்.

வ்யா:— (உள்ளத்தை - தெளிதாக) விஷயப்ராவண்யத்தாலே கலுஷமான ஹ்ருத3யத்தினுடைய காலுஷ்யம்போக. (செந்நிறீஇ) செவ்விதாக நிறுத்தி. (ஞானத்தித்யாதி3)

---

அவதாரிகை:— வ்யதிரிக்தங்களில் போகாதபடி மநஸ்ஸை நியமித்துத் திருவடிகளின் உறவை அறிந்திருப்பார்க்கு, அம்மநஸ்ஸுதானே வர ப்ராப்தி பற்ருதபடி பற்றிக்கொண்டு அத்யபி4நிவிஷ்டமாய் அவனைக்கிட்டும் என்கிறார்.

**உரை:**— விஷயராக3ங்களாலுள்ள காலுஷ்யம் போய், தெளிவையுடைத்தாம்படிக்கீடாக, ஹ்ருத3யத்தை ப4க3வத் ப்ரவணமாம்படி செவ்வே நிறுத்தி, தத்3விஷயப4க்திரூபாபந்நஜ்ஞாநத்தாலே, 'அவன் ஶேஷி, நாம் ஶேஷம்' என்கிற

---

*அவதாரிகை:*— கீழ்ப்பாட்டில் பரத்வத்தை நினைத்துப் பின்வாங்கிய மனத்தை உபதே3ஶித்துத் திருத்தினார். இப் பாட்டிலே, மற்ற விஷயங்களில் காடுபாயாதபடி மனத்தைத் திருத்தித் திருவடிகளின் உறவை அறிந்திருப்பவர்களுடைய மனமானது, எம்பெருமான்தானே வருவான் என்று பார்த்திராமல், தானே மேல்விழுந்து பெருங்காதலோடு அவனைக் கிட்டும் என்கிறார்.

*வ்யா:— (தெளிதாக உள்ளத்தைச் செந்நிறீஇ)* கலங்கி நிற்கும் மனம் தெளிவுடையதாகைக்காக, அதை நல்வழிப் படுத்தி; விஷயங்களிலே மண்டிக் கலங்கிக்கிடக்கும் உள்ளம் தெளிவதற்காக, ப4க3வத்3விஷயத்திலே அதை ஈடுபடுத்தி. சென்ற பாசுரத்திற்போலே, பரத்வத்தை நினைத்துக் கலங்கியிருக்கும் மனத்தை, அவனுடைய ஸௌலப்4யத்தைக் காட்டித் திருத்தி என்கிறதாகவுமாம், (*செந்நிறீஇ*) நின்றவா நில்லா

ஞானத்தாலே எளிதாம்படி. "அவன் ஸ்வாமி, நாம் ஶேஷபூ4தர்" என்று அவனை உணர்வாருடைய சிந்தை, அநேகம் பசுக்கள் நின்றால் தாயைத் தேடும் கன்றுபோலே தண்டுழாயானடியே புரிந்துபோய் நாடிக்கொள்ளும். (செந்நிறீஇ) இந்த்3ரியங்களைத் தான் வெல்லப்பாராதே எம்பெருமான் பக்கலிலே மூட்டி விஷயங்களை ஜயிக்கப்பார்க்கை.

---

தெளிவுண்டாம்படியாக ஸாக்ஷாத்காரபர்யந்தம் நன்றாக உணர்ந்திருக்குமவர்களுடைய மநஸ்ஸானது வருத்தமற, கூடநிற்கிற பசுக்களையும் கணிசியாதே தன் தாயைத் தேடிக்கொண்டு கிட்டும் கன்றுபோலே, ஶ்ரமஹரமான திருத்துழாயாலே அலங்க்ருதனுகையாலே வகுத்த ஶேஷியு

---

நெஞ்சை இருடீகேசனிடத்திலே நிலைநிறுத்தி. (செந்நிறீஇ) மனத்தைத்தான் அடக்கி வெல்ல நினையாமல், எம்பெருமானிடம் செலுத்தி ஜயிக்கப்பார்க்கை. (ஞானத்துத் தெளிதாக உள்ளத்தைச் செந்நிறீஇ) ஞானத்தாலே தெளிந்த ப4க்தியாலே மனத்தை நேர்வழிப்படுத்தி என்றுமாம். (ஞானத்து எளிதாக நன்குணர்வார்) என்றுமாம். அவன் விஷயத்தில் அன்பாகிற அறிவாலே, ஸுலப4மாக நன்கு அவன் ஸ்வாமியாயிருப்பதையும், நாம் தா3ஸராயிருப்பதையும் அறிபவர். (எளிதாக) அநாதி3காலமாக மற்ற விஷயங்களிற்போலே, தானே மூளும் படியிருக்கை. (ஞானத்தெளிதாக நன்குணர்வார்) ஞானம்-தெளிதாக என்றும் கொள்ளலாம். அவன் விஷயத்தில் 'ப4க்தி' என்று சொல்லப்படும் அறிவாலே, 'அவன் ஶேஷி, நாம் ஶேஷம்' என்னும் தெளிவுண்டாம்படியாக, நேரே காண்பது வரையில் நன்கு அறிந்திருக்குமவர்கள் என்கை. (உணர்வார் சிந்தை) இப்படி ஸம்ப3ந்த4ஜ்ஞானமுடையவர்களுடைய மனம். (ஞானத்து எளிதாக நன்குணர்வார் சிந்தை) அவனளித்த அறிவாலே, பத்துடையடியவர்க்கெளியவன் என்று அவனுடைய நீர்மையை உணருமவர்களுடைய மனம் என்றுமாம். (எளிதாகத் தாய் நாடு கன்றே போல்) ஒரு சிரமமில்லாமல் பசுக்கூட்டத்திலே மற்ற பசுக்களை அநாத3ரித்துத் தன் தாயைக்கண்டு அடையும் கன்றுபோலே, (தண்துழாயானடிக்கே



(தெளிதாக) ஜ்ஞாநத்தாலே விஶதமான ப4க்தியாலே. (எளிதாக) விஷயங்களில் பழக்கம்போலே தானே மூளும்படியாயிருக்கை. தாயாயிருக்கிறபடி. (அடியே) அல்லாத ஸ்த2லங்களைக்கடந்து. (புரிந்து) விரும்பி. 30.

31. புரியொருகை பற்றியோர் பொன்னாழி யேந்தி
அரியுருவு மாளுருவு மாகி – எரியுருவ
வண்ணத்தான் மார்பிடந்த மாலடியை யல்லால்மற்
றெண்ணத்தா னுமோ விமை.

பதவுரை:— புரி – வலம்புரிச் சங்கத்தை, ஒரு கை பற்றி — ஒரு கையாலே பிடித்து, ஓர் பொன் ஆழி ஏந்தி — (மற்றொரு திருக்கையிலே) ஒப்பற்றதும், அழகியதுமான சக்கரத்தைத் தாங்கி, அரி உருவும் ஆள் உருவும் ஆகி—

---

மாய், நிரதிஶயபோ4க்3யனுமான எம்பெருமானுடைய திருவடிகளையே வ்யக்த்யந்தரங்களைக் கணிசியாதே அங்கே அபி4முக2மாய்க் கொண்டுபோய், தேடிக்கொள்ளாநிற்கும். இது நிஶ்சயம். 30.

---

போய் நாடிக்கொள்ளும் புரிந்து) குளிர்ந்து நின்று அடியார்களைப்பை ஆற்றும் துழாய்மாலையை உடையவனுடைய திருவடிக்கே, ஆதரத்துடன் சென்று தேடிப்பற்றிக்கொள்ளும். (தண்துழாயான்) ஸர்வலோகத்திற்கும் தாயாயிருப்பவன். (அடிக்கே) மற்ற பசுக்களைக் காணாத கன்றுபோலே இதுவும் மற்ற தெய்வங்களைக் காணாது. மற்ற அவயவங்களெல்லாமிருக்க, தாயின் முலையையே பற்றும் கன்றைப்போலே, மனமும் எல்லா அவயவங்களுமிருக்கத் திருவடிகளையே பற்றும். (போய் நாடிக்கொள்ளும்) க3ஜேந்த்3ராழ்வானுக்கு அவன் வந்தாற்போலே வரப் பார்த்திருக்காது தானே சென்று தேடிக்கொள்ளும். (புரிந்து) தாயைக்கன்று நாடுவதுபோலே பெருங்காதலோடு அடையும், தடுத்தாலும் நில்லாது. (நாடிக் கொள்ளும்) தானே சென்றடையும் என்னுமிது நிச்சயம். இதில் ஐயமில்லை. 30.

ஸிம்மத்தின் உருவத்தையும், மனித உருவையும் கொண்ட நரஸிம்ஹரூபியாகி, **எரி உருவ வண்ணத்தான்**—நெருப்பின் உருவம் போன்ற உருவையுடைய இரணியனுடைய, **மார்பு இடந்த**—மார்பைக் கிழித்த, **மால்**—ஆஶ்ரிதபக்ஷபாதியுடைய, **அடியை அல்லால்**—திருவடிகளைத் தவிர, **மற்று**—வேறொரு பொருளை, **இமை**—கணப்பொழுதேனும், **எண்ணத்தான் ஆமோ**—நினைக்கத்தான் முடியுமோ?

**அவ:— முப்பத்தோராம் பாட்டு.** (புரியித்யாதி$_3$) **அவனுடைய ஆஶ்ரித பாரதந்த்ர்யத்தை அநுஸந்தி$_4$த்தால் வேறே ஒன்றை ஒரு சற்றுப்போது அநுஸந்தி$_4$க்கலாமோ? என்கிறார்.**

**வ்யா:—**(புரியித்யாதி$_3$) **வலம்புரியில், "வலம்" என்கிற இடத்தைக் குறைத்துக் கிடக்கிறது.** (அரியித்யாதி$_3$) **ஆயு**

---

**அவதாரிகை—** ஆஶ்ரிதவிஷயத்தில் அவனுக்குண்டான பாரதந்த்ர்ய வாத்ஸல்யங்களை அநுஸந்தி$_4$த்தால் வேறேயொரு விஷயத்தை க்ஷணகாலமும் நினைக்கப்போமோ? என்கிறார்.

**உரை:—** ஸ்ரீபாஞ்சஜந்யத்தை ஒரு திருக்கையாலே த$_4$ரித்து மற்றைத் திருக்கையாலே அத்$_3$விதீயமாய், ஸ்ப்ருஹ

---

*அவதாரிகை:*—'அடிக்கே' என்ற ஏகாரத்தாலே, மனம் மற்றவற்றை நினையாதென்றார் சென்ற பாட்டில். அடியார் திறத்தில் அவனுக்குண்டான பாரதந்திரிய வாத்ஸல்யங்களை நினைத்தால், மற்றொரு விஷயத்தைக் கணநேரமேனும் நினைக்க முடியுமோ? என்று அதை விவரிக்கிறார் இப்பாட்டில்.

*வ்யா:*—(*புரி ஒரு கை பற்றி*) ஸ்ரீபாஞ்சஜந்யத்தை ஒரு கையாலே பிடித்துக்கொண்டு. "எரியுருவவண்ணத்தான் மார்விடந்த" என்று மேலே ஹிரண்யஸம்ஹாரம் சொல்லப்படுகிறதாகையாலே, ஹிரண்யன் மேலே விழுந்து அவனைத் தானே ஸம்ஹரித்துவிடத் துடிக்கும் ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானை, 'ஆயுத$_4$த்தாலே சாவில்லை' என்ற வரத்துக்கு விரோத$_4$ம் வாராமைக்காக,



**த$_4$ங்களையொழியவும் இரண்டு வடிவாலும் சாகேனென்று வேண்டிக்கொண்டபடியாலே நரத்வஸிம்ஹத்வங்களை ஒரு வடிவாகக்கொண்டான்.** (எரியித்யாதி$_3$) **அநபி$_4$ப$_4$வநீயனான ஹிரண்யனுடைய மார்வைப்பிளந்த.** (மாலித்யாதி$_3$) **இமை கொட்டி விழிக்கும் போது வேறொன்றை எண்ணல் ஆமோ? அன்றிக்கே, நெஞ்சை அத்$_4$யாஹரித்து, "வேறொன்றை எண்ணப்போமோ? இமை - பார்" என்றுமாம்.**

---

ணீயமான திருவாழியை த$_4$ரித்து, இவற்றுக்கு விஷயமில்லாதபடி நரத்வஸிம்ஹத்வங்களிரண்டுக்கும் ஆஶ்ரயமான வடிவையுடையனாய்க்கொண்டு, அக்$_3$நியினுடைய வடிவுபோலே ஏறிட்டுப் பார்க்கவொண்ணாத வடிவையுடையனான ஹிரண்யனுடைய மார்வைப் பிளந்து

---

ஹிரண்யன் மேலே விழாமல் அழுத்திப்பிடித்துத் தடுத்துக் கொண்டிருக்கையை உணர்த்துகிறது *'பற்றி'* என்னும் பத$_3$ம். (*ஓர் பொன்னாழி ஏந்தி*) மற்ற திருக்கையிலே ஒப்பற்றதாய், பொன்போல் ஆசைப்படத் தக்கதான ஸுத$_3$ர்ஶனத்தை ஏந்தி. இரணியன் திருநகத்துக்கே இரைபோதவில்லையாகையால், திருவாழியானது அழகுக்குப் பிடிக்கப்பட்டதேயொழிய, ஆயுத$_4$மாகப் பயன்படவில்லை என்று காட்டுகிறது *'ஏந்தி'* என்னும் பத$_3$ம். (*அரியுருவும் ஆளுருவுமாகி*) சங்கசக்கரங்களாகிற ஆயுத$_4$ங்களுக்கு ஒரு வேலையுமில்லாதபடி மனிதனும், சிங்கமும் கலந்த வடிவையுடையவனாய்க்கொண்டு. இவனுடைய அக$_4$டிதக$_4$டநாஸாமர்த்$_2$யமிருந்தபடி. 'மனிதனாலும் சாவில்லை; மிருக$_3$த்தாலும் சாவில்லை' என்று வரங்கொண்டானாகையாலே உலகத்தில் நடையாடாததான நரசிங்கவுருவையெடுத்தான். அடியானுக்கு ஆபத்து வந்த காலத்தில் ஆராய்ந்துகொண்டு இராமல் கணநேரத்தில் அரியுருவும் ஆளுருவும் ஆனான். (*எரியுருவவண்ணத்தான் மார்விடந்த*) நெருப்பைப்போன்று பார்க்கவொண்ணாத நிறத்தையும், எவரையுமழிக்கும் தன்மை முதலான கு$_3$ணங்களையுமுடையவனாய்நின்ற இரணியனின் மார்வைக் கிழித்த. (*மால்*) அன்புடையவன். இவ்வளவையும் செய்தது பிரஹ்லாத$_3$னிடம்

அவ:— இவ்விஷயத்தை ஒருக்ஷணகாலம் விட்டிருக்கை ஸாஹஸிகம் என்கிறர்.

வ்யா:— (புரியித்யாதி$_3$) ஹிரண்யன்மேலே விழுகிறவனை விலக்கினுற்போலே. (பொன்னுழியேந்தி) ஹிரண்யன் திருவுகிருக்கு இரையாய்ப்போனுன். திருவாழி அழகுக்குப் பிடித்தவித்தனை. (அரியித்யாதி$_3$) விசாரியாநிற்கப் பற்றுமே இரண்டு வடிவையும் கொண்டு தோற்றினபடி. (எரியுருவ வண்ணத்தான்) அணுகவொண்ணுதபடி அநபி$_4$ப$_4$வநீயனுயிருந்தபடி. (மால்) கார்யப்பாட்டாலன்றியே பிள்ளை பக்கல் வ்யாமோஹத்தால் கீண்டான். இமை-பாரென்னவுமாம். 31.

32. இமையாத கண்ணு லிருளகல நோக்கி
அமையாப் பொறிபுலன்க ளைந்தும் – நமையாமல்
ஆகத் தணைப்பா ரணைவரே ஆயிரவாய்
நாகத் தணையான் நகர்.

---

பொகட்ட ஆஹ்லாத$_3$த்தாலே ப்ரஹ்லாத$_3$ன்பக்கல் வ்யாமுக்$_3$த$_4$னுனவனுடைய திருவடிகளையேயொழிய ஒரு க்ஷணகாலமும் வேறு விஷயத்தை நினைக்கத்தான் போமோ? அன்றிக்கே, நெஞ்சை அத்$_4$யாஹரித்து, வேறென்றை எண்ணப்போமோ? இத்தை அநுஸந்தி$_4$த்துப்பார் என்றுமாம். 31.

---

வாத்ஸல்யத்தாலே என்று கருத்து. (*மார்விடந்த மால்*) அடியானுடைய ஆபத்தைப்போக்கின ஆநந்த$_3$த்தையுடையவன். (*மால்*) இவ்வருஞ்செயலைச்செய்த இவனே ஸர்வாதி$_4$கன் என்றுமாம். (*மாலடியையல்லால் மற்று எண்ணத்தானுமோ இமை*) ஆளிட்டு அந்திதொழாதே, அடியார் ஆபத்தைத் தானே தவிர்த்த பெருமானுடைய திருவடியையல்லால் வேறொரு விஷயத்தைக் கணப்பொழுதும் எண்ணமுடியுமோ? இமை-கண் இமைக்கும் நேரம். இப்படிக்கொள்ளாமல், 'நெஞ்சே' என்னும் பத$_3$த்தை வருவித்துக்கொண்டு, ''நெஞ்சே! இப்படி அடியார்திறத்துப் பாரதந்திரிய வாத்ஸல்யங்களையுடையவனை அனுஸந்தி$_4$த்தால், வேறென்றை எண்ணமுடியுமோ? இதை எண்ணிப்பார்'' என்பதாகவும் கொள்ளலாம். இமை-பார். 31.



**பதவுரை:— இமையாத கண்ணுல்** — ஞானஸங்கோசமற்ற உட்கண்ணுகிய நெஞ்சால், **இருள் அகல**—(அறியாமையாகிற) இருட்டு நீங்கும்படியாக, **நோக்கி**—(ஸ்வஸ்வரூபபரஸ்வரூபங்களைக்) கண்டு, **அமையா** — அடக்கவொண்ணுத, **பொறி புலன்கள் ஐந்தும்**—(கண் முதலிய) ஐந்து இந்திரியங்களையும், (*ஶப்$_3$த$_3$ம்* முதலிய) ஐந்து விஷயங்களையும். **நமையாமல்** — அடக்காமலிருந்தாலும், **ஆகத்து அணைப்பார்**—(அவன் நிர்ஹேதுக க்ருபையாலே மேல்விழும்போது) அவனை நெஞ்சிலே நினைப்பவர்கள், **ஆயிர வாய் நாகத்து அணையான்**—ஆயிரம் வாய் படைத்த ஆதி$_3$ஶேஷனைப் படுக்கையாகக்கொண்ட எம்பெருமானுடைய, **நகர்**—நகரமாகிய ஸ்ரீவைகுண்ட$_2$த்தை, **அணைவரே** — அடைவார்கள்.

**அவ:— முப்பத்திரண்டாம் பாட்டு.** (இமையாத இத்யாதி$_3$) **அவன் மேல்விழ விலக்காதார்க்கு இந்த்$_3$ரியஜயம் பண்ண ஶக்தரன்றுகிலும் கிட்டலாம் என்கிறர்.**

---

**அவதாரிகை:—** சாஸ்த்ரங்களிற் சொல்லுகிற ஸாத$_4$நாநுஷ்ட$_2$ானங்களில் அந்வயமில்லையேயாகிலும், ஶேஷஶேஷித்வரூபமான உறவை அறிந்தவர்களுக்கும் பரமபத$_3$த்தை ப்ராபிக்கலாகுங்கிடீர் என்கிறர்.

---

*அவதாரிகை:*—சாஸ்திரங்களிற் சொல்லுகிற கர்மஜ்ஞாநப$_4$க்திகளாகிற ஸாத$_4$நாநுஷ்ட$_2$ானங்களில் தொடர்பில்லையாகிலும், சேஷசேஷி பா$_4$வமாகிற உறவைமாத்திரம் அறிந்தவர்களுக்கும் பரமபத$_3$த்தை அடையலாம் என்கிறர்.

*வ்யா:*— (*இமையாத கண்ணுல்*) கண்களில் இரண்டுண்டு; மனிதவுடலின் வெளியே காணும் கண் இமைக்கும் கண், நெஞ்சென்னும் உட்கண் இமையாத கண். அந்த உள்ளமாகிற இமைக்காத கண்ணுலே. ''*ந சக்ஷுஷா க்$_3$ருஹ்யதே*'' [ முண்ட$_3$ 3-1-8 ] [புறக்கண்ணுல் காணப்படாதவன் பர

வ்யா:— (இமையாத கண்ணால்) "கண்" என்றும், "உட்கண்" என்றும் சொல்லக்கடவது. அதில் உட்கண்ணாலே. 40. "मनसा तु विशुद्धेन" (மநஸா து விஶுத்$_3$தே$_4$ந) என்னும்படி. (இருளகல நோக்கி) அஜ்ஞாநாந்த$_4$காரம் போம்படியாக நோக்கி. (அமையா இத்யாதி$_3$) அமைக்கப்போகாத இந்த்$_3$ரியங்கள் ஐந்தும். (நமையாமல்)

---

உரை:— ஜ்ஞாநஸங்கோசரஹிதமான நெஞ்சென்னும் உட்கண்ணாலே அஜ்ஞானமாகிற வல்லிருள் விட்டு நீங்கும்படியாக, ஸ்வஸ்வரூபபரஸ்வரூபங்களை உள்ளபடி த$_3$ர்ஶித்துப் பெற்ற விஷயங்களால் பர்யாப்தி பிறக்கக் கடவதன்றிக்கேயிருக்கிற யந்த்ரகல்பமான ஶ்ரோத்ராதி$_3$கள் ஐந்தையும், தத்$_3$விஷயமான ஶப்தா$_3$தி$_3$கள் ஐந்தையும்

---

மாத்மா] "மநஸா து விஶுத்$_3$தே$_4$ந" [விஷ்-த$_4$ர் 275-2] [பரிஶுத்$_3$த$_4$மான மனத்தாலேயே காணத்தக்கவன்] "என்றேனும் கட்கண்ணால் காணாத அவ்வுருவை நெஞ்சென்னும் உட்கண்ணேல் காணும் உணர்ந்து" [பெரியதிருவ 28] என்கிறபடியே கட்கண்ணால் காணப்படாதவனாகவும், உட்கண்ணாலேயே காணவுரியவனாகவுமிருப்பவனன்றோ இவன். (*இருளகல நோக்கி*) அஞ்ஞானமாகிற காரிருள் போகும்படியாக ஞான விளக்காலே தன் ஸ்வரூபத்தையும், ஸர்வேச்வரனுடைய ஸ்வரூபத்தையும் கண்டு. (*அமையாப் பொறி புலன்கள் ஐந்தும் நமையாமல்*) எத்தனை விரகிட்டாலும், மேன்மேலும் கேட்கும் அனலத்தைப்போலே, எத்தனை விஷயங்களை அனுப$_4$வித்தாலும் மேலும்மேலும் விஷயாநுப$_4$வத்தையே விரும்பும் மெய், வாய், கண், மூக்கு, செவிகளாகிற ஐந்து இந்திரியங்களையும், அவற்றுக்கு இரையான சப்$_3$த$_3$ ஸ்பர்ச ரூப ரஸ க$_3$ந்த$_4$ங்களாகிற விஷயங்கள் ஐந்தையும் அடக்காமலேயே. (*பொறி*) எலிப்பொறி போலே நம்மைச் சிறைப்படுத்தும் யந்திரமாயிருப்பது. (*அமையாப்பொறி*)

"ந ஜாது காம: காமாநாமுபபோ$_4$ாகே$_3$ந ஶாம்யதி।
ஹவிஷா க்ருஷ்ணவர்த்மேவ பூ$_4$ய ஏவாபி$_4$வர்த்த$_4$தே॥"



ஜயியாதிருக்கச்செய்தே. (ஆகத்தணைப்பார்) அவன் மேல் விழ விலக்காதவர்கள் அணைவரும். (அணைவரே ஆயிரவாய் நாகத்தணையான் நகர்) என்கிற இத்தால், ஒருவனே எல்லா அடிமைகளும் செய்யவேணுமென்னுமிடமும் ஒரு தே$_3$ஶவிஶேஷமுண்டென்னுமிடமும், அத்தே$_3$ஶமே ப்ராப்யமென்னுமிடமும் சொல்லுகிறது.

அவ:— ஸர்வேஶ்வரனுடைய பரமபத$_3$ம் ஆஶ்ரயியாதார்க்குக் கிடைக்குமோ? ஆஶ்ரயித்தார் பேர விரகுண்டோ? ருசிமாத்ரமுடையார் அவனாலே பெறுமித்தனை என்றும், அவனல்லது இல்லை என்றும்.

---

நியமியாமல், ஸம்ப$_3$ந்த$_4$ஜ்ஞாந மாத்ரயுக்தராய்க்கொண்டு, ஹ்ருத$_3$யத்திலே அவனை வைத்து அநுஸந்தி$_4$க்குமவர்கள் அவனைப் புகழுகைக்கு ஆயிரம் வாயையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரனுடைய கலங்காப் பெருநகரைச் சென்று கிட்டப்பெறுவர்.

---

[காமுகர்களின் காமம் விஷயத்தை அனுப$_4$விப்பதால் ஒருபோதும் அடங்குவதில்லை; ஆஹுதியினால் நெருப்பு மேன்மேலும் கொழுந்துவிட்டெரிவதுபோலே, மேன்மேலே அபி$_4$விருத்$_3$தி$_4$யடைகிறது.] என்று கூறப்பட்டதன்றோ. 'அமையா' என்றதை 'பொறி' 'புலன்' என்னும் இரண்டுக்கும் விஶேஷணமாக்கி, அடக்கமுடியாத விஷயங்களையும், இந்திரியங்களையும் என்றும் கொள்ளலாம். (*புலன்களைந்தும் நமையாமல்*) "காவல் இல் புலனை வைத்து" [திருமாலை-1] என்றார் தொண்டரடிப்பொடிகளும். (*ஆகத்தணைப்பார் அணைவரே ஆயிரவாய் நாகத்தணையான் நகர்*) இந்திரியங்களை ஜயிக்காமலிருந்தபோதிலும், 'அவன் ஸ்வாமி, நாம் அடிமை' என்று அவனுக்கும் நமக்குமுள்ள உறவைமாத்திரம் அநுஸந்தி$_4$த்துத் தம் உள்ளத்திலே அவனை அணைப்பவர்கள் ஆயிரவாயுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரனுடைய கலங்காப் பெருநகரை அடையப்பெறுவர். (*ஆகத்து*) ஆகம் - நெஞ்சம். (*அணைப்பார்*) ஸர்வேஶ்வரன் மேல்விழும்போது விலக்காமையே

வ்யா:— (இமையாத கண்) நெஞ்சென்னும் உட்கண். திருவாசலை நீக்கி அவனையும் தன்னையும் உள்ளபடி அறிகை. (அமையா) திரிய விடுவிக்கவொண்ணாத பொறியைந்தும், புலனைந்தும். (நமையாமல்) நியமியாமல். (ஆகத்தணைப்பார்) மூலையடி என்னுதல்; அவன் மேல்விழாநின்றால் இரு யாமமென்னுதல். (நாகத்தணை) பர்யங்கவித்$_3$யை. 32.

33. நகர மருள்புரிந்து நான்முகற்குப் பூமேல்
பகர மறைபயந்த பண்பன் – பெயரினையே
புந்தியால் சிந்தியா தோதி யுருவெண்ணும்
அந்தியா லாம்பயனங் கென்?

பதவுரை:— பூ மேல் – உந்தித் தாமரையின்மேல், நான் முகற்கு - பிரமனுக்கு, நகரம் அருள் புரிந்து – வாஸஸ்தா$_2$னத்தைக் கொடுத்தருளி, பகர – (பிறர்க்கு) ஓதுவிக்கும்படி, மறை பயந்த – வேத$_3$த்தை உபதே$_3$ஶித்த, பண்பன் – நீர்மையையுடைய எம்பிரானின், பெயரினையே – திருநாமங்களையே, புந்தியால் சிந்தியாது – மனத்தால் எண்ணாது, ஓதி உரு எண்ணும் – ஜபித்துக்கணக்கெண்ணும், அந்தியால் – ஸந்த்$_4$யாவந்த$_3$னத்தால், அங்கு ஆம் பயன் என் – உண்டாகப்போகிற பிரயோஜனம் என்ன?

அவ:— முப்பத்துமூன்றாம் பாட்டு. (நகரம்) ஸர்வேஶ்வரனை நெஞ்சாலே ஆத$_3$ரியாதே பண்ணுகிற கர்த்தவ்ய தந்த்ரத்தால் என்ன ப்ரயோஜநமுண்டு? என்கிறார்.

வ்யா:— (நான்முகற்குப் பூமேல் நகரமருள்புரிந்து பகரவித்யாதி$_3$) பிறர்க்கு ஓதுவிக்கும்படி ப்$_3$ரஹ்மாவை ஓதுவித்த நீர்மையை உடையவனுடைய. செல்வப்பிள்ளையைத் தேவைக்கு ஓதுவிக்குமாபோலே. (பெயரினையே புந்தியால் சிந்தியாது) அவனுடைய திருநாமங்களையே நெஞ்சால்

---

அந்த ஸாத$_4$நாநுஷ்ட$_2$ாநம் பண்ணாதார்க்குப் பரம பத$_3$த்தை ப்ராபிக்கப்போமோ? என்றுமாம். 'அமையாப் பொறிபுலன்கள்' என்று, நியமிக்க அரிதான விஷயேந்த்$_3$ரியங்கள் என்றுமாம். 32.

அவதாரிகை:— எம்பெருமானை உள்ளீடாகக் கொள்ளாதே பண்ணும் ஸந்த்$_4$யாவந்த$_3$நாதி$_3$ கர்மாநுஷ்ட$_2$ாநம் நிஷ்ப்ரயோஜநம் என்கிறார்.

உரை:— அந்தரங்க$_3$ர்க்குக் கிட்ட மாளிகை கட்டுமாபோலே ஜந்மபூ$_4$மியான திருநாபீ$_4$கமலத்திலே சதுர்முக$_2$னுக்கு இருப்பிடத்தை க்ருபாபுரஸ்ஸரமாகப் பண்ணிக்

---

வேண்டுவது. *(அணைவரே)* உறுதியாக அணைவர்கள். தேற்றேகாரம். *(ஆயிரவாய் நாகத்தணையான்)* தன்னைப் புகழ்வதற்கு ஆயிரம் வாய்களையுடைய திருவனந்தாழ்வானை எல்லா அடிமைகளும் கொள்ளுமவன். *(நகர்)* இத்தால் மோக்ஷம் என்பது ஒரு தே$_3$ஶவிஶேஷத்தில் அடையப்படுவதென்றும், கைங்கர்யமே பரமபுருஷார்த்த$_2$மென்றும் உணர்த்தப்படுகிறது.

'ஆகம்' என்றது உருவத்தையும் குறிக்குமாகையாலே, "தெரிவைமார் உருவமே மருவி" [பெரியதிரு 1-1-3] என்கிறபடியே காமினிகளின் உருவத்தை அணைப்பவர்கள் பரமபத$_3$த்தை அடையமுடியுமோ? என்பதாகவும் கொள்ளலாம். இப்படிக் கொள்ளும்போது பிரிநிலையேகாரமாகிறது. இந்திரியங்களை ஜயிக்காமல் மூலையடியே திரியுமவர்கள் பரமபத$_3$த்தை அடையமாட்டார்கள் என்று கருத்து. 32.

*அவதாரிகை:—* எம்பெருமானை இவற்றால் ஆராதி$_4$க்கப்படுமவனாக அனுஸந்தி$_4$யாமல் செய்யப்படும் ஸந்த்$_4$யாவந்த$_3$னம் முதலான கர்மங்கள் பயனற்றவை என்கிறார்.

*வ்யா:—* *(நகரமருள் புரிந்து நான்முகற்குப் பூமேல்)* நெருங்கியவர்களுக்கு அருகிலேயே வீடுகட்டிக் கொடுப்பதுபோலே, மகனான நான்முகனுக்குப் பிறப்பிடமான திருநாபீ$_4$கமலத்திலேயே இருப்பிடத்தைக் கருணையோடு அருளினான். *(பூமேல் மறைபயந்த பண்பன்)* செல்வப் பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக்கொடுக்கும் உபாத்தியாயர்கள் அவர்களைப்

**நினையாது.** (ஓதியித்யாதி$_3$) **அல்லாதவற்றை ஓதிச்சென்று அவ்வுருவை எண்ணும் ஸந்த்$_4$யாவந்த$_3$நாதி$_3$களால் என்ன ப்ரயோஜநமுண்டு? எம்பெருமானுக்கு உடலல்லாத கேவல ஸந்த்$_4$யை வ்யர்த்த$_2$ம்.**

(நகரமித்யாதி$_3$) **திருநாபீ$_4$கமலத்தைக் கலவிருக்கையாக ப்ரஸாதி$_3$த்தான்; ப்$_3$ரஹ்மாவுக்கு ஜந்மதே$_3$ஶத்தையே கொடுத்தான், அந்தரங்க$_3$ர்க்குக் கிட்ட மாளிகை சமைக்கு மாபோலே.** (பகரவித்யாதி$_3$) **அந்த வேண்டப்பாட்டுக்கு மேலே நாட்டாரை ஓதுவிக்கைக்கு வேத$_3$த்தைக் கொடுத்தான்.** (பண்பன்) **அந்நீர்மை மறக்கவொண்ணுமை.** (பெயரித்யாதி$_3$) **ஸ்வாபா$_4$விக ஸம்ப$_3$ந்த$_4$த்தை அநுஸந்தி$_4$த்து அவனை உகப்பியாதே.** (ஆம் பயனங்கென்?) **எம்பெருமானை அகலுகையே ப$_2$லித்துவிடுவது.**

---

கொடுத்து, இவ்வருகுள்ளார்க்கும் ஓதுவிக்கத்தக்கதாகத் தத்வஜ்ஞாபனமான வேத$_3$த்தை உபகரித்த ஸௌஶீல்யாதி$_3$ குணங்களை உடையவனானவனுடைய அந்த கு$_3$ணங்களுக்கு வாசகமான திருநாமங்களை மநஸ்ஸால் அநுஸந்தி$_4$யாதே வாங்மாத்ரத்தாலே ஜபித்து, இடக்கைபற்றிக்

---

பஞ்சணையிலே உட்காரவைத்துத் தாம் தாழநின்று பாடம் சொல்லுவர்கள். அதுபோலே தன் செல்லப்பிள்ளையான பிரமனைத் தாமரைப் பூவிலே இருத்தித் தான் அவனுக்கு வேத$_3$த்தை உபதேசித்த கு$_3$ணசீலன். *(பண்பன்)* ஸௌசீல்யம், வாத்ஸல்யம் முதலான கு$_3$ணங்களையுடையவன். *(பகர மறை பயந்த)* தான் ஓதியதோடல்லாமல், பிறருக்கும் ஓதுவிக்க லாம்படி நான்முகனுக்கு வேத$_3$த்தை ஓதுவித்தான். *(பெயரினையே புந்தியால் சிந்தியாது ஓதி உருவெண்ணும் அந்தியால் ஆம்பயன் அங்கென்)* அவனுடைய கு$_3$ணங்களுக்கு வாசகமான கேசவன் முதலான திருநாமங்களை மனத்தால் நினையாமல், கா$_3$யத்திரி முதலான மந்திரங்களை வாயாலே ஓதி, கையாலே உருவெண்ணி அநுஷ்டி$_2$க்கிற ஸந்த்$_4$யாவந்த$_3$நம் முதலான கர்மங்களால் மறுமையில் உண்டாகும் பயன்



(பெயரினையே) **அவன் கு$_3$ணங்களுக்கு வாசகமான திருநாமம்.** (ஓதியித்யாதி$_3$) **அஹ்ருத$_3$யமாகப் பண்ணும் ஆயாஸரூபமான கர்மத்தைப் பற்றுவதே! 33.**

**34. என்னொருவர் மெய்யென்ப ரேழுலகுண்டு ஆலிலையில்**
**முன்னொருவ னாய முகில்வண்ணா! – நின்னுருகிப்**
**பேய்த்தாய் முலைதந்தாள் பேர்ந்திலளால் பேரமர்க்கண்**
**ஆய்த்தாய் முலைதந்த வாறு.**

**பதவுரை:— ஏழுலகு உண்டு** – ஏழு உலகங்களையும் திரு வயிற்றிலே வைத்து, **ஆல் இலையில்** – ஓர் ஆலந்தளிரிலே, **முன்** — முன்னொரு காலத்தில், **ஒருவனாய** — துணையற்றவனாய்த் தூங்கிய, **முகில் வண்ணா** — மேக$_4$வண்ணா!, **முலை தந்தாள்** — முலைகொடுத்த, **பேய் தாய்** — தாயாய் வந்த பேயாகிய பூதனை, **பேர்ந்திலளால்** — அசையமுடியாமல் இறந்து கிடந்தாள்; **பேர் அமர் கண்** — ஒன்றோடொன்று யுத்$_3$த$_4$ம் செய்வன போன்றிருக்கும் பெரிய கண்களையுடைய, **ஆய்த்தாய்** — இடைத்தாயாகிய யசோதை, **நின் உருகி** — உன்னிடம் பேரன்புகொண்டு, **முலை தந்த ஆறு** — முலை கொடுத்த வித$_4$த்தை, **ஒருவர்** — ஒப்பற்ற ஞானிகளான ரிஷிகள், **மெய் என்பர்** — உண்மை என்று உரைப்பர்; **என்** — (இது) எங்ஙனே கூடும்?

அவ:— **முப்பத்துநாலாம் பாட்டு.** (என்னொருவர்) **ப்ரளயத்தில் லோகத்தையெல்லாம் தன் திருவயிற்றிலே வைத்து ஒரு பவனான ஆலிலையிலே தனியே கண்வளரா நின்ற ஈஶ்வரனுக்கு அஞ்சுகிற யசோதைப் பிராட்டியுடைய ஸ்நேஹம் ஒரு ஸ்நேஹமே! என்கிறார்.**

---

கொண்டு அநுஷ்டி$_2$க்கிற ஸந்த்$_4$யாவந்த$_3$நாதி$_3$ கர்மாநுஷ்டா$_2$னங்களால் அவ்விடத்திலுண்டான ப்ரயோஜநமேது? 33.

---

**என்ன? ஒன்றுமில்லையென்கை. இத்தால் ப$_4$க$_3$வதா$_3$ராத$_4$ன மாக நினையாமல் அநுஷ்டி$_2$க்கப்படும் கர்மாநுஷ்டா$_2$னம் வீணானது என்றதாகிறது.** 33.

வ்யா:—(என்ஞெருவர் மெய்யென்பர்) இத்தை ஒருவர் மெய்யென்னும்படி எங்ஙனே ? என்னவுமாம். “ என் ? ” என்று. “ எத்திறம் ? ” என்னும்படியே சொல்லவுமாம். ( ஒருவர் மெய்யென்பர் ) அறிந்த ருஷிகளிலே சிலர் “ அர்த்த2வாத3ஶங்கை இல்லை. இது மெய் ” என்பர்.

---

**அவதாரிகை:—** இவ்விஷயத்தில் தலையான ப4க்தியை யுடையளாய்க்கொண்டு அவனை அநுஸந்தி4க்கப்பெற்றவள் யசோதைப் பிராட்டியொருத்தியுமேயன்றே என்கிருர்.

**உரை:—** ப்ரளயத்திலழியாதபடி ஸப்தலோகங்களையும் அமுதுசெய்து முகிழ்விரியாததோராலந்தளிரிலே ஒரு பரிவருமில்லாத ப்ரளயஸமயத்திலே அஸஹாயனுய்க்கொண்டு

---

*அவதாரிகை:*—பரமபுருஷனிடத்தில் இயற்கையான தலை சிறந்த ப4க்தியையுடையவளாய்க்கொண்டு அநுப4விக்கப்பெற்றவள் யசோதைப் பிராட்டி ஒருத்தியேயன்றே என்கிருர்.

*வ்யா:*— ( *ஏழுலகுண்டு* ) பிரளயகாலத்திலே பூ4ர்பு4வஸ்ஸுவர்மஹர்ஜநஸ்தபஸ்ஸத்யமெனப்படும் ஏழு உலகங்களாலும் உபலக்ஷிக்கப்பட்ட எல்லாவுலகங்களையும் ப்ரளயத்திலழியாதபடி வயிற்றிலே வைத்து ரக்ஷித்து. ஒரு சில வஸ்துக்களையோ உண்டது ? (*ஆலிலையில்*) அப்போதேயுண்டானதாகையாலே முகிழ்விரியாததோர் ஆலந்தளிரிலே, ஏழுலகங்களையுமுண்ட தன்னை த4ரித்து நின்ற ஆதா4ரம்தான் உறுதியானதொரு பொருளோ ? (*முன்*) பிரளயகாலத்திலே. இந்நிலைக்குப் பரிவதற்கும் ஓர் ஆளில்லாத காலமன்றே. (*ஒருவனுய*) குழந்தையின் இந்த ஸாஹஸச்செயலைத் தடுக்கத் தாய்தந்தையர் கூட இல்லையே ! “*ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்3ரஹ்மா நேஶாந:*”[மஹோபனிஷத்] [நாராயணன் ஒருவனேயிருந்தான்; பிரமனுமில்லை ; சிவனுமில்லை] எனப்படும் தத்துவமன்றே. (*ஒருவனுய முகில்வண்ணு*) “படியாதுமில் குழவிப்படி எந்தை” [ திருவாய் 3-7-10 ] என்ருரன்றே நம்மாழ்வாரும். (*முகில் வண்ணு*) கார்மேகவண்ணு ! எக்கேடும் கெடட்டும் என்று இருக்க விடுகிறதோ வடிவழகு ? அன்று நேர்ந்த ஸாஹஸத்திற்கு இன்றிருந்து வயிறெரியவன்றே செய்கிறது.



(ஏழுலகித்யாதி4) **ஏழுலகத்தையும் திருவயிற்றிலே வைத்து ஆலிலையிலே.** (முன்) **முன்பு தனியேயாய் ஶ்ரமஹரமான வடிவை உடையவனே.** (பேயித்யாதி3) **பேயான தாய் முலையைத்தந்து திருமேனியினின்றும் பேராதே கிடக்கச் செய்தே,** (நின்னுருகி பேரமர்க்கண் ஆய்த்தாய் முலைதந்தவாறு) **உனக்கு நல்லவளாய், யசோதைப்பிராட்டி, விஷத்துக்கு அம்ருதமாக முலைதந்தவாறு; இதென்ன ஆஶ்சர்யம்!**

---

கண்வளர்ந்தருளின காளமேக4நிப4ஶ்யாமமான வடிவையுடையவனே! அற்றையிழவுதீர உனக்கு ஸ்நேஹித்துப் பரிவுடனே முலைதந்து உகப்பித்தாளாயிருந்து பேய்த்தாயான பூதனையானவள் அவ்விடத்தினின்றும் பேரமாட்டாமல் பிணமாய் விழுந்தாள். அத்தை, பெரிய ஸமரபூ4மியிலே இடைத்தாயான யசோதைப்பிராட்டி அஞ்சாமல் அந்த விஷத்துக்கு அம்ருதமாக முலைதந்த ப்ரகாரத்தை,

---

இப்படிப் பரிவரில்லாத அவ்வாபத்தைப் போலல்லாமல், அண்மையில் நடந்த மற்ருேராபத்திலே பரிவருண்டாகியிருந்ததை அநுஸந்தி4த்து இழவு தீருகிருர்,—(*நின் உருகிப் பேய்த் தாய் முலைதந்தாள்*) உன்னிடம் பொய்யன்பும். பொய்ப்பரிவும் பா4வித்துவந்த பேயான பூதனை உன் வடிவழகைக் கண்டவுடன் மெய்யன்பும் மெய்ப்பரிவுமுடையளாகி விஷமூட்டப் பெற்றிருந்த முலையைக் கொடுத்தாள். (*பேர்ந்திலளால்*) தீய நினைவோடு வந்த அவளுடைய நினைவு அவளோடே போம்படி, விஷத்தோடே அவளுயிரையும் சேர்த்து அமுதுசெய்கையாலே அவள் அசையமாட்டாத பிணமானுள். ‘நின்னுருகி’ என்பதை மேலோடு கூட்டவுமாம். (*பேரமர்க்கண் நின்னுருகி ஆய்த்தாய் முலைதந்தவாறு என்?*) பூதனையோடு குழந்தையான நீ போரிட்டு அவளைக்கொன்ற அந்த யுத்3த4பூ4மியிலே, விஷமூட்டப்பெற்ற உனக்காகப் பரிந்து, அப்பிணம் கிடக்கையிலேயே ஆய்த்தாயான யசோதை அஞ்சாமல் அந்த விஷத்தைமுறிக்கும் அமுதமாகத் தான் முலைதந்தபடி எத்திறம்! ஒருத்தி முலைகொடுத்து இறந்துகிடக்கிறபடியைக் கண்டும், பரிவாலே மற்ருெருத்தி

அவ:— ஸோபாதி4கமாகவன்றியே ஸ்வப4ாவத ஏவ ஸ்நேஹிக்குமவனை நினைக்கிறார்.

வ்யா:— (என்) எத்திறம்? (ஒருவர் மெய்யென்பர்) விலக்ஷணர் மெய்யென்பர். இத்தை ஒருவர் மெய்யென்பதே! "என்?" என்றபோது ஜக3த்தில் நடையாடுவதொரு ஸ்நேஹமாகிலன்றோ மெய்யென்னலாவது? (ஏழித்யாதி3) நீ செய்யும் செயலுக்கு அடைவுண்டாகிலிறே உன்னை ஆஶ்ரயித்தார் செயலுக்கு அடைவுண்டாவது. (ஒருவனுய) பரிஹரிக்கத் தாயும் தமப்பனும் ஒருவருமில்லை. (முகில் வண்ணா!) பரிவர் வேண்டியிருக்கிறபடி. (நின்னுருகி) உன் கு3ணங்களுக்கு உருகி. (பேர்ந்திலளால்) அப்பிணம் கிடக்கச்செய்தே. அப்பேயின் கையில் அகப்பட்ட தடையப் படுத்திக் கால்நடைதந்து, நஞ்சுக்குப் பரிஹாரமாக அம்ருதமான முலையைக் கொடுத்தபடி. 34.

---

அறிவுக்கு அத்3விதீயரான வ்யாஸபராஶராதி3களான ரிஷிகள் பரமார்த்த2பென்று சொல்லாநிற்பர்கள். எங்ஙனே? நாட்டில் கண்டறிவதொரு ஸ்நேஹமாகிலன்றோ மெய்யென்னலாவது. அக4டிதக4டநாஸமர்த்த2னானவனுக்கு அஞ்சுகிற யசோதைப் பிராட்டி ஸ்நேஹமும் ஒருஸ்நேஹமே! என்று வித்3த4ராகிறார். 34.

---

முலைகொடுத்தாளென்றால், அப்பரிவை வார்த்தைகளால் அளக்கமுடியுமோ? (*பேரமர்க்கண் ஆய்த்தாய்*) பரிவாலே ஒன்றோடொன்று பெரும்போர்புரியும் திருக்கண்களையுடைய யசோதைப்பிராட்டி எனறும் கொள்ளலாம். (ஒருவர் மெய் என்பர்) இதைப் பொய்யென்னவொண்ணுதபடி அறிவிலே ஒப்பற்றவர்களான வியாஸபராஶராதி2களான ரிஷிகள் இதை உண்மையென்பர்கள். (*என்னொருவர் மெய்யென்பர்*) இதை ஒருவர் உண்மையென்பது எப்படி? என்றுமாம். உலகத்தில் நடையாடுவதொரு அன்பாகில் உண்மையென்னலாம்; பொய்யன்பே நிறைந்த இவ்வுலகிலுள்ள பொய்யர்களான நமக்கு இவ்வன்பு மெய்யாகத் தோற்றவில்லை என்று கருத்து. ஏழு



35. ஆறிய வன்பி லடியார்த மார்வத்தால்
கூறிய குற்றமாக் கொள்ளல்நீ—தேறி
நெடியோய்! அடியடைதற் கன்றே ஈரைந்து
முடியான் படைத்த முரண்.

**பதவுரை:—ஆறிய அன்பு இல்**-பொங்கித் தணிந்த ப4க்தி இல்லாத, **அடியார்**—அடியவர்கள், **தம் ஆர்வத்தால்**—தங்களுடைய ஸ்நேஹத்தால், **கூறிய**—சொன்னசொற்களை, **நீ குற்றமாக்கொள்ளல்**—நீ தவருகக் கொள்ளலாகாது; **ஈர் ஐந்து முடியான்**—பத்துத் தலைகளை உடையவனுன ராவணன், **படைத்த** — செய்த, **முரண்** — வைரம், **தேறி** — (க்ரமமாக) தெளிந்து, **நெடியோய் அடி**—நெடுமாலான உன்னுடைய திருவடிகளை, **அடைதற்கு அன்றே** — அடைவதற்குக் காரணமாயிற்றல்லவோ?

அவ:— முப்பத்தைந்தாம் பாட்டு. யசோதைப் பிராட்டியோபாதி ஸ்நேஹமின்றிக்கே, அவளுடைய ஸ்நேஹத்தையுடைத்தாக ப4ாவிக்கிறவர்களுடைய குற்றத்தைப் பொறுத்தருளவேணும் என்கிறார்.

---

அவதாரிகை:— இவளுடைய ஸ்நேஹத்தைக் கண்டவாறே அல்லாத தம்போல்வார் ஸ்நேஹம் ப்ராதிகூல்யஸமமாய்த்தோற்றி அத்தைப்பொறுத்தருளவேணும் என்று அவனை க்ஷமை கொள்கிறார்.

---

லகுண்டு ஆலிலையில் துயின்று, குழந்தையாயிருக்கும்போதே பேயைக்கொன்ற அக4டிதக4டநா (நடக்கமுடியாதவற்றையும் நடத்தவல்ல) ஸாமர்த்2யமுடைய உனக்கு என்வருகிறதோ? என்று அஞ்சி முலைதந்த யசோதைப் பிராட்டியின் அன்பும் ஓர் அன்பே என்று ஈடுபடுகிறார். 35.

*அவதாரிகை:*—யசோதையினுடைய அன்பை அநுஸந்தி4த்தவுடன் தம்மைப்போல்வாருடைய அன்பு விரோத4த்தோடு ஒக்கத் தோற்றுகையாலே, இப்பொய்யன்பைப் பொறுத்தருளவேணும் என்று எம்பெருமானைப் ப்ரார்த்தி2க்கிறார்.

வ்யா:— (ஆறியவன்பிலடியார்) ஏறிமறிந்த ப4க்தி இல்லாதவர்கள். (தம் ஆர்வத்தால் கூறிய) தங்களுடைய ஸ்நேஹத்தாலே சொன்னவற்றை. (குற்றமாக்கொள்ளல்) நீ குற்றமாகக் கொண்டருளாதொழியவேணும். "நீர் குற்றத்தைச் செய்து வைத்து, 'குற்றமாகக் கொள்ளாதொழியவேணும்' என்னப்போமோ?" என்னில்; (ஈரைந்து முடியான் படைத்த முரண் தேறி நெடியோய் அடியடைதற்கன்றே) ராவணன் பண்ணின ப்ராதிகூல்யம் க்ரமத்திலே சிசுபாலனுக்கு உன்னை அடைகைக்கு உடலாயிற்றில்லையோ? ப்ராதிகூல்யம்

---

உரை:—'உனக்கு என் புகுருகிறதோ?' என்று பரிந்து வயிறெரியும்படி ஏறிமறிந்த ப4க்தியின்றிக்கே, ஶேஷத்வ ஜ்ஞாநமாத்ரயுக்தராயிருக்குமவர்கள் தந்தாமுடைய ஸ்நேஹத்தாலே அநுப4விக்கவேணும், அடிமைசெய்யவேணும் என்றாற்போலே ஸ்வப்ரயோஜநக3ர்ப்ப4மாகச் சொன்ன வார்த்தைகளை, குற்றத்தை நற்றமாகக்கொள்ளும் அதிமாத்ர

---

*வ்யா:*— (*ஆறிய அன்பில் அடியார்*) ஏறவேண்டிய உயரமெல்லாம் ஏறி அடங்கிநிற்கும் அதிக3ம்பீ4ரமான கடல்போலே, பொங்கியடங்கிய ப4க்தியை உடைய யசோதைப் பிராட்டியைப்போன்ற அன்பில்லாத அடியார். (*அடியார்*) 'அவன் ஸ்வாமி; நாம் தா3ஸபூ4தர்' என்னும் அறிவைமாத்திரமுடையவர்கள். (*அன்பில் அடியார்*) அவ்வறிவின் ப2லனாய் வருவதாய், தன்னைப்பேணாதே அவனையே நோக்கும் அன்பு இல்லாத அடியார். (தம் ஆர்வத்தால் கூறிய) தம்மளவான தம் அன்பாலே 'எம்பெருமானை அனுப4விக்கவேணும்; அவனுக்கு அடிமைசெய்யவேணும்' என்றாற்போலே கூறியவைகளை. ஆறியவன்பில்லாதவர்களாகையாலே அவனுக்குப் பரியாமல், தம் நன்மையைத் தேடிச்சொல்லும் வார்த்தைகளை. யசோதைப்பிராட்டியினளவு அன்பில்லாமலிருக்கும்போது, "*ஆய்த்தாய் முலைதந்தவாறு என்*' என்று அவளைப்போலே அன்புடையவனைப்போலே சொன்ன வார்த்தைகளை என்றுமாம். (*குற்றமாக் கொள்ளல் நீ*) பிரானே! என்னைப்போன்ற பொய்யன்புடையவர்களுடைய புன்மொழிகளை நீ குற்றமாகக் கொள்ளாதொழியவேணும்.



ஆநுகூல்யமாய்ப் ப2லித்தால், ஆநுகூல்யாப4ாஸம் ஆநுகூல்யமாகத் தட்டுண்டோ? "தேறி" என்றது, செய்த குற்றத்தைக் குற்றமாகக் கொள்ளாதொழியவேணும் என்னவுமாம். அன்றிக்கே, "தேறி" என்றது, சிசுபாலன் 'கையும் திருவாழியுமாயிருந்தபடி என்?' என்று நினைத்துக் கிடக்க, அது அந்திமஸ்ம்ருதியானாற்போலேயாகவுமாம்.

---

வத்ஸலனான நீ குற்றமாகக் கொள்ளாதொழியவேணும். 'அதெங்ஙனே கூடும்படி?' என்று திருவுள்ளமாகில், ப்ரதிகூலனான ராவணன் பு3த்3தி4பூர்வகமாகப் பண்ணின திருவினைப் பிரித்த மிகைச்செயலானது ஆநுகூல்யலேஶயுக்தர் திறத்தில் பண்ணும் ஸ்நேஹபக்ஷபாதங்களுக்கு எல்லைகாணவொண்ணாத பெருமையையுடைய உன் திருவடிகளை, காலக்ரமத்திலே தெளிந்து சிசுபாலனைக் கிட்டுகைக்குடலாய் விட்டதில்லையோ?

---

*(குற்றமாக் கொள்ளல் நீ)* '*செய்தகுற்றம் நற்றமாகவே கொள்ஞாலநாதனே!*' [திருச்சந்த-111] என்கிறபடியே குற்றத்தை கு3ணமாகக்கொள்ளும் பேரன்புபூண்ட நீ எங்கள் குற்றத்தைக் குற்றமாகக் கொள்ளமுடியுமோ? 'குற்றத்தை கு3ணமாகக் கொள்ள எப்படி முடியும்?' என்று திருவுள்ளமாக, குற்றத்தையே கு3ணமாகக்கொண்டு திருத்திக் கைக்கொண்டமைக்கு உதா3ஹரணங்காட்டுகிறார்.—(*ஈரைந்து முடியான் படைத்தமுரண் தேறி அடியடைதற்கன்றே*) பத்துத் தலையாலும் விரோத4த்தையே செய்துபோந்த ராவணனுடைய விரோத4ம் சிசுபாலனாய்ப் பிறந்தபோது காலக்ரமத்திலே தெளிந்து திருவடிகளைக் கிட்டுவதற்குக் காரணமாய்விட்டதன்றோ. (*ஈரைந்து முடியான்*) பத்துத் தலையாலும் பிராட்டி திறத்தில் அபசாரப்பட்டவன். (*படைத்த*) அஜ்ஞானத்தாலே அபசாரப்படவில்லை. பு3த்3தி4 பூர்வகமாக அபசாரப்பட்டபடி. (*முரண்*) "கரிசூழல் கனிவாய்த் திருவினைப் பிரித்த கொடுமையில் கடுவிசையரக்கன்" [பெரிய திரு 5-7-7] என்கிறபடியே அபசாரத்தின் எல்லைநிலம். (*தேறி நெடியோயடி அடைதற்கன்றே*) கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வைதுபோந்தவன், தன்னைக் கொல்லக் கையும்

(ஆறியவன்பு) ஏறிமறிந்து தன்னைப்பேணுதே அத் தலைக்குப் பரிகை. யசோதைப்பிராட்டி பரிவு தம்முடைய ப்ராதிகூல்யத்தோடு ஒக்குமென்கை. அவனுடைய ப்ராதி கூல்யம் தேறி அடைகைக்கு உடலாயிற்றில்லையோ ? "செய்த குற்றம் நற்றமாகவே கொள்". பொறுக்கவே அடைய நன்ரும் என்றிருக்கிருர். (நெடியோய்) ஆநுகூல்ய லேஶமுடையார் திறத்து நீ இருக்கும் இருப்பு எல்லை காணப்போமோ? 35.

36. முரணை வலிதொலைதற் காமென்றே முன்னம்
தரணி தனதாகத் தானே—இரணியனைப்
புண்ணிரந்த வள்ளுகிராற் பொன்னுழிக் கையால் நீ
மண்ணிரந்து கொண்ட வகை.

---

அன்றிக்கே, நீ தேறி ப்ரஸந்நனுய், செய்த குற்றத்தைக் குற்றமாகக் கொள்ளாதொழியவேணும் என்னவுமாம்; ப்ராதிகூல்யம் ஆநுகூல்யமாய்ப் பலித்தால் ஆநுகூல்யா பாஸம் ஆநுகூல்யமாகத் தட்டுண்டோ? என்றபடி. 35.

---

திருவாழியுமாய் நிற்கும் நிலையைக்கண்டு, 'இஃதொரு நிலையிருந்த படியென்!' என்று ஈடுபட, அதுவே அந்திமஸ்மிருதியாகிக் கண்ணனுடைய அடியை அடைவதற்குக் காரணமாகிவிட்ட தல்லவா. (நெடியோய் அடி) சிறிது அன்புடையார் திறத்திலும் வைக்கும் அன்புக்கும் பக்ஷபாதத்திற்கும் எல்லைகாணவொண் ணுதபடி வாத்ஸல்யத்தாலே நெடியமாலாயிருப்பவன் திருவடி. 'நெடியோய்' என்று ஸம்போதநம் (விளி) ஆகவுமாம். (முரண் தேறி அடியடைதற்கன்றே-ஆர்வத்தால் கூறிய குற்றமாக் கொள்ளல்) வைரமே திருவடியைக் கிட்டக் காரணமானபோது பொய்யன்பை மெய்யன்பாகக் கொள்ளத்தடையென்ன? என்று கருத்து. (தேறி குற்றமாக் கொள்ளல்) என்று கூட்டியும் பொருள்கொள்ளலாம். நீ எங்களுடைய தன்மையையும், உன் பெருமையையும் ஆராய்ந்து தெளிந்து எங்களுடைய புன்மொழிகளைக் குற்றமாகக் கொள்ளாதொழியவேணும் என்று கருத்து. 35.



பதவுரை:— முன்னம்—முன்னமேயே, **தரணி தனது ஆக தானே**—பூமியைத் தன்னுடையதாகவே அபிமானித் திருந்த, **இரணியனை**—ஹிரண்யகசிபுவை, **புண் நிரந்த**—புண்படும்படி பிளந்த, **வள் உகிரால்**—கூர்மையான நகங்க ளால், **பொன்**—அழகியதாக விளங்குவதும், **ஆழி கையால்**—சக்கரத்தை உடையதுமான திருக்கையால், **நீ**—நீ, **மண் இரந்துகொண்ட வகை**—பூமியை யாசித்துப் பெற்ற வகையானது, **முரணை வலி தொலைதற்கு ஆம் என்றே**—(எங்களைப்போன்ற ஸம்ஸாரிகளின்) அஹங்கார மமகாரங்களைப் போக்கடிப்பதற்காகவேயல்லவா?

அவ:— முப்பத்தாரும் பாட்டு. (முரணை) யசோதைப் பிராட்டி ஸ்நேஹமின்றியிலேயிருக்கச்செய்தே அவளுடைய ஸ்நேஹம் உண்டாக பாவித்துச் சொன்னவற்றைக் குற்றமாகக் கொள்ளாதொழியவேணுமென்று நீர் இரக்க வேணுமோ, தன்னுடைமையை வேறொருத்தனதாக்கிவந்து இரக்குமவனுக்கு ?

---

அவதாரிகை:—இப்படிக் 'கூறிய குற்றமாக்கொள்ளல்' என்று பொறைகொள்ள வேண்டாதபடி, நீதானே உன்னை யழிய மாறிவந்து கார்யஞ்செய்தது ஸம்ஸாரிகளின் கோணை யைப் போக்கி உனக்காக்கிக் கொள்ளலாமென்று பார்த்தே? என்கிருர்.

---

*அவதாரிகை:*— 'கூறிய குற்றமாக் கொள்ளல்' என்று பிரார்த்திக்கவும் வேணுமோ ? நீயே உன் பெருமைக்குத் தகாதபடி இரப்பாளனுய்வந்து காரியம் செய்தது எங்க ளுடைய வைரத்தைப்போக்கி உனக்கு ஆளாக்கிக் கொள்ள நினைத்தன்ரோ ? என்கிருர்.

*வ்யா:*— (முன்னம்) வாமனுவதாரத்துக்கும் முற்பட்டதான நரஸிம்ஹாவதார காலத்திலேயே. (*தரணிதனதாகத் தானே இரணியனை*) உன்னதாயிருக்கும் பூமி முழுவதையும் தன் னுடையதாகவே அபிமானித்திருந்த இரணியனை. (*புண் நிரந்த*

**வ்யா:—** (முன்னமித்யாதி3) **முன்பே பூ4மியடையத் தன்னதாக அபி4மாநித்திருந்த ஹிரண்யனைப் புண்படுத்திப் பிளந்த உகிரை உடைத்தாயிருந்துள்ள பொன்னுழிக்கையால்.** (நீயித்யாதி3) **ப்ரகாரம்.** (முரணை வலி தொலைதற்காமென்றே) **ஸர்வேஶ்வரனுயிருந்துள்ள நம்முடைய அர்த்தி2த்வம் தோற்ற நின்ற ஸௌலப்1யத்தைக்காண நாட்டாருடைய அஹங்கார மமகாரத்தாலே பிறந்த தண்மை நெகிழுமென்றே நீ இப்படிச் செய்தது ?** (முன்னம் தரணி தனதாகத்தானே) **முன்னே பூ4மி அடங்கலும் தன்னதாக அபி4மாநித்த மஹாப3லி பக்கலிலே என்னவுமாம்.**

---

**உரை:—** முன்பே உன்னதான பூ4மியைத் தன்னதாகத் தானே அபி4மானித்திருந்த ஹிரண்யனைப் புண்படுத்திப் பிளந்த கூரிய திருவுகிரோடே கூடியிருப்பதாய், ஸ்ப்ருஹணீயமான திருவாழியையுடைத்தான திருக்கையாலே ஸ்ரீய:பதியான நீ பூ4மியை அர்த்தி2த்து அளந்துகொண்ட ப்ரகாரம்—"ந நமேயம்" என்கிறபடியே தலைவணக்கமற்றுத் திரியும் கனுங்கரான ஸம்ஸாரிகள் கோணைமிறுக்கு அறுக்கலாமென்றே.

---

*வள் உகிரால் பொன் ஆழிக்கையால்)* புண்படுத்திப் பிளந்த கூர்மையான நக2ங்களாலே அழகியதாய் விளங்கும் சக்கரக் கையால். *(நீ மண் இரந்து கொண்ட வகை)* லக்ஷ்மீநாத2னை நீ உன்னை இரப்பாளனுக்கி உன்னுடையதான பூ4மியை யாசித்துப்பெற்ற வழி. *(முரணை வலி தொலைதற்காமென்றே)* "இரண்டாகப் பிளக்கப்பட்டாலும் படுவேனேயொழிய வணங்கேன்" [ரா-யு 36-11] என்னும் எங்களைப்போன்ற ஸம்ஸாரிகளின் அஹங்காரமமகாரங்களை வலியழிப்பதற்காக வன்றோ. "ஸர்வேஶ்வரனை நாம் இரப்பாளனுய் நின்று தேவர் காரியம் செய்தமையைக்கண்டால், நம் கு3ணங்களிலும் வடிவழகிலுமீடுபட்டு ஸம்ஸாரிகளுடைய அஹங்காரமமகாரங் களும் ப3லமழிந்து ஒடுங்கும்; அவர்களையும் ஆளாக்கிக் கொள்ளலாம்" என்று கருதியன்றோ நீ இச்செயலைச்செய்தது.



(முரணையித்யாதி3) **யசோதைப் பிராட்டியைப்போலே எங்களை உருக்கலாமென்றே.** (முன்னமித்யாதி3) **தன்னதாக உகக்குமாகில், நாம் இன்று பெற்றோமாக அமையாதோ? என்று இரந்துகொண்ட வகை. 36.**

**37. வகையறு நுண்கேள்வி வாய்வார்கள் நாளும்**
**புகைவிளக்கும் பூம்புனலு மேந்தி - திசைதிசையின்**
**வேதியர்கள் சென்றிறைஞ்சும் வேங்கடமே வெண்சங்கம்**
**ஊதியவாய் மாலுகந்த வூர்.**

---

இரப்புத் தோற்றநின்ற ஸௌலப்1யத்தையும் வடிவழகையுங்காட்டி 'நான் எனக்கு' என்றிருக்கும் மிறுகுதலை மீட்டு. உனக்கேயாளாம்படி சேர்த்துக் கொள்ளுகைக்காக வன்றோ என்றபடி. 36.

---

ப3லத்தாலே மஹாப3லியை வெற்றிகொண்டிருந்தால் உனக்கு இவ்வரும்பயன் ஸித்3தி4க்காதென்பதாலேயன்றோ உன்னை அழியமாறி இச்செயலைச் செய்தாய். *(முன்னம் தரணி தனதாக- பொன்னுழிக்கையால் தானே மாவலியை மண்ணிரந்து கொண்ட வகை)* என்று கூட்டியும் பொருள் கொள்ளலாம். முற்காலத்திலேயே மாவலியானவன் பூ4மியைத் தன்னுடையதாக அபி4மானிக்க, ஆநுகூல்யலேஶம் அவனிடமிருக்கையாலே, இரணியனைப்போலே அவனை அழிக்காமல் உன்னை அழியமாறிக் காரியம் செய்தாயன்றோ என்று கருத்து. *(தரணிதனதாகத் தானே— இரணியனைப் புண்ணிரந்த பொன்னுழிக்கையால் மண்ணிரந்து கொண்ட)* பூ4மியைத் தன்னுடையதாக அபி4மானித்தமையிலே இரணியனுக்கும், மாவலிக்கும் வாசியில்லை. ஆயினும் மாவலியானவன் இரணியனைப்போலே துவேஷம் இல்லாதவனுகையாலும், பா4க3வதாபசாரமில்லாதவனுகையாலும், வண்மை முதலான கு3ணமுடையவனுகையாலும் அவனைப்பிளந்த கையாலே இவனிடம் யாசித்தான்; இதொரு கு3ணபக்ஷபாதமிருந்தபடியென் ! என்று ஈடுபடுகிறுர். 36.

**பதவுரை:— வகை அறு** — மற்ற தெய்வங்களும், மற்ற ப2லன்களுமாகிற வகைகளை அறுக்கும்படியான, **நுண் கேள்வி வாய்வார்கள்** — ஸூக்ஷ்மமான கேள்வி ஞானத்தை உடையவர்களான, **வேதியர்கள்**—விப்ரர்கள், **நாளும்**— தினந்தோறும், **புகை விளக்கும்**— தூ4பதீ3பங்களையும், **பூம் புனலும்**—பூவுடன் கூடிய ஜலத்தையும், **ஏந்தி** — த4ரித்துக் கொண்டு, **திசை திசையில்** — எல்லா தி3க்குகளிலிருந்தும், **சென்று**—(திருமலைக்குச்) சென்று, **இறைஞ்சும்** — தொழும் படியான, **வேங்கடமே** — திருவேங்கடமலையே, **வெண் சங்கம் ஊதிய வாய்** — வெளுத்த சங்கத்தை ஊதிய திருப் பவளத்தையுடைய, **மால்** —எம்பிரான், **உகந்த** — விரும்பி எழுந்தருளியிருக்கும், **ஊர்** — தேசமாகும்.

அவ:— **முப்பத்தேழாம் பாட்டு.** (வகையித்யாதி3) **'நாம் அந்த அவதாரத்துக்குப் பிறபட்டோமிறே; அது தீர்த்த2ம் ப்ரஸாதி3த்துப் போயிற்றிறே' என்ன; அவன்தான் ஸம் ஸாரத்திலே திருமலையை உகந்து வந்து நிற்கவும் அதுக்கு வெறுக்கவேணுமோ? என்கிறது.**

---

**அவதாரிகை:—** அங்ஙனே தன் அர்த்தி2த்வம் தோற்ற வந்து என்னளவன்றிக்கே என்றும் தன்னை அர்த்தி2யாக்கித் கொண்டு ஸர்வர்க்கும் ஸர்வகாலத்திலும் ஆஶ்ரயிக்கலாம்படி திருமலையிலே வந்து நித்யஸந்நிஹிதனானன் என்கிறார்.

---

*அவதாரிகை :*—மாவலியிடம் யாசகனாய் வந்தமையைக் கூறினார் சென்ற பாசுரத்தில்; அப்படியே தன்னிடமும், தன்னோடல்லாமல் எல்லாக்காலத்திலுமுள்ள எல்லாச்சேதன ரிடமும் 'என்னைக் கொள்ளலாகாதோ?' என்னும் இரப்புத் தோற்றவந்து அனைவரும் தன்னை அடைந்து விநியோக2ம் கொள்ளலாம்படி அருகிலேயே திருமலையிலே வந்து நிற்கிறான் என்கிறார் இப்பாசுரத்தில்.

*வ்யா :—(வகையறு)* உலகில் ப்ரயோஜநாந்தரங்களையும், தே3வதாந்தரங்களையும் பற்றி நிற்கும் அறிவு பலவகைப்பட்டி ருக்கும். அந்தவகைகளை அறுத்தவர்கள் என்றபடி.



வ்யா:—(வகையறும்) **41. "𑌬𑌹𑍁𑌶𑌾𑌖𑌾 𑌹𑍍𑌯𑌨𑌨𑍍𑌤𑌾𑌶𑍍𑌚" (ப3ஹுஶாக2ா ஹ்யநந்தாஶ்ச) என்னும்படி ப்ரயோஜநாந்தரபர மான தே3வதாந்தரஸ்பர்ஶியான வகையறுகை.** (நுண் கேள்வி வாய்வார்கள்) **ஸ்தூ2லமாகவன்றிக்கே ஶ்ரவண வேளையிலே ஸூக்ஷ்மமான கேள்வி வாய்த்தவர்களான.**

---

**உரை:—** ஆயு: புத்ர க்3ருஹ க்ஷேத்ர வித்த பஶ்வந்ந ஸ்வர்க்க3ாதி3ரூபேண பலவகைப்பட்டிருக்கிற க்ஷுத்3ர புருஷார்த்த2ங்களையும், பரமபுருஷார்த்த2லக்ஷண மோக்ஷத் தையும் அலகலகாக வகையறுக்கைக்கு உறுப்பாய், ஸூக்ஷ்மார்த்த2விஷயமான ஶ்ரவணம் வாய்த்திருக்கும்

---

"வ்யவஸாயாத்மிகா பு3த்3தி4ரேகேஹ குருநந்த3ந।
ப3ஹுஶாக2ா ஹ்யநந்தாஶ்ச பு3த்3த4யோऽவ்யவஸாயிநாம்॥"

*[கீ3தை 2-41]*

[குருகுலத்துதித்தவனே! *(ஆத்மஸ்வரூபத்தின் உண்மையைப் பற்றிய)* நிச்சயத்துடன் கூடிய பு3த்3தி4 (மோக்ஷப2லம் ஒன்றையே குறிக்கொண்டிருப்பதால்) ஒன்றாயிருக்கும்; அந்த நிச்சய மற்றவர்களுடைய பு3த்3தி4கள் (பல பலன்களைக்குறிக்கொண்டி ருப்பதால்) பல கிளைகளுடன் கூடியதாகவும், கணக்கற்றவை யாகவுமிருக்கும்.] என்று இவை பலவகைப்பட்டிருப்பவை என்னுமர்த்த2ம் சொல்லப்பட்டதன்றே. அப்படியல்லாமல், ஆயுள், மக்கள், மனை, நிலம், பணம், மாடு, உணவு, சுவர்க்கம் முதலான பலவகைப்பட்ட தாழ்ந்த பயன்களையும், மேலான ப2லனான மோக்ஷத்தையும் வகைவகையாக அறுத்து ஆராய்ந்து பார்த்தவர்கள் என்றுமாம். இப்படி ஆராய்வதற்கும், ப்ரயோஜ நாந்தரதே3வதாந்தரங்களைத் தள்ளுவதற்கும் ஸாமாந்ய ஜனங் களால் முடியுமோ? என்னில்: *(நுண்கேள்வி வாய்வார்கள்)* இப்படிச்செய்வதற்குக் கருவியான ஸூக்ஷ்மமான கேள்வி ஞானத்தை உடையவர்கள்; எதிலும் ஸ்தூ2லபு3த்3தி4யுடையவர் களால் இவ்வருஞ்செயலைச் செய்யமுடியாது; ஸூக்ஷ்மபு3த்3தி4 யுடையவர்களே ப்ரயோஜநாந்தரதே3வதாந்தரங்களை வகையறுத் துத் தள்ளமுடியும் என்று கருத்து. "உணர்ந்துணர்ந்து உரைத்துரைத்து இறைஞ்சுமின் மனப்பட்டதொன்றே"

(வேதியர்கள்) வேத$_3$தாத்பர்யம் கைப்பட்டவர்கள். (புகையித்யாதி$_3$) புஷ்பாத்$_3$யுபகரணங்களைக்கொண்டு. (திசையித்யாதி$_3$) ஸர்வதோதி$_3$க்கமாக வந்து தொழப்படும் திருமலை. (வெண்சங்கமித்யாதி$_3$) ப$_4$ாரதஸமரத்திலே அர்ஜுனன் தொடுத்துவிட்ட அம்புகளுக்கு எதிரிகள் எட்டும் அளவன்றியேயொழிந்தால் ஒருவராலும் இருய்க்கப் போகாதபடி நின்ற நிலையிலே முழுக்காயாக அவியும்படிக்கீடாக

---

வேத$_3$தாத்பர்யவித்துக்களடங்கலும் ஸர்வகாலமும் ஆராத$_4$னோபகரணமான தூ$_4$பதீ$_3$பங்களையும் பூவோடே கூடின ஜலத்தையும் த$_4$ரித்துக்கொண்டுபெரியதிருநாளுக்குப்போமாபோலே ஸர்வதோதி$_3$க்கமாக எடுத்துவட்டுச்சென்று ஆஶ்ரயிக்கும் திருமலையே ப$_4$ாரதஸமரத்திலே ப்ரதிபக்ஷம் நஶிக்கும்

---

[திருவாய் 1-3-6] என்று நம்மாழ்வாரும். "ஆலோட்$_4$ய ஸர்வ *ஶாஸ்த்ராணி விசார்ய ச புந: புந: । இத$_3$மேகம் ஸுநிஷ்பந்நம் த்$_4$யேயோ நாராயண: ஸதா$_3$ ॥"* [ப$_4$ார-ஆநு 186-11] எல்லா சாஸ்த்ரங்களையும் ஆராய்ந்து மறுபடியும் மறுபடியும் விசாரித்தால் தான் *நாராயணன் ஒருவனே என்றும் தியானிக்கத்தக்கவன் என்னுமிது தேறிநிற்கும்.]* என்று ரிஷிகளும் இதை அருளினார்களன்றோ. இப்படி ஸூக்ஷ்மபுத்தியும் ஆராய்ச்சியறிவும் இருந்துவிட்டால் மாத்திரம் போதுமோ? என்னில். *(வேதியர்கள்)* வேத$_3$த்தின் உட்பொருள் அறிந்தவர்களாகவும் இருக்கவேணும் என்கிறது. *(நாளும் புகைவிளக்கும் பூம்புனலும் ஏந்தி)* நாள்தோறும் முற்கூறிய வேதியர்கள் தங்கள் ஸ்வரூபாநுகு$_3$ணமாக ஆராத$_4$னோபகரணமான தூ$_4$பதீ$_3$பங்களையும், பூவையும் நீரையும் ஏந்திநின்று வழிபடுகிறார்கள். *(திசை திசையின் சென்று இறைஞ்சும்)* ப்$_3$ரஹ்மோத்ஸவம் எனப்படும் பெரிய திருநாளுக்குப்போவதுபோலே, எல்லா தி$_3$க்குகளிலுமுள்ள தேசங்களிலிருந்தும் தினந்தோறும் திருமலைக்குச் சென்று வழிபடுகிறார்கள். ஆழ்வாருடைய மங்க$_3$ளாசாஸந ப$_3$லத்தாலே இன்றளவும் திருமலையிலே நித்யப்$_3$ரஹ்மோத்ஸவமாயிருப்பதைக் காண்கிறோமன்றோ *(வேங்கடமே வெண்சங்கம் ஊதிய வாய் மாலுகந்த ஊர்)* இப்படிப்பட்ட திருவேங்கடமலையே, ப$_4$ாரத



ஸ்ரீபாஞ்சஜந்யத்தை வாயிலே வைத்து ஊதின க்ருஷ்ணன் உகந்த ஊர்.

(வகையறும்) முழுகுவாரைக் கண்டவாறே முழுகி. ஜபிப்பாரைக் கண்டவாறே ஜபியா. (நுண்கேள்வி) ஸூக்ஷ்மார்த்த$_2$ம் கேட்டுக் கைபுகுந்தார். 13. "चञ्चलं हि मनः कृष्ण" (சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண). (திசைதிசையில்) ஸர்வதோதி$_3$க்கமாக. (வேதியர்கள்) வேத$_3$தாத்பர்யம் கைப்பட்டார். (வெண்சங்கம்) ஆஶ்ரிதபக்ஷபாதி வர்த்திக்கிற ஊர். 37.

38. ஊரும் வரியரவ மொண்குறவர் மால்யானை
பேர வெறிந்த பெருமணியை — காருடைய
மின்னென்று புற்றடையும் வேங்கடமே மேலசுரர்
எம்மென்னு மால திடம்.

பதவுரை:— **ஊரும்** — ஊர்ந்து செல்கின்றதும், **வரி அரவம்**—(உடம்பில்) கோடுகளை உடையதுமான பாம்பானது, **ஒண் குறவர்**—மேலான குறவர்கள், **மால் யானை**

---

படியாக வெளுத்த நிறத்தையுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தை மடுத்தூதின திருப்பவளத்தையுடையவனாய், ஆஶ்ரிதவ்யாமுக்$_3$த$_4$னான க்ருஷ்ணன். ஆஶ்ரிதரக்ஷணத்துக்கு ஏகாந்தமான தே$_3$ஶமென்று உகப்புடனே வர்த்திக்கிற ஊர். 37.

---

யுத்$_3$த$_4$த்திலே எதிரிகள் அழியும்படியாக வெளுத்த நிறத்தையுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருப்பவளத்திலே மடுத்து ஊதின திருமால் உகப்புடன் வாழும் தி$_3$வ்யதே$_3$ஶம். (வெண் சங்கம் ஊதிய வாய் மால்) *"ஸ கோ$_4$ஷோ தா$_4$ர்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருத$_3$யாநி வ்யதா$_3$ரயத்"* [கீ$_3$தை 1-19] *[அப்பாஞ்சஜந்யகோ$_4$ஷம் திருதராஷ்டிரபுத்திரர்களின் நெஞ்சைப் பிளந்தது]* என்கிறபடியே அர்ஜுனனின் அம்புக்கும் எட்டாதவர்களை நின்றநிலையிலிருந்தே அழித்த ஸ்ரீபாஞ்சஜந்யத்தை ஊதிய திருப்பவளத்தை உடைய கண்ணன். *(மால்)* அடியார்பக்கல் அன்புடையவன். *(உகந்த ஊர்)* அடியாரைக் காக்க உரிய ஸ்த$_2$லம் என்று உகப்புடன் வாழும் ஊர்.

**பேர**—(பட்டி மேய்கிற) பெரிய யானைகள் (புனத்தை விட்டு) வெளிச்செல்லும்படியாக, **எறிந்த** — (அந்த யானைகளின் மீது) வீசி எறிந்த, **பெரு மணியை**—பெரிய மாணிக்கத்தை, **கார் உடைய மின் என்று** — மேக4த்தில் இருக்கும் மின்னல் என்று நினைத்து, **புற்று அடையும் வேங்கடம்**—(இடிக்கு ப4யந்து) புற்றினுள் நுழையுமிடமான திருவேங்கடமலையே, **மேலசுரர்**—மேலான தேவர்களான நித்யஸூரிகள், **எம் என்னும்**—எங்களுடையது என்று அபி4மானிக்கும், **மாலது இடம்**—எம்பெருமானுடைய தி3வ்யதே3ஶமாகும்.

**அவ:— முப்பத்தெட்டாம் பாட்டு.** (ஊரும்) **பரமபத3த்திலுள்ளாரடைய உத்3தே3ஶ்யரானவோபாதி திருமலையில் வர்த்திக்கும் ஸர்ப்பம், குறவர், பட்டிதின்னும் ஆனையடைய இவர்க்கு உத்3தே3ஶ்யமாயிருக்கிறபடி. “ எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனுமாவேனே ”.**

---

**அவதாரிகை:** - இப்படி அவன் திருமலையிலே உகந்து நித்யவாஸம் பண்ணுகையாலே, இவரும் தத்ஸம்ப3ந்த4த்தாலே அங்குண்டான ஸர்ப்பம், குறவர், ஆனை, அத்தையெறிகைக்குக் கருவியான மணி, புற்று முதலான பதா3ர்த்த2ங்களையெல்லாம் அவனோபாதி ப்ராப்யமாக நினைத்து மண்டி அநுப4விக்கிறார்

---

*அவதாரிகை:*—இப்படிப் பரமபத3நிலயனானவன் திருமலையிலே உகந்து என்றும் வாழ்கையாலே, இவரும் அவனோடு தொடர்புபெற்ற அந்த மலையிலிருக்கும் பாம்பு, குறவர், பட்டி மேயும் யானை, அதைத் துரத்தும் கருவியான மணி, பாம்பு புகும் புற்று முதலான பொருள்களையெல்லாம் அவனைப் போலும், பரமபத3த்திலுள்ளாரைப்போலும் உத்3தே3ஶ்யமாக நினைத்து ஈடுபட்டு அநுப4விக்கிறார் இப்பாசுரத்தில்.

*வ்யா:—(ஊரும் வரியரவம்-புற்றடையும்)* ஒரு காரியமில்லாவிடிலும் ஊர்வதையே இயற்கையாகக்கொண்ட பாம்பு புற்றையடைகிறது. *(ஊரும்) “ புத்ர ப்4ராதரி க3ச்ச2தி*



**வ்யா:—** (ஊரும்) **ஒரு கார்யப்பாடறத் திருமலையிலே ஊர்ந்து திரிகையே உத்3தே3ஶ்யமாயிருக்கிறபடி.** (வரியரவம்) **பாம்பினுடைய உடம்பில் வரி திருவேங்கடமுடையானுடைய திருமேனியில் ஓர் அவயவத்தோபாதி உத்3தே3ஶ்யமாயிருக்கிறபடி.** (ஒண்குறவர்) **திருவேடுவர்க்கு ஒண்மையாவது - “ இவர்கள் பாட்டன் பாட்டனிலே ஒருத்தன் பூ4மியிலே இறங்கினான் ” என்னும் பழியின்றிக்கேயிருக்கை.** (மால்யானையித்யாதி3) **மலைபோலே இருந்துள்ள ஆனை, தன்னை, ஒரு மலை சலித்தாற்போலே இருக்கப்போம்படிக்**

---

**உரை:—** ஒரு கார்யப்பாடற ஸ்வைரஸஞ்சாரம் பண்ணா நிற்பதாய், த3ர்ஶநீயமான வரியையுடைத்தான ஸர்ப்பமானது, திருமலையில் நின்றும் கீழிழியுமது குடிப்பழியாக நினைத்திருக்கும் விலக்ஷணரான குறவர் புனத்தில் வந்து பட்டிமேய்கிற பர்வதோபமமான ஆனையானது மணிகளின் ஒலியைக்கண்டு சலித்து மலைபேர்ந்தாற்போலே பேர்ந்து

---

*ப்ரமாத3ம் மாகார்ஷீ:*” [ரா-அ 40-5] [குழந்தாய்! ராமன் நடந்து செல்லுகையில் (அந்த நடையழகில் ஈடுபட்டு—அவனை ரக்ஷிப்பதில்) கவனமில்லாமல் இருந்துவிடாதே] என்று இளைய பெருமாள் பெருமாளின் நடையழகில் ஈடுபடுகிறார். ஒரு ப3லனையும் எதிர்பாராமல் திருமலையில் ஊர்வதே ஒரு திர்யக்குக்குப் பயனாவதே! என்று இவர் ஈடுபடுகிறார். *(வரியரவம்)* வரிகளையுடைய பாம்பு. திருவேங்கடமுடையானின் தி3வ்யாவயவங்களைப்போலே பாம்பின் வரிகளும் இவர்க்கு உத்3தே3ஶ்யமாயிருக்கிறபடி. ஊரும் வரியரவம் புற்றடைவதற்குக் காரணத்தைச் சொல்லுகிறது மேலே—*(ஒண்குறவர்)* சிறந்த குறவர். இவர்களுக்குச் சிறப்பாவது – “ இவர்களுடைய பாட்டன் முப்பாட்டன்களிலே ஒருவன் திருமலையைவிட்டுக் கீழேயிறங்கினான்” என்னும் பழியில்லாமலிருக்கை. *(மால் யானை பேர எறிந்த பெருமணியை)* குறவர்களுடைய புனங்களில் வந்து பட்டிமேய்கிற மலைபோன்ற யானையானது பேர்ந்து போம்படியாகக் குறவர் எறிந்த பெரிய மணியை. *(மால் யானை)* மலைபோல் பெரிய யானை, *(பேர எறிந்த)* மலை

கீடாக. (எறிந்த பெருமணியை) மஹார்க்க4மான மணியை.
ஆனை மேக4ம்போலே இருக்கையாலும், அதிலே பட்ட மணி
மின்போலேயிருக்கையாலும், பாம்பானது, இடிக்கு
அஞ்சுகையாலே மின்னினவநந்தரம் இடி உண்டாமென்று
கொண்டு அதுக்கு முன்னே புற்றடையாநிற்கும் திருமலை.
(மேல சுரர் எம்மென்னு மாலதிடம்) ஆக்கரான தே3வர்க
ளன்றியே, மேலான சுரர் - நித்யஸூரிகள், எம்மென்னு
மாலதிடம் - அஹமஹமிகயா விரும்புமிடம்.

---

பேரம்படியாக எறிந்த, ஒரு மலையிலே ஒரு மலை தாக்கினாற்
போலேயிருக்கும் பெருமையையுடைய மாணிக்கத்தை,
யானையின் கறுப்பும், மணியின் புகரும் தன்னில் வாசி
தோற்றுகையாலே, மேக4த்தோடே கூடினதொரு மின்னைக்
கருதி, தத3நந்தரபா4வியான இடிக்கு ப4யப்பட்டு, நிர்ப4
யஸ்தா2நமான புற்றிலே சென்று ப்ரவேஶிக்கும் சிறப்பை
யுடைய திருமலையே, ஆக்கரான தே3வர்களன்றியே
ஸர்வோத்க்ருஷ்டரான நித்யஸூரிகள் எங்களதென்று மேல்
விழுந்து அத்யபி4நிவிஷ்டராய் அநுப4விக்கும் தே3ஶம்.

---

பேர்ந்தாற்போலே பேர்ந்துபோம்படி எறிந்த. (*பெருமணியை*)
கருமலைமேல் வெள்ளிமலையை எறிந்தாற்போலே பெருத்திருக்
கும் மணியை எறிந்தபடி. (*பெருமணியை*) பெருவிலையுள்ள
மணியை என்றுமாம். குறவர்கள் யானையை விரட்டக்
கற்களைவிட (*விலையுயர்ந்த*) மணியே எளிதில் அகப்படும் என்று
தோற்றுகையாலே, திருமலையின் செல்வச்சிறப்பு உணர்த்தப்
படுகிறது. (*காருடைய மின்னென்று புற்றடையும்*) யானையின்
கறுப்பையும், மணியின் ஒளியையும் கண்டு மேக4த்தோடு
கூடிய மின்னலென நினைக்கிறது பாம்பு. மின்னல் தோன்றி
னால் சில கணங்களில் இடியிடிக்கும். இடிக்கு பயப்படுவது
பாம்பு. ஆகையாலே 'இடி இடிக்கப்போகிறது' என்று பயந்து
தன்னிலமாகையாலே பயமற்றவிடமான புற்றை அடைகிறது
ஊரும் வரியரவம். (*வேங்கடமே மேல சுரர் எம்மென்னு மால
திடம்*) இப்படிப்பட்ட சிறப்பையுடைய திருமலையே மிகச்சிறந்த
நித்யஸூரிகள் 'எங்களுடையது' என அபி4மானிக்கும் இடம்.



அவ:— அங்கே புக்காலோவென்னில் ; உள்ளுப்புக வொட்டாநின்றதோ?

வ்யா:— (ஊரும்) 42. "भ्रातरि गच्छति" (ப்4ராதரி க3ச்ச2தி) போலே. (வரி) அதுவும் ஸ்ப்ருஹணீயம். (மால் யானை) மலை நடந்தாற்போலே. (பேர) ஆமிஷார்த்த2மாக வந்து மலைபேர்ந்தாற்போலே பேர. (பெருமணியை) மலை போல இருக்கை. (ஊரும் வரியரவம்) இவை ஸ்வைர ஸஞ்சாரத்தாலே ஸௌப4ாக்3யம் கொண்டாடப் புறப்பட்டு. (புற்றடையும்) இடிக்கு முன்னான மின்னாகையாலே. 38.

---

"என்னென்ற மாலதிடம்" என்று 'எங்களது, எங்களது' என்று அபி4நிவேஶிக்கைக்கு விஷயமான ஸ்தா2நம் என்றபடி. 'என்' என்கிற இத்தை மாலோடே கூட்டி எங்களுக்கு ப்ராப்யமென்னப்பட்ட ஸர்வேச்வரன தான இடம் என்றுமாம். முற்பட்ட யோஜனைக்கு 'மால்' என்று அபி4நிவேஶத்தைச் சொல்லுகிறது. 38.

---

(*மேல சுரர்*) மேலான சுரர்; அழியக்கூடிய இந்த்3ராதி3 தே3வரைப் போலன்றியே, அழியாதவராய், "*யத்ர பூர்வே ஸாத்4யா: ஸந்தி தே3வா:*" [பு-ஸூ] [யாதொரு பரமபத3த்தில் ஸநாதனரான (பரமப்ராப்யராகையாலே) ஸாத்4யரெனப்படும் தே3வர்கள் உள்ளனரோ] என்று அநாதி3ஸித்3த4ராயுள்ள அநந்தக3ருட3ாதி3க ளான நித்யஸூரிகளைச் சொல்லுகிறார். (*என்னென்ற மாலதிடம்*) நித்யஸூரிகள் 'எங்களுடைய இடம், எங்களுடைய இடம்' என்று மேல்விழுந்து அபி4மானத்தை வைக்குமிடம். மால்- அன்பு ; அபி4மானம். "கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு - வேங்கட விண்ணோர்வெற்பனே" [திருவாய் 1-8-3] "வடவேங்கடமாமலை வானவர்கள் சந்தி செய்யநின்றான்" [அமலனாதி-3] என்று மற்றையாழ்வார்களும் நித்யஸூரிகள் திருமலையிலே மண்டியிருப்பதைச் சொன்னார்களன்றோ. (*மேல சுரர் என்னென்ற மாலது இடம்*) நித்யஸூரிகளால் 'எங்களுக்கு ப்ராப்யன்' எனப்பட்ட திருமாலுக்கு ப்ராப்யமா

39\. இடந்தது பூமி யெடுத்தது குன்றம்
கடந்தது கஞ்சனைமுன் னஞ்ச —கிடந்ததுவும்
நீரோத மாகடலே நின்றதுவும் வேங்கடமே
பேரோத வண்ணர் பெரிது.

**பதவுரை:— பேர் ஓதம் வண்ணர்**— பெரிய கடல் போன்ற திருநிறத்தை உடைய எம்பெருமான், **முன்** — முற்காலங்களில், **இடந்தது**—(வராஹரூபியாகக்) குத்தியெடுத்தது, **பூமி** — உலகமாகும்; **எடுத்தது** —குடையாக எடுத்தது, **குன்றம்** — கோவர்த்தனமலையாகும்; **அஞ்ச கடந்தது** - பயந்து அழிந்து போகும்படி செய்தது, **கஞ்சனை** — கம்ஸனையாகும்; **கிடந்ததுவும்** — திருக்கண்வளர்ந்தருளினதும், **நீர் ஓதம் மா கடல்** — நீர் நிரம்பியதும், அலையெறிவதுமான பெருங்கடலிலே; **பெரிது நின்றதுவும்**—எப்போதும் நின்றதுவும், **வேங்கடமே** — திருமலையிலேயாகும்.

அவ:— **முப்பத்தொன்பதாம் பாட்டு. (இடந்தது) ஆபத்திலே பூ$_4$மியை ரக்ஷிப்பது; அவதாரங்கள் ஸாது$_4$பரித்ராணார்த்த$_2$ம் து$_3$ஷ்க்ருத்$_3$விநாஶார்த்த$_2$மாவது; எப்போதும் உகந்து திருமலையிலே நிற்பது என்கிறார்.**

---

**அவதாரிகை:**— மற்றுமுள்ள தி$_3$வ்யதே$_3$ஶங்களிற்காட்டில் திருமலைக்கு இத்தனை யேற்றமென்? என்ன; 'அவையெல்லாம் ஒருதட்டு இதுவொரு தட்டு' என்னும்படி அவன் விரும்பின தே$_3$ஶமன்றோ திருமலை என்கிறார்.

---

யிருக்கும் இடம் என்றும் பொருள்கொள்ளலாம். முதற்பொருளில் மால் என்றது அபி$_4$மானத்தையும், இரண்டாவதான இப்பொருளில் 'மால்' என்று மிகப்பெரியவனான ஸர்வேஶ்வரனையும் சொல்லுகிறது. "எம்மென்னும் மாலதிடம்' என்றும் பாட$_2$ம். பொருள் வேறுபாடில்லை. 38.

*அவதாரிகை:*—மற்றுமுள்ள திவ்யதேசங்களிற்காட்டிலும் திருமலைக்கு நித்யஸூரிகளும் விரும்பும்படியான இத்தனை ஏற்றமென்ன? எனில்; அவையெல்லாம் ஒருதட்டு, இத்திருமலை



வ்யா:— (இடந்தது பூமி) **ப்ரளயாபத்திலே பூ$_4$மியை எடுத்த அழகு காணலாவது. (எடுத்தது குன்றம்) கே$_3$ாவர்த்த$_4$நோத்$_3$த$_4$ரணத்திலே, அவ்வழகு காணலாவது.** (கடந்ததித்யாதி$_3$) **கம்ஸன் அஞ்சும்படி அவனை அழித்த அன்று வெற்றியழகு காணலாவது.** (கிடந்ததுவும் நீரோத மாகடலே) **கண்வளர்ந்த அழகு காணலாவது ஆழ்ந்த கட**

---

**உரை:**-- பெரிய திரைக்கிளர்த்தியையுடைய கடல் போன்ற வடிவையுடையவர். வராஹவேஷங்கொண்டு ப்ரளயத்திலே முழுகி இடந்தெடுத்துக்கொண்டேறினது பூ$_4$மி; க்ருஷ்ணவேஷங்கொண்டு வர்ஷாபத்தைப் பரிஹரிக்கைக்காக எடுத்து த$_4$ரித்துக்கொண்டுநின்றது கே$_3$ாவர்த்த$_4$ந பர்வதம்; உறவிலே அழைத்து நலியநினைத்த முற்காலத்திலே

---

ஒருதட்டு என்னும்படி அவன் விரும்பிய திவ்யதேசமன்றோ இது என்கிறார்.

*வ்யா:—(பேரோதவண்ணர்)* பெரிய அலைகள் எறியாநிற்கும் கடல்போலே காண்பார் கண்களைக் குளிரவைக்கும் திருநிறத்தையுடையவர். *(இடந்தது பூமி)* பிரளயத்தாலே உலகம் மறைந்தபோது வராஹவேஷங்கொண்டு பிரளயத்திலே முழுகி, குத்தியெடுத்துக்கொண்டு ஏறினது பூ$_4$மியையாகும். *(எடுத்தது குன்றம்)* இந்திரனாலே கல்மழையாகிற ஆபத்து வந்தபோது, கண்ணனாகிற உருவத்தோடு கல்மழையினின்று ஆயர்பாடியைக் காப்பதற்காக எடுத்துத் தாங்கிநின்றது கே$_3$ாவர்த்த$_4$னகி$_3$ரியை. *(அஞ்ச முன் கடந்தது கஞ்சனை)* அவ்வவதாரத்திலேயே, மாமன் என்னும் உறவைச் சொல்லியழைத்து அழிக்கநினைத்த முற்காலத்திலே, " கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற" [திருப்பாவை-25] என்கிறபடியே கண்ட காட்சியிலே நடுங்கும் படியாக, மேலேறி அழித்தது கம்ஸனையாகும். *(கிடந்ததுவும் நீரோத மாகடலே)* இவ்வவதாரங்களுக்கெல்லாம் மூலமாகக் கண்வளர்ந்தருளியதும், மிகுந்த நீரையுடையதாய், அலையெறிகிற பெரிய திருப்பாற்கடலிலேயாகும். இவையெல்லாம் ஒவ்வொரு சமயத்திலே பாக்கியசாலிகளான ஒரு சிலரே

லிலே சாய்ந்தபோது. (பேரோத வண்ணர் பெரிது நின்றதுவும் வேங்கடமே) கடல்போலே ஶ்ரமஹரமான வடிவை உடையவன் எப்போதும் உகந்து நிற்பது திருமலையிலே.

(இடந்தது) ப்ரளயத்தாலே வந்த நலிவுதீர. (எடுத்தது) இந்த்₃ரனால் வந்த நலிவுதீர. (கடந்தது) கம்ஸனால் வந்த நலிவுதீர. (கிடந்ததுவும்) அவதாரத்துக்கு ஏகாந்தமாம். நாம் பெருமாளை உகந்தோமென்று சோற்றை உகப்புதோம்; சோற்றை உகந்தோமென்று நாலும் பத்தும்

---

கண்டகாட்சியிலே நடுங்கும்படியாகக் கம்ஸனை ஆக்ரமித்து முடித்து விட்டது; இவ்வவதாரங்களுக்கு அடியாக மிக்க நீரையுடைத்தாய் அலையெறிகிற பெரிய திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளிற்று; இங்கு அப்படியன்று, ஸமஸ்தாவதாரங்களிலுமுள்ள கு₃ணசேஷ்டிதங்களடங்கலும் ப்ரகாஶிக்

---

கண்டு அநுபவிக்கக்கூடியவை; எல்லார்க்கும் எல்லாக்காலத்திலும் கண்டு அநுப₄விக்கக்கூடிய நிலை வேங்கடத்திலேயே என்கிறார் கடைசியாக – (*பெரிது நின்றதுவும் வேங்கடமே*) எல்லா அவதாரங்களிலும் உள்ள கு₃ணங்களையும் செயல்களையும் எல்லாக் காலத்திலும் எல்லோரும் கண்டு அநுப₄விக்கும்படியாக மிகவும் நின்றருளியது திருமலையிலேயேகிடீர்.

"ரக்ஷகனான அவன் நமக்கு ப்ரளயத்தால் வந்த நலிவுதீர பூ₄மியிடந்தான்; இந்திரனால்வந்த நலிவுதீரக் குன்றமெடுத்தான்; கம்ஸனால்வந்த நலிவுதீர அவனைக்கடந்தான். கூப்பீடுகேட்கவும் அவதாரமெடுக்கவும், நீரோதமாகடல் கிடந்தான்; என்றும் அனைவர்க்கும் முகங்கொடுக்கத் திருமலையில்நின்றான். இப்படி ரக்ஷ்யவஸ்துவான நம்மிடம் ஸ்நேஹத்தாலே அவன் செய்யாத செயலில்லை. நாமோவெனில், பெருமாளை உகக்கிறோம் என்று கூறிக்கொண்டே சோற்றை உகக்கிறோம். சோற்றையாவது நெஞ்சார உகக்கிறோமா என்று பார்த்தால் அதுவுமில்லை, சோறு பிடிக்காமல் சிலநாள் பட்டினி கிடக்கிறோம். ஸ்திரீகளை உகக்கிறோம் என்று எண்ணிக்கொண்டே சதுரங்கமாடுகிறோம்;



பட்டினி விடுவுதோம்; ஸ்த்ரீகளை உகந்தோமென்று சதுரங்க₃ம் பொருதல், உறங்குதல் செய்வுதோம்; ஒன்றிலும் ஸ்நேஹமில்லை. 39.

40. பெருவில் பகழிக் குறவர்கைச் செந்தீ
வெருவிப் புனந்துறந்த வேழம் – இருவிசும்பில்
மீன்வீழக் கண்டஞ்சம் வேங்கடமே மேலசுரர்
கோன்வீழக் கண்டுகந்தான் குன்று.

**பதவுரை:**— **பெரு வில்** — பெரிய வில்லையும், **பகழி** – அம்புகளையும் உடைய, **குறவர்**-வேடர்களுடைய, **கை**-கையிலே பிடித்த, **செம் தீ**—சிவந்த நெருப்புக்கு, **வெருவி**—அஞ்சி, **புனம் துறந்த**—வயலை விட்டு நீங்கின, **வேழம்**—யானை, **இரு விசும்பில்**—பரந்த ஆகாயத்திலிருந்து, **மீன் வீழ**—நக்ஷத்திரம் விழ, **கண்டு**—அதைப்பார்த்து, **அஞ்சும்**—(குறவர்கள் வீசி எறிந்த கொள்ளிக்கட்டையென்ற) பயப்படுமிடமான, **வேங்கடமே**—திருமலையே, **மேல்**—முற்காலத்தில், **அசுரர் கோன் வீழ** – அசுரர்களுக்கு அரசனான ஹிரண்யன் முடிந்து விழ, **கண்டு**—(அதைப்)பார்த்து, **உகந்தான்**—மகிழ்ந்தவனுடைய, **குன்று**—திருமலையாகும்.

---

கும்படி உகப்புடனே என்றுமொக்க மிகவும் நின்றருளிற்று திருமலையிலே கிடீர். 39.

**அவதாரிகை:**-ஆஶ்ரித விரோதி₄நிரஸநம்பண்ணி உகக்குமிதுவே கிடீர் அவன் இங்குத்தை நித்யவாஸத்துக்கு ப்ரயோஜநமாக நினைத்திருப்பது என்கிறார்.

---

உறங்குகிறோம். எந்த விஷயத்திலும் நமக்கு உண்மையான அன்பில்லை. இதுவே நமக்கும் ஸர்வேஶ்வரனுக்குமுள்ள வாசி" என்னும் இப்பாசுரத்தின் ஸாரார்த்த₂த்தைப் பெரியவாச்சான் பிள்ளையின் பரமபோ₄க்₃யமான வ்யாக்₂யான ஸ்ரீஸூக்திகள் தெரிவிக்கின்றன. 39.

*அவதாரிகை:*— அடியாருடைய விரோதி₄களை அழித்து உகக்கும் இதுவேயன்றோ இத்திருமலையில் நித்யவாஸத்துக்கு அவன் பயனாக நினைத்திருப்பது என்கிறார்.

வ்யா:— நாற்பதாம் பாட்டு. (பெருவில்) திருமலையை உகக்கிறார். 43. "अवष्टभ्य महद्धनुः" (அவஷ்டப்4ய மஹத்3த4நு:) என்கிறபடியே, சக்ரவர்த்தித்திருமகன் கையும் வில்லும்போலே பெரியவில்லையும் தெரிந்த பகழியையும் உடையரான திருவேடுவர். (குறவரித்யாதி3) சூளிலே கொளுத்திக் கையிலே கொடுபோகிற நெருப்பொளியிலே வில்லின் பெருமையையும் கண்டு நெருப்புதனக்கு ஆனை அஞ்சும்படியாகவும், பட்டிமேய்ந்த ஆனை இப்புனம் கொய்

உரை:—"अवष्टभ्य महद्धनुः" (அவஷ்டப்4ய மஹத்3த4நு:) என்கிறபடியே ஒரு கையிலே எடுத்துப்பிடித்த பெரிய வில்லையும் வாயம்புகளையும் உடையரான திருக்குறவர். மற்றக் கையிலே வழியில் வெளிச்செறிப்புக்காகப் பிடித்த சிவந்த நிறத்தையுடைத்தான சூள்நெருப்பின் ஒளிவழியே, இவர்கள் கையும் வில்லும் பிடித்த சூளுமாய்க்கொண்டு ஆயத்தப்பட்டு வருகிறபடியைக்கண்டு, நம்மை நலியவருகிறார்கள் என்று ப4யப்பட்டு, ஒருகாலும் இங்கு வரக்

வ்யா:—*(பெருவில் பகழிக்குறவர்)* "*ஆலிக2ந்தமிவாகாஶமவஷ்டப்4ய மஹத்3த4நு:*' [ரா-யு 100-12] [ஆகாயத்தை அளாவி நிற்கும் பெருவில்லை அழுத்திப்பிடித்துக்கொண்டு நிற்கும் ராமனை] என்கிறபடியே ஸ்ரீராமபிரானைப்போலே ஒரு கையாலே அமுக்கிப் பிடிக்கவேண்டும்படியான பெருமையையுடைய வில்லையும், அதற்கேற்ற பெருவாயையுடைய அம்புகளையும் உடைய குறவர்கள். *(கைச் செந்தீ)* மற்ற கையினாலே இருண்ட திருமலைப்புனங்களிலே வழிதெரிவதற்காகப் பிடித்த கைப்பந்தத்தின் சிவந்த தீ. *(செந்தீ வெருவிப் புனம் துறந்த வேழம்)* அந்த நெருப்புக்கு ப4யந்து புனத்தைவிட்டோடும் யானை. *(குறவர்கைச் செந்தீ வெருவி)* இருட்டில் வழிதெரிவதற்காகவே குறவர்கள் பந்தம்பிடித்திருக்கிறார்கள்; யானையை விரட்டுவதற்காகவல்ல; "வைப்பன் மணிவிளக்கா மாமதியை மாலுக்கென்று எப்பொழுதும் கைநீட்டும் யானையை எப்பாடும் வேடுவளைக்கக் குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே" [நான்-திருவ 46] என்கிறபடியே திருமலைக்குப் புறம்புள்ள வேடர்



தாலும் இங்கு வாரேனென்று ஸந்யஸித்துப்போனது. (இருவிசும்பித்யாதி3) வெளியையும் பரப்பையுமுடைத்தான ஆகாஶத்தினின்றும் மீன்விழக்கண்டு இனி ஓரிடத்திலும் போக்கில்லையென்று நின்றநிலையிலே நின்று அஞ்சுகிற திருவேங்கடம். மேல் - பண்டு. (அசுரரித்யாதி3) "சிறுக்கனுடைய விரோதி4 போயிற்று" என்று உகந்து இன்னமும் ஆஶ்ரிதவிரோதி4 ஏதேனும் வரிலும் பரிஹரிக்கவேணும் என்று அவன் பற்றிநிற்கும் திருமலை.

கடவோமல்லோம் என்று புனத்தை ஸந்யஸித்துப்போன ஆனையானது, போமிடந்தன்னிலும், பரப்பையுடைத்தான ஆகாஶத்தினின்றும் நக்ஷத்ரங்கள் வீழ, அத்தைக்கண்டு, நமக்கு அவ்வருகு ஓரடியிடவொண்ணாதபடி பூ4மியிலே நெருப்பை விழவிட்டார்கள் என்று அவ்வருகு போகமாட்டாமல் புனத்திலே புகமாட்டாமல் நடுவேநின்று நடுங்கும்படியான திருமலையே, முன்பொரு காலத்திலே அஸுர

யானையை வளைத்தாலும் அவர்களை எதிர்க்கவே வில்லெடுப்பவர்களன்றோ திருமலைக்குறவர்கள். *(பெருவில்பகழிக்குறவர் கைச் செந்தீ வெருவி)* யானைக்கு நெருப்பென்றாலே ப4யம்; அதோடு தீயின் ஒளியில் பெருவில் பகழிகளையும் கண்டுவிடுகிறது. பெரும்ப4யம் ஏற்பட்டுவிடுகிறது. 'இனி எக்காரணத்தைக் கொண்டும் இப்புனத்தினுள் நுழையக்கூடாது' என்னும் உறுதியான ஸங்கல்பத்தோடு புனத்தைத் துறந்தேவிடுகிறது யானை. *(இருவிசும்பில் மீன்வீழக் கண்டஞ்சும்)* ப4யத்தாலே புனந்துறந்து சென்ற யானைக்கு வெளியிலேயும் பெரும்ப4யம் ஒன்று காத்துநிற்கிறது. மிகப்பரந்த ஆகாயத்திலிருந்து எரி நட்சத்திரங்கள் விழுகின்றன. 'புனத்தைக் காக்குப் குறவர்கள் கொள்ளிக்கட்டையைக்காட்டி நம்மைத் துரத்தியதோடு நில்லாமல், வெளியிலும் செல்லமுடியாதபடி பரண்களிலேயிருந்து நம்மீது கொள்ளிக்கட்டையை வீசுகிறார்கள்' என்று கருதிய யானை வெளியிலும் செல்லமாட்டாமல், உள்ளேயும் புகமாட்டாமல் அந்தரத்திலே அஞ்சிநிற்கிறது. *(அஞ்சும் வேங்கடமே)* "வேங்கடங்கள்" [திருவாய் 3-3-6] என்று ப4யம் முதலான

(பெருவிலித்யாதி3) இதில் உத்தரார்த்த4ம் மீன்வீழக் கண்டஞ்சும் நிலத்திலே நெருப்பை விழவிட்டார்களென்று குறவர் எறிந்த கொள்ளிக்கு வெருவினதாகையாலே. (வேங்கடம்) நிர்ப்ப4யமான தே3ஶம்; அஸ்த2ாநே ப4ய ஶங்கை பண்ணுமித்தனை. 40.

---

ராஜனென்று விருதூதித்திரிந்த ஹிரண்யன் பிணமாய் விழுந்து போகக்கண்டு, 'சிறுக்கன் விரோதி4 போகப் பெற்றோம்' என்று உகந்த ஸர்வேஶ்வரன், பின்புள்ள ஆஶ்ரிதவிரோதி4களையும் தீர்க்கவேணும் என்று வர்த்திக்கிற மலை. 40

---

வற்றைப் போக்கடிக்குமிடம் வேங்கடம். ஆனையானது அஸ்த2ாநே ப4யஶங்கைபண்ணி அஞ்சிற்றேயொழிய, உண்மையில் யானைக்கு ஒருப4யமுமில்லை. 'ப4யம் ப4யாநாமபஹாரிணி ஸ்தி2தே'' [வி-பு 1-17-36] என்கிறபடி ப4யத்தையெல்லாம் போக்கும் பரமபுருஷன் நிற்குமிடமன்றோ இது, அஸ்த2ாநே ப4யஶங்கைபண்ணிப் பரமபுருஷனுக்கு மங்க3ளாஶாஸநம் செய்வார் நிறைந்த இடமாகையாலே, இதுவும் அஸ்த2ாநே ப4யஶங்கை நிறைந்ததாயுள்ளதுபோலும்!

இது ப4யங்கொள்வதற்கே இடமில்லை, அவனுடைய தன்மையை நோக்கினால் என்கிறார் மேலே, - *(மேல் அசுரர்கோன் வீழக் கண்டுகந்தான் குன்று)* முற்காலத்தில் அசுரர்தலைவன் என்று விருது ஊதித்திரிந்த பா4க3வதாபசாரிகளில் தலைவனான இரணியன் செத்துவிழக்கண்டு, 'பரமபா4க3வதனான சிறுவன் பிரகலாதனின் விரோதி4 போகப்பெற்றோம்' என்று உகந்த ஸர்வேஶ்வரனுடைய மலையாகும் இத்திருவேங்கடம். *(உகந் தான் குன்று)* ஆஶ்ரிதவிரோதி4 அழிந்ததைக்கண்டு உகந்தவன் பின்புள்ள ஆஶ்ரிதவிரோதி4களையும் அழிக்கவேண்டுமென்று நித்யவாஸம் செய்கிற மலை. ஆகையால் அஸ்த2ாநே ப4யஶங்கையொழிய யானைக்கு ப4யமொன்றும் வர இடமில்லை என்று கருத்து. 40.



**41. குன்றனைய குற்றஞ் செயினும் குணங்கொள்ளும்**
**இன்று முதலாக வென்னெஞ்சே — என்றும்**
**புறனுரையே யாயினும் பொன்னாழிக் கையான்**
**திறனுரையே சிந்தித் திரு.**

பதவுரை:— என் — என்னுடைய, **நெஞ்சே** — மனமே! **இன்று முதலாக** — இப்பொழுது தொடங்கி, **என்றும்** — எப்பொழுதும், **புறன் உரையே ஆயினும்** — வெளிக்குச் சொல்லும் வார்த்தையாயிருந்தாலும், **பொன் ஆழி கையான் திறன் உரையே** - அழகிய சக்கரத்தைக் கையிலேகொண்ட எம்பெருமான் விஷயமான பேச்சையே, **சிந்தித்து இரு** - நினைத்திருப்பாயாக; (அப்படியிருந்தால்) **குன்று அனைய** - மலையைப் போல் பெருத்த, **குற்றம் செ(ய்)யினும்** — பாபங்களைச் செய்தாலும், **குணம் கொள்ளும்** — (அவைகளைக் காணாமல் எம்பெருமான்) கு3ணங்களையே திருவுள்ளம் பற்றுவான்.

---

**அவதாரிகை:**— இப்படி அவன் ஆஶ்ரிதவிரோதி4நிரஸந ஶீலனாகிலும் தோ3ஷமே வேஷமான நமக்கு அவனைச் சென்று அணுகப்போமோ? என்று திருவுள்ளம் ப4யப்பட, ''உனக்கு ஆபி4முக்2யமாத்ரமுண்டாகவே, அவன் நம் குற்றத்தையடைய நற்றமாகக்கொள்ளும்; அஞ்சவேண்டா'' என்கிறார்.

---

*அவதாரிகை:*— ''இப்படி அவன் அடியார்களின் விரோதி4களை அழிப்பதையே இயற்கையாகக் கொண்டவனாயினும், தோ3ஷத்தையே வேஷமாகக் கொண்ட நமக்கு அவனைச் சென்று அணுகமுடியுமோ?'' என்று ஆழ்வாருடைய திருவுள்ளம் ப4யப்பட, ''உனக்கு அவனிடம் ஈடுபாடு மாத்திரமே உண்டானாலும் அவன் நம் குற்றங்களையெல்லாம் நன்மையாகக் கொள்ளுவன்; அஞ்சவேண்டியதில்லை'' என்கிறார்.

*வ்யா:*— (என் நெஞ்சே) நான் ஒன்றுசொன்னால் நீயொன்று சொல்லாமல், எனக்கு ப4வ்யமாயிருக்கும் நெஞ்சே! (என்றும்

வ்யா:— நாற்பத்தோராம் பாட்டு. (குன்றனைய) அவன் குற்றம் பொறுக்கைக்காகத் திருமலையிலே வந்து நின்றான். ஆபி4முக்2யத்தைப் பண்ணினாலும் தோ3ஷாம்ஶத்தைப் பாராதே கு3ணாம்ஶத்தைக் கொள்ளும். அவன் உள்ளவன்றே இவ்வாத்மா உண்டு என்கிறார். இத்தனை நாளும் இத்தைச்

---

உரை—என் வழியே ஒழுகும்படி எனக்குப் பாங்கான நெஞ்சே! ஸர்வகாலத்திலும் ஸஹ்ருத3யமாகவன்றிக்கே, கேவலம் வாங்மாத்ரஸித்3த4மான புறப்பேச்சேயாகிலும், அஹ்ருத3யோக்தியை ஸஹ்ருத3யமாம்படி பண்ணவற்றான அழகிய திருவாழியும் கையுமான சேர்த்தியழகையுடைய ஸர்வேஶ்வரனிடையாட்டமாய், மித்ரபா4வமடியாக, "न त्यजेयं' (ந த்யஜேயம்) என்னும்படியான சொல்லையே அநுஸந்தி4த்துக்கொண்டு, "स्थितोऽस्मि' (ஸ்தி2தோऽஸ்மி) என்

---

புறனுரையேயாயினும்) நீ சொல்லும் வார்த்தைகள் என்றும் நெஞ்சாரச் சொல்லுமவையாயல்லாமல், "பொய்யே கைம்மை சொல்லிப் புறமே புறமேயாடி" [திருவாய் 5-1-1] என்கிற படியே பொய்ப்பேச்சேயானாலும், அவன் விஷயமான வார்த்தைகளையே நினைப்பாய். (பொன்னாழிக் கையான்) நீ பொய்ப் பேச்சாகப் பேசினாலும். அதை மெய்ப்பேச்சாக்கவல்ல பொன்னாழியன்றோ அவனோடு கூடியிருக்கிறது. (பொன்னாழிக் கையான் திறனுரையே) அழகிய சக்கரத்தையுடையவன் விஷயத்திலேயான வார்த்தைகளையே. அன்றிக்கே பொன்னாழிக் கையானால் அருளிச்செய்யப்பட்டதான, "மித்ரபா4வேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கத2ஞ்சந। தோ3ஷோ யத்3யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத3க3ர்ஹிதம்" [ரா-யு 18-3] [நண்பன் என்னும் வேஷத்தோடு வந்தடைந்தவனையும் நான் ஒருபோதும் விடமாட்டேன். அவனுக்குக் குற்றமிருந்தாலும் இருக்கட்டுமே. நல்லோர்களுக்கு இது இகழத்தக்கதன்று] என்னும் திறனுள்ள உரையையே சிந்தித்திருப்பாயாக என்றுமாம். (சிந்தித்து இரு) இவ்வார்த்தையையே அநுஸந்தி4த்துக்கொண்டு, 'ஸ்தி2தோऽஸ்மி க3தஸந்தே3ஹ:' [கீ3தை 18-73] [ஐயம் நீங்கப்பெற்றவனாய் நிலைநிற்கிறேன்] என்கிறபடியே கவலையற்றவனாய் நிலை



செய்யாதொழிவானென் ? என்னில்; (இன்று முதலாக) இவனுக்கே ஸ்வபா4வமென்று அறிந்த இன்று தொடக்கமாக. (என்னெஞ்சே) எனக்கு ஹிதம் பார்க்கும் நெஞ்சே! ஸஹ்ருத3யமாக அவன் கு3ணங்களைப் பேசப்போமோ?என்னில்; (புறனுரையேயாயினும்) அஹ்ருத3யமான பேச்சேயாகிலும். ப்ரயோஜநமின்றிக்கே அநர்த்த2மாயிற்றாகிலும் என்றுமாம். (பொன்னாழி இத்பாதி3) ஸர்வேஶ்வரன் திறத்தில் ஶப்3த3ங்களையே அறிந்து. (சிந்தித்திரு) க்ருதார்த்த2மாய் இரு.

அவனோடே ஸம்ப3ந்த4முண்டாகிலும் முன்பு அங்ஙன் செய்தருளாவிடுவானென் ? என்னில்; "குற்றம் - கு3ணம்" என்று நினையாமை. (பொன்னாழி) தானே ஸஹ்ருத3ய மாக்கும். 41.

---

னும்படி நிர்ப்ப4ரனாய்க்கொண்டு இரு. இவ்வாநுகூல்ய லேஶமுண்டான இன்று முதலாக, மலைபோலே ஸவயத்நத் தால் சலிப்பிக்கவொண்ணாதபடி பெருத்து உறைத்திருக்கிற குற்றங்களைப் பத்தும் பத்தாகச் செய்தாலும், அதிமாத்ர வத்ஸலனானவன், "செய்தாரேல் நன்று செய்தார்" என்னும்படி கு3ணமாகக் கொள்ளும். 41.

---

நிற்பாயாக. (இன்று முதலாக) இப்படி அவனிடத்திலே உனக்குச் சிறிது ஈடுபாடு உண்டான இன்றுமுதலாக அவன் "மித்ரபா4வேந" என்னும் ஶ்லோகத்திற்படியே உன்னிடத்திலே நடந்துகொள்ளும். அதாவது ஏதென்னில்: (குன்றனைய குற்றம் செயினும் குணங்கொள்ளும்) தன் முயற்சியாலே அசைக்கமுடியாததாகையால் மலைபோலேயிருக்கும் பெரிய குற்றங்களைச் செய்தாலும், அவற்றைக் குணமாகக் கொள்ளுவன். "தோ3ஷம் இருந்தாலும் இருக்கட்டுமே; நல்லோர்களுக்கு இது இகழத்தக்கதன்று" என்றவனாகையாலே. (குற்றம் செயினும்) அறியாமல் அரைகுறையாய்ச் செய்ததன்று; மனப்பூர்வமாகப் பரிபூர்ணமாகக் குற்றம்புரிந்தாலும். (குணங்கொள்ளும்) "செய்தாரேல் நன்று செய்தார்" [பெரியாழ்திரு 4-9-2] என்று கூறும் மஹாவாத்ஸல்யத்தை உடையவனைகை

42. திருமகளும் மண்மகளு மாய்மகளும் சேர்ந்தால்
திருமகட்கே தீர்ந்தவா றென்கொல்—திருமகள்மேல்
பாலோதம் சிந்தப் படநா கணைக்கிடந்த
மாலோத வண்ணர் மனம்.

**பதவுரை:—பால் ஓதம் சிந்த**—பாற்கடலில் சிறு துளிகள் சிதறி விழும்படியாக, **படம் நாகணை கிடந்த**—படத்துடன் கூடிய திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே பள்ளி கொண்ட, **மால் ஓதம் வண்ணர்**—பெரிய கடல்போன்ற திருமேனியையுடைய எம்பெருமானுடைய, **திரு மகள் மேல் மனம்**—பெரிய பிராட்டியார் மேல் (அன்புபூண்ட) திருவுள்ளம், **திருமகளும் மண் மகளும் ஆய் மகளும் சேர்ந்தால்**—ஸ்ரீதே$_3$வியும், பூ$_4$தே$_3$வியும், நீளாதே$_3$வியும் (எம்பெருமானோடு) கலந்து பரிமாறும்போது, **திருமகட்கே தீர்ந்த ஆறு என்கொல்**—பெரியபிராட்டியாரிடத்திலேயே அற்றுத் தீர்ந்திருப்பது என்ன ஆச்சரியம்!

அவ:— (திருமகளும்) **பாராதே பொறுக்கைக்கடி பிராட்டிமார் அருகே இருக்கை என்கிறார்.**

---

**அவதாரிகை:—** இப்படி குற்றத்தை ஸ்வதந்த்ரனானவன் கு$_3$ணமாகக் கொள்ளக்கூடுமோ? என்னில்: **"न कश्चिन्ना-पराध्यति"** **(ந கஶ்சிந்நாபராத்$_4$யதி)** என்னும் பிராட்டிமார் மூவருமே அங்கே கூடியிருக்கையாலே கூடும் என்கிறார்.

---

யாலே செய்தகுற்றத்தை நற்றமாகவே கொள்வான். *(குற்றம் செயினும் குணங்கொள்ளும்)* குன்றுபோன்ற குற்றம் செய்தாலும், அதைக் கணிசியாமல் கடுகளவுள்ள கு$_3$ணத்தையே திருவுள்ளம் பற்றுவான் என்றும் கொள்ளலாம். 41.

*அவதாரிகை:—* ஸ்வதந்திரனான ஸர்வேஶ்வரன் இப்படியாகக் குற்றத்தை கு$_3$ணமாகக் கொள்ளக்கூடுமோ? என்னில்; *"பாபாநாம் வா ஶுப$_4$நாம் வா வத$_4$ார்ஹாணும் ப்லவங்க$_3$ம ।*
*கார்யம் கருணமார்யேண ந கஶ்சிந்நாபராத்$_4$யதி ॥"* [ரா-யு116-44]
[வானரனே! பாபிகளாயினும், புண்ணியசாலிகளாயினும்,



வ்யா:— (திருமகளித்யாதி$_3$) அநந்தாழ்வான், "திருமகட்கே தீர்ந்தவாறென்கொல், மண்மகட்கே தீர்ந்தவாறென்கொல், ஆய்மகட்கே தீர்ந்தவாறென்கொல்" என்று பணிக்கும். (பாலோதம் சிந்த) "திருப்பாற்கடலின் குறுர்

---

உரை:— (பாலோதம்) திருப்பாற்கடலில் சிறு திவலைகளானவை ஶ்ரமஹரமாம்படி துடைகுத்துவாரைப்போலே

---

கொல்லத்தக்கவராயினும் அவர்கள் திறத்து நல்லோனாயிருப்பவனால் கருணை காட்டப்படவேண்டும். குற்றம் செய்யாதவன் ஒருவனுமில்லையே.] என்று கூறும் பிராட்டிமார் மூவரும் அவனோடு கூடியிருக்கையாலே அவன் குற்றத்தை கு$_3$ணமாகக் கொள்வது கூடும் என்கிறார்.

*வ்யா:—* இப்பாசுரத்துக்கு எம்பெருமானாருடைய சிஷ்யரான திருமலை அநந்தாழ்வான் ஒருவிதமாகவும், கூரத்தாழ்வான் திருக்குமாரரான ப$_4$ட்டர் மற்றொரு விதமாகவும் பொருள் உரைத்தனர். அனந்தாழ்வான் அருளிய பொருளாவது:— "திருமகட்கே தீர்ந்தவாறு என்கொல்! மண்மகட்கே தீர்ந்தவாறு என்கொல்! ஆய்மகட்கே தீர்ந்தவாறு என்கொல்!" என்று மூன்று பிராட்டிமாரிடத்திலும் "தீர்ந்தவாறு என்கொல்" என்பதைக் கூட்டி, ஒவ்வொரு பிராட்டியிடத்திலும் எம்பெருமான் ஸம்ஶ்லேஷிக்கும்போது, 'இப்பிராட்டியிடமே எம்பெருமான் தன் முழுமனத்தோடு ஈடுபட்டிருக்கிறான்' என்று காண்பார் நினைக்கும்படியிருப்பது என்ன ஆச்சரியம் என்று கருத்து என்றார். ஸப்ஸாரியான ஸௌப$_4$ரியென்னும் முனிவன் பல கன்னியரை மணம் புரிந்துகொண்டு, பல சரீரமெடுத்து ஒவ்வொருவரையும் உகப்பித்து, ஒரு மனைவியோடு அவன் இன்புறுவதைக் காண்பார்க்கு "இவன் இவளையன்றி வேறொருத்தியை அறியான்" என்று கூறும்படியிருந்தான் என்று இதிஹாஸங்களிலே கேளாநின்றோம். பரமபுருஷனுக்கு இது கூடாமையில்லையே. இனி ப$_4$ட்டர் நிர்வஹித்தபொருளைக் காண்போம்.

*(பாலோதம் சிந்த)* திருப்பாற்கடலில் சிறு திவலைகளானவை துடைபிடித்து விடுவாரைப்போலே எம்பெருமா

திவலை திருமுகத்திலே படும்படிக்கீடாகத் திருவநந்தாழ்வான் மேலே கிடந்த மாலோதவண்ணருடைய திருமகள்மேல் வைத்த திருவுள்ளம், திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால் திருமகட்கே தீர்ந்தவாறென்கொல்?'' என்று

---

நாலுபாடும் சிதறிவிழ, ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமான பணங்களையுடைய திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே பள்ளிகொண்டருளுகிற பெரியகடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையனான ஸர்வேஶ்வரனுடைய பெரியபிராட்டியார்மேலே அத்யபிநிவிஷ்டமாய்ச் செல்லுகிற திருவுள்ளமானது—குற்றத்தைப் பொறுப்பிக்கும்பெரியபிராட்டியாரும், பொறை விளையும் தறையான ஸ்ரீபூமிப்பிராட்டியாரும்,

---

னுடைய திருமேனியிலே நாற்புறமும் சிதறிவிழ அநந்தாழ்வான் நிர்வாஹத்திலே, ''திருமகள்மேல் பாலோதம் சிந்த'' என்று கூட்டி, ''திருவடியைப் பிடிக்கும் திருமகள்மேல் திருப்பாற் கடல் திவலைகள் சிதற'' என்று பொருள்கொள்ளவேணும். பட்டர் நிர்வாஹத்திலே ''திருமகள்மேல் மனம்'' என்று மேலோடே கூட்டிப் பொருள்கொள்ளவேணும். (*படநாகணைக்கிடந்த)* எம்பெருமானுடைய திருமேனியின் ஸ்பரிசத்தாலே விரித்த படத்தையுடைய திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே பள்ளிகொண்டருளும். (*மாலோதவண்ணர்*) பெரிய கடல்போலே கறுத்துக்குளிர்ந்த வடிவையுடைய பரமபுருஷனுடைய. (*திருமகள்மேல் மனம்*) பெரியபிராட்டியார் மேலே பெருங்காதல்கொண்ட திருவுள்ளம். (*திருமகளும்*) ''குற்றம் செய்யாதவன் ஒருவனுமில்லையே'' என்று கூறிக் குற்றத்தைப் பொறுப்பிக்கும் பெரியபிராட்டியும். (*மண்மகளும்*) 'குற்றத்தைக் கண்டுவிட்டுப் பொறுக்கவேண்டுமோ?' என்று குற்றத்தையே காணாமல் பொறுமையே வடிவெடுத்த பூமிப்பிராட்டியும், (*ஆய்மகளும்*) காணாதிருப்பதோடன்றியில், குற்றத்தையே நற்றமாகக் கொள்ளுமவளாய், குற்றம் பரமபுருஷனின் நெஞ்சில் படாதபடி அவனுடைய திருவுள்ளத்துக்குத் தன் இன்பப்பெருக்காகிற திரையிடும் ஆய்க்குலத்திலவதரித்த நப்பின்னைப் பிராட்டியும். (*சேர்ந்தால் திருமகட்கே*



அருளிச்செய்வர் பட்டர். பிராட்டியோடு கலந்தபோது,

---

குற்றம் கிளராதபடி திருவுள்ளத்தைத் திரைகொள்ளும் கோபதலைவதீர்ணையான நப்பின்னைப் பிராட்டியும் ஸாதர

---

*தீர்ந்தவாறு என்கொல்)* இப்படி மூன்றுபிராட்டிமாரும் எம்பெருமானோடு ஸம்ஶ்லேஷிக்கின்றபோதிலும், எம்பெருமானுடைய திருவுள்ளம் பெரியபிராட்டியாருக்கே அற்றுத்தீர்ந்திருக்கிறது என்று சொல்லும்படியிருப்பது என்ன ஆச்சரியம்! மூவரிடத்திலும் கலந்தாலும், ஒருத்திக்கே அற்றுத் தீர்ந்தவன் என்பது எப்படியெனில்: முதலில் இந்த கலவி என்பது தாழ்ந்தவர்களான நம்போல்வாருடைய சிற்றின்பமாகிற ஆண் பெண் உறவன்று. பரமபுருஷனான பரமாத்மா ஸ்த்ரீப்ராயரான ஜீவர்களுடன் அணைந்து மகிழ்ந்து மகிழ்விக்கும் பேரின்பமேயாகும். அதிலே பரமபுருஷன் பரமநாரியான பெரியபிராட்டியாரோடு அணைந்து இன்புறும்போது பூமிநீளாதேவிகள் புஷ்பம், சந்தனம் முதலானவற்றைப்போலே அவர்களுடைய போகத்துக்கு உபகரணமாய் நிற்பர்கள். அவர்களுடைய ப்ரணயரஸம் (*காதற்பெருக்கு*) கட்டுக்கடங்காமற் செல்லும்போது வ்ருத்தகீர்த்தனம் (*நடந்ததைப் பேசுவது*) முதலானவற்றைச் செய்வதன்மூலம் அதற்கு வடிகாலாயிருப்பார்கள். பூமிநீளைகளோடு பரமபுருஷன் அணைந்து இன்புறும்போது பெரியபிராட்டியார் தம் இடையிலும் மூலையிலும் அவன் அணைந்ததுபோலே உகந்துநிற்பர். ஆக இப்படி தேவிகளிலே யாரிடத்தில் கலந்தாலும், அது பெரியபிராட்டியாரிடத்திலே கலந்ததாகவேயாகும். இக்காரணத்தாலேயே இங்கு ஸாபத்ந்யம் (*சக்களத்தி போராட்டம்)* இல்லை. ப்ராக்ருதர்கள் பல மனைவியரோடு இன்புறும்போது அவர்கள் அனுபவிக்கும் இன்பம் இருவர்க்கே போராமையாலே, ஒருவரோடொருவர் போராடவேண்டியிருக்கிறது இங்கு பேரின்பமாகையாலே மஹாதடாகங்களிலே குடைந்தாடுவாரைப்போலே பலர்கூடி அனுபவித்தாலும் இன்பம் விஞ்சியிருக்கையாலே போட்டியும் பொறாமையுமில்லை என்றதாயிற்று. இப்பாசுரத்தின் ஸாரார்த்தத்தை ஸ்ரீபராசரபட்டர்—

44. "[illegible]" (புஷ்பாங்க3ராகை3ஸ்ஸமம்) என்கிற படியே அல்லாத பிராட்டிமார் உபகரண கோடியிலே நிற்பர்கள்; அல்லாத பிராட்டிமாரோடு பரிமாறும்போது. இவள் தன் இடையிலும் முலையிலும், கலந்தாற்போலே இருக்கும். பே4ாக3ந்தான் உந்மஸ்த்தகமாஞல் வ்ருத்த கீர்த்த நாதி3களுக்குக் கூட்டாய் நிற்பர்கள், இத்தால் சொல்லிற் ருயிற்று:— இதர விஷயங்கள் இருவருக்கும் போராமை யாலே "சீறு-பாறு" என்கைக்கு உடலாம்; இங்கு பே4ாக்3ய தாதிஶயத்தாலே கிண்ணகத்தில் இழிவாரைப்போலே திரண்டு அவகா3ாஹிக்கவேணும் என்றதாயிற்று. 42.

---

மாக ஸம்ஶ்லேஷித்தால், புஷ்பாங்க3ராகா3திகளோபாதி பே4ாகே3ாபகரண கோடியிலே நின்று பிராட்டியோடே கலக்குமிடத்தில் ஸாபத்ந்யக3ந்த4மற அல்லாத பிராட்டிமார் எடுத்துக் கைநீட்டுகையாலும், அவர்களோடே கலக்கு மிடத்தில் தன்முலையிலும் இடையிலும் கலந்தாற்போலே பிராட்டி நினைத்திருக்கையாலும் பெரியபிராட்டியார்க்கே அற்றுத்தீர்ந்ததாயிருக்கிறபடி எங்ஙனேதான்! இத்தால் மூவர்க்கும் உண்டான ஐகரஸ்யம் சொன்னபடி. 42.

---

"பே4ாக்3யா வாமபி நாந்தரீயகதயா புஷ்பாங்க3ராகை3ஸ் ஸமம்
நிர்வ்ருத்த ப்ரணயாதிவாஹநவிதெ4ள நீதா: பரீவாஹதாம்!
தே3வி! த்வாமநு நீளயா ஸஹ மஹீ தே3வ்ய: ஸஹஸ்ரம் தத2ா
யாபி4ஸ்த்வம் ஸ்தநபா3ாஹு த்3ருஷ்டிபி4ரிவ ஸ்வாபி4: ப்ரியம்
ஶ்லாக4ஸே ||" [ஸ்ரீகு3ண-26]

*[ஹே ஸ்ரீதே3வி!* உம்முடைய ஸ்தனம், திருக்கை, திருக்கண் ணுக்கு இவைகளைக்கொண்டு உம்முடைய காந்தனை உகப் பிப்பதபோல், எந்த பூ4மி நீளா தே3விகளைக்கொண்டும் உகப் பிக்கிறீரோ, உம்முடன் கூடியவளும், நீளா ஸஹிதையுமான அந்த பூ4மிப்பிராட்டியும், மற்றும் கணக்கற்ற தே3விகளும், உமக்கும் எம்பெருமானுக்கும் புஷ்பம், சந்த3னம் முதலியவை களைப்போல் விட்டுப்பிரியாத உபகரணமாயிருக்கையால் பே4ாக்3யர்களாயிருப்பார்கள், ப்ரணயரஸம் கட்டுக்கடங்காமல் அதி4கரிக்கும்போது (அந்த தே3விகள் அந்த ரஸத்திற்கு) வடிகாலா யிருக்கும்தன்மையை அடைவிக்கப்படுகிறார்கள்] என்று ஸ்ரீகு3ண ரத்நகோஶத்திலே மிகத்தெளிவாக அருளிச்செய்தார். 42.



43. மனமாசு தீரு மருவினையுஞ் சாரா
தனமாய தானே கைகூடும் - புனமேய
பூந்துழா யானடிக்கே போதொடு நீரேந்தி
தாந்தொழா நிற்பார் தமர்.

பதவுரை:— **புனம் மேய பூம் துழாயான்**—தன் நிலத்தி லிருப்பது போலவே பூத்து விளங்கும் திருத்துழாயை அணிந்திருக்கும் எம்பெருமானுடைய, **அடிக்கே**—திருவடி களுக்கே, **போதொடு நீர் ஏந்தி**—புஷ்பத்துடன் தீர்த்த2த் தையும் எடுத்துக்கொண்டு, **தமர்**—அடியார்கள், **தாம்**—தாங்களாகவே, **தொழாநிற்பார்**—தொழுவார்கள்; (தொழுத வுடன்) **மனம் மாசு தீரும்** — மனத்திலுள்ள அஞ்ஞானம் முதலிய அழுக்குகள் விலகும்; **அரு வினையும் சாரா**—தீராத பாபங்களும் கிட்டமாட்டா; **தனமாய**—செல்வமாகிய ப4க்தி யும், **தானே கைகூடும்**—தானுகவே வந்துசேரும்.

**அவ:— நாற்பத்துமூன்ரும் பாட்டு.** (மனமித்யாதி3) **பிராட்டிமாரடியாக அவனைப் பற்றினுர்க்கு பே4ாக3த்தில் ப்ரதிப3ந்த4கங்கள் போகவேணுமென்றும் ப4க்த்யாதி3கள் உண்டாகவேணுமென்றும் இவர்களுக்குக் கரையவேண்டா என்கிறது.**

---

**அவதாரிகை:—** பிராட்டிமார் நித்யஸந்நிஹிதராயிருக் கையாலே தங்கள் குற்றத்தை நினைத்துப் பிற்காலிக்க வேண்டுவதில்லை. இனி, ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியிலே அந்வயிக்கவே விரோதி4வர்க்கமும் தன்னடையே விட்டு நீங்கும் என்கிருர்.

---

*அவதாரிகை:—**பொன்னுழிக்கையான் திறனுரையே சிந்தித் திருக்கும்படி விடுமோ ஸம்ஸாரியினுடைய அஜ்ஞானம், கர்மம், ருசி, வாஸனை முதலானவை? என்னும் கேள்வியெழ, சென்ற பாட்டிற்படியே பிராட்டிமார் பெருமானுேடு சேர்ந் திருக்கையாலே இவன் அக்குற்றங்களை நினைத்துத் தயங்க வேண்டியதில்லை. தன் ஸ்வரூபத்துக்குத் தக்கவாறு இவன்

வ்யா:— (மனமாசுதீரும்) மனஸ்ஸுக்கு மாசாகிறது- ருசி வாஸனைகள். (அருவினையும் சாரா) அவித்$_3$யாதி$_3$

---

**உரை:—** திருமேனியின் ஸ்பர்ஶத்தாலே தன்நிலத்தில் நின்றுப்போலே செவ்விபெற்றுப் பூத்த திருத்துழாயாலே அலங்க்ருதனான ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளுக்கே அடிமைக்குக் கைதொடுமானமான சூட்டுநன்மாலைக ளோடே நீராட்டுகைக்கு உபகரணமான நன்னீரையும் ஸாத$_3$ரமாக த$_4$ரித்துக்கொண்டுநின்று, தங்களபி$_4$நிவேஶாநு ரூபமாக ஆஶ்ரிதரான தாங்கள் அடிமைசெய்யாநிற்பர்கள்.

---

ப$_4$க$_3$வத் கைங்கரியத்திலே அந்வயித்தாளுகில், அக்குற்றங்கள் இவனைத் தடை செய்யமாட்டாததோடன்றியில், தாமே இவனைவிட்டு நீங்கும் என்கிறார்.

*வ்யா:— (புனம் மேய பூந்துழாயான்)* திருமேனியின் ஸ்பர்ஶத்தாலே தன் நிலத்தில் நிற்பதுபோலே பூத்துக்குலுங்கும் திருத்துழாயை உடையவன். பாலே மருந்தாமாப்போலே யிருக்கை. "குடிக்கிற வேப்பங்குடி நீர்" என்பர் பெரிய வாச்சான்பிள்ளை. *(அடிக்கே)* இவனைத் தவிர வேறொருவனை எண்ணுவதுமில்லை; இவனுடைய திருமேனியிலும் மற்ற அவயவங்களைக் காண்பதுமில்லை. *(போதொடு)* மாலைகட்டிச் சாத்துதல், அர்ச்சனை செய்தல் முதலான பலவிதங்களில் அடிமைசெய்வதற்குக் கருவியாயிருக்கும் புஷ்பங்களோடு. *(நீர் ஏந்தி)* நீராட்டுவதற்குக் கருவியான நறுமணம்மிக்க நீரையும் அன்போடு த$_4$ரித்துநின்று. இவை தூ$_4$பம், தீ$_3$பம் முதலானவற்றுக்கும் உபலக்ஷணம். "சூட்டுநன் மாலைகள் தூயன வேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபம் தராநிற்கவே" [திருவிருத்தம்-20] என்கிறபடியே நித்யஸூரிகள் செய்யும் உபசாரங்களைச் செய்கை. *(தமர் தாம் தொழாநிற்பார்)* "சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே" [திருவிருத்தம் 79] என்கிறபடியே நித்யஸூரிகளிலும் இவனுக்கினிய அடியார்கள் தங்கள் அன்புக்குத் தக்கவாறு அடிமைசெய்து நிற்பர்கள். *(தொழாநிற்பார்)* இவர்கள் இதை ஒரு பயனைக் கருதிச் செய்வதில்லை. ஸ்வயப்ப்ரயோஜனமாகச் செய்வார்கள்.



கர்மங்கள் அணையா. (தனமித்யாதி$_3$) இப்படியான அதி$_4$ காரிக்கு த$_4$னமான கைங்கர்யபூர்வப$_4$வியான ப$_4$க்த் யாதி$_3$கள் தானே உண்டாம். (புனமித்யாதி$_3$) தமரானவர்கள் ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளிலே தாங்களே தொழாநிற்பர்கள். இவர்களுக்கு அவனுடைய திருவடிகளிலே புஷ்பாத்$_3$யுபகரணங்களைக் கொண்டு தொழுவது அவனை அநுப$_4$விக்கையிலே அந்வயம்.

திறனுரையே சிந்தித்திருக்கவொட்டுமோ இவனுடைய அவித்$_3$யாதி$_3$கள்? என்னில்; (தனமாய) அவித்$_3$யாதி$_3$கள் போனார்க்கு வரும் த$_4$நம். 45. "अन्तरिक्षगतः श्रीमान्"

---

இவர்களிப்படி வகுத்த அடிமைசெய்யவே அநுஸந்தா$_4$ந பரிகரமான மநஸ்ஸைப் பற்றிக்கிடக்கிற அஜ்ஞாநம் விஷயராக$_3$ம் முதலான தோ$_3$ஷங்களடங்கலும் தன்னடையே விட்டுக் கழலும். அவற்றுக்கடியாய், ஸ்வயத்நத்தால் போக்கவரிய து$_3$ஷ்கர்மங்களும் கிட்டவாராது. கைங்

---

இப்படி ஒரு பயனைக் கருதாமல் தங்களுக்கு வகுத்த அடிமையை இவர்கள் செய்தபோதிலும், இவர்களுக்கு ஏற்படும் பலன்களைச் சொல்லுகின்றன முன்னடிகள்,—*(மனமாசு தீரும்)* இவர்கள் அவனுடைய திறனுரையே சிந்தித்திருப்பதற்குக் கருவியான மனத்திலுள்ள அறியாமை, ஶப்$_3$த$_3$ாதி$_3$ விஷயங்களில் பற்று முதலான குற்றங்களெல்லாம் தானே அகலும். *(அரு வினையும் சாரா)* முற்கூறிய அஜ்ஞானம் முதலானவற்றுக்குக் காரணமாகவும், காரியமாகவும் சுழன்று வருபவையாய், தன் முயற்சியால் அறுக்கமுடியாதவையான புண்ய பாபரூபமான கர்மங்களும் அருகில் வரமாட்டா. *(தனமாய தானே கைகூடும்)* இப்படிப்பட்ட அதி$_4$காரிக்குப் பெருஞ் செல்வமாயிருப்பதாய், கைங்கர்யத்துக்கு முன் ஏற்படுவதான ப$_4$க்தி முதலானவை தானேவந்து கைகூடும். *(தனம்)* ஸ்வரூபத்துக்குத் தகாததான இவ்வுலகச் செல்வமன்று; ஸ்வரூபத்திற்குத் தகுந்ததான பரப$_4$க்தி, பரஜ்ஞானம், பரமப$_4$க்தி முதலானவையே 'தனம்' எனப்படுகின்றன. "*அந்தரிக்ஷக$_3$த:*

(அந்தரிக்ஷக$_3$த: ஸ்ரீமாந்) (பூந்துழாயானடிக்கே) குடிக்கிற வேப்பங்குடிநீர். (தாமித்யாதி$_3$) இவன் வகுத்தது செய்ய அவன் வகுத்தது செய்யாதொழியுமோ? 43.

44. தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவம் தானே
தமருகந்த தெப்பேர் மற்றப்பேர் – தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித் திமையா திருப்பரே
அவ்வண்ண மாழியா னும்.

**பதவுரை:—** **ஆழியான்**— சக்ரபாணியான எம்பெருமான், **தமர்**—ப$_4$க்தர்கள், **உகந்தது எவ்வுருவம்**—எந்த உருவத்தை விரும்புகிறார்களோ, **அவ்வுருவம் தானே ஆம்**—அந்த உருவத்தைத் தானே அடைவன், **மற்று**—மேலும், **தமர் உகந்தது எப்பேர்**—அடியார்கள் விரும்பியது எந்தப்பெயரோ, **அப்பேர் ஆம்**—அப்பெயரை அடைவான், **தமர்**—அடியவர்கள், **உகந்து**—விரும்பி, **எவ்வண்ணம் சிந்தித்து**—எவ்விதமாக நினைத்து, **இமையாது இருப்பரே**—இடைவிடாமல் த்$_4$யானம் செய்து கொண்டிருப்பரோ, **அவ்வண்ணம் ஆம்**—அவ்விதமாகவே ஆவான்.

அவ:— **நாற்பத்து நாலாம் பாட்டு.** (தமரித்யாதி$_3$) **"தமர்" என்று சிலவரும் அவர்களுக்கு ப்ரதிப$_3$ந்த$_4$கம் போக்கவேண்டா, பே$_4$ாக$_3$த்திலே அந்வயம் சொல்லுகிறபடி**

---

கர்யோபகரணமாய், ஸ்வரூபாநுரூபமான த$_4$நமாயிருக்கிற பரட$_4$க்த்யாதி$_3$களும் தனக்குத்தானே வந்துகைபுகுரும். 43.

---

*ஸ்ரீமாந்*'' [ரா-யு 16-17] [ஆகாயத்தில் கிளப்பியவனாய், செல்வம் நிரம்பியவனான விபீ$_4$ஷணன்] ''*ஸ து நாக$_3$வர: ஸ்ரீமாந்*'' [செல்வம் நிரம்பிய கஜேந்திராழ்வான்] '*லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:*'' [ரா-பா 18-29] [செல்வம் நிரம்பிய லக்ஷ்மணன்] என்று லங்கைஶ்வர்யத்தையும், தன் முயற்சியாகிற செல்வத்தையும், அயோத்திச் செல்வத்தையும் கைவிட்டு ப$_4$க்தி முதலானவற்றைக் கைக்கொண்டவர்களைச் செல்வர்களாகச் சொன்னார்களன்றோ ரிஷிகளும். 43.



எங்ஙனே? என்னில்; அவனுடைய ஸ்வரூபம் ஆஶ்ரித பரதந்த்ரமாகையாலே சொல்லுகிறது.

வ்யா:— (தமருகந்ததித்யாதி$_3$) **46. "ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम्" (யே யத$_2$ா மாம் ப்ரபத்$_3$யந்தே தாம்ஸ்ததை$_2$வ ப$_4$ஜாம்யஹம்) நமக்கு நல்லவர்கள் இன்னாரென்றுமில்லை, இன்னபடி ப$_4$ஜிப்பாரென்றுமில்லை; அவர்கள் நின்ற நிலையிலே அவர்கள் ப$_4$ஜித்தபடியே அவர்களைப் பற்றுவேன் என்கிறது. தமரானவர்கள் ப்ராக்ருத த்$_3$ரவ்யங்களிலே**

---

**அவதாரிகை:**—ஆஶ்ரிதர் இப்படி அடிமைசெய்யுமளவில், இவர்கள் உகந்த ரூபநாமாதி$_3$களை உடையனாய்க்கொண்டு தன்னையமைத்து அர்ச்சாவதாரரூபேண இங்கே அடிமை கொள்ளும் என்கிறார்.

**உரை:—** தன் கருத்தறிந்து எடுத்துக் கைநீட்டும் திருவாழி முதலான தி$_3$வ்யபரிகரங்களை உடையனான ஸர்வேஶ்வரன், அவர்களைக் காற்கடைக்கொண்டு இன்று ஸம்ஸாரத்திலே தன்னைப்பற்றியிருக்கும் ஆஶ்ரிதரானவர்கள்,

---

*அவதாரிகை:*— ''தாம் தொழாநிற்பார்' என்றது கீழ்ப் பாட்டில். இவனைக்கண்ட பின்பன்றோ தொழுவது; எங்கே காண்பது? என்னும் கேள்வியெழ, அடியார் இப்படி அடிமை செய்ய நினைத்தால், இவர்கள் உகந்த உருவங்களையும் பெயர்களையும் உடையவனாய்க்கொண்டு தன்னை அமைத்துக் கொண்டு அர்ச்சாவதாரரூபத்தோடு இவ்வுலகிலேயே அடிமை கொள்ளுவான் என்கிறார்.

*வ்யா:— (ஆழியான்)* ஸுதர்ஶனத்தை உடையவன். இங்கே ஸுதர்ஶனத்தைச் சொன்னது நித்யஸூரிகள் அனைவர்க்கும் உபலக்ஷணம். ''கருதுமிடம் பொருது கைநின்ற சக்கரத்தன்'' [திருவாய் 10-6-8] என்கிறபடியே தன் கருத்தறிந்து கைங்கர்யம் செய்யும் திருவாழியாழ்வான் முதலான திவ்யஸூரிகளைக் கிங்கரர்களாக உடைய ஸர்வேஶ்வரன் அவர்களையும் பொருட்படுத்தாமல் செய்யும் காரியத்தை மேலே சொல்லு

ஒன்றை "உனக்குத் திருமேனியாகக் கொள்ளவேணும்" என்றால் அத்தைத் திருமேனியாகக் கொள்ளும். 47. "सुवर्ण-रजतादिभिः' (ஸுவர்ணரஜதாதி$_3$பி$_4$:). எம்பெருமானார் /மாது

ஸ்வர்ணரஜதாதி$_3$களான த்$_3$ரவ்யங்களாலே உகந்து ஏறியருளப்பண்ணினது யாதொரு விக்$_3$ரஹம், அந்த விக்$_3$ரஹத்தை அஸாத$_4$ாரணவிக்$_3$ரஹத்தோபாதி தானே ஆதரித்துப் பரிக்$_3$ரஹியாநிற்கும். இப்படி அவர்களுகந்த திரு

கிறது. (தமர் உகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே ஆம்) நித்யஸம்ஸாரியாயிருந்து இன்றே தன்னைப்பற்றிய அடியார்,

ஸுரூபாம் ப்ரதிமாம் விஷ்ணோ: ப்ரஸந்நவத$_3$நேக்ஷணம் |
க்ருத்வாऽऽத்மந: ப்ரீதிகரீம் ஸுவர்ணரஜதாதி$_3$பி$_4$: ||
தாமர்ச்சயேத் தாம் ப்ரணமேத் தாம் யஜேத் தாம் விசிந்தயேத் |
விஶத்யபாஸ்ததோ$_3$ஷஸ்து தாமேவ ப்$_3$ரஹ்மரூபிணீம் ||
[விஷ்ணுத$_4$ர்மம் 103-16]

[அழகிய உருவமுள்ளதும், மலர்ந்த திருமுகமண்டலத்தையும் திருக்கண்களையும் உடையதும், தனக்குப் பிரியத்தைத் தருவதுமான விஷ்ணுவின் ஒரு பிம்பத்தை, தங்கம், வெள்ளி முதலிய திரவியங்களாலே செய்து அதைப் பூஜிக்கக்கடவன்; அதை வணங்கக்கடவன்; அதை ஆராதிக்கக்கடவன்; அதை த்$_4$யானிக்கக்கடவன். (இதைச்செய்தானாகில்) தோ$_3$ஷங்கள் நீங்கப்பெற்றவனாய், பரரூபத்துடன் கூடிய அந்த எம்பெருமானையே அடைகிறான்.] என்று சொல்லப்பட்டபடியே தங்கம் வெள்ளி முதலான த்$_3$ரவ்யங்களாலே உகந்து செய்த விக்$_3$ரஹம் யாதொன்றுண்டோ அதை, தன்னுடைய அப்ராக்ருத தி$_3$வ்ய மங்க$_3$ளவிக்$_3$ரஹத்தைப்போலே தானே ஆதரித்து, திருமேனியாக ஏற்றுக்கொள்வான். 'தமர் 'உகந்தது' என்று ஸாமாந்யமாகச் சொல்லுகையாலே, இன்னார் இனையார் என்னும் நியதியில்லை; இன்னபடி அவனை பூ$_4$ஜிக்கவேணுமென்னும் நியதியுமில்லை; அவர்கள் நின்றநிலையிலே அவர்கள் பூ$_4$ஜித்தபடியே அவர்களையடைவான் என்று காட்டுகிறார். இவ்வர்த்த$_2$த்தை,

/ மாதுகரம் - உஞ்ச வ்ருத்தி.



கரத்துக்கு எழுந்தருளாநிற்க, சில பிள்ளைகள் காலாலே கீறி, "உம்முடைய எம்பெருமான் திருமேனி" என்று காட்ட, பாத்ரத்தை வைத்து தண்டனிட்டருளினார். இவ்வர்த்த$_2$த்திலே, "கோயிலிலே சில பிள்ளைகள் விளையாடுகிறவர்கள் திருவீதியிலேயிருந்து பெருமாளும் நாய்ச்சிமாரும் பெரியதிருமண்டபமும் கற்பித்துப் பெரும் திருப்பாவாடையும் அமுதுசெய்வித்து, 'எம்பெருமானார்! ப்ரஸாத$_3$ப்படும்' என்று மணலைக் கையாலே முகந்தெடுக்க, தத்காலத்திலே மாதுகரத்துக்கு எழுந்தருளுகிற உடையவர், அவ்விடத்திலே அது கேட்டருளி தண்டனிட்டு அவர்களெடுத்த ப்ரஸாத$_3$த்

மேனியை விரும்புகிறவளவன்றிக்கே, ஆஶ்ரிதர் உகந்து சாத்தின திருநாமம் யாதொன்று, அந்தத் திருநாமத்தை நாராயணாதி$_3$நாமங்களோபாதி தனக்கு நாமமாக விரும்பா

யே யதா$_2$ மாம் ப்ரபத்$_3$யந்தே தாம்ஸ்ததை$_2$வ ப$_4$ஜாம்யஹம் |
[கீ$_3$தை 4-11]

[எந்த ப$_4$க்தர்கள் எவ்விதமாக நினைத்துக்கொண்டு என்னை ஆஶ்ரயிக்கிறார்களோ, அவ்விதமாகவே ஆனவனாய் (அர்ச்சாரூபியான) நான் அவர்களை அடைகிறேன்.] என்று கீ$_3$தையில் கண்ணனே அருளினானன்றோ. "நெஞ்சினால் நினைப்பான் யவன் அவனாகும் நீள்கடல் வண்ணனே" என்றார் ஆழ்வாரும். இவ்விடத்தில் பெரியவாச்சான் பிள்ளை பின் வரும் ஐதிஹ்யங்களைக் காட்டியருளினார்:—

"எம்பெருமானார் மாதுகரத்துக்கு எழுந்தருளாநிற்க, சில பிள்ளைகள் காலாலே கீறி, "உம்முடைய எம்பெருமான் திருமேனி" என்று காட்ட, பாத்ரத்தைவைத்து தண்டனிட்டருளினார். இவ்வர்த்த$_2$த்திலே, "கோயிலிலே சில பிள்ளைகள் விளையாடுகிறவர்கள் திருவீதியிலேயிருந்து பெருமாளும் நாய்ச்சிமாரும் பெரியதிருமண்டபமும் கற்பித்துப் பெரும் திருப்பாவாடையும் அமுதுசெய்வித்து, 'எம்பெருமானார்! ப்ரஸாத$_3$ப்படும்' என்று மணலைக் கையாலே முகந்தெடுக்க, தத்காலத்திலே மதுாகரத்துக்கு எழுந்தருளுகிற உடையவர், அவ்விடத்திலே

தைப் பாத்ரத்திலே ஏற்ருர்'' என்று ஜீயர் அருளிச்செய்தார். (தமருகந்ததெப்பேர் மற்றப்பேர்) நல்லவர், ''சதங்கை யழகியார்'' என்று திருநாமம் சாத்திருராகில், நாராயணுதி$_{3}$ நாமங்களைக் காட்டிலும் அத்தை விரும்பும். (தமரித்யாதி$_{3}$) நல்லவர் உகந்து, 46. ''ये यथा'' (யே யத$_{2}$ா) என்னும்படி யாதொரு ப்ரகாரத்திலே உகந்து ஸாவத$_{4}$ாநராயிருப்பர்கள்; அந்த ப்ரகாரத்தாலே அத்தை உடையனும். (ஆழியான்) அப்ராக்ருதமாயிருந்துள்ள ஸகல பரிகரத்துக்கும் உபலக்ஷணம். அவை எல்லாம் கிடக்க இவர்கள் நிணைத்தபடியாகத் தன்னை அமைத்துக்கொடுக்கும்.

(தமரித்யாதி$_{3}$) இவன் கண்டு தொழவேண்டாவோ? எங்கே காண்பது? என்னில், (அவ்வுருவந்தானே) 48. ''आत्मानं मानुषं मन्ये'' (ஆத்மாநம் மாநுஷம் மந்யே) 46. ''ये यथा'' (யே யத$_{2}$ா) (எப்பேர் மற்றப்பேர்) எங்களாழ்வார் பாடே ஆயர்தேவு சென்று நாவற்பழம்வேண்ட, ''நீ யார்''

---

நிற்கும். ஆஶ்ரிதரானவர்கள் உகந்துகொண்டு கு$_{3}$ண சேஷ்டிதாதி$_{3}$களான யாதொரு ப்ரகாரத்தை அநுஸந்தி$_{4}$த்து அநவரதப$_{4}$ாவனை பண்ணியிருப்பர்கள். அந்த ப்ரகாரத்தை உடையனுகாநிற்கும்.

---

அதுகேட்டருளி தண்டனிட்டு அவர்களெடுத்த ப்ரஸாத$_{3}$த்தைப் பாத்ரத்திலே ஏற்ருர்'' என்று ஜீயர் அருளிச்செய்தார்.''

*(மற்று)* இப்படி அவர்கள் உகந்த திருமேனியை விரும்புகிறவளவோடல்லாமல். *(தமர் உகந்தது எப்பேர் அப்பேர் ஆம்)* அவ்வடியார் உகட்புடன் எந்தத்திருநாமத்தைச் சாத்துகிருர்களோ அந்தப்பெயரையே உடையவனும். ''சதங்கையழகியார்'' என்று அடியார்கள் திருநாமஞ்சாத்திலும் நாராயணுதி$_{3}$நாமங்களைக்காட்டிலும் அத்திருநாமத்தை விருப்பும் என்பர் பெரியவாச்சான்பிள்ளை. நஞ்சீயருடைய திருவாராதனப் பெருமாளுக்குப் பெயர் 'ஆயர்தேவு' என்பது. இப்பெயரைத்தான் மிகவுகந்திருப்பதைக்காட்ட, அப்பெருமான் ஓர் ஆஶ்சரியமான செயலைச் செய்தானும். விஷ்ணுபுராணவ்யாக்$_{2}$யாதாவான விஷ்ணு சித்தரென்னும் எங்களாழ்வானுடைய ஸ்வப்னத்திலே இப்பெருமான் தோன்றி நாவற்பழம்வேண்டினனும். ''நீ யார்''



என்று அவர் கேட்க, ''ஜீயர் மகனுன ஆயர்தேவு'' என்ன. ஜீயரைக்கண்டு ''உம்முடைய பிள்ளை எங்களைக் குடியிருக்க வொட்டுகிறிலன்'' என்ருர். (ஆழியானும்) ஸ்ரஷ்டாவாய் நியாமகனுயிருக்கிறவன் ஸ்ருஜ்யனுமாய் நியாம்யனுமாம். 44.

---

இப்படி தன் பெருமைபாராதே ஆஶ்ரிதருகந்த ரூபநாம கு$_{3}$ணசேஷ்டிதாதி$_{3}$களைத் தானுடையனுய்க்கொண்டு ஆஶ்ரிதரை அடிமைகொள்ளும் அர்ச்சாவதாரத்தின் நீர்மையின் ஏற்றத்தை அநுஸந்தி$_{4}$த்து வித்$_{3}$த$_{4}$ராகிருர். 44.

---

என்று அவர்கேட்க, ''ஜீயர் மகனுன ஆயர்தேவு'' என்று அருளிச்செய்தானும். அவருகந்த பெயரைத் தான் உகந்ததோடன்றியில் அப்பெயருக்கேற்ப நாவற்பழமும் இரந்துசென்ற நீர்மையைக்கண்ட எங்களாழ்வான் நஞ்சீயரைக் கண்டபோது, ''உம்முடைய பிள்ளை எங்களைக் குடியிருக்க விடமாட்டேனென்கிருன்; நாவற்பழத்தை கொடு; வெண்ணெயைக்கொடு; அதைக்கொடு; இதைக்கொடு என்று துன்புறுத்திக்கொண்டேயிருக்கிருன்'' என்று கூறி வியந்தாராம். இவ்வைதிஹ்யமும் பெரியவாச்சான்பிள்ளையெடுத்தது. *(தமருகந்து எவ்வண்ணம் சிந்தித்து இமையாது இருப்பரே அவ்வண்ணம் ஆழியானும்)* அடியார்கள் உகப்புடன் தன்னுடைய கு$_{3}$ணம் செயல்கள் முதலானவற்றில் எந்த கு$_{3}$ணசேஷ்டிதங்களை அநுஸந்தி$_{4}$த்து இடைவிடாமல் த்$_{4}$யானித்திருப்பார்களோ, அந்த கு$_{3}$ணசேஷ்டிதங்களையுடையவனுகவே அவர்களுக்குக் காட்சியளிப்பான் ஸர்வேஶ்வரன்; காளிங்கநர்த்தனக் கண்ணனுகச் சிந்தித்துத் திருமேனியை அமைத்தால் அப்படியே ஆவான்; பட்டாபிஷேக ராமனுகச் சிந்தித்து அமைத்தால் அப்படியேயாவான். *(ஆழியான் ஆம்)* ஜக$_{3}$த்தை ஸ்ருஷ்டிப்பவனுய், அனைவரையும் நியமிப்பவனுயிருப்பவன், ஒருவனுல் ஸ்ருஷ்டிக்கப்படுபவனுய், நியமிக்கப்படுபவனுக ஆவான்.

இப்படித் தன் பெருமைபாராதே அடியார் உகந்த உருவம் பெயர், கு$_{3}$ணம், செயல்கள் முதலானவற்றைத் தான் உடையவனுய்க்கொண்டு அடியாரை அடிமைகொள்ளும் அர்ச்சாவ

**45. ஆமே யமரர்க் கறிய வதுநிற்க**
**நாமே யறிகிற்போம் நன்னெஞ்சே! — பூமேய**
**மாதவத்தோன் தாள்பணிந்த வாளரக்கன் நீண்முடியை**
**பாதமத்தா லெண்ணினன் பண்பு.**

**பதவுரை:— நல் நெஞ்சே** – நல்ல மனமே!, **பூ மேய மாதவத்தோன்** — திரு நாபீ$_4$ கமலத்தில் வஸிக்கும் பெருந்தவத்தோனாகிய பிரமனுடைய. **தாள் பணிந்த** – பாத$_3$த்திலே வந்து வணங்கின, **வாள் அரக்கன்** — தீய ராக்ஷஸனான இராவணனுடைய, **நீள் முடியை** — நீண்ட (பத்து) தலைகளையும், **பாதம் அத்தால் எண்ணினன்** — அந்தத் திருவடிகளால் எண்ணிக் காட்டிய பெருமானுடைய, **பண்பு** — கு$_3$ணங்கள், **அமரர்க்கு அறிய ஆமே** — தே$_3$வர்களுக்கு அறியத்தக்கவையோ? **அது நிற்க** — அது கிடக்கட்டும்; **நாமே அறிகிற்போம்** — (அவனுடைய நிர்ஹேதுக கிருபைக்கு இலக்காகிய) நாமே அறிவோம்.

**அவ:— நாற்பத்தைந்தாம் பாட்டு.** (ஆமே) **இது அவன் காட்டக் கண்டவருக்கொழிய அல்லாதார்க்கு அறியப்போகாது என்கிறார்.**

---

**அவதாரிகை—** இப்படியிருக்கிற அவன் நீர்மை ப்$_3$ரஹ்மாதி$_3$களுக்கும் நிலமல்லகிடீர்! என்கிறார்.

---

தாரத்தின் நீர்மையின் ஏற்றத்தை அநுஸந்தி$_4$த்து ஈடுபடுகிறார். 44.

*அவதாரிகை:—* ஸர்வேஶ்வரன் இப்படியும் ஒரு நீர்மையுடையவனாவானோ? என்னில்: இப்படி இருக்கிற அவனுடைய நீர்மை அவன்தானே காட்டக்கண்ட எமக்கல்லது பிரமன் முதலான தே$_3$வர்களுக்கும் அறிய அரிதானது என்கிறார்.

*வ்யா:— (நல்நெஞ்சே)* என் நினைவின்படி நடக்கும் நல்ல நெஞ்சே! *(பூமேய மாதவத்தோன் தாள்பணிந்த வாளரக்கன் நீண்முடியை பாதம் அத்தால் எண்ணினன் பண்பு)* இங்கு



**வ்யா:—** (ஆமேயமரர்க்கறிய) **எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞாநரான தே$_3$வர்களுக்கும் அறியப்போகாது என்கிறது.** (அது நிற்க நாமே அறிகிற்போம்) **அவ்விடையாட்டம் நிற்க, நமக்கு அறியத்தட்டென்?** (நன்னெஞ்சே) **அவன் காட்டக்கண்ட நெஞ்சே!** (பூமேயவித்யாதி$_3$) **"ப்$_3$ரஹ்**

---

**உரை:—** என் நினைவிலே நடக்கும் நல்ல நெஞ்சே! திருநாபீ$_4$கமலத்தைத் தனக்கு வாஸஸ்தா$_2$நமான உடையனாய், ஜக$_3$த்ஸ்ருஷ்டிக்கு உபகரணமான தபஶ்ஶப்$_3$த$_3$வாச்யமான ஜ்ஞாநத்தையுடையனான ப்$_3$ரஹ்மாவினுடைய கால்

---

சொல்லப்படும் விருத்தாந்தமாவது; ராவணன் பிரமனிடம் சாவாவரம் வேண்டினபோது அப்பிரமன் வரத்தைக் கொடுக்க முற்பட்டவுடன், அப்பிரமனுடைய மடியில் ஒரு குழந்தையாக பகவான் தோன்றி அவ்விராவணனுடைய பத்துத் தலைகளையும் தன் திருவடியாலே கீறிக்காட்டி இவை அறுப்புண்ணும் தலைகள் என்று பிரமனுக்கு உணர்த்தி, அவனை அப்படி வரம் கொடுக்காமல் தடுத்தான் என்பது. மூன்றும் திருவந்தாதியில் "ஆய்ந்த வருமறையோன்" [77] என்னும் பாட்டிலும், நான்முகன் திருவந்தாதியில் "கொண்டு குடங்கால்மேல்" [44] என்னும் பாட்டிலும் இவ்விருத்தாந்தம் அநுஸந்தி$_4$க்கப்பட்டது. *(பூமேய மாதவத்தோன்)* திருநாபீ$_4$ கமலத்தைத் தன் இருப்பிடமாக உடையவனாய், உலகத்தைப் படைப்பதற்குறுப்பான பெரிய ஞானத்தையுடைய பிரமன், "தப ஆலோசநே" என்று தா$_4$துவாகையாலும், *"யஸ்ய ஜ்ஞாநமயம் தப:"* [முண்ட$_3$ 1-1-10] [எவனுடைய 'தபஸ்ஸு' ஸங்கல்பரூபமான ஜ்ஞாநமயமாயிருக்கிறதோ] என்று *ஶ்ருதி*யில் சொல்லுகையாலும், இங்கும் 'தவம்' என்று அறிவைக் குறிக்கிறது. *(தாள் பணிந்த வாளரக்கன்)* பிரமனுடைய காற்கீழே தலையை வைத்து, 'எனக்குச் சாவாவரம் தரவேணும்' என்று வேண்டியவனாய், சிவன் கொடுத்த வாளையுடைய ராக்ஷஸனான ராவணனுடைய. *(நீள் முடியை எண்ணினன்)* நீண்டுயர்ந்திருக்கும் பத்துத்தலைகளையும் கீறி எண்ணிக்காட்டுவதன்மூலம், 'இவை என்றால் ஒரு சமயத்தில் கீறி எறியப்பட

மாவின் மடியிலே ஒரு சிறுபிள்ளையாய்க் கண்வளருவாரைப் போலே கிடந்து ' இவனுக்கு வரம் கொடுக்கவேண்டா, இது அநர்த்த2மாம்' என்று ராவணன் தலையைத் தன் திருவடிகளாலே எண்ணினவனுடைய நீர்மையை அமரர்க்கு அறியவாமே" என்கிறது; இத்தால் ப்3ரஹ்மாவினுடைய அறிவுகேடு சொல்லுகிறது.

---

கீழே தலைமடுத்து 'எனக்கு வரம் தரவேணும்' என்று ஆஶ்ரயித்த ஸாயுத4னன ராவணனுடைய ஓக்கத்தை யுடைத்தான தலைகளை, புதுக்கும்பீடுகண்டு இறுமாந்து, மேல் விளைவதறியாமல் அந்த ப்3ரஹ்மா அவனுக்கு வேண் டின வரங்களைக் கொடுப்பதாக ஒருப்படுகிறவளவிலே, ஒரு பா3லனய்க்கொண்டு அவன் மடியிலே வந்து ஆவிர் ப4வித்து, அவைகள் அறப்புண்ணும் தலைகள் என்னு மிடத்தை எனக்கு நிரதிஶயபோ4க்3யமான அந்தத் திரு வடிகளாலே கீறி எண்ணிக்காட்டி, அந்த ப்3ரஹ்மாவின் அநர்த்த2த்தைப் பரிஹரித்த ஸர்வேஶ்வரனுடைய கு3ணங் களை, தங்கள் ஹிதமறியாமல் அநர்த்த2த்தைச் சூழ்த்துக் கொள்ளக்கடவ ப்3ரஹ்மாதி3தே3வர்களுக்கு அறியப் போமோ? அது கிடக்கிடாய்! அவனருளாலே தெளியக் காணவல்ல நாமே அறிகைக்கு ஶக்தராகாநின்ரேம்.

---

வேண்டியவை' என்று உணர்த்தினன். "குடங்கால் மேல் வைத்த குழவியாய்" [நான்-திருவ-44] ' நன்குறங்கில் வாய்ந்த குழவியாய்" [மூன்-திருவ 77] என்று மற்றையாழ்வார்கள் அருளுகையாலே பிரமனின் மடியில் ஒரு குழந்தையாய்த் தோன்றி இச்செயலைச் செய்தான் ஸர்வேஶ்வரன் என்று விளங்குகிறது. *(பாதம் அத்தால் எண்ணினன்)* "அடிச்சியோம் தலைமிசை நீயணியாய் ஆழியங்கண்ணா! உன் கோலப் பாதம்" [ திருவாய் 10-3-6 ] என்று என்னைப்போன்ற அடியார் ஆசைப்படும் அமுதிலுமினிய அத்திருவடியை ஓரரக்கன் தலையிலே வைப்பதே! என்று வியக்கிருர். *(எண்ணினன் பண்பு)* தன்னுல் படைக்கப்பட்ட பிரயோஜ நாந்தரபரனன பிரமனின் மடியிலே அவனுடைய பிள்ளையைப்



(ஆமே) அபி4மாநிகளான ப்3ரஹ்மாதி3களுக்கும் எளிய னும். (தாள் பணிந்த வாளரக்கன்) புதுத்தண்டன் கண்டு இறுமாந்து விளைவது அறியாதே வரம் கொடுத்தபடி. 45.

46. பண்புரிந்த நான்மறையோன் சென்னிப் பலியேற்ற
வெண்புரிநூல் மார்பன் வினைதீர—புண்புரிந்த
வாகத்தான் தாள்பணிவார் கண்டீர் அமரர்தம்
போகத்தால் பூமியாள் வார்.

**பதவுரை:— பண் புரிந்த நான்மறையோன்** — ஸ்வரங்க ளோடு கூடிய நாலு வேத3ங்களையும் ஓதுவிக்கப்பட்டவனன பிரமனுடைய, **சென்னி**—தலையில், **பலி ஏற்ற**—பிச்சையை வாங்கினவனும், **வெண்புரிநூல் மார்பன்**—வெளுத்த யஜ் ஞோபவீதத்தை மார்பிலே த4ரித்தவனுமான ருத்3ரனுடைய, **வினை தீர**—ப்3ரஹ்மஹத்திபாபம் அகலும்படியாக, **புண் புரிந்த ஆகத்தான்**—திருவுள்ளத்தைப் புண்படுத்திக்கொண்ட எம்பெருமானுடைய, **தாள்** — திருவடிகளை, **பணிவார் கண்டீர்**—வணங்குமவர்கள் கிடீர், **அமரர் தம் போகத்தால்**— நித்யஸூரிகளுடைய போ4க3த்தோடு கூட, **பூமி ஆள்வார்**— இவ்வுலகத்தையும் ஆட்சி செய்வார்கள்.

---

பேரளவுடைய ப்3ரஹ்மாதி3கள் மதிகெட்டு நிலம்துழாவா நிற்க, நாமே அவனை அறியப்புகாநின்ரேம்? என்றுமாம். 45.

---

போலே தோன்றி அவனுடைய அநர்த்த2த்தைப்போக்கிய கு3ணசாலியானவன் தன்னடியாருக்கு வசப்பட்டிருப்பான் என்பது வியப்போ? என்று கருத்து. *(ஆமோ அமரர்க்கு அறிய)* தங்களுக்கு எது நன்மை, எது தீமையென்றறியாமல் புதுக்கும்பீடு கண்டு வரங்கொடுத்துவிட்டுத் திண்டாடும் பிரமன் முதலான தே3வர்களுக்கு இவனுடைய நீர்மையை அறியமுடியுமோ? *(அதுநிற்க)* அது கிடக்கட்டும். *(நாமே அறிகிற்போம்)* அவன் அருளாலே தெளியக்காணவல்ல நாமே அறியவல்லோம். *(அதுநிற்க நாமே அறிகிற்போம்?)* மாதவத் தோனை பிரமன் முதலான தே3வராலும் அறியமுடியாமலிருக்க அல்பஜ்ஞானத்தையுடைய நாமோ அவனை அறியப்போகிறேம்? என்று நைச்சியாநுஸந்தா4னம் செய்வதாகவும் கொள்ளலாம். 45.

அவ:— நாற்பத்தாறும் பாட்டு. (பண்ணித்யாதி3) ருத்3ரனுடைய லஜ்ஜைக்கேடு சொல்லுகிறது.

வ்யா:— (பண்புரிந்த நான்மறையோன்) ஸ்வரயுக்த மாக ஸர்வேஶ்வரனாலே ஓதுவிக்கப்பட்ட ப்3ரஹ்மாவின்.

---

அவதாரிகை;— ப்3ரஹ்மாவுக்கு வந்த அநர்த்த2த்தைப் பரிஹரித்து ரக்ஷித்தவளவன்றிக்கே, லோககு3ருவுமாய், பிதாவுமான அந்த ப்3ரஹ்மாவின் தலையை அறுத்து, ஶாபோபஹதனாய்க் கையும் கபாலமுமாய் இரந்து உண்டு திரிந்த ருத்3ரன் அநர்த்த2த்தைப் பரிஹரித்து ரக்ஷித்த படியை அருளிச்செய்கிறார்.

உரை:— ஸ்வரத்திலே நோக்காய், ருக்3ாதி3பே4த3த் தாலே நாலுவகைப்பட்டிருக்கிற வேத3த்தை த4ரித்திருந் துள்ள ப்3ரஹ்மாவினுடைய் தலையை, "छिन्नं तस्य शिरो मया"

---

*அவதாரிகை:—* பிரமனுக்கு ஏற்பட்ட துன்பத்தைப் போக்கி ரக்ஷித்தது மாத்திரமல்ல, உலகைப் படைத்தவனாய், தனக்குத் தந்தையான அந்தப் பிரமனின் தலையை அறுத்து, அவனிட்ட ஶாபத்தாலே பீடிக்கப்பட்டு, கையிலே ப்3ரஹ்ம கபாலத்தையுடையவனாய் யாசித்து உண்டுதிரிந்த உருத்திரனின் துன்பத்தையும்போக்கி ரக்ஷித்தவன் இவனே என்கிறார். ["அரன் நாரணன்" முதலான சில பாட்டுக்களிலே ஹரிஹர ஸாம்யத்தைக் கூறுவதாகச் சொல்லும் மேதா4விகள் இப்பாசு ரத்திற்கு என்ன பொருளுரைக்கிறார்கள் என்பது தெரிய வேண்டும்.]

*வ்யா:—(பண்புரிந்த நான்மறையோன் சென்னிப்பலி ஏற்ற) "யே வை வேதா3ம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை"* [எவன் பிரம னுக்கு வேத3ம் ஓதுவிக்கிறானோ] என்கிறபடியே, ஸர்வேஶ்வர னாலே ஓதுவிக்கப்பட்ட நாலு வேதங்களையும் ஸ்வரத்தோடு ஓதாநிற்கும் பிரமனின் தலையைக்கிள்ளி, பிரமனின் ஶாபத் தாலே தலை கையில் ஒட்டிக்கொள்ள, அதை பி4க்ஷாபாத்திர மாகக்கொண்டு உலகெல்லாம் திரிந்து பிச்சை ஏற்று, கபாலி யென்றும், பி4க்ஷாடனன் என்றும் தன்னடியார்களாலும் அழைக்கப்படநின்ற விருத்தாந்தத்தைக் கூறுகிறார்.



(சென்னிப்பலி ஏற்ற) 49. "वामाङ्गुष्ठनखाग्रेण छिन्नं तस्य शिरो मया" (வாமாங்கு3ஷ்ட2நக2ாக்3ரேண சி2ந்நம் தஸ்ய ஶிரோ மயா) என்கிறபடியே ப்3ரஹ்மாவின் தலையை அறுக்க, அவன், "கபாலி ஆவாய்" என்று ஶபிக்க, அவனுடைய தலையோட்டிலே பி4க்ஷையேற்ற. (வெண்புரி நூல் மார்பன் வினை தீர) விநீதவேஷனாய் ப்ராயஶ்சித்தியானபடி. இவனோடு ஸம்ப3ந்தி4த்தார்க்கெல்லாம் அதுவேயிறே பணி. அக முடையவளும் தகப்பனாரைக் கொன்றாள்; இவனை ஆஶ்ர யித்தவனும் தகப்பனைக் கொன்றான். "வினைதீர" என்கிற இத்தால் இவனுடைய கர்மவஶ்யத்வமும், தான் பண்ணின கர்மம் தன்னால் பரிஹரிக்கப் போகாமையும் சொல்லுகிறது.

---

(சி2ந்நம் தஸ்ய ஶிரோ மயா) என்கிறபடியே அறுக்க, அவன் "कपाली त्वं भविष्यसि" (கபாலீ த்வம் ப4விஷ்யஸி) என்று அநந்தரம் ஶபிக்க, தச்சா2போபஹதனாய்க்கொண்டு அவன் தலையோட்டிலே நெடுங்காலம் இரந்து திரிந்தவனாய், ப்ராயஶ்சித்தியென்னுமிடம்தோற்ற வெளுத்த பூணூலையும் மார்பிலேயிட்டு விநீதவேஷனுமாயிருக்கிற ருத்3ரனுடைய

---

"தே3வீம் ப்ரதி ருத்3ர:—தத: க்ரோத4பரீதேந ஸம்ரக்தநயநேந ச |
வாமாங்கு3ஷ்ட2நக2ாக்3ரேண சி2ந்நம் தஸ்ய ஶிரோ மயா ||
ப்3ரஹ்மா—யஸ்மாத3நபராத4ஸ்ய ஶிரஶ்சி2ந்நம் த்வயா மம |
தஸ்மாச்சா2பஸமாவிஷ்ட: கபாலீ த்வம் ப4விஷ்யஸி ||
ருத்3ர:-ப்3ரஹ்மஹா ऽऽகுலிதோ பூ4த்வா சரந் தீர்த்தா2நி பூ4தலே|
ததோ ऽஹம் க3தவாந் தே3வி! ஹிமவந்தம் ஶிலோச்சயம் |
தத்ர நாராயணஶ் ஸ்ரீமாந் மயா பி4க்ஷாம் ப்ரயாசித: |
ததஸ்தேந ஸ்வகம் பார்ஶ்வம் நக2ாக்3ரேண விதா3ரிதம் ||
மஹதீ ஸ்ரவதீ தா4ரா தஸ்ய ரக்தஸ்ய நிஸ்ஸ்ருதா ||
விஷ்ணுப்ரஸாதா3த் ஸுஶ்ரோணி! கபாலம் தத்ஸஹஸ்ரதா4 ||
ஸ்பு2டிதம் ப3ஹுதா4 யாதம் ஸ்வப்நலப்3த4ம் த4நம் யதா2 ||
[மாத்ஸ்யபுராணம்-182]

[தே3வியைக் குறித்து ருத்3ரன்:— 'பிறகு கோபத்தையுடைய வனும், சிவந்த கண்களை உடையவனுமான என்னால், அப் பிரமனுடைய தலை இடதுகைக் கட்டைவிரல் நகத்தின் நுனி யால் வெட்டப்பட்டது'. பிரமன்:—'அபராத4மற்ற என்னுடைய தலை உன்னால் அறுக்கப்பட்டபடியால், நீ ஶாபத்தை அடைந்து

இத்தால் ஈஶ்வரத்வ ஶங்கை இல்லை என்றபடி. (புண் புரிந்த இத்யாதி3) ஈஶ்வராபி4மாநியாய் ஒருத்தனாய்த் திரிந்தவன் வாசல்தோறும் இடறித்திரிவதே! என்று திருவுள்ளத்திலே புண்பட்ட ஸர்வேஶ்வரனுடைய தாள் பணிவார் கிடீர். (அமரர் இத்யாதி3) பூ4மியும் ஆண்டு பரமபத3த்தில் போ4க3மும் அநுப4விப்பார்கள். அன்றியே, போ4க3பூ4மியிலே இருக்கச்செய்தே பரமபத3த்தில் போ4க3மெல்லாம் அநுப4விப்பார்கள் என்றுமாம்.

---

ப்3ரஹ்மஹத்யாரூபமான பாபம் விட்டு நீங்கும்படியாக "नखाग्रेण विदारितं" (நகா2க்3ரேண விதா3ரிதம்) என்கிறபடியே திருவுகிராலே கீறி, மாம்ஸளமான ரக்தஜலத்தை உபகரித்த திருமேனியை உடைய ஸர்வேஶ்வரன் திருவடிகளை ஆஶ்ரயிக்குமவர்கள் கிடீர் நித்யஸூரி போ4க3மான பரமபதை3ஶ்வர்யத்தோடே கூட பூ4ம்யுபலக்ஷிதையான லீலா விபூ4தியையும் ஸ்வாதீ4னமாக நிர்வஹிக்குமவர்கள்.

---

கபாலியாக (கபாலத்துடன் கூடியவனாக) ஆவாய்.' ருத்3ரன்:— 'தே3வி! ப்3ரஹ்மஹத்தி செய்தவனையும் கலங்கினவனாகவும் பூ4மியில் தீர்த்த2ங்களைச் சுற்றிக்கொண்டிருந்த நான் அதற்குப் பின் ஹிமாசலமலைக்குச் சென்றேன். அங்கு ஸ்ரீமந்நாராயணன் என்னால் பிச்சைக்காக யாசிக்கப்பட்டான். அதன்பின் அவனால் தன்(தே3ஹத்தில்)ஒரு பா4க3ம் நக2த்தின் நுனியால் கீறப்பட்டது. அதிலிருந்து பெரிதாக வெள்ளமிடும் ரத்ததா4ரை பெருகிற்று. ......அழகிற் சிறந்தவளே! விஷ்ணுவினுடைய அருளினால் அக்கபாலம் ஆயிரக்கணக்கான பல துண்டுகளாக வெடித்து, கனவில் கிடைத்த பணம்போல் சென்றது.] என்று மாத்ஸ்ய புராணத்தில் கூறப்பட்டதன்றே. ஒரு மனிதனைத் தலையறுப்பதே மஹாபாபம்; அதிலும் அந்தணனைத் தலையறுப்பது ப்3ரஹ்மஹத்தியெனும் பெரும்பாபம். அதிலும் வேத3மோதிய அந்தணனைத் தலையறுப்பது ஒப்பற்ற பாபம். அப்படிப்பட்ட மறையவனாய், நாலுமுக2ங்களாலும் நாலுவேத3ங்களையும் ஓதிக்கொண்டேயிருப்பவனாய், எல்லாவற்றுக்கும்மேலே தனக்குத் தந்தையான பிரமனின் தலையைக் கிள்ளினான் என்று பாபத்தின் பெருமையை உணர்த்துகிறார். உருத்திரன் தமோகு3ணம் நிறைந்தவன் என்பதை இவ்வொரு செயலே காட்டும்.



அவ:— ப்3ரஹ்மாவாலே ஒரு ருத்3ரன் அலைந்துகொடு கிடக்க அது தீர்த்தாரார்?

வ்யா:— (பண்ணித்யாதி3) ஓத்துச் சொல்லாநிற்கத் தலையறுத்தபடி. மூலையடியே திரிந்தார் பாதகியானவாறே முழுகித் திரியும்படி. "விண்ணுளாரிலும் சீரியர்" என்றுமாம். 46.

---

உருத்திரனைப் பற்றிநிற்பவர்களும் இப்படித் தாமஸச் செயலையே செய்கின்றனர் என்பது அவர்கள் கூறிக்கொள்ளும் கதைகளே காட்டுகின்றன. உருத்திரனின் மனைவி தகப்பனைக் கொல்லச்செய்தாள். உருத்திரனின் மகன் தகப்பனுக்கே உபதே3ஶம் செய்தான். உருத்திரனின் ப4க்தனொருவன் தந்தையின் காலைவெட்டினான் முதலானவைகள் ஶைவர்களே இசையும் கதைகளன்றோ. இவ்வளவையும் இசைந்துகொண்டே உருத்திரனுக்குப் பரத்துவமும் ஸாம்யமும் கூற முன்வருவது தான் நாரணன் மாயையாகும். *(வெண்புரிநூல் மார்பன்)* தந்தையின் தலையைக் கிள்ளின பாபம் தீருவதற்காகப் பிராயஶ்சித்தம் செய்துகொண்டிருப்பவன் என்பது தோற்றக் குளித்து முழுகிச் சாம்பலைப் பூசியிருப்பவனாகையாலே வெளுத்திருக்கும் பூணூலை த4ரித்திருக்கிறான் உருத்திரன். *(வினைதீர)* அவனுடைய ப்3ரஹ்மஹத்திபாபம் தீரும்படியாக. *(புண்புரிந்த ஆகத்தான்)* ஆகம் - மார்பு. முன் எடுக்கப்பட்ட மாத்ஸ்ய புராணவசனத்திற் சொன்னபடியே, தன் மார்பைக் கீறிப் புண்ணாக்கிக்கொண்டு அதிலிருந்து பெருகிய நறுமணமுள்ள ரத்தஜலத்தாலே மண்டையோட்டை நிறைத்ததைக் கூறுகிறார். "*அலங்கல் மார்வில் வாசநீர் கொடுத்தவன்*" [திருச்சந்த-113] என்றாரன்றோ மழிசைக்கிறைவனும். *(புண்புரிந்த ஆகத்தான்)* 'நானே ஈஶ்வரன்' என்று கூறிக்கொண்டு திரிந்தவன் திறந்து கிடக்கும் வாசல்தோறும் யாசித்துத் திரிவதே! என்று *புண்பட்ட திருவுள்ளத்தையுடையவன்* என்றும் கொள்ளலாம். ஆகம்-நெஞ்சு. *(தாள்பணிவார் கண்டீர்...)* அந்த ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளைப் பணியுமவர்களே கிடீர் பரமப்ராப்

47. வாரி சுருக்கி மதக்களி றைந்தினையும்
சேரி திரியாமல் செந்நிறீஇ—கூரிய
மெய்ஞ்ஞானத் தாலுணர்வார் காண்பரே மேலொருநாள்
கைந்நாகங் காத்தான் கழல்.

**பதவுரை:— மதம் களிறு ஐந்தினையும்**—மதம் பிடித்த யானைகள் போன்ற ஐந்து இந்திரியங்களையும், **வாரி சுருக்கி**—போ4க3மாகிற மத3ஜலத்தைக் குறைத்து, **சேரி திரியாமல் செம்நிறீஇ**—ஶப்3த3ம் முதலிய விஷயங்களாகிற தெருக்களில் அலையாமல் நன்றாக நிறுத்தி, **கூரிய**—ஸூக்ஷ்மமான, **மெய் ஞானத்தால்**—உண்மையான ப4க்தி ரூபமான அறிவால், **உணர்வார்**—(அவனை) அறிய வல்லவர்கள், **மேல் ஒரு நாள்**—முன்னொரு காலத்தில், **கை நாகம் காத்தான்**—தும்பிக்கையுடன் கூடிய யானையாகிற க3ஜேந்த்3ராழ்வானை ரக்ஷித்தவனுடைய, **கழல்**—திருவடிகளை, **காண்பர்**—கண்டு அநுப4விப்பார்கள்.

---

யத்தைப் பெறுவது என்கிறார். (*அமரர் தம் போகத்தால் பூமி ஆள்வார்*) நித்யஸூரிகளுடைய போ4க3மாகிற பரமபத3ச் செல்வத்தோடு கூட, பூ4மி என்று உபலக்ஷணமுறையாலே காட்டப்படும் லீலாவிபூ4திச் செல்வத்தையும் தாமிட்ட வழக்காகப் பெறுவார்கள். இம்மையின்பத்தையும், மறுமையின்பத்தையும் பெறுவர் என்றபடி. அன்றிக்கே, இவ்வுலகிலிருக்கும்போதே பரமபத3த்தில் அனுப4விக்கும் போ4க3மெல்லாம் அனுப4விப்பார்கள் என்றுமாம். "*அத்ர ப்3ரஹ்ம ஸமஶ்நுதே*" "*அம்ருத இஹ ப4வதி*" என்று ஶாஸ்த்ரங்களில் இவ்வுலகிலேயே மோக்ஷமடைகிறான் என்றும், ப்3ரஹ்மத்தையடைகிறான் என்றும் கூறுவதும் இக்கருத்திலேயன்றோ. விஷ்ணுவின் பரமபத3மென்று ஒரு லோகம் உண்டென்றும், அங்கு சென்றாலேயே மோக்ஷமென்றும், அர்ச்சிராதி3க3தியாலே முக்தன் அங்கு செல்கிறான் என்றும், அங்கிருந்து திரும்பி வருவதில்லையென்றும் பல வாக்கியங்கள் ஓதாநிற்க, அத்3வைதிகளைப்போலே ஜீவன்முக்தியை ஒப்புக்கொள்வது வேத3விருத்3த4மேயாகும்.





அவ:— நாற்பத்தேழாம் பாட்டு. (வாரிசுருக்கியித்யாதி3) இந்த்3ரியங்களுடைய போ4க3த்தைச் செறுத்து, விஷயத்தினுடைய ஸந்நிதி4யில் நில்லாமல் பரிஹரித்து, மெய்யான ப4க்தியை உடையவர்கள் அவனைக் காண்பர் என்கிறார்.

---

அவதாரிகை:— இந்த்3ரியங்களை ஜயித்து ஸம்யக்3ஜ்ஞானத்தை உடையவர்களாய், அவனை ஆஶ்ரயிப்பார்க்கல்லது, அவன் திருவடிகளைக் கிட்டவொண்ணாது என்கிறார்.

உரை:— போ4க்3யங்களான ஶப்3த3ாதி3களான ஜலத்தைக் கண்டு கடுகமாற்றுதல், நெடுகவிடுதல் செய்யாதே நடுத்தரமான க்ரமத்திலே ஸங்கோசிப்பித்து, களித்துக் கண்ட கண்ட விஷயங்களிலே காடுபாய்ந்து திரிகிற ஶ்ரோத்ராதி3களான மத்தக3ஜங்கள் ஐந்தையும் விஷயங்களாகிற குடியிருப்புகளில் பண்டுபோலே கயிறுருவிவிட்டு

---

47. *அவதாரிகை:—* இந்திரியங்களை ஜயித்து, நல்லறிவுடையவர்களாய் அவனை அடையமுயலுமவர்களே அவனை அடையமுடியும், மற்றையோர் அவன் திருவடிகளை அடையமுடியாது என்கிறார்.

*வ்யா:—* (*வாரிசுருக்கி*) மத3ங்கொண்ட யானைகளை அடக்குவதற்கு அவை குடிக்கும் தண்ணீரைச் சுருக்க வேண்டும். தண்ணீரை அதிகமாக நெடுநாள் கொடுத்தால் மத3ம் அதிகரிக்கும்; ஒரேயடியாக நிறுத்திவிட்டாலும் மாண்டுபோம். ஆகையால் நீரைச் சிறுகச்சிறுகச் சுருக்குவதுதான் அவற்றின் மத3த்தை அடக்கும்வழி. அதுபோலே இந்திரியங்களாகிற யானைகளையும், அவற்றின் போ4க3மாகிற நீரைச் சிறிதுசிறிதாகச் சுருக்கியே அடக்கவேண்டும். (*மதக்களிறு ஐந்தினையும்*) இவன் அடக்கவேண்டிய மத3யானைகள் ஒன்றல்ல; இரண்டல்ல; மெய்வாய்கண்மூக்குச்செவிகளாகிற ஐந்து மத3யானைகளையும் ஒன்றாக அடக்கவேண்டியுள்ளது. சிறிது சோம்பினால் அவை இவனை அழித்துவிடும். (*சேரி திரியாமல்*) யானைகள் மத3ங்கொள்ளும்போது, முன்போல் அவற்றைக் கயிறுருவி அவிழ்த்துவிட்டுவிட்டால் மனிதர்

15. "विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः। रसवर्ज्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते॥" (விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தே3ஹிந:। ரஸவர்ஜம் ரஸோப்யஸ்ய பரம் த்3ருஷ்ட்வா நிவர்த்ததே॥).

வ்யா:— (வாரிசுருக்கி) மதித்த ஆனைகளைத் தண்ணீரிலே செறுக்குமாபோலே இந்த்3ரியங்களினுடைய போ4க3த்

---

ஸஞ்சரியாதபடியாக, ப்ரத்யக்3விஷய ப்ரவணமாம்படி செவ்வே நிறுத்தி, அநபி4ஸம்ஹிதப2லமாக அநுஷ்டி2த்த ஸத்கர்மத்தாலே தெளிந்த மநஸ்ஸை தளமாக முளைத்து ஸ்வரூபயாதா2த்ம்யத்தை யதா2வாக த3ர்ஶிக்கும்படி அதிஸூக்ஷ்மமாய், த்4யேய விஷயத்தை ப்ரத்யக்ஷமாக க்3ரஹிக்கையாலே பரமார்த்த2மாயிருக்கிற ப4க்திரூபாபந்ந

---

வாழும் இடங்களெல்லாம் சென்று அழிம்செய்துவிடும், ஆகையால் அவற்றை ஆளில்லாவிடத்திலே கட்டிவைக்க வேணும். அதுபோலவே களித்துக் கண்ட விஷயங்களிலே காடுபாய்ந்து திரியும் பஞ்சேந்திரியங்களாகிற இம்மத4யானைகளையும் ஶப்3த3ஸ்பர்ஶரூபரஸக3ந்த4ங்களாகிற விஷயவீதிகளிலே அலையாதபடி கட்டிவைக்கவேணும். (செந்நிறீஇ) யானையை அரணுக்குள்ளே கட்டிவைப்பதுபோலே, இவ்விந்திரியங்களையும் உள்ளேயுள்ள ஆத்ம பரமாத்மவிஷயத்திலே செல்லும்படி கட்டிவைக்கவேணும்.

"விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தே3ஹிந:।
ரஸவர்ஜம் ரஸோऽப்யஸ்ய பரம் த்3ருஷ்ட்வா நிவர்த்ததே॥"
[கீதை 2-59]

[(இந்திரியங்களுக்கு) ஆஹாரமாகிய விஷயங்களற்றவனை மனிதனுக்கு விஷயங்கள் மட்டும் விட்டுப்போகின்றன; விஷயங்களில் ஆசை நீங்குவதில்லை. ஆசையும் (விஷயங்களுக்கு) மேலான ஆத்ம ஸ்வரூபத்தைக் கண்டவுடன் நீங்குகின்றது.] என்கிறபடியே, "விஷயங்களைச் சுருக்கினால் மாத்திரம் போதாது; ஆத்மத3ர்ஶனமுண்டானால்தான் ஆசை



தைக் குறுக்கி. (சேரி திரியாமல்) தெருவே திரியில் கொல்லுமிறே ஆனை. அப்படி விஷயத்திறுடைய ஸந்நிதி4யில் திரியாமல். (செந்நிறீஇ) செவ்விதாக நிறுத்தி. பதா3ர்த்த2ங்களில் போகாமல் ப்ரத்யக்3வஸ்து விஷயமாக்கி. (கூரியவித்யாதி2) விஹித கர்மங்களைப் ப2லாபி4ஸந்தி4ரஹிதமாக அநுஷ்டி2த்து க்ஷீணபாபராய் ஆத்மயாதா2த்ம்ய ஜ்ஞாநமுண்டாய் ஈஶ்வரபாரதந்த்ர்யம் என்னுமிடம்; 50. 'उपासनं ध्रुवा स्मृतिः दर्शनसमानाकारता प्रत्यक्षताऽऽपत्तिः' (உபாஸநம் த்4ருவா ஸ்ம்ருதி: த3ர்ஶநஸமாநாகாரதா ப்ரத்யக்ஷதாபத்தி:) 51. 'विशते तदनन्तरम्' (விஶதே தத3நந்தரம்) என்று

---

ஜ்ஞாநத்தாலே அவனை உள்ளபடி உணர க்ஷமரானவர்கள் பண்டொருநாளிலே 'அடிமைசெய்யவேணும்' என்னும் அபி4நிவேஶத்தாலே, புஷ்பாபசயார்த்த2மாக ஒரு பொய்கை

---

யகலும்" என்றானன்றே ஜீ8யாசார்யன். (கூரிய மெய்ஞ் ஞானத்தால் உணர்வார்) முதலில் பு2லன்களில் பற்றுவைக்காமல் கர்மங்களை அனுஷ்டி2க்கவேணும்; இதனால் மனம் தெளியும்; அதிலே ப4க்தியுண்டாகும். அந்த ப4க்தியானது ஆத்ம பரமாத்மஸ்வரூபங்களை உள்ளபடி உணரவைக்கும் கூர்மையை உடையதாயிருக்கும். த்4யானிக்கத்தக்கதான பரமாத்ம ஸ்வரூபத்தை நேரே காணவைக்கையாலும், மிகச்சிறந்த ஞானமாயிருக்கையாலும் 'மெய்ஞ்ஞானம்' என்றும் '*உபாஸநம் த்4ருவாஸ்ம்ருதி:*' [நிலையான நினைவே உபாஸனம் எனப்படுகிறது] என்றும் கூறப்படுகிறது (*மெய்ஞ்ஞானத்தால் உணர்வார் காண்பரே*) இப்படிப்பட்ட ப4க்திரூபமான அறிவாலே அவனை உள்ளபடி அறிபவர்கள் அவன் திருவடிகளை நேரே கண்டு அனுப4விக்கப்பெறுவர்கள்.

"ப4க்த்யா மாமபி4ஜாநாதி யாவாந் யஶ்சாऽஸ்மி தத்த்வத:
ததோ மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா விஶதே
தத3நந்தரம்॥" [கீ3தை 18-55]

[(ஸ்வரூபத்தினாலும், ஸ்வபா4வத்தினாலும்) நான் எப்படியிருக்கிறேனோ, (கு3ணத்தினாலும், விபூ4தியினாலும்) நான் எம்

சொல்லுகிற ப4க்தியாலே காண்பர்கள். (மேலித்யாதி3) பண்டொருநாள் ஸ்ரீக3ஜேந்த்3ரமோக்ஷம் பண்ணினவனுடைய திருவடிகளை. இத்தால் விரோதி4யான முதலையைப் போக்கித் தன்னைக் காட்டிக்கொடுத்தாற்போலே இவர்களுடைய ப்ரதிப3ந்த4கங்களைப் போக்கித் தன்னைக் காட்டிக்கொடுக்கும் என்கிறது.

(சேரிதிரியாமல்) ஆள் நடையாடாதவிடத்தே கொண்டு போய். (கூரியவித்யாதி3) ஶுப4ாஶ்ரயமாகவும், நாத2னாகவும், உபாயமாகவும், உபேயமாகவும் அநுஸந்தி4க்கை. (கைந்நாகம்) 52. "परमापदमापन्नः" (பரமாபத3மாபந்நः) 47.

---

யிலே புக்குத் துதிக்கை முழுத்தும்படி முதலையாலே இடர்பட்ட ஸ்ரீக3ஜேந்த்3ராழ்வானை விரோதி4யைப்போக்கி அடிமை கொண்டு ரக்ஷித்த ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளைக் கண்டு அநுப4விக்கப்பெறுவர்கள். 47.

---

மாதிரியிருக்கிறேனே, அப்படிப்பட்ட என்னை ப4க்தியினால் உள்ளபடி அறிகிறான். என்னை உள்ளபடி அறிந்து, அதன் பிறகு, அந்த ப4க்தியினாலேயே என்னை அடைகிறான்.] என்று கீ3தையில் சொல்லப்பட்டதன்றோ. எதைக் காண்பார்கள் எனில்: (*மேலொருநாள் கைந்நாகம் காத்தான் கழல்*) பண்டு ஒருநாளிலே 'பரமபுருஷனுக்குக் கைங்கரியம் செய்யவேணும்' என்னும் ஆசையாலே பூப்பறிக்க ஒரு பொய்கையிலேபுக்கு, துதிக்கையுளவும் முழுகும்படி முதலையாலே இழுக்கப்பட்டுத் துன்புற்ற ஸ்ரீக3ஜேந்திராழ்வானின் விரோதி4யான முதலையை அழித்து, அவனை அடிமைகொண்டு ரக்ஷித்த ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளைக் காணப்பெறுவர்கள்.

"பரமாபத3மாபந்நோ மநஸாऽசிந்தயத் ஹரிம் ।
ஸ து நாக3வரः ஸ்ரீமாந் நாராயணபராயணः ॥"
[விஷ்ணுத4ர்மம் 69-47]

[மேலான ஆபத்தை அடைந்தவனும், கைங்கர்யஸ்ரீயை உடையவனும், நாராயணனையே மேலான க3தியாகக்கொண்ட



48. கழலொன் றெடுத்தொருகை சுற்றியோர் கைமேல்
சுழலும் சுராசுரர்க ளஞ்ச—அழலும்
செருவாழி யேந்தினான் சேவடிக்கே செல்ல
மருவாழி நெஞ்சே மகிழ்ந்து.

**பதவுரை:— ஆழி நெஞ்சே!**—கடல் போன்று ஆழ்ந்த மனமே! **கழல் ஒன்று**—(நமுசியினுடைய) ஒரு காலை, **எடுத்து**—பிடித்து, **ஒருகை**—ஒரு திருக்கையாலே, **சுற்றி**—சுழற்றி, **சுழலும்**—(என்ன தீங்கு நேரிடுமோ என்று) கலங்குகிற, **சுராசுரர்கள்** — தே3வர்களும் அசுரர்களும், **அஞ்ச**—பயப்படும்படியாக, **ஓர் கைமேல்**—மற்றொரு கையின் மேல் **அழலும்**-எரிகிறதும், **செரு ஆழி ஏந்தினான்**-சண்டை செய்வதுமான திருச்சக்கரத்தை ஏந்துகின்ற பெருமானுடைய, **சே அடிக்கே செல்ல**—சிவந்ததிருவடிகளை அடையும்படி, **மகிழ்ந்து மருவு**—உகந்து அனுப4விப்பாயாக.

அவ:— நாற்பத்தெட்டாம் பாட்டு. (கழல்) 'இப்படி இந்த்3ரிய ஜயம் பண்ணி நாம் பெறுகையாவதென்?' என்று தம்முடைய திருவுள்ளம் ப4யப்பட, 'எளிதாகப் பற்றலாம் நீ ப4யப்படவேண்டா' என்கிறார்.

---

**அவதாரிகை:**—நமக்கு இவ்வருந்தொழில்களில் இழிய வேண்டா; தானே வந்து தன்னைத்தரும் ஸ்வப4ாவனன்றோ என்று, அவன்படியை அநுஸந்தி4த்து, நெஞ்சே! நீ அவனை ப்ரீதிபூர்வகமாக அநுப4விக்கப்பார் என்கிறார்.

---

வனுமான அந்த க3ஜேந்திராழ்வான் மனத்தினாலே ஹரியை நினைத்தான்.] என்கிறபடியே *மனத்தாலே நினைத்த* அவனுடைய விரோதி4யைப்போக்கி ரக்ஷித்ததுபோலே, *மெய்ஞ் ஞானத்தாலுணர்ந்த* இவர்களுடைய விரோதி4களான இந்திரியம் முதலானவற்றை அழித்து இவர்களையும் ரக்ஷிக்கும் என்று கருத்து. 47.

48. *அவதாரிகை:*— "வாரிசுருக்கி மதக்களிறைந்தினையும் சேரிதிரியாமல் நிறுத்துவது முதலான அருந்தொழில்களை அவ

வ்யா:—(கழலித்யாதி3) நமுசியுடைய ஒரு காலை எடுத்துக் கையாலே சுற்றி என்னவுமாம். அன்றியே, பூ4மியளக்க வென்று தன்னுடைய ஒருதிருவடிமலரை எடுத்த அவஸரத்திலே நமுசியை ஒரு கையாலே சுற்றி என்னவுமாம்.

---

உரை:— ஒரு திருவடியை ஊர்த்4வலோகங்களிலே செல்ல வளர்த்து, ஒரு திருக்கையாலே ப்ரதிகூலரான நமுசிப்ரப்4ருதிகளைச் சுற்றியெறிந்து, மற்றையொரு திருக்கையின்மேலே, வயிறுமறுகிப் பரிப்4ரமிக்கிற அநுகூலரான தே3வர்களும் ப்ரதிகூலரான அஸுரர்களும் நடுங்கும்படிக்

---

ஞலே அவனைப் பெறவிருக்கும் நாம் செய்யவேண்டியதில்லை; தானே தன்னைத்தரும் தன்மையையுடையவனவன் என்று நீ அவனை உகப்புடன் அநுபவிக்கப்பார்" என்று நெஞ்சை நோக்கி அருளுகிறார்.

வ்யா:— *(கழல் ஒன்று எடுத்து)* ஒரு திருவடியை மேலுலகங்கள் எல்லாவற்றையும் வியாபிக்கும்படி உயர வளர்த்துவிட்டு. *(ஒரு கை சுற்றி)* ஒரு திருக்கையாலே எதிரிகளான நமுசி முதலானவரைச் சுழற்றி எறிந்து. "என்னிது மாயம்! என் அப்பன் அறிந்திலன் முன்னைய வண்ணமே கொண்டளவாய் என்ன, மன்னு நமுசியை வானிற் சுழற்றிய மின்னு முடியனே" [பெரியாழ்-திரு 1-8-8] என்று பெரியாழ்வார் அநுஸந்தி4த்த விருத்தாந்தத்தை உணர்த்துகிறார். *(கழல் ஒன்று எடுத்து ஒரு கை சுற்றி)* நமுசியுடைய ஒரு காலை எடுத்து ஒரு திருக்கையாலே சுழற்றியெறிந்து என்றும் பொருள்கொள்ளலாம். *(சுழலும் சுராசுரர்கள் அஞ்ச)* 'என்ன நேரிடுமோ?' என்று வயிறெரிந்து நிலைதடுமாறிச் சுழல்கின்ற அநுகூலரான தே3வர்களும், எதிரிகளான அஸுரர்களும் பயந்து நடுங்கும்படியாக. *(ஓர்கைமேல் அழலும் செரு ஆழி ஏந்தினன்)* மற்றொரு திருக்கையின்மேல், அஸ்த2ானே ப4யஶங்கையாலே அநுகூலரா, பிரதிகூலரா என்று ஆராயாமல் தே3வாஸுரர்கள்மேலே நெருப்பை உமிழும் போர்க்கருவியான ஸுத3ர்ஶநாழ்வானை த4ரித்த ஸர்வேஶ்வரன். செரு ஆழி-போர்க் கருவியான சக்கரம். சண்டையை உடைய சக்கரம் என்றுமாம்.



(ஓர்கைமேலித்யாதி3) ஒரு திருக்கை மலரிலே அநுகூல ப்ரதிகூலரோடு வாசியற அழலாநின்ற செருவுடைத்தான திருவாழியை ஏந்தினவனுடைய. (சேவடிக்கே செல்ல, ஆழிநெஞ்சே மகிழ்ந்து மருவு) உகந்துகந்து அநுப4வி.

(கழலித்யாதி3) அளந்தபடி. (ஆழிநெஞ்சே) உனக்கு உபதே3ஶிக்க வேண்டாவிறே; சேவடிதானே இருந்த இடத்தே வந்தால், இறாயாமையே வேண்டுவது. 48.

---

கீடாக ப்ரதிபக்ஷத்தின்மேலே அழலையுமிழுகிற யுத்3த4 ஸாத4னமான திருவாழியை த4ரித்த ஸர்வேஶ்வரனுடைய ஆஶ்ரிதர் இருந்தவிடமே எல்லையாக வளரும் திருவடிகளிலே கிட்டும்படி. அளவுடைய நெஞ்சே! நிரந்தரமாகப் பொருந்தப்பார்; அது தேவையாகாதபடி மகிழ்வதும் செய். ப்ரீதிபூர்வகமாக வாஸனை பண்ணு என்றபடி. சேவடி—சிவந்த அடியென்றுமாம். 48.

---

*(சேவடிக்கே செல்ல)* அடியார் தன்னைத் தேடிவர இராமல், தானே அவர்களிருக்குமிடம் செல்லும் திருவடிகளைக் கிட்ட. சேவடி-செல்லும் அடி. இருக்குமிடம் தேடிச்செல்லும் அடிக்குச் செல்லுவதாவது என்? என்னில்: அவ்வடிகளை விலக்காமையே சேவடிக்குச் செல்லுகையாகிறது. சேவடி-சிவந்த அடியென்றுமாம். மலரினும் மெல்லியதாகையாலே, காடுமேடெல்லாமளந்து கன்றிச் சிவந்திருக்கிறபடி. *(ஆழி நெஞ்சே)* கடல்போலே பேரளவுடைய நெஞ்சே! உனக்கு உபதே3ஶிக்க வேண்டாவன்றோ. *(மருவு)* அச்சேவடியானது உன்னைத்தேடிவரும்போது அதை விலக்காமல், அதோடு இடைவிடாமல் அணையப்பார். *(மகிழ்)* வருத்தத்தோடு இதைச்செய்யாமல் மகிழ்வதும் செய்வாயாக. அன்போடு ப4க3வத்3விஷயத்தில் பழகு என்றபடி. *(மகிழ்ந்து மருவு)* என்றும் பாட2ம். உகந்துகந்து அநுப4விப்பாயாக என்றபடி. 48.

**49. மகிழல கொன்றேபோல் மாறும் பல்யாக்கை**
**நெகிழ முயல்கிற்பார்க் கல்லால் — முகிழ்விரிந்த**
**சோதிபோல் தோன்றும் சுடர்பொன் நெடுமுடிஎம்**
**ஆதிகாண் பார்க்கு மரிது.**

**பதவுரை:— மகிழ் அலகு ஒன்றே போல்** — மகிழ மரத்தின் விதை ஒன்றே காணி ஸ்த$_2$ானத்திலும், கோடி ஸ்த$_2$ானத்திலும் வைக்கப்படுவது போல், **மாறும் பல் யாக்கை** — மாறி மாறி வருகிற பல ஶரீரங்களை, **நெகிழ** — நீங்கிப்போகும்படியாக, **முயல்கிற்பார்க்கல்லால்** — முயற்சி செய்கின்றவர்களுக்குத் தவிர, **காண்பார்க்கும்** — காணவேணுமென்னும் விருப்பத்தையுடைய பற்றவர்களுக்கும், **முகிழ் விரிந்த சோதி போல் தோன்றும்** — மலர்ந்த தேஜஸ்ஸைப்போல் காணப்படுவதும், **சுடர் பொன் நெடு முடி** — ஒளிவிடுவதும், அழகியதும், பெரிதுமான கிரீடத்தையுடையவனும், **எம் ஆதி** — எனக்குக் காரணபூ$_4$தனாயிருக்கிறவனுமான ஸர்வேஶ்வரன், **அரிது** — கிடைத்தற்கரியவன்.

அவ:— **நாற்பத்தொன்பதாம் பாட்டு.** (மகிழலகித்யாதி$_3$) **இப்படி இராதார்க்கு அவனைக் கிடையாதென்று பின்னையும் அதினுடைய அருமை சொல்லுகிறது.**

---

**அவதாரிகை:**— எல்லாம் செய்தாலும் ப்ரக்ருதிப்ராக்ருதங்களில் விரக்தி பிறந்து அவனை ஆஶ்ரயிப்பார்க்கல்லது அவனைக் காணமுடியாது என்கிறார்.

---

49. *அவதாரிகை:*— எவ்வளவு ஸாத$_4$னங்களை அநுஷ்டி$_2$த்தாலும், இதர விஷயங்களில் வைராக்$_3$யம் பிறந்து அவனை ஆஶ்ரயிப்பவர்களுக்கல்லது, அவனைக் காணமுடியாது என்கிறார்.

*வ்யா:— (மகிழலகொன்றேபோல் மாறும் பல் யாக்கை)* பலகறை, மகிழம் விதை முதலியவற்றைக்கொண்டு க$_3$ணிதம் பார்க்கிற முறைகள் சிலவுண்டு. அவற்றிலே, க$_3$ணிதத்தில் வல்லவனாயிருப்பவன் ஒரே மகிழம் விதையை ஒருசமயத்தில்



**வ்யா:—** (மகிழலகித்யாதி$_3$) **அலகானது கோடிஸ்த$_2$ாநத்திலும் நின்று காணிஸ்த$_2$ாநத்திலும் நிற்குமா போலே, இவ்வாத்மாவானது தே$_3$வஶரீரத்திலே புகுவது, திர்யக் ஶரீரத்திலே புகுவதாய் மாறிமாறி வருகிற பல யாக்கையை நெகிழ்ந்து போம்படியாகப் பண்ணுவார்க்கல்லால்.** (முகிழித்யாதி$_3$) **விகஸிதமாயிருந்த தேஜஸ்ஸைப் போலே தோன்றுமதாய், ஆதிராஜ்யஸூசகமான திருவபி$_4$ஷேகத்தையுடையனாய், எனக்குக் காரணமாயிருக்கிறவனைக் காணுமவர்களுக்கு அரிது.**

---

**உரை:**— க$_3$ணிதத்தில் நிபுணனாலே வைக்கப்பட்டதொரு மகிழலகு காணிஸ்த$_2$ானத்திலும் கோடிஸ்த$_2$ானத்திலும் மாறி மாறி நிற்குமாபோலே, ப$_4$க$_3$வத்ஸங்கல்பத்தாலே கர்மாநுகு$_3$ணமாக உச்சாவசரூபேண மாறிமாறி வரக்கடவ ப்$_3$ரஹ்மாதி$_3$ பிபீலிகாந்தமாகப் பலவகைப்பட்ட ஶரீரங்கள் தன்னடையே விட்டு நீங்கும்படியாக, ஜ்ஞாந ப$_4$க்தி வைராக்$_3$ய

---

காணிஸ்த$_2$ானம் எனப்படும் மிகத்தாழ்ந்த ஸ்த$_2$ானத்திலும் வைத்துக் கணக்குப் பார்ப்பான். மற்றொரு சமயத்தில் அதையே கோடிஸ்த$_2$ானம் எனப்படும் மிகவுயர்ந்த ஸ்த$_2$ானத்தில் வைத்தும் கணக்குப் பார்ப்பான். [நவீன மேனாட்டு க$_3$ணிதநிபுணர்கள் அல்ஜீப்ரா எனும் கணிதமுறையில் X என்னும் எழுத்துக்கு ஒரு கணக்கில் மிகக்குறைந்த மதிப்பும், மற்றொரு கணக்கில் மிகவுயர்ந்த மதிப்பும் கொடுத்துக் கணக்கிடுவது போன்றது இதுவென்று கொள்க.] இது போலவே ப$_4$க$_3$வானுடைய ஸங்கல்பத்தாலே இந்த ஸம்ஸாரிசேதனனுடைய ஶரீரமும் கர்மாநுகு$_3$ணமாக ஒரு சமயத்தில் மிகச்சிறிய எறும்புருவாயிருக்கிறது. மற்றொரு சமயம் மிகவுயர்ந்த பிரமனாகவும் ஆகிறது. இதனிடையே தே$_3$வர், மநுஷ்யர், திர்யக், ஸ்த$_2$ாவரம் என்று எத்தனையோ ஏற்றத்தாழ்வுகளையும் அடைகிறது. இந்த விசித்ரத்தைக் குறிக்கிறார் 'மகிழலகொன்றேபோல் மாறும் பல் யாக்கை' என்று. *(மகிழலகொன்றே போல் மாறும்)* இத்தொடரை அடியொற்றியே ப$_4$ட்டரும் ஸ்ரீரங்க$_3$ராஜஸ்தவத்

அவ:— ப்ரக்ருதிப்ராக்ருதங்களில் அருசியும், எம்பெருமானைக் காண்கையில் ருசியுமுடையார்க்கு எளிதாகக் காணலாமென்கிறது. a "பொய்ந்நின்ற" இத்யாதி$_3$.

வ்யா:— (மகிழித்யாதி$_9$) கர்மாநுகு$_3$ணமாக ஶரீரங்கள் தோறும் நுழைகை. b "யாதானுமோராக்கை" (முகிழ்விரிந்த சோதி) c "செவ்விப்படிக்கோலம்" (எம்மாதி) ப்ராபகனை. (காண்பார்க்கும்) கேட்பார்க்குமரிது. இப்படி ஆஶ்ரயிப்பார்க்

ஸம்பாத$_3$நமுகே$_2$ந யத்நம்பண்ணுமவர்களுக்கல்லது விகஸித ஸ்வரூபமான தேஜஸ்ஸைப்போலே தோற்றுகிற தேஜஸ்ஸையுடைத்தாய், ஸ்ப்ருஹணீயமாய், ஆதி$_4$ராஜ்யஸூசகமான திருவபி$_4$ஷேகத்தையுடையனாய், எல்லார்க்கும் என்னுடையவனென்று முறைசொல்லிப் பற்றலாம்படி ஸர்வகாரண

தில் "படுநைகவராடிகேவ க்லுப்தா ஸ்த$_2$லயோ: காகணிகா ஸுவர்ண கோட்யோ:" [ர·ஸ்த 2-88] [ஸமர்த்த$_2$னான ஒரு அரசனால் ஒரு பைஸாவின் ஸ்தா$_2$னத்திலும், ஒரு ஸவரன் ஸ்த$_2$ானத்திலும் கல்பிக்கப்பட்ட ஒரு பலகறைபோலே] என்று அருளினார். (*யாக்கை நெகிழ முயல்கிற்பார்க்கல்லால்*) இப்படிப் பட்ட இந்த ஶரீரம் தானேவிட்டு நீங்கும்படியாக ஞானம், ப$_4$க்தி, வைராக்$_3$யம் முதலான நற்குணங்களைப்பெற முயற்சி செய்பவர்களுக்கல்லது. (*முகிழ் விரிந்த சோதிபோல் தோன்றும் சுடர் பொன் நெடுமுடி எம்ஆதி*) மலர்ச்சிபெற்ற மஹாதேஜஸ்ஸைப்போலே தோன்றும் ஒளியையுடையதாய், பொன்போலே விரும்பத்தக்கதாய், "*ஆதி$_4$ராஜ்யமதி$_4$கம் பு$_4$வநாநாம் ஈஶ தே பிஶுநயந் கில மௌளி:*" [வரத$_3$-ஸ்த25] [ஸர்வேஶ்வரனே! உன் கிரீடமே நீ எல்லாவுலகுக்கும் சக்கரவர்த்தியென்பதைக் கோட்சொல்லித்தருகிறது ] என்கிறபடியே தன்னுடைய ஸர்வாதி$_4$பத்யத்தைக் கோட்சொல்லித்தருவதான நீண்டமுடியையுடையவனும், எல்லாச்சேதனர்க்கும் 'என்னுடையவன்' என்று உறவுசொல்லிப் பற்றலாம்படி அனைவர்க்கும் காரணனாயிருப்பவனுமான ஸர்வேஶ்வரன். (*ஆதிகாண்பார்க்கும் அரிது*) ஸர்வேஶ்வரனை இவன், தகுந்த யோக்$_3$யதையைப் பெறுமல்

a திருவிருத்தம்-1. b ௸ 95. c இர-திருவ 82.



கல்லது ப்ரக்ருதியை உகப்பார்க்கு முகங்கொடுக்கும் இதர புருஷனல்லன். 49.

50. அரியபுல னைந்தடக்கி யாய்மலர்கொண்டு ஆர்வம்
புரிய பரிசினால் புல்கில் – பெரியனாய்
மாற்றாது வீற்றிருந்த மாவலிபால் வண்கைநீர்
ஏற்றானைக் காண்ப தெளிது.

பதவுரை:— **அரிய** — அடக்க முடியாததான, **புலன் ஐந்து**—ஐந்து இந்திரியங்களையும், **அடக்கி**—வஶப்படுத்தி, **ஆய் மலர் கொண்டு**—ஆராய்ந்து எடுத்த புஷ்பங்களைக் கையில்கொண்டு, **ஆர்வம் புரிய பரிசினால்**—அன்பு மிக்க வழியாலே, **புல்கில்**—தொழுதால், **பெரியனாய்**—(செல்வத்திலும், கொடையிலும்) பெருத்தவனாய், **மாற்றாது வீற்றிருந்த**—(கொடுப்பதில்) மாறுபடாமலிருந்த, **மாவலிபால்**—மஹாப$_3$லியிடம், **வண்கை**—உதா$_2$ரமான திருக்கையிலே, **நீர் ஏற்றானை**—தா$_2$னஜலத்தை வாங்கின எம்பிரானை, **காண்பது**—ஸேவிப்பது, **எளிது**—ஸுலப$_4$மாயிருக்கும்.

பூ$_4$தனான ஸர்வேஶ்வரன், கேவலம் காணவேணுமென்றிருப்பார்க்கும் அரியனாயிருக்கும். 49.

தன்னைக் காணவேணும் என்னும் நினைவைமாத்திரம் உடையவர்க்கு அரியனாகவேயிருப்பன். 'காண்பார்க்கும்' என்ற உம்மையாலே கேட்பார்க்குமரிது என்று உணர்த்தப்படுகிறது. ப்ராக்ருதவிஷயங்களை விரும்பிக்கொண்டே அவனைக் காணவேணும், கேட்கவேணும் என்னும் விருப்பத்தை மாத்திரமுடையவர்களுக்கு முகங்காட்டமாட்டானிவன் என்று கருத்து. 'ஆதி காண்பு ஆர்க்கும் அரிது' என்று பிரித்தும் பொருள் கொள்ளலாம் 49.

50. *அவதாரிகை:* — மற்ற விஷயங்களில் பற்றற்று அன்போடுகூட அவனை அடைபவர்களுக்கு அவனைக்காண்பது மிக எளிது என்கிறார்.

அவ:— ஐம்பதாம் பாட்டு. இந்த்3ரியங்களை விஷயங்களில் போகாமல் காத்து அவன் பக்கலிலே ஸ்நேஹிக்கில் காண எளிது என்கிறார்.

வ்யா:— (அரியவித்யாதி3) ஒரு செய்யிலே பாயும் நீர் இரண்டு செய்யிலே பாய்ந்தால் இரண்டு செய்க்கும் போராதொழியுமிறே. ஸர்வேஶ்வரனை இச்சி2க்கக் கடவவான இந்த்3ரியங்களை விஷயங்களிற் போகாதபடி அடக்கி. "அரிய" என்றது,—13. "तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम्" (தஸ்யாஹம் நிக்3ரஹம் மந்யே வாயோரிவ ஸுது3ஷ்கரம்);

---

அவதாரிகை:— இதர விஷயஸங்க3மற்று ஸ்நேஹபுரஸ்ஸரமாக ஆஶ்ரயிக்குமவர்களுக்கு அவனைக்காணச் சால எளிது என்கிறார்.

உரை:— நியமிக்கவரிதான ஶ்ரோத்ராதி3ஜ்ஞானேந்த்3ரியங்களைந்தையும் இதர விஷயங்களில் போகாதபடி நியமித்து, அங்குத்தைக்கு யோக்3யமாம்படி மயிர்புழுவறச்சோதித்த செவ்விப்பூக்களை ஸம்பாதி3த்துக்கொண்டு ஸ்நேஹோத்தரமான ப்ரகாரத்தாலே, அபி4மதவிஷயத்தை அணைக்குமா

---

வ்யா:— *(அரிய புலன் ஐந்து அடக்கி)*

**சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி2 ப3லவத்3 த்3ருட4ம் ।**
**தஸ்யாऽஹம் நிக்3ரஹம் மந்யே வாயோரிவ ஸுது3ஷ்கரம் ॥**
[கீ3தை 6-34]

[கிருஷ்ணா! மனம் நிலையற்றதாகவும், நிலைகலங்கச் செய்வதாயும், ப3லமுள்ளதாகவும், (கீழான விஷயங்களில்) நிலையானதாகவுமிருக்கிறதன்றோ. வாயுவைப்போல், அதை அடக்குவதையும் மிகவும் செய்தற்கரியதாகவே நான் நினைக்கிறேன்.] என்கிறபடியே அடக்க அரிதான மெய்வாய் கண்மூக்குச்செவி என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தையும், ஶப்3த3ஸ்பர்ஶரூபரஸக3ந்த4ங்களாகிற இதர விஷயங்களில் போகாதபடி அடக்கி. இப்படி அடக்கவேண்டிய அவசியம் என்ன? எனில்: "ஒரு செய்யிலே (வயலிலே) பாயும் நீர் இரண்டு செய்யிலே பாய்ந்



**ப்ரதிகூலமான வாயுவை நியமிக்க அரிதானாற்போலே மநஸ்ஸை நியமிக்க அரிது என்று அர்ஜுநன் சொன்னபடியே இருக்கை.** (ஆய்மலர்கொண்டு) **செவ்விப்பூக்களைக் கொண்டு.** (ஆர்வம் புரிய பரிசினால்) **ஸ்நேஹம் மிக்க ப்ரகாரத்தாலே.** (புல்கில்) **அணையில்.** (பெரியனாயித்யாதி3) **உதா3ரமான கையைக்கொண்டு நீரேற்றவனைக் காண்கை எளிது.**

---

போலே பே4ாக3ரூபமாக ஆஶ்ரயிக்கில், ஈஶ்வரனிலுங்காட்டில் தன்னைப்பெருக்க நினைத்திருக்குமவனாய், அர்த்தி2களுக்குக் கொடுக்கும் கொடையில் ஒன்றும் மாறாமல், 'ஸர்வஸ்வதா3நம் பண்ணக்கடவன்' என்று தன் வேறுபாடு தோற்ற வீற்றிருந்த மஹாப3லிபக்கலிலே கொடுக்கக்கொடுக்கப் பூரிக்

---

தால் இரண்டு செய்க்கும் போராதொழியுமிறே. (ஆகையாலே) ஸர்வேஶ்வரனை இச்சி2க்கக்கடவவான இந்த்3ரியங்களை விஷயங்களிற்போகாதபடி அடக்கி" என்பர் பெரியவாச்சான்பிள்ளை. *(ஆய்மலர்கொண்டு)* ப4க3வத்3விஷயத்துக்குத் தகுந்ததாயிருக்கும்படி மயிர், புழு முதலான அஶுத்3த4ங்களில்லாதபடி ஆய்ந்து எடுத்த மலர்ந்த பூக்களைத் தேடியெடுத்துக்கொண்டு. *(ஆர்வம் புரிய பரிசினால்)* அன்புமிக்க வழியாலே. *(புல்கில்)* காதலன் காதலியை அணைப்பதுபோலே ஸர்வேஶ்வரனைப் பெருங்காதலோடு அணைத்தால். *(பெரியனாய் மாற்றாது வீற்றிருந்த மாவலி)* *"ஈஶ்வரோऽஹம்"* [கீ3தை 16-15] என்கிறபடியே ஸர்வேஶ்வரனைக் காட்டிலும் தன்னைப் பெரியவனாக நினைத்திருப்பவனாய், கேட்பார் கேட்டதையெல்லாம் கொடுக்கும் கொடைக்குணத்தில் சிறிதும் மாறாமல், 'எல்லாவற்றையும் கொடுப்பேன்' என்று பறைசாற்றிக்கொண்டு தன் பெருமை தோற்ற வீற்றிருந்த மஹாப3லி. *(பெரியனாய்)* செல்வத்திலும் வண்மையிலும் பெரியவனாய் என்றுமாம். *(மாவலிபால் வண்கைநீர் ஏற்றானைக் காண்பது எளிது)* அந்த மஹாப3லியின் பக்கலிலே, "அலம்புரிந்த நெடுந்தடக்கை" [திருநெடு-6] என்கிறபடியே யாசிப்பார் 'போதும் போதும்' என்று கூறும்படியாகக் கொடுத்துக் கொடுத்துப் பூரித்துவளரும் திருக்

(புல்கில்) புல்கப்பெறில். (பெரியனாய்) ஐஶ்வர்யமும் ஔத$_3$ார்யமும், (வண்கை) கொடுத்து வளர்ந்த கை. (நீரேற்றானைக் காண்பதெளிது) அப்ரதிஷேத$_4$முடையார்க்கு அர்த்தி$_2$யாய் வரும் என்றவாறு. 50.

51. எளிதி லிரண்டடியுங் காண்பதற்கு என்னுள்ளம்
தெளியத் தெளிந்தொழியும் செவ்வே — களியில்
பொருந்தா தவனைப் பொரலுற்று அரியா
யிருந்தான் திருநாம மெண்.

**பதவுரை:—** **என் உள்ளம்**—என்னுடைய நெஞ்சமே! **எளிதில்**-ஸௌலப$_4$மாக, **இரண்டு அடியும்**-இரண்டு திருவடிகளையும்' **காண்பதற்கு**—ஸேவிப்பதற்குத் தகுந்தபடி, **தெளிய**—(நீ) தெளிவு பெற்றால், **செவ்வே தெளிந்தொழியும்** -(அவனும்) நன்றாக உகந்து விடுவான்; **களியில்**—க$_3$ர்வத்தினால், **பொருந்தாதவனை**-தன்னைச் சேராதவனுடன், **பொரல் உற்று**—போர் செய்கைக்கு ஒருப்பட்டு. **அரியாய்**—நரஸிம்ஹமாய், **இருந்தான்**-அவதரித்தவனுடைய, **திருநாமம்**-அழகிய பெயர்களை, **எண்**—எண்ணுவாயாக.

---

கிற அழகிய திருக்கையிலே தான் அர்த்தி$_2$யாய்ச் சென்று நீரையேற்று மண்கொண்டவனைக் கண்டு அநுப$_4$விக்கை சால எளிதாயிருக்கும். 50.

---

கையாலே தா$_3$னநீர் ஏற்று மண்கொண்டவனைக்கண்டு அநுப$_4$விப்பது எளிது. *(புல்கில் எளிது)* அபேக்ஷாநிரபேக்ஷமாகத் திருவுலகளந்தாற்போலே ஆஶாலேஶமுடையாரையும் அணையவருவான் அவன். அப்போது அவனை விலக்காமல் அன்போடு அணைப்பவர்களுக்கு மிக எளியனாயிருப்பானவன். *(மாவலிபால்......எளிது)* எத்தனையோ தோ$_3$ஷங்களிருந்தும் விலக்காமையையே பற்றாசாகக்கொண்டு மஹாப$_3$லியிடம் யாசகனாய் வந்தான். அப்படிப்பட்டவன் அரிய புலன் ஐந்தடக்கி ஆய்மலர்கொண்டு ஆர்வம் புரிய பரிசினால் புல்கில் எளியவனாவான் என்பது சொல்லவும்வேணுமோ? 50.



அவ:— ஐம்பத்தோராம் பாட்டு. (எளிதில்) தம்முடைய திருவுள்ளத்தை ஸம்போ$_3$தி$_4$த்து, 'நீ விஷயகாலுஷ்யத்தைத் தவிர்; அவன் ப்ரஸந்நனாம்' என்கிறார்.

வ்யா:— (எளிதிலித்யாதி$_3$) எளிதின்றிக்கே இருந்துள்ள இரண்டு திருவடிகளும் காண்பதற்கு. எளிதாக என்னவு

---

அவதாரிகை:— இனிதாகத் திருநாமத்தை வாயாலே சொல்லவே ப்ரஹ்லாத$_3$னுக்கு விரோதி$_4$யைப்போக்கித் தன்னைக் கொடுத்தாற்போலே நமக்கு விரோதி$_4$யைப்போக்கித் தன்னை நமக்குத் தந்தருளும் என்கிறார்.

உரை:— எனக்கு விதே$_4$யமான நெஞ்சே! காணவேணும் என்னும் அபி$_4$ஸந்தி$_4$யுடையார்க்கு அதிஸௌலப$_4$மான திருவடிகளிரண்டையும் கண்டு அநுப$_4$விக்கைக்கு

---

51. *அவதாரிகை:—* இனிய பாலைக்குடிக்கவே பித்தம் தீருமாபோலே, இனிதாகத் திருநாமத்தை வாயாலே சொல்லவே, ப்ரஹ்லாத$_3$னுக்கு விரோதி$_4$யைப்போக்கித் தன்னைக் கொடுத்தாற்போலே நம் விரோதி$_4$களைப்போக்கித் தன்னை நமக்குக் கொடுத்தருளுவான் என்று தம் திருவுள்ளத்தை நோக்கி அருளிச்செய்கிறார்.

*வ்யா:—(என் உள்ளம்)* உள்ளம்! என்றது விளி. எனக்கு வசப்பட்டிருக்கும் நெஞ்சமே! என்றபடி. *(எளிதில் இரண்டடியும் காண்பதற்கு)* காணவேணும் என்னும் உறுதியுள்ளவர்களாய், சென்ற பாசுரத்திற்படியே அரிய புலனைந்தடக்கி ஆய்மலர்கொண்டு ஆர்வம் புரிய பரிசினால் புல்குமவர்களுக்கு எளிதாயிருக்கும் இரண்டு திருவடிகளையும் காணத்தக்கபடி. எளிதில்—எளிதாயிருக்கும். அன்றிக்கே, எளிதில் காண்பதற்கு— எளிதாகக் காண்பதற்கு என்றுமாம். அப்படியுமன்றியே எளிது இல்-நாற்பத்தொன்பதாம் பாசுரத்தில் சொல்லியபடியே காணவேணும் என்னும் ஆசையை மாத்திரம் உடைய விஷயப்ரவணர்க்கு ஸௌலப$_4$மல்லாத திருவடிகள் என்றுமாம்.

மாம். (என்னுள்ளம்) **என் நெஞ்சே! என்றபடி.** (தெளிய) **விஷயகாலுஷ்யத்தைத் தவிர.** (செவ்வே தெளிந்தொழியும்) **அவன் நேரே ப்ரஸந்நனும்.** (களியித்யாதி3) **செருக்காலே பொருந்தேன் என்றிருந்த ஹிரண்யனை.** (பொரலுற்று

---

நீ அழகிதாக விஷயகாலுஷ்யமற்று நிர்மலமாக, அவன் மேலெழவன்றிக்கே திருவுள்ளத்தோடே செவ்விதாக நான் முன்பு பண்ணின ப்ராதிகூல்யபரம்பரைகளிலே அதிப்ரஸந்நனாய்விடும். **“ந நமேயம்” (ந நமேயம்)** என்று தன்னைக் கிட்டோம் என்றிருந்த ஹிரண்யனைப் பொருது முடிக்கையிலே ஒருப்பட்டு அவன் வரத்துக்குள்ளடங்காத நரஸிம்ஹவேஷத்தையுடையனாய்க்கொண்டு ப்ரஹ்லாத3 விரோதி4யைக் கைதொட்டழித்த ஆஹ்லாத3த்தாலே

---

*(காண்பதற்குத் தெளிய)* அத்திருவடிகளைக்கண்டு அனுப4விக்கலாம்படி நீ தெளிவு பெற்றாயாகில், விஷயங்களிலே ஈடுபட்டுக் கலங்கிநிற்கும் நீ அவற்றிலே பற்றைவிட்டு அழகாகத் தெளிவு பெற்றாயாகில். *(செவ்வே தெளிந்தொழியும்)* அவனும் மேலெழுந்தவாரியாகவல்லாமல் மனப்பூர்வமாக நன்கு தெளிந்துவிடுவான். அதாவது:—நான் முன்செய்த து3ஷ்கர்ம ஸமூஹங்களாலே கலங்கியிருந்தவன் என் மனமாகிற நீ தெளிந்தவுடன் தானும் மனப்பூர்வமாக மிகத்தெளிந்து விடுவான். இவ்விஷயத்தில் ப்ரமாணமென்னவெனில்: சிறுவனான பிரஹ்லாத3ன் தெளிந்துநிற்க, அவன் விஷயத்தில் தெளிந்துநின்று காரியம் செய்தபடி கண்டிலையோ? என்கிறார் மேலே *(களியில் பொருந்ாதவனை)* வரப3லம், அத்தால் வந்த தே3ஹப3லம் முதலானவற்றாலே க3ர்வங்கொண்டு “எவருக்கும் வணங்கமாட்டேன்” என்று ராவணனைப்போலே கூறிக்கொண்டு தன்னிடம் பொருந்தாமலிருந்த இரணியனை. *(பொரலுற்று)* சண்டைசெய்து அழிக்கமுற்பட்டு. *(அரியாய்)* அவன் வரத்துக்குள் அடங்காத நரசிங்கவேஷத்தையுடையவனாய். *(இருந்தான்)* அடியானான பிரஹ்லாத3னின் விரோதி4யைப்போக்கிய உகப்பாலே நிலையாக இருந்தான். “சீற்றத்துக்கு இறை போராமல் சோம்பியிருந்தான்” என்பர் பெரியவாச்சான்பிள்ளை.



அரியாயிருந்தான் திருநாமமெண்) **சிறுபிள்ளைக்காக உதவி ஹிரண்யனை முடித்தவனுடைய திருநாமத்தை எண்ணு.**

(என்னுள்ளம்) **உள்ளமே! நீ தெளியில் அவன் செவ்வே நம் திறத்துத் தெளிந்தொழியும். ப்ரமாணமென்? ப்ரஹ்லாத3ன் தெளிய அவன் விஷயத்துத் தெளிந்து நின்று கார்யம் பார்த்தபடி கண்டிலையோ?** (பொரலுற்று) **பொருது.** (இருந்தான்) **சீற்றத்துக்கு இறை போராமல் சோம்பியிருந்தான்.** (திருநாமம்) **வாக்காலே.** (எண்) **எண்ணவொட்டாதவன் பட்டபாடு அறிவுதியிறே.** **51.**

**52. எண்மர் பதினொருவ ரீரறுவ ரோரிருவர்**
**வண்ண மலரேந்தி வைகலும்—நண்ணி**
**ஒருமாலை யால்பரவி யோவாது எப்போதும்**
**திருமாலைக் கைதொழுவர் சென்று.**

---

ஸுப்ரதிஷ்டி2தனாயிருந்த ஸர்வேஶ்வரனுடைய ஆஶ்ரித வாத்ஸல்யாதி3கு3ணங்களுக்கு வாசகமான திருநாமங்களை ரஸ்யதையாலே நெஞ்சிலே ஊற்றிருக்கும்படி அநுஸந்தி4. பின்னை நம் கையிலும் பிறர்கையிலும் விட்டுக்கொடான் என்று கருத்து.

எளிதில்—எளிதல்லாத—ஸுலப4மல்லாத இரண்டு திருவடிகள் என்னுதல். என்னுள்ளம்—என் உள்ளமே! என்று ஸம்பு3த்3தி4. 51.

---

*(திருநாமமெண்)* அந்த ஸர்வேஶ்வரனுடைய ஆஶ்ரிதவாத்ஸல்யம், ஸௌசீல்யம் முதலான கு3ணங்களைச் சொல்லும் திருநாமங்களை இனிமையாலே நெஞ்சிலே ஊன்றியிருக்கும்படி எண்ணுவாயாக. அப்படி எண்ணினால் நம்மை நாமே ரக்ஷித்துக்கொள்ளும்படியாகவும், பிறர் ரக்ஷிக்கும்படியாகவும் கைவிட்டுவிடமாட்டான். பிரஹ்லாத3னைத் தானே ரக்ஷித்ததுபோலே வந்து ரக்ஷிப்பான் என்கிறார். *(திருநாமம் எண்)* திருநாமங்களை வாயைக்கொண்டு எண்ணி ஸங்கீர்த்தனம் செய் என்றமாம். இதைச் செய்யவொட்டாத இரணியன் பட்டபாடு அறிவாயன்றோ என்றபடி. 51.

**பதவுரை:— எண்மர்**—அஷ்டவஸுக்களும், **பதினொருவர்**—ஏகாத3ஶருத்3ரர்களும், **ஈராறுவர்**—த்3வாத3ஶாதி3த்யர்களும், **ஓர் இருவர்**—இரட்டையரான அஶ்விநீதே3வர்களும், **வண்ணம் மலர் ஏந்தி**—பல நிறங்களையுடைய பூக்களை ஏந்திக்கொண்டு, **வைகலும் நண்ணி** — தினந்தோறும் அணுகி, **ஒரு மாலையால்**—ஒப்பற்ற புருஷஸூக்தமாகிற சொல்மாலையாலே, **ஓவாது எப்போதும்**—இடைவெளியின்றியிலே எல்லாக்காலமும், **பரவி**—துதித்து, **திருமாலை**—லக்ஷ்மீநாத2னை, **சென்று கைதொழுவர்** — அணுகி வணங்குவார்கள்.

**அவ:— ஐம்பத்திரண்டாம் பாட்டு.** (எண்மரித்யாதி3) **கீழ் தம்முடைய திருவுள்ளத்தைக் குறித்து. ஸ்ரீப்ரஹ்லாத3ாழ்வானுக்கு உதவினவனுடைய திருநாமத்தை எண்ணு; அவன் ப்ரஸந்நனும் என்றது. மற்றும் து3ர்மாநிகளான தே3வாதி3களும் அவனை ஆஶ்ரயிக்கத்தக்க கரணங்களும் அதி4காரம் பெற்றது என்கிறார்.**

---

**அவதாரிகை:**— நமக்கு அவன் பேர் சொல்லாவிடில் ஜீவிக்க அரிதோ ? என்ன, து3ர்மானிகளான அதி4காரி புருஷர்களடங்கலும் அவனை ஆஶ்ரயித்தன்றோ தங்கள் அதி4காரங்களைப் பூண்கட்டிக்கொள்ளுகிறது. நமக்குப் பின்னைச் சொல்லவேணுமோ ? என்கிறார்.

---

52. ***அவதாரிகை:***— "திருநாமம் எண்" என்று திருவுள்ளத்தை நோக்கி அருளிச்செய்தார் கீழ்ப்பாசுரத்தில். 'நமக்கு அவன்பேர் சொல்லாவிடில் உயிர்வாழமுடியாதோ ?' என்று திருவுள்ளம்கேட்க, 'து3ரஹங்காரமுடைய அதி4காரிபுருஷர்களான தே3வர்களும் அவனைத் தொழுதே தங்களுடைய அதி4காரங்களை உறுதிசெய்துகொள்ளும்போது, நாம் அவனுடைய திருநாமத்தாலேயே உயிர்வாழவேணும் என்பதைச் சொல்ல வேணுமோ ?' என்கிறார்.

*வ்யா:*— (*எண்மர்*) அஷ்டவஸுக்களும். (*பதினொருவர்*) பதினொரு உருத்திரர்களும். (*ஈராறுவர்*) பன்னிரு ஆதி3த்யர்



**வ்யா:**— (எண்மரித்யாதி3) **அஷ்டவஸுக்கள், ஏகாத3ஶருத்3ரர்கள். த்3வாத3ஶாதி3த்யர்கள். அஶ்விநிகள்.** (வண்ணமலரேந்தி) **நாநாவர்ணமான புஷ்பங்களைக் கொண்டு.** (வைகலும் நண்ணி ஒரு மாலையால்) **புருஷஸூக்தத்தாலே.** (ஓவாதெப்போதும்) **விச்சே2த3மின்றிக்கே.** (திருமாலித்யாதி3) **ஸ்ரியபதியைச்சென்று ஆஶ்ரயிப்பர்கள்.**

---

**உரை:**— அஷ்டவஸுக்களும், ஏகாத3ஶருத்3ரர்களும், த்3வாத3ஶாதி3த்யர்களும், அத்3விதீயரான அஶ்விநிகளிருவரும், நாநாவர்ணமான புஷ்பங்களை த4ரித்துக்கொண்டு ஸர்வகாலங்களிலும் வந்துகிட்டி, அத்3விதீயமான ஸ்ரீபுருஷஸூக்தாதி3 ஸந்த3ர்ப்ப4ங்களைக்கொண்டு அடைவுகெடப்

---

களும். (*ஓர் இருவர்*) அழகிலே ஒப்பற்றவர்களான அஶ்விநீதே3வதைகள் இருவரும். இப்படி முப்பத்துமூன்று தே3வதைகளைச் சொன்னது முப்பத்துமுக்கோடி தே3வதைகளுக்கும் உபலக்ஷணம். ருக்3வேத3ம் பத்தாம் மண்ட3லம் 125-வது ஸூக்தம் முதல்மந்திரத்திலே "*ருத்3ரேபி4: வஸுபி4: ஆதி3த்யை: அஶ்விநோப4ா:*" என்று இம்முப்பத்துமூன்று தே3வர்தலைவர்களும் எடுக்கப்பட்டது இங்கு அறியத்தக்கது. (*வண்ணமலரேந்தி*) நாநாவர்ணங்களையும் காட்டும் திருமேனிக்குப் பொருத்தமாகப் பல வர்ணங்களையுடைய மலர்களை ஏந்தி. (*வைகலும் நண்ணி*) ஒருநாள் இரண்டுநாளல்ல ; தினந்தோறும் ஸர்வேஶ்வரனைச் சென்று அடைகிறார்கள். அடைந்து செய்வதென்? என்னில்: (*ஒருமாலையால் பரவி*) ஒப்பற்றதான புருஷஸூக்தத்தாலே துதித்து. "*வேதே3ஷு பௌருஷம் ஸூக்தம்*" [வேத3ங்களுள் சிறந்தது *புருஷஸூக்தம்*] என்று சொல்லப்படுகிறதன்றோ. (*பரவி*) அன்பின் மிகுதியாலே முறைதவறித் துதித்து. (*ஓவாது எப்போதும்*) துதித்து முடித்தார்கள் என்பதில்லாமல் எல்லாக்காலத்திலும் இடைவிடாமல் துதித்துக் கொண்டேயிருக்கிறார்கள். (*திருமாலைக் கைதொழுவர்*) லக்ஷ்மீநாத2னைக் கைகளால் தொழுவார்கள். தாங்கள் விரும்பும் த4ர்மார்த்த2காமமோக்ஷங்களாகிற பயன்களை ஸாதி4த்துக் கொள்வதற்குப் புருஷகாரபூ4தையான பெரியபிராட்டியாரோடே

52. "तदुपर्यपि बादरायणस्सम्भवात्" (தது3பர்யபி பா3த3ராயணஸ் ஸம்ப4வாத்) தே3வர்களுக்கும் ப4விஷ்யத்தில் பெறவிருந்துள்ள அதி4காரார்த்த2மாக ஆதி3த்யாந்தர்யாமியாயிருந்துள்ள பரமாத்மோபாஸநம் விதி4யாநின்றதே.

(எப்போதும்) வ்யாபார யோக்3யரான ப்ரயோஜநாந்தரபரர் ஒரு மாலையால் பரவி ஓவுகையன்றிக்கே. எல்லாக் காலமும்; எப்போதும் என்றுமாம். (திருமால்) வேண்டுவதெல்லாம் பெறுகைக்கடி. 52.

53. சென்றால் குடையா மிருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள் — என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கு
மணையாம் திருமாற் கரவு.

---

புகழ்ந்து, எல்லாக்காலத்திலும் உச்சிவீடுவிடாதே அபி4மதங்களை கூ4டிப்பிக்கும் கூ4டகையான பெரியபிராட்டியாரோடே கூடியிருக்கிற ஸர்வேச்வரனை து3ர்மானத்தைத் துறந்து சென்று கிட்டி ஆச்ரயிப்பர்கள். 52.

---

கூடியிருக்கிற ஸர்வேச்வரனை ஆச்ரயிப்பார்கள். (*ஒரு மாலையால் பரவி - திருமாலைக் கைதொழுவர்*) "*ஹ்ரீச்சதே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ*" என்னும் புருஷஸூக்தமந்திரத்தைச் சொல்லி லக்ஷ்மீநாத2னைச் சரண்புகுவர். "*தது3பர்யபி பா3த3ராயண: ஸம்ப4வாத்*" [ப்3ரஹ்மஸூத்ரம் 1-3-25] ['ப்3ரஹ்மோபாஸனம், (மநுஷ்யர்களைக்காட்டிலும்) மேலான தே3வர்களுக்கும் (கூடும்)' என்று பா3த3ராயணர் (நினைக்கிறார்); (அவர்களுக்கும் மோக்ஷத்தில் விருப்பமுடைத்தாயிருக்கையாகிற அர்த்தி2த்வமும், மோக்ஷஸாத4னத்தை அநுஷ்டி2க்கத்தக்க ஸாமர்த்2யமும்) இருக்கக் கூடுமாகையால்.] என்கிறபடியே மோக்ஷத்திற்காகவும் தே3வர்கள் பரமாத்மாவை உபாஸிக்கக்கூடும் என்று ப்3ரஹ்மஸூத்ரத்தில் நிர்ணயிக்கப்பட்டது. (சென்று) "ஈச்வரோऽஹம்" என்றிருக்கும் தங்களுடைய து3ரபி4மானத்தை விட்டு, அவனிருக்குமிடம் சென்று அவனை ஆச்ரயிப்பார்கள். 52.



பதவுரை:— **திருமாற்கு**—பிராட்டியுடன் கூடியிருக்கும் எம்பெருமானுக்கு, **அரவு**—திருவநந்தாழ்வான், **சென்றால் குடை ஆம்**—(எம்பெருமான்) உலாவப்புக்கால் குடையாயிருப்பன்; **இருந்தால் சிங்காசனமாம்**—எழுந்தருளியிருந்தால் ஸிம்ஹாஸனமாயிருப்பன்; **நின்றால்**—நின்றுகொண்டிருந்தால், **மரவடியாம்**—திருப்பாது3கையாயிருப்பன்; **நீள் கடலுள்**—பரந்த கடலிலே, **என்றும்**—கண்வளர்ந்தருளும்போதெல்லாம், **புணையாம்**—தெப்பமாயிருப்பன்; **மணி விளக்காம்**—மங்க3ளதீ3பமாயிருப்பன்; **பூம் பட்டாம்**—அழகிய திருப்பரியட்டமாயிருப்பன்; **புல்கும் அணையாம்**—தழுவிக்கொள்ளும் தலையணையாயிருப்பன்.

**அவ:— ஐம்பத்துமூன்றாம் பாட்டு.** (சென்றால்) **கீழே எல்லா நேர்த்தியும் நேர்ந்து தங்களுக்குறுப்பாக ஆச்ரயிக்குமவர்களைச் சொல்லிற்று; இதில் தங்களை எல்லாமழிய அங்குத்தைக்குறுப்பாமவர்களைச் சொல்லுகிறது.**

---

**அவதாரிகை:—** ஸ்வப்ரயோஜநத்துக்கு மடியேற்கும் து3ர்மானிகள் ஆச்ரயிக்கும்படியை அநுஸந்தி4த்த உள்வெதுப்பு அடங்கும்படி அநந்யப்ரயோஜனராய், அபி4மாநக3ந்த4ரஹிதராய், தத்தத3வஸ்தோ2சிதமான வடிவெடுத்துக்கொண்டு அடிமைசெய்யக்கடவ நித்யஸூரிகளுக்குத் தலைவனான திருவநந்தாழ்வான் அங்குத்தைக்கு அடிமை செய்யும்படியை அநுப4விக்கிறார்.

---

53. *அவதாரிகை:—* சுயநலத்தை விரும்பி யாசிக்கும் து3ரபி4மானிகளான தே3வர்கள் அவனையடையும்படியைச் சென்ற பாசுரத்தில் பேசியதாலே உண்டான மனவருத்தம் நீங்கும்படியாக, ஒரு பயனையும் கருதாதவராய், து3ரபி4மானத்தின் நாற்றமும் அற்றவர்களாய், பரமபுருஷனுடைய அந்தந்த நிலைகளுக்குரிய வடிவையெடுத்துக்கொண்டு அடிமைசெய்பவரான நித்யஸூரிகளுக்குத் தலைவனான திருவனந்தாழ்வான் பரமபுருஷனுக்கு அடிமைசெய்யும்படியை அநுப4விக்கிறார்.

வ்யா:— (சென்ருல் குடையாம்) கைங்கர்யம் ஸ்வபு$_3$த்$_3$த்$_4$யதீ$_4$நமன்று என்கிறது. "நான் குடையாய் நின்றேன்; நீ இங்கே வா" என்கையன்றிக்கே, அவன் உலாவப்புக்கால் குடை அபேக்ஷிதமானபோது குடையாகை. (இருந்தால் சிங்காசனமாம்) இருக்கை திருவுள்ளமானபோது தி$_3$வ்ய ஸிம்ஹாஸநமாம். நிற்கை திருவுள்ளமானபோது மரவடியாம். கண்வளர அபேக்ஷிதமானபோது கடலிலே எல்லாக்

---

உரை:— பெரியபிராட்டியாரோடே நித்யஸம்யுக்தனுயிருக்கிற ஸர்வேஶ்வரனுக்கு, அவனும் அவளுங்கூடக் கண்ணற்றுத் துகைத்துப் பரிமாறுகைக்கு யோக்$_3$யமான வடிவையுடைய திருவநந்தாழ்வான், உகப்புக்குப் போக்கு வீடாக அவன் உலாவியருளப்புக்கால் மழை வெய்யில்

---

*வ்யா:— (திருமாற்கு)* பெரியபிராட்டியாருடன் எப்போதும் சேர்ந்தேயிருக்கும் ஸர்வேஶ்வரனுக்கு. "*தயா ஸஹாஸீநமநந்த பே$_4$ாகி$_3$நி*" [ஸ்தோ-ர 39] [திருவனந்தாழ்வான்மேலே, பெரியபிராட்டியாரோடே எழுந்தருளியிருப்பவனை] என்ருர் ஆளவந்தார். *(அரவு)* திருவனந்தாழ்வான். பரமபுருஷன் பிராட்டியோடு தனியேயிருக்கும்போதும் ஒரு சேதனன் என்று கூச வேண்டாமல், அவனும் அவளுங்கூட இஷ்டப்படித் துகைத்து விளையாடலாம்படியான பஞ்சணை போலேயிருக்கிறபடி. ராஜாக்களின் அந்த:புரங்களிலே கூனர், குறளர், அலிகள் முதலானேர் வேலைக்காரர்களாயிருப்பதுபோலே இவனும் இருக்கிறபடி. *(அரவு)* கட்டிப்பொன் பலவிதமான ஆப$_4$ரணங்களாக்கவல்லதாயிருப்பதுபோலே இவ்வடிவமும், குடை, சிங்காசனம், மரவடி, புணை, மணிவிளக்கு, பூம்பட்டு, அணை முதலான பல கைங்கர்யோபகரணங்களாக ஆக்கிக்கொள்ளலாம்படியிருக்கிறது. *(சென்ருல் குடையாம்)* தன் உகட்புக்குப் போக்குவீடாக ஸர்வேஶ்வரன் உலாவியருளப்புக்கால் மழை வெய்யில்படாதபடி குடையாகஆவான் திருவனந்தாழ்வான். கிருஷ்ணுவதாரத்திலே குழந்தையாகிற கண்ணனை வஸுதே$_3$வர் தூக்கிச் சென்றபோது இவன் குடையாகப் பின்தொடர்ந்ததைக் கண்டோமன்றே. '*வர்ஷாதபவாரணுதி$_3$பி$_4$:*' [ஸ்தோ-ர 40] [மழையிலிருந்தும், வெய்யிலிலிருந்தும் காக்கும் குடை முதலான *ஶரீ*ரங்களாலே] என்ருர் ஆளவந்தார்.



காலத்திலும் படுக்கையாம். (மணி விளக்காம்) ஒரு விளக்காலே ஒரு பத$_3$ார்த்த$_2$த்தைக் காணவேணும் என்றபோது மங்க$_3$ளதீ$_3$பமாயிருக்கும். (பூம்பட்டாம்) திருப்பரியட்டம் அபேக்ஷிதமானபோது அழகிய பட்டாம். (புல்குமணையாம்) தழுவணை அபேக்ஷிதமானபோது தழுவணையாம். (திருமாற்கு) *ஶ்ரி*ய:பதிக்கு. (அரவு) கட்டிப்பொன்போலே எல்லா வடிவையும் ஆக்கிக்கொள்ளலாம்படி இருக்கிறபடி.

(சென்ருல்) "குடையானேன்; செல்" என்று *ஶே*ஷியை நியமியாதே. (இருந்தால்) அபேக்ஷை உள்ளபோது. (நின்ருல்) நின்றபின்பு. (புணை) தெப்பம். (மணிவிளக்கு)

---

படாதபடி குடையாம். தன் இச்சை$_2$யாலே எழுந்தருளியிருந்தால் தி$_2$வ்ய ஸிம்ஹாஸனமாம். ஸ்வேச்சை$_2$யாலே எழுந்தருளிநின்ருல் திருவடி நிலைகளாம். பரப்பையுடைத்தான கடலிலே கண்வளர்ந்தருளும்போதைக்கு ஸர்வகாலத்திலும் திருப்பள்ளி மெத்தையாம். ஏதேனுமொன்றை விளக்கிட்டுக்காண அபேக்ஷிதமானபோது மங்க$_2$ளதீ$_2$பமாம்.

---

*(சென்ருல்)* "நான் குடையாய் நின்றேன்; நீ உலாவுவாயாக" என்று கூறுவதில்லை. அவன் உலாவினுல் குடை வேண்டியபோது தான் குடையாகிருன். *ஶே*ஷியுகந்த அடிமைசெய்பவன் என்று கருத்து. இதனுலன்ருே '*ஶே*ஷன்' எனப்படுகிருன். *(இருந்தால் சிங்காசனமாம்)* ஸர்வேஶ்வரன் தானே விரும்பி எழுந்தருளியிருக்க நினைத்தபோது அழகிய ஸிம்ஹாஸனமாகத் தன்னை ஆக்கிக்கொள்வன் *(நின்ருல் மரவடியாம்)* அவன் தான் விரும்பி எழுந்தருளிநின்ருல் இவன் திருப்பாது$_2$கைகளாவான். *(நீள் கடலுள் என்றும் புணையாம்)* பெரும் பரப்பையுடைய தான திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளும்போது இவன் எல்லாக் காலத்திலும் திருப்பள்ளிமெத்தையாயிருப்பான். *(மணிவிளக்காம்)* ஏதேனும் ஒரு பொருளை விளக்கிட்டுக் காணவேண்டியிருக்கும்போதும், மங்க$_2$ளகாலங்களிலே மங்க$_2$ளதீ$_2$பம் வேண்டியிருக்கும்போதும் சோதிமயமான இரத்தினங்களைத் தலையிலே தாங்கிநிற்கும் இவன் மங்க$_2$ளதீ$_2$பமாகவும்

மங்க$_3$ளதீ$_3$பம். (பூம்பட்டு) பும்ஸ்த்வாவஹமான பரியட்டம். (புல்கும் அணை) பிராட்டிமார் ஊடினால் வ்யஸநம் மறப்பிக்கவற்றாகை, ஊடலுக்கு ஹேதுவாகவுமாம். (திருமாற்கு) இளையபெருமாளுக்கு அந்தரங்க$_3$ஸேவை. (அரவு) தான் ஒரு சேதநனென்று கூசவேண்டாதபடி தன்னை அமைத்தபடி. ராஜநிவேஶநங்களில் கூனர் குறளரைப்போலே. 53.

54. அரவ மடல்வேழ மான்குருந்தம் புள்வாய்
குரவை குடமுலைமற் குன்றம்—கரவின்றி
விட்டிறுத்து மேய்த்தொசித்துக் கீண்டுகோத் தாடிஉண்
டட்டெடுத்த செங்க ணவன்.

பதவுரை:—**செம் கண் அவன்**—செந்தாமரைக் கண்ணனாகிய எம்பெருமான், **கரவு இன்றி**—மறைவில்லாமல், **அரவம் விட்டு**—காளியநாக$_3$த்தை விரட்டிவிட்டும், **அடல் வேழம் இறுத்து**—சண்டை செய்ய வந்த குவலயாபீட$_3$மென்ற யானையின் கொம்பை முறித்தும், **ஆன் மேய்த்து**—பசுக்களை மேய்த்தும், **குருந்தம் ஒசித்து**—(அஸுராவேஶமுடைய) குருந்தமரத்தை ஒடித்தும், **புள் வாய் கீண்டு**—

---

சாத்தியருளத் திருப்பரியட்டம் அபேக்ஷிதமான ஸமயத்தில், பும்ஸ்த்வாவஹமான அழகிய திருப்பரியட்டமாம். சாய்ந்தருளினபோதைக்குப் பிராட்டிமார் 'சீறுபாறு' என்னும்படி தழுவணையாம். 53.

---

ஆவான். *(பூம்பட்டாம்)* ஸர்வேஶ்வரன் சாத்திக்கொள்ளத் திருப்பீதாம்ப$_3$ரம் வேண்டியிருக்கும்போது இவன்தானே பரமபுருஷனெனக் காட்டித்தரும் திருப்பீதாம்ப$_3$ரமாவான். *(புல்கும் அணையாம்)* சாய்ந்தருளும்போது, பிராட்டிமாரும் பொறாமை கொள்ளும்படி பரமபுருஷன் தழுவிக்கொள்ளும் அணையாக ஆவான் திருவநந்தாழ்வான். பிராட்டிமாரோடு ஊடல் நடையாடும்போது அத்துன்பம் தீரத்தழுவிக்கொள்ளும் அணையாயிருப்பான் என்றுமாம். "*நிவாஸஶய்யா*" [ஸ்தோ-ர 40] என்னும் ஶ்லோகத்திலே ஆளவந்தார் இப்பாசுரத்தை மொழிபெயர்த்தருளினார். 53.



கொக்குருவங்கொண்டு வந்த அஸுரனுடைய வாயைக் கிழித்தும், **குரவை கோத்து**—(ஆய்ச்சிகளுடன்) ராஸக்ரீடை$_3$செய்தும், **குடம் ஆடி**—குடக்கூத்து ஆடியும், **முலை உண்டு**—(பூதனையின்) முலைப்பாலை (உயிருடன்) உறிஞ்சியும், **மல் அட்டு**—(சாணூரமுஷ்டிகர்களென்னும்) மல்லர்களைக் கொன்றும், **குன்றம் எடுத்த**—கோ$_3$வர்த்த$_4$னகி$_3$ரியை எடுத்தும் (செய்த செயல்களிருந்தபடியென் !)

அவ:— **ஐம்பத்துநாலாம் பாட்டு.** (அரவம்) **ஆஶ்ரிதர்க்குச் சில விரோத$_4$ம் வந்து போக்கவேண்டில் படுக்கையும் பொருந்தாமல் வந்து நிற்குமென்கிறது. இப்பாட்டு நிரனிரை.**

வ்யா:— (அரவம் இத்யாதி$_3$) **காளியனைவிட்டு, குவலயாபீட$_3$த்தின் கொம்பை முறித்து, ஆனை மேய்த்து, குருந்தமொசித்து, புள்வாய் கீண்டு ப$_2$காஸுரனைக் கொன்று,**

---

**அவதாரிகை:**— இப்படி தன் நினைவுக்கீடாக அடிமை செய்யும் திருவநந்தாழ்வானாகிற படுக்கையைவிட்டு, இங்கே வந்து அவதரித்துக் களைபிடுங்கித் தன் விபூ$_4$தியை நோக்கும்படியை அநுப$_4$விக்கிறார்.

**உரை:**— புண்ட$_3$ரீகாக்ஷனான அந்த ஸர்வேஶ்வரன், மறைக்கையின்றிக்கே ஸர்வலோகப்ரஸித்$_3$த$_4$மாம்படி காளியனாகிற ஸர்ப்பத்தை விட்டடித்து, யுத்$_3$தோ$_4$ந்முக$_2$மான குவ

---

54. *அவதாரிகை:*—இப்படி தான் விரும்பியபடியெல்லாம் அடிமைசெய்யும் திருவனந்தாழ்வானாகிற படுக்கையைவிட்டு இங்கே வந்து கண்ணனாய் அவதரித்துத் தன் விபூ$_4$திக்குக் களையாயிருக்கும் அஸுரராக்கதர்களை அழித்துத் தன் லீலா விபூ$_4$தியை ரக்ஷிக்கும்படியை அநுப$_4$விக்கிறார்.

*வ்யா:— (செங்கண் அவன்)* அடியார்பக்கல் வாத்ஸல்யத்தைக் கோட்சொல்லித்தரும் தாமரைக்கண்ணனான அந்த ஸர்வேஶ்வரன். *(கரவின்றி)* மறைவில்லாமல் எல்லாவுலகும் அறியும்படி செய்தசெயல்களை அநுப$_4$விக்கிறார். முதலிரண்டடி

குரவை கோத்து, குடமாடி, பேய்முலை உண்டு, மல்லரை அட்டு, குன்றமெடுத்த ஸர்வேச்வரன். எடுத்த இச்

---

லயாபீட3த்தை முறித்து விழவிட்டு, பசுக்களைக் குறைவற மேய்த்து, குருந்தத்தை இணுங்கிப் பொகட்டு, ப3காஸுர னுடைய வாயைக்கிழித்து, இடைப்பெண்களோடே திருக் குரவைகோத்து, ஐச்வர்யச் செருக்குக்குப் போக்குவிட்டுக் குடமெடுத்தாடி, நலிய வந்த பூதனை முலையை ப்ராண ஸஹிதமாக உண்டு, கம்ஸன் ஏவிற்றுச் செய்வானென்று எதிர்ந்து வந்த மல்லரை முடித்து, வர்ஷாபத்தைப் பரி ஹரிக்கைக்காக கோ3வர்த்த4நபர்வதத்தை எடுத்தது முத லான இச்செயல்களானவை இருந்தபடியென்! என்று

---

களிலுள்ள 'அரவம்' முதலான பத்துப்பத3ங்களையும் கடை யிரண்டடிகளிலுள்ள 'விட்டு' முதலான பத்துப்பத3ங்களோடு முறையே சேர்த்துப் பொருள்கொள்ளவேணும். இதை 'நிரனிரையணி' என்பர். (*அரவம் விட்டு*) காளியனுகிற பாம்பை, அவன் மனைவியர் சரணம் புகுகையாலே உயிரை வாங்காமல் பொய்கையிலிருந்து விரட்டிவிட்டு. (*அடல் வேழம் இறுத்து*) தன்னைக் கொல்லவந்த குவலயாபீட3யானையைக் கொம்பைமுறித்து அழித்து. (*ஆன்மேய்த்து*) தன் மேன்மை பாராமல் இடையனாய் அவதரித்தபோது பசுக்களை ஒரு குறையுமில்லாமல் மேய்த்து. (*குருந்தம் ஒசித்து*) அஸுராவேச முடைய குருந்தமரத்தை ஒடித்து. (*புள்வாய் கீண்டு*) கொக் குருவங்கொண்டுவந்த ப3காஸுரனுடைய வாயைக்கிழித்து. (*குரவை கோத்து*) ஆய்ச்சிகளுடன் ராஸக்ரீடை3 எனப்படும் குரவைக்கூத்து ஆடி. (*குடம் ஆடி*) நாற்சந்தியிலே அனைவரும் காணும்படி ஈச்வரனாயிருக்கையால் உண்டான மதிப்புக்குப் போக்குவீடாகக் குடமெடுத்து ஆடி. (*முலை உண்டு*) கொல்ல வந்த பேயான பூதனையின் முலைப்பாலை உயிரோடு உண்டு. (*மல் அட்டு*) கம்ஸன் ஏவினபடியே தன்னைக் கொல்லவந்த சாணூரமுஷ்டிகர்களென்னும் மல்லர்களை அழித்து. (*குன்றம் எடுத்த*) இந்திரன் கல்மழை பொழிந்தபோது ஆயர்களையும் பசுக்களையும் காக்க கோ3வர்த்த4னமலையை எடுத்து ஆக



செயல்கள் எம்பெருமான் சேஷவிஷயத்தில் குறைந்து பரிமாறும்படி அவன் ஸ்வரூபம்.

"செங்கணவன் – விட்டிறுத்து மேய்த்தொசித்துக் கீண்டு கோத்தாடி உண்டு அட்டு எடுத்தவை—அரவமித்யாதி3" 54.

**55. அவன்தம ரெவ்வினைய ராகிலும் எங்கோ**
**னவன்தமரே யென்றொழிவ தல்லால்— நமன்தமரா**
**லாராயப் பட்டறியார் கண்டீர் அரவணைமேல்**
**பேராயர்க் காட்பட்டார் பேர்.**

பதவுரை:— **அவன் தமர்** —அந்தப் பரமபுருஷனுடைய ப4க்தர்கள், **எவ்வினையர் ஆகிலும்**—எப்படிப்பட்ட கர்மத்தை உடையராயிருந்தபோதிலும், **'எம் கோன் அவன் தமரே' என்று**—'எமக்கு ஸ்வாமியான ஸர்வேச்வரனுடைய ப4க்தர் களல்லவா' என்று புகழ்ந்து, **ஒழிவதல்லால்**—நீங்கிப்போவ தைத் தவிர, **அரவணை மேல் பேர் ஆயர்க்கு ஆட்பட்டார் பேர்**—திருவநந்தாழ்வானாகிய படுக்கையின்மேல் இருந்து (அடியவர்களை அளிப்பதற்காக) ஆயனாய் வந்து அவதரித்த எம்பெருமானுக்கு அடிமைசெய்பவர்களுடைய பெயரை த4ரித்தவர்களும், **நமன் தமரால்**—யமனுடைய தூ3தரால், **ஆராயப்பட்டு அறியார் கண்டீர்** — தேடப்பட்டறியார்கள் கிடீர்.

---

வித்3த4ராய் அநுப4விக்கிறார். இது நிரனிரையென்று தமிழர் சொல்லும் லக்ஷணம். 54.

---

இப்படிச்செய்த செயல்கள் என்ன ஆச்சர்யமானவை என்று அநுப4விக்கிறார். எடுத்த — எடுத்தன. "செங்கண் அவன் விட்டிறுத்து மேய்த்தொசித்துக் கீண்டு கோத்து ஆடி உண்டு அட்டு எடுத்தவை - அரவம் முதலானவை" என்று கூட்டிப் பொருள்கொள்வது. இவ்வுலகிலுள்ளாரையும் திருவனந்தாழ் வானைப்போலே அடிமைகொள்வதற்காக அவன் கண்ணனாய் அவதரித்து இப்படியெல்லாம் தாழநின்று பரிமாறினான் என்று கருத்து. 54.

அவ:— ஐம்பத்தைந்தாம் பாட்டு. (அவன் தமர்) இப்படி அவன் ஆஶ்ரிதவிரோதி4 நிரஸன ஸ்வரூபனான பின்பு அவனுடைய தமரை யமப4டன் ஆராய்வது எங்ஙனே? என்கிறார்.

---

அவதாரிகை:—அவன் இப்படி ஆஶ்ரிதரைக் கண்ணிலே வெண்ணெயிட்டு நோக்கி தத்3விரோதி4களையும் போக்கும் ஸ்வபா4வனாயிருக்க, ஆர்தான் இவர்களைக் கண்கொண்டு சிவக்கப்பார்க்கவல்லார்? என்கிறார்.

---

55. *அவதாரிகை:*—அவன் இப்படிக் கண்ணிலே வெண்ணெயிட்டுக்கொண்டு தன் அடியார்களை நோக்கி, அவர்களுடைய விரோதி4களையும் நீக்கியருளுகையில் எவர்தான் இவர்களைக் கண்சிவக்க நோக்கமுடியும்? என்கிறார்.

ஸ்வபுருஷமபி4வீக்ஷ்ய பாஶஹஸ்தம்
வத3தி யம: கில தஸ்ய கர்ணமூலே।
பரிஹர மது4ஸூத3நப்ரபந்நாந்
ப்ரபு4ரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்॥
[வி-பு 3-7-14]

[பாஶத்தைக் கையில்கொண்ட தன்னுடைய கிங்கரனைக் கண்ணாலேநோக்கி, அவனுடைய காதினுள் யமன் (பின்வருமாறு) சொல்லுகிறான்:—"மது4ஸூத3னனை சரணமடைந்தவர்களை அணுகாதே; நான் மற்ற மனிதர்களுக்கே ப்ரபு4; வைஷ்ணவர்களுக்கு ப்ரபு4வல்ல".]

"அஹமமரவரார்ச்சிதேந தா4த்ரா
ஸம இதி லோகஹிதாஹிதே நியுக்த:।
ஹரிகு3ருவஶகோ3஽ஸ்மி ந ஸ்வதந்த்ர:
ப்ரப4வதி ஸம்யமநே மமாபி விஷ்ணு:॥"
[வி-பு- 3-7-15]

[தே3வர்களுள் சிறந்தவர்களாலும் பூஜிக்கப்படும் ஸர்வேஶ்வரனால் '(எல்லாரிடமும்) ஸமமாயிருப்பவன்' என்னும் காரணத்தினால் உலகத்திற்கு ஹிதத்தைக் கொடுப்பதிலும், அஹிதத்தைப் போக்குவதிலும் நியமிக்கப்பட்டிருக்கிறேன்; (நான்) ஸ்வதந்திரனல்லேன்; விஷ்ணு என்னையும் நியமிப்பதில் ஶக்தியுள்ளவன்.]



வ்யா:— (அவனித்யாதி3) அவனுக்கு அநுகூலமானவர்கள் எத்தொழிலாராகிலென்? விஹிதத்தைச் செய்யிலென்? நிஷித்3த4த்தைச் செய்யிலென்? (எங்கோனித்யாதி3) 55. 'प्रभवति संयमने ममापि विष्णुः' (ப்ரப4வதி ஸம்யமநே மமாபி விஷ்ணு:) என்னும்படியே. (நமன்தமரித்யாதி3)

---

உரை:— அந்த ஸர்வேஶ்வரனுக்கு அநுகூலராய்ப் போரும் ஆஶ்ரிதரானவர்கள், அக்ருத்யகரணக்ருத்யாகரணரூபமான எந்தத் தொழிலையுடையரானார்களாகிலும், 'எங்களுக்கு ஸ்வாமியான அந்த ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயித்த

---

"கமலநயந! வாஸுதே3வ! விஷ்ணோ!
த4ரணித4ராச்யுத! ஶங்க2சக்ரபாணே!।
ப4வ ஶரணமிதீரயந்தி யே வை
த்யஜ ப4ட! தூ3ரத ரேண தாநபாபாந்॥" [வி-பு 3-7-33]

[தூத! "செந்தாமரைக்கண்ணா! வாஸுதேவா! விஷ்ணுவே! பூ4மியை த4ரிப்பவனே! அடியாரை நழுவவிடா அச்சுதனே! ஶங்க2சக்கரங்களைத் திருக்கையில் த4ரித்தவனே! (எனக்கு) நீயே க3தியாகவேணும்' என்று எவர்கள் சொல்லுகிறார்களோ, பாபமற்றவர்களான அவர்களை வெகுதூரத்தில் விட்டுப்போ.] என்னும் ஶ்லோகங்களின் ஸாரார்த்த2மிது.

*வ்யா:— (அவன் தமர் எவ்வினையராகிலும்)* ஸர்வேஶ்வரனுடைய ப4க்தர்கள் செய்யத்தகாதவற்றைச் செய்தாலும் சரி; செய்யவேண்டியவற்றைச் செய்யாமற்போனாலும் சரி; புண்ணியத்தைச் செய்தாலும் சரி; பாபத்தைச் செய்தாலும் சரி. *(எங்கோன் அவன் தமரே என்று ஒழிவதல்லால்)* 'எம்முடைய ஸ்வாமியான ஸர்வேஶ்வரனை அண்டிய மஹான்களன்றோ' என்று கொண்டாடி விலகிச்செல்வதல்லாமல். *(எங்கோனவன்...)* ராஜமஹிஷியின் குற்றத்தை ராஜஸேவகன் ஆராயலாமோ? என்கை. *(நமன் தமரால் ஆராயப்பட்டறியார் கண்டீர்)* நமனாலேயே ஆராயப்படமாட்டாதபோது, அவன் தமராலே ஆராயப்படமுடியுமோ? *(நமன்)* நாட்டார் செய்யும் நன்மை தீமைகளை ஆராய்வதற்கென்றே அவனால் நியமிக்கப்பட்டவன்.

நமன் தமரால் ஆராயப்படாதொழிகிருர்; (அரவணைமேல் பேராயர்க்காட்பட்டார் பேர்) இவர்கள் தாங்களோ? என்னில்; அன்று; ஒரு ப4ாக3வதனுடைய பேரை ஒரு அப4ாக3வதன் த4ரித்தால் அவனுடைய பேரும் யமஸத3ஸ்ஸிலே வாசிக்கப் பெருது என்கிறது. பேர் ஆராயில், குவலயாபீட3ம் தொடக்கமானவை பட்டது படுமத்தனை. 56. "मधुसूदनप्रपन्नान्" (மது4ஸூத3நப்ரபந்நாந்).

(எங்கோனவன்தமரே) என் நாயனுனவன் அடியார். (எவ்வினையராகிலென் என்ருெழிவதல்லால்) அவர் புண்யம் பண்ணிலென் ? பாபம் பண்ணிலென் ? அத்துறை நாம் ஆராயும் துறை அல்லவென்று கைவிடுமதொழிய.

---

மஹாபுருஷர்களிறே' என்று அவர்களைக் கொண்டாடித் தங்களைக்கொண்டு கடக்கப்போமித்தனையொழிய; திருவரவணையிலே வர்த்திக்கக்கடவனுய், இடைத்தனத்தில் தனக்கொத்தாரில்லை என்னும்படி அதில் ப்ரத4ாநனுன க்ருஷ்ண

---

*(தமரால்)* அவனுக்கு அந்தரங்க3 வேலைக்காரர்களாலும் ஆராயப்படமாட்டார். *(பேர் ஆராயப்பட்டறியார்)* தங்களுடைய புண்ணியபாபங்கள் ஆராயப்படுவதில்லையென்பது மாத்திரமல்லாமல் தங்களுடைய பெயருங்கூட நமன்தமரால் ஆராயப்பெற்றறியார்கள். இப்படிப்பட்ட பெருமையுடையவர்கள்தான் ஆர் ? என்னில்: *(அரவணைமேல் பேராயற்கு ஆட்பட்டார்)* திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளி, வருந்துவார் கூக்குரல்கேட்டுப் படுக்கையில் பொருந்தப்பெருமல், இடக்கையும் வலக்கையுமறியாத இடைத்தனத்தில் இவனையொத்தாரில்லை என்னும்படி இடையர்களில் பெரியவனுனகண்ணனுக அவதரித்தவனுக்கு ஆட்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள். *(அரவணைமேல்......—ஆட்பட்டார்)* படுக்கைப்பற்றில் ஆராயமுடியுமோ ? *(அரவணைமேல் பேராயற்கு ஆட்பட்டார் பேர்)* 'அரவணைமேல் பேராயனுக்கு ஆட்பட்டவர்களுடைய பெயரை த4ரித்தவர்கள்' என்றும் கொள்ளலாம். ஒரு ப4ாக3வதனுடைய பேரை ஒரு அப4ாக3வதன் த4ரித்தாலும், அவனுடைய பெயரையும் யமன் சபையில் வாசிக்கமாட்டார்கள் என்று கருத்து.



57. "त्यज भट दूरतरेण तानपापान्" (த்யஜ ப4ட தூ3ரதரேண தாநபாபாந்). (அரவணைமேல் பேராயர்க்காட்பட்டார்) படுக்கை பாராட்டிலிறே ஆராய்வது. "நன்று செய்தாரென்பர் போலும்" என்று பிராட்டிக்கும் அகப்பட நிலமல்லாதவிடத்தே யமனே ஆராயப்புகுகிருன் ? அவனுடைய ஒரு பேரான ஸம்ஸாரி பேரும் தீட்டி வாட்டான். 55.

**56. பேரே வரப்பிதற்ற லல்லாலெம் பெம்மானை**
**ஆரே யறிவா ரதுநிற்க—நேரே**
**கடிக்கமலத் துள்ளிருந்தும் காண்கிலான் கண்ண**
**னடிக்கமலந் தன்னை யயன்.**

பதவுரை:— **பேரே**—(எம்பெருமானுடைய) திருநாமத்தாலே, **வர**—அவன் வரும்படியாக, **பிதற்றல் அல்லால்**—முறையில்லாமல் சொல்லுவதைத் தவிர, **எம் பெம்மானை**—எம்பெருமானை, **ஆரே அறிவார்**—யார்தான் அறியமுடியும்? **அது நிற்க**—அது கிடக்கட்டும்; **கடி கமலத்து உள்**—வாஸனை மிகுந்த உந்தித்தாமரையினுள், **நேரே இருந்தும்**—(எம்பெருமானுக்கு) ஸமீபத்திலேயே இருந்தும், **அயன்**—அகாரவாச்யனுன ஸர்வேச்வரனிடமிருந்து பிறந்த பிரமன், **கண்ணன்**—அப்பிரானுடைய, **அடி கமலம் தன்னை**—திருவடித்தாமரைகளை, **காண்கிலான்**—அறியமாட்டான்.

---

னுக்கு அடிமை புக்கிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை, தங்களளவன்றிக்கே தங்கள் பேருங்கூட நாட்டார் கார்யம் ஆராய்கைக்கு அவனுடைய ஆளாயிருக்கிற யமனுக்கு அந்தரங்க3பூ4டராயிருக்கிறவர்களால் ஆராயப்பட்டறியார் கிடீர். 55.

---

இது பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்2யான ப்ரக்ரியை. *(அரவணைமேல் பேராயற்கு)* அவனே அவர்களுக்காகப் படுக்கையும் அடிக்கொதித்து நாட்டிற்பிறந்து படாதனபடும்போது இவர்கள் அவர்களை ஆராயமுடியுமோ ? "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல் என்னடியார் அதுசெய்யார், செய்தாரேல் நன்று செய்தார் என்பர் போலும்" [பெரியாழ்திரு 4-9-2] என்கிறபடியே பிராட்டியாலும் குற்றஞ் சொல்லமுடியாதவிடத்தில் யமனே ஆராயப்போகிருன் ? 55.

அவ:— ஐம்பத்தாரும் பாட்டு. (பேரே) பேராயர்க்கு ஆட்படுகையாவது,— அவன் விஷயீகரிக்கப்புக்கால் தன் செல்லாமை தோற்ற நிற்கையல்லது இவன் அவனைப் பரிச்சே$_2$தி$_3$த்து அறிகையாவதென்? என்கிறது.

வ்யா:— (பேரித்யாதி$_3$) பேராலே அவன் வரும்படி. (பிதற்றலல்லால்) திருநாமத்தைச் சொல்லலாமென்னுமாம். அன்றிக்கே, ஏதேனும் சொல்லப்புக்காலும் திருநாமம் வாயிலே வரும்படி பிதற்றலல்லால். இதுக்கீடாகச் சொல்

---

அவதாரிகை:— அவன் திருநாமங்களை அடைவுகெடச் சொல்லிப்போமத்தனையல்லது ஸர்வேஶ்வரன் ப்ரப$_4$ாவம் ஆர்க்கும் பரிச்சே$_2$தி$_3$க்க அரிதென்கிறார்.

உரை:— ஏதேனும் ஒன்றைச் சொல்லினும் திருநாமம் வாயிலே வரும்படி அக்ரமமாகச் சொல்லிக்கூப்பிடுமித்தனை யல்லது, தன் படிகளை எனக்குத் தானே காட்டித்தந்த

---

56. *அவதாரிகை*:— அறிவுடைமைக்குச் சேர அவனுடைய திருநாமங்களை முறைதப்பிச் சொல்லாமேயொழிய ஸர்வேஶ்வரனுடைய பெருமையை ஒருவரால் அளவிட முடியுமோ? என்கிறார்.

*வ்யா:— (பேரே வர)* ஏதேனுமொன்றைச் சொன்னாலும் எம்பெருமானுடைய திருநாமம் வாயிலே வரும்படி. *"ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் வா ஸ்தோப$_4$ம் ஹேளநமேவ வா வைகுண்ட$_2$நாம க்$_3$ரஹணம் அஶேஷாக$_4$ஹரம் விது$_3$:"* என்கிற படியே ஒரு ஸங்கேதத்தின் பொருட்டோ, பரிஹாஸத்திற்காகவோ, பொருளற்றதாகவோ, அவமதிப்பதற்காகவோ, ப$_4$க$_3$வந்நாமங்களைச் சொல்லுவதும் ஸமஸ்தபாபங்களையும் போக்கும் என்றதன்றோ. *(வர-பேரே பிதற்றலல்லால்)* அவன் தானே வரும்படி திருநாமங்களை முறைகெடச் சொல்லுவதல்லாமல் என்றும் கொள்ளலாம். *(பிதற்றலல்லால்)* *"அத்யந்த ப$_4$க்தியுக்தஸ்ய ந ஶாஸ்த்ரம் நைவ ச க்ரம:"* அதிகமான அன்புடையார் *ஶாஸ்திரமும்* முறையும் பார்க்க]



லுகை என்றுமாம். (எம்பெம்மான் இத்யாதி$_3$) என்னுடைய ஸ்வாமியை ஆரே அறிவார். அவ்விடையாட்டம் நிற்க; (நேர் இத்யாதி$_3$) அறிவார் கிடக்கிடீர், அறியாதாரைக் கேட்கலாகாதோ? ஸர்வேஶ்வரனுடைய பரிமளத்தையுடைத்தான திருநாபீ$_4$கமலத்திலே அவ்யவத$_4$ாநேந பிறந்து அவன் தன்னாலே ஓதுவிக்கப்பட்டு அங்கே இருக்கிற ப்$_3$ரஹ்மா, ஸர்வேஶ்வரனைக் காண்கிறிலன். அறிகிறிலன்.

---

என் நாயனானவனை ஆர்தான் அறியவல்லார்? அவ்விடையாட்டம் கிடக்கிடீர்! பரிமள ப்ரசுரமான திருநாபீ$_4$கமலத்திலே அவ்யவத$_4$ாநேந பிறந்து அங்கே நிரந்தரவாஸம் பண்ணுநிற்கச் செய்தேயும், அவன் பக்கலில் ஓதி இவ்வரு

---

மாட்டார்கள்] என்கிற ரீதியிலே முறைகெடப் பேசலாமேயொழிய. *(எம்பெம்மானை ஆரே அறிவார்)* எனக்குத் தன் தன்மைகளைத் தானே காட்டித்தந்த என் ஸ்வாமியை யார்தான் அளவிட்டு அறியமுடியும்?

*(அது நிற்க)* யார் அறியமுடியும் என்னும் ஆராய்ச்சி ஒருபுறமிருக்கட்டும். அறியாதார் யாரென்பதைக் கேட்கலாகாதோ? *(கடிக்கமலத்துள்ளிருந்தும்)* மணம்மிக்க உந்தித் தாமரையிலேயே பிறந்து அங்கேயேயிருந்துவைத்தும். *(நேரே இருந்தும்)* ஓரிடைவெளியின்றிக்கே ஸர்வேஶ்வரனுடைய உந்தித்தாமரையிலேயே இருந்துவைத்தும். *(யோ ப்$_3$ரஹ்மாணம் வித$_3$த$_4$ாதிபூர்வம் யோ வை வேத$_3$ாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை"* [எவன் பிரமனை முன் படைக்கிறானோ எவன் வேத$_3$ங்களை அவனுக்கு ஓதுவிக்கிறானோ......................] என்கிறபடியே அவனிடமே பிறந்து, அவனாலேயே வேத$_3$ம் ஓதுவிக்கப்பட்டவனாயிருந்தும். *(அயன்)* அகாரவாச்யனான ஸர்வேஶ்வரனிடமிருந்து உண்டானவனாகையாலே பிரமன் 'அஜன்' எனப்படுகிறான். "ஆத்ஜாயதே இதி அஜ:" என்று வ்யுத்பத்தி. அன்றிக்கே, *"ந ஜாயதே இத்யஜ:"* என்றே கொண்டு, உலகிலுள்ளாரைப்போலே ஸ்த்ரீபுருஷஸம்யோக$_3$த்தாலே பிறவாதவனாகையாலே '*அஜன்*' என்பதாகவுமாம். தமிழில் அயன் என்று திரிந்தது. *(காண்கிலான் கண்ணன் அடிக்கமலந்தன்னை*

நம்மால் அறியவொண்ணுமோ? என்னில்; (பேரேவரப் பிதற்றல்) கன்று நின்றவிடத்தே தாய் வருமாப்போலே வாஸிதமாக என்றுமாம். (எம்பெம்மானை) நமக்கு நேரே காட்டினபடி. (உள்ளிருந்தும் காண்கிலான்) கடற்கரையிலே குடில் கட்டிக்கொண்டிருக்குங்காட்டில் கடலைப் பரிச்சே$_2$தி$_3$க்க வொண்ணுமோ ? அபரிச்சே$_2$த்$_3$யமென்று அறியில் அறியலாம். பெரியகிழாயார்; 58. "ब्रह्मविदां वरः" (ப்$_3$ரஹ்ம வித$_3$ாம் வர:). 56.

---

குள்ளார்க்கும் அறிவு கொடுக்கும்படி அறிவில் தலைநின்ற சதுர்முக$_2$ஞனவன் ஸர்வநிர்வாஹகனை ஸர்வேஶ்வரன் திருவடித்தாமரைகளை இவ்வளவென்று அளவிட்டு த$_3$ர்ஶிக்கைக்கு ஶக்தனல்லன். பேரே வரப்பிதற்றுகையாவது - அவன் தானே வரும்படி திருநாமங்களை அக்ரமமாகச் சொல்லுமத்தனை போக்கி என்றுமாம். 56.

---

*அயன்)* இப்படி லோகவிலக்ஷணமாக அவனிடம் பிறந்து, அவனிடமே ஓதி உலகிலுள்ளார் அனைவர்க்கும் அறிவளிக்கலாம்படி மிகச்சிறந்த அறிவாளியான பிரமன் ஸர்வவ்யாபியாய் ஸர்வநிர்வாஹகனை ஸர்வேஶ்வரனுடைய திருவடித்தாமரைகளை இவ்வளவென்று அளவிட்டு அறியவல்லனல்லன். கண் - இடம். கண்ணன் - இடமுடையவன். ஸர்வவ்யாபியாய், ஸர்வநிர்வாஹகனுயிருப்பவன். இப்படி ஸர்வலோகஸ்ரஷ்டாவான நான்முகனே அவனை அறியவல்லனல்லனுனல், வேறு எவர் தான் அவனை அளவிட்டு அறியமுடியும் ? என்று கருத்து. *(உள்ளிருந்தும் காண்கிலான்)* "கடற்கரையில் குடில்கட்டிக் கொண்டிருக்குங்காட்டில், கடலைப் பரிச்சே$_2$தி$_3$க்க (அளவிட) வொண்ணுமோ ? அபரிச்சே$_2$த்$_3$யம் (அளவிடவொண்ணுதது) என்று அறியில் அறியலாம். *(அயன்)* "ப்$_3$ரஹ்மா ப்$_3$ரஹ்ம வித$_3$ாம் வர:" [ரா-யு 120-3] [ப்$_3$ரஹ்மஜ்ஞானிகளுள் தலைசிறந்தவனை பிரமன்] என்று சொல்லப்பட்டவன் பாடு இப்படானுல் மற்றுள்ளாரைப்பற்றிச் சொல்லவேண்டுமோ ? 56.



57. அயனின்ற வல்வினையை யஞ்சினே னஞ்சி
உயநின் திருவடியே சேர்வான்— நயநின்ற
நன்மாலை கொண்டு நமோநாரணு வென்னும்
சொன்மாலை கற்றேன் தொழுது.

**பதவுரை:—** **அயல் நின்ற'**— அருகில் நின்ற, **வல் வினையை** — மிகுந்த வலிமையுள்ள பாபங்களைக்கண்டு, **அஞ்சினேன்**—பயந்தேன் ; **அஞ்சி**—(இம்மாதிரி) ப$_4$யந்து, **உய**—(பாபங்கள் நீங்கப்பெற்று) உய்ந்துபோவதற்காக, **நின்**—உன்னுடைய, **திருவடியே சேர்வான்**—திருவடிகளை அடையும்பொருட்டு, **நயம் நின்ற**—சாஸ்திரரூபமாய் இருக்கிற, **நல் மாலை கொண்டு** — அழகியதான மாலையைக் கொண்டு, **தொழுது**—வணங்கி, **நமோ நாரணு என்னும்**— அஷ்டாக்ஷரமந்திரமாகிய, **சொல்மாலை** — சொல்லாலான மாலையை, **கற்றேன்**—அப்$_4$யஸித்தேன்.

**அவ:— ஐம்பத்தேழாம் பாட்டு.** (அயல் நின்ற) **நீர் ப$_4$க$_3$வத்$_3$ விஷயத்தில் செய்வதென்? என்னில்; ஸம்ஸாரம் ப$_4$யஸ்த$_2$ானமென்னுமிடமும் உஜ்ஜீவிப்பார் அவனைப்பற்றியென்னுமிடமும் அறிந்தேன்** என்கிருர்.

---

**அவதாரிகை:**—ப்$_3$ரஹ்மாவுக்கு அறியவொண்ணுத விஷயத்தை நீர் அறிந்தபடி எங்ஙனே ? என்ன ; திருநாமம் ஆஶ்ரயித்து அவன் தானே தன்னைக் கொண்டுவந்து காட்டக்கண்டேன் என்கிருர்.

---

57. *அவதாரிகை:—* பிரமனுக்கும் அறியவொண்ணுத விஷயத்தை நீர் எப்படி அறிந்தீர்? என்ன; திருமந்திரத்தைப் பற்றி நின்று, அத்தாலே அவன் தானே தன்னைக் கொண்டு வந்து காட்டக்கண்டேன் என்கிருர்.

*வ்யா:—(அயல் நின்ற)* அருகிலே நின்ற. என்னருகு விட்டுப்பெயராமல் இடைவிடாமல் துன்புறுத்திநிற்கிற. நானிட்ட அடியிலே அடியிட்டு என்னைப் பின்தொடர்ந்து வருகிற. ப$_4$க$_3$வத்ஸம்ப$_3$ந்த$_4$ம் ஏற்பட்டதும் பாபஸம்ப$_3$ந்த$_4$ம் விட்டது.

வ்யா:— (அயல் இத்யாதி) நானிட்ட வடியிலேயிட்டு வாராநின்ற மஹாபாபங்களை அஞ்சினேன். (அஞ்சி உய) அவற்றை அஞ்சி உஜ்ஜீவிக்கைக்காக. (நின் திருவடியே சேர்வான் நயம் நின்ற நன்மாலை கொண்டு) நிர்வசநரூபமாக நின்ற நல்லமாலைகொண்டு. (நமோநாரணவென்னும்

---

உரை:—அருகுவிட்டுப் பேராதே இடைவிடாமல் நலிந்தபடியே நிற்கிற அதிப்ரபலமான பாபத்தைக் குறித்து முன்புபோலே இன்னமும்வந்து மேலிடில் செய்வதென்னென்று பயப்பட்டேன். இப்படி பயப்பட்டு, இந்தப் பாபஸம்பந்தமற்று உஜ்ஜீவிக்கைக்கு நிர்பயஸ்தானமான உன் திருவடிகளிலே வந்து கிட்டுகைக்காக நயப்புடைத்தாய், அதிவிலக்ஷணமான ஶப்தங்களாலே தொடுக்கப்பட்ட இப்ரபந்தரூபமான மாலையைக்கொண்டு உன்னை ஆஶ்ரயித்து. உனக்கு வாசகமாய், திருமந்த்ரமென்று ப்ரஸித்தமான சொல் தொடையை அப்யஸித்தேன்.

---

ஆயினும் 'இவன் அவ்வழியினின்று மீண்டு நம்வழியில் வாரானோ' என்னும் சாபல்யத்தாலே அருகிலேயே நின்றது வல்வினை. "மாடே வரப்பெருவராமென்றே வல்வினையார் காடானும் ஆதானும் கைக்கொள்ளார்" [பெரியதிருவ 59] என்றாப்போலே. *(வல்வினையை அஞ்சினேன்)* இதன் ஸம்பந்தம் விட்டபோதிலும் இது முன்பு நலிந்தபடியை நினைத்தால், 'முன்புபோலே இன்னமும் வந்து துன்புறுத்தினால் என்செய்வது ?' என்று அஞ்சும்படியாயிருக்கிறது. *(அஞ்சி உய)* இப்படி பயப்பட்டபின், இந்தப் பாபஸம்பந்தம் அடியோடு அற்று உஜ்ஜீவிப்பதற்காக. *(நின் திருவடியே சேர்வான்)* இப்படிப் பாபஸம்பந்தமற்று உஜ்ஜீவிக்கக் காரணம் உன் திருவடியை அடைவது; அப்பயனைப் பெறுகைக்காக. *(நயம் நின்ற நன்மாலை கொண்டு)* நயம்-அன்பும் மகிழ்ச்சியும். அன்பும் மகிழ்ச்சியுமுடைய சொல்தொடைகளாலே தொகுக்கப்பட்ட மிகச்சிறந்த இந்நூலாகிற மாலையைக்கொண்டு. *(நயம் நின்ற நன்மாலை)* திருமந்திரார்த்தத்தை, நயிப்பிக்கையிலீடுபட்ட இந்நூல் என்றுமாம். அன்றிக்கே, 'நயம் நின்ற'



சொன்மாலை கற்றேன்) சொல்தொடை கற்றேன். (தொழுது) வணங்கி, சொன்மாலை கற்றேன். ஆற்றாமையாலே நானுகைக்குப் பேசினேன்.

(அயல்நின்ற) விஶ்லேஷத்தாலே வரும் வ்யஸநத்துக்கு அஞ்சி, திருநாமம் சொல்லுந்தனையும் கடக்க, சாபலத்தாலே நின்ற. 57.

58. தொழுது மலர்கொண்டு தூபம் கையேந்தி
எழுது மெழுவாழி நெஞ்சே—பழுதின்றி
மந்திரங்கள் கற்பனவும் மாலடியே கைதொழுவான்
அந்தரமொன் றில்லை யடை.

பதவுரை:— நெஞ்சே — மனமே! வாழி — (உனக்கு) நன்மையுண்டாகட்டும்; மலர் கொண்டு—பூவைக் கையில் கொண்டு, தூபம் கை ஏந்தி—புகையைக் கையிலே தரித்

---

அன்றிக்கே, திருமந்த்ரார்த்தத்தை நயிப்பிக்கையிலே தத்பரமாய்க்கொண்டு நின்ற விலக்ஷண ஸந்தர்ப்பரூபமான இப்ரபந்தத்தைக்கொண்டு என்னவுமாம். அயல்நின்ற என்றது ஜ்ஞானம் பிறந்தபின் பாபங்கள் தம்மைவிட்டுக் கடக்க நின்றபடியைச் சொல்லிற்றாகவுமாம் அயல்நின்ற வல்வினையென்று திருநாமஞ் சொல்லாதபோது தமக்குள்ள வ்யஸநமாகவுமாம். 57.

---

என்றது திருமந்திரார்த்தத்தை நயிப்பிக்கையில் ஈடுபட்ட ஶாஸ்திரமாய், ஶாஸ்திரரூபமாய் நிற்கும் விலக்ஷணமான மாலையைக்கொண்டு என்றுமாம். *(தொழுது)* இந்நூல், அல்லது ஶாஸ்திரமாகிற மாலையைக்கொண்டு உன்னை ஆஶ்ரயித்து, *(நமோ நாரண என்னும் சொல்மாலை கற்றேன்)* உன் ஸ்வரூப ஸ்வபாவங்களை ஸங்கோசவிஸ்தாரமறத் தெரிவிக்கும் திருமந்திரமாகிற சொல்மாலையைக் கற்றேன். *(அயல்நின்ற வல்வினையை அஞ்சினேன்)* திருநாமஞ் சொல்லாமல் பகவானை விட்டுக் கடக்கநின்ற மஹாபாபத்தை நினைத்து வருந்தினேன் என்றும் கொள்ளலாம். 57.

துக்கொண்டு, **தொழுது**—வணங்கி, **எழுதும்**—உய்ந்து போவோம்; **எழு**—எழுந்திருப்பாயாக; **பழுதின்றி**—இடைவெளியின்றி, **மந்திரங்கள்**—பகவானைப் பற்றிய மந்திரங்களை, **கற்பனவும்**—கற்றுக்கொள்வதும், **மால் அடியே கை தொழுவான்** — எம்பிரானுடைய திருவடிகளைக் கையாலே வணங்குவதற்காகவே, (ஆகையால்) **அந்தரம் ஒன்று இல்லை**-காலதாமதம்செய்ய ஹேது எதுவும் இல்லை; **அடை**—(அவனை) அணுகு.

**வ்யா:**— **ஐம்பத்தெட்டாம் பாட்டு.** (தொழுது) **கையாலே தொழுது. புஷ்பாத்$_3$யுபகரணங்களைக் கொண்டு தொழுது.** (எழுதும்) **எழுவோம்; போவோம்.** (எழு) **போகு.** (வாழி நெஞ்சே) **நெஞ்சே! உனக்கு நன்மை உண்டாக.**

---

**அவதாரிகை:**—"ஆனபின்பு, நெஞ்சே! இவ்விஷயத்தை விட்டு நமக்கு ஒரு க்ஷணம் ஆறியிருக்க விரகில்லை; அவன் திருவடிகளை ஆஶ்ரயி" என்கிறார்.

**உரை:**— நெஞ்சே! செவ்விப்பூக்களை ஸம்பாதி$_3$த்துக் கொண்டு தூ$_4$பத்தைக் கையிலே த$_4$ரித்து, ஸ்வரூபாநுரூபமாக அவனைத் தொழுது உஜ்ஜீவிப்போம்; கடுக எழுந்திரு.

---

58. *அவதாரிகை:*— நெஞ்சே! இப்படியிருக்கும்போது, இவ்விஷயத்தைவிட்டு நமக்கு ஒருகணம் ஆறியிருக்கக் காரணமில்லை. அவன் திருவடிகளை அடைவாயாக என்கிறார்.

*வ்யா:*—(*நெஞ்சே!*) எனக்கு அநுகூலமாயிருக்கும் நெஞ்சே! (*மலர்கொண்டு*) அவனுடைய மென்மைக்குத்தக்க அன்றலர்ந்த மலர்களைக்கொண்டு. (*தூபம் கை ஏந்தி*) தூ$_4$பத்தைக் கையிலே த$_4$ரித்து. இது தீ$_3$பாதி$_3$களுக்கும் உபலக்ஷணம். (*தொழுது*) நம் ஸ்வரூபத்துக்குத் தக்கவாறு அவனைத்தொழுது. (*எழுதும்*) உய்வோமாக. (*எழு*) உறங்காதே விரைவில் எழுந்திருப்பாயாக. (*வாழி*) சொன்னபடியே எழுந்திருக்கக்கண்டு. ,வாழி நெஞ்சே! உனக்கு இப்பெருமை நித்யமாய்ச் செல்லவேணும்' என்று மங்க$_3$ளாஶாஸனம் செய்கிறார்.



**(பழுதின்றி இத்யாதி$_3$) விச்சே$_2$த$_3$மின்றிக்கே எல்லாத் திருமந்த்ரங்கள் கற்கிறதும் கைதொழுகை. ஆனபின்பு,** (அந்தரமொன்றில்லை யடை) **ஒரு க்ஷணமாத்ரம் போகாதே அவன் திருவடிகளிலே அடை.**

(எழுதும்) **உஜ்ஜீவிப்போம்.** (எழு) **ஒருப்படு.** (வாழி) **ஒருப்பட்டபடிக்கு மங்க$_3$ளாஶாஸநம். இது உனக்கு நித்யமாய் உண்டாக.** (பழுதின்றி) **கு$_3$ருகுலவாஸம் பண்ணிப் பழுத்து விழக்காண்கை. முதலிலே சொல் என்னில்: உத்**

---

உனக்கு இந்த ஸம்ருத்$_3$தி$_4$ நித்யமாய்ச்செல்ல! கிடந்தானை கண்டேறுதே ஆசார்யனைப் பழுக்க ஸேவித்து, திருவஷ்டாக்ஷரம் முதலான மந்த்ரங்களைப் பழுதற நாம் அப்$_4$யஸிக்கிறவையும், ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே இடைவிடாமல் அஞ்ஜலி ப$_3$ந்த$_4$ம் முதலான வ்ருத்திவிஶேஷங்

---

*(பழுதின்றி மந்திரங்கள் கற்பனவும்)* பழக்கமில்லாதவன் கிடந்த ஆனையைக்கண்டவுடன் அதில் ஏறினால், அது தூக்கியெறிந்து மிதித்துவிடும். யானைப்பாகன் கைகொடுக்க அதில் ஏறினால் அது அடங்கி நின்று இடங்கொடுக்கும். அதுபோலே, "தென்னானாய் வடவானாய்" முதலானவிடங்களிலே யானையாக நிருபிக்கப்படும் ப$_4$க$_3$வானும் நேரே பற்றினால் ஸ்வதந்திரனாகையாலே இவன் பாபங்களைக்கண்டு உதறிவிடுவான். ஆசாரியனை முன்னிட்டுப் பற்றினால் ஏற்றுக்கொள்வன். ஆகையால் ஆசார்யனிடம் ப$_4$க$_3$வந் மந்திரங்களைக் கற்கையே பழுதின்றிக் கற்கையாகிறது. *(பழுதின்றி மந்திரங்கள் கற்பனவும்)* ஆசார்யனிடமும் கண்டவுடன் 'மந்திரத்தைச் சொல்' என்னாமல், அவனுக்கு ஶுஶ்ருஷைசெய்து, தானே பழுத்துவிழும் கனிபோலே அவனாகவே மனமிரங்கி உபதே$_3$ஶிப்பதே பழுதின்றிக் கற்பதாகிறது. இப்படி ஆசார்யஶுஶ்ருஷை செய்து திருமந்திரம் முதலான மந்திரங்களை நாம் பழுதில்லாமல் கற்பவையும். *(மாலடியே கைதொழுவான்)* ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே இடைவிடாமல் அஞ்ஜலிசெய்வது முதலான கைங்கரி

பத்திதே$_3$ாஷமாமிறே. (கற்பனவும்) கிடந்தானை கண்டேருதே சந்தையிட்டுக் கற்கை. 58.

**59. அடைந்த வருவினையோ டல்லல்நோய் பாவம்**
**மிடைந்தவை மீண்டொழிய வேண்டில்— நுடங்கிடையை**
**முன்னிலங்கை வைத்தான் முரணழிய முன்ஞெருநாள்**
**தன்விலங்கை வைத்தான் சரண்.**

**பதவுரை:—** **அடைந்த**—வந்தேறியான, **அரு வினையோடு**—கொடுமையான அஜ்ஞானம் முதலியவைகளோடு, **அல்லல்**—மனோவியாதி$_4$. **நோய்**—சரீர வியாதி$_4$, **பாவம்**—து$_4$ஷ்கர்மானுஷ்ட$_2$ானம், **மிடைந்தவை**—(ஶரீரத்திற்கு ஹேது வான) நெருங்கிய பாபங்கள் ஆகிய இவைகளை, **மீண்டு ஒழிய வேண்டில்**—திரும்பிப் போகும்படி செய்யவேண்டுமானல், **நுடங்கு இடையை**—துவளாநின்ற இடையையுடைய ஸீதாபிராட்டியை, **முன்**—முன்ஞெரு காலத்தில், **இலங்கை வைத்தான்**—இலங்கையிலே இருத்திய ராவணனுடைய, **முரண் அழிய**—ப$_3$லம் நஶிக்கும்படியாக, **முன் ஒரு நாள்**—முன்பு ராமனுக அவதரித்திருந்த காலத்தில், **தன் வில் அம் கை வைத்தான்**—தன்னுடைய த$_4$னுஸ்ஸை அழகிய கையிலே த$_4$ரித்தவனே, **சரண்**—உபாயம் ஆவான்.

**அவ:—** **ஐம்பத்தொன்பதாம் பாட்டு.** (அடைந்த) **காலக்ஷேபம் பண்ணும்படி சொல்லுகிறது.**

---

களைப் பண்ணுகைக்காக. ஆனபின்பு நமக்கு ஆறியிருக்கைக்கு அவகாஶம் ஏகதே$_3$ஶமுமில்லை கடுகச் சென்று கிட்டு. 58.

**அவதாரிகை:—** பே$_4$ாக$_3$த்துக்கு வேணுமாகில் இத்தைச் செய்கிறோம். இதுக்கு இடைச்சுவரான விரோதி$_4$யை இரு

---

யங்களைச் செய்வதற்காகத்தான். *(அந்தரம் ஒன்றில்லை அடை)* ஆகையால், நாம் காலதாமதம் செய்வதற்கு நேரமில்லை; விரைவிலே சென்று அவனை அடையப்பார். 58.



**வ்யா:—** (அடைந்தவருவினை) **ஆத்மஸ்வரூபத்திலன்றியே அசித்ப்ரத்யாஸத்தியாலே வந்தேறியான அஜ்ஞாநாதி$_3$கள்.** (அல்லல்) **மாநஸவ்யாதி$_4$.** (நோய்) *ஶரீரவ்யாதி$_4$.* **ஆதி$_4$ வ்யாதி$_4$கள் என்றபடி.** (பாவம்) **பரிக்$_3$ரஹித்த ஶரீரத்**

---

துண்டமாக விடுகைக்கு ஸாத$_4$னம் ஏதென்ன; அதுக்கு வேணுமாகில், த$_3$ஶரத$_2$ாத்மஜனை ஶரணம்புகு என்கிறார்.

**உரை:—** ஜ்ஞாநாநந்த$_3$ங்களோபாதி ஆத்மாவுக்கு நிரூபகமென்றபடி அடியே பிடித்துப் பற்றிக்கிடக்கிற போக்கவரிதான ப்ராசீநபாபம், அதடியாக வருகிற மாநஸ

---

59 *அவ:—* ''அனுப$_4$வத்துக்கு வேணுமாகில் சென்ற பாசுரத்தில் சொன்னபடியே செய்கிறேன்; இவ்வனுப$_4$வத்துக்குத் தடைசெய்யும் பாபம் முதலானவற்றை அழிக்க வழி என்ன?'' என்று திருவுள்ளம் கேட்க 'அதற்கு ஸாத$_4$னம் சக்கரவர்த்தித் திருமகனைச் சரணம் புகுவதேயாகும்' என்கிறார்.

*வ்யா:— (அடைந்த அருவினை)* பாபமானது சேதனனேடு கூடப் பிறந்ததன்று. அசேதனத்தோடு நெடுங்காலமாக நெருங்கிக்கிடந்தமையாலே இவனுக்கு வந்தேறியாயிருக்கிறது. வந்தேறியாயிருந்தபோதிலும், அநாதி$_3$காலமாக இவன்மேலே ஏறிக்கிடக்கையாலே, இவனுடைய ஸ்வரூபநிரூபக த$_4$ர்மங்களான ஜ்ஞாநாநந்த$_3$ங்களைப்போலே, இவனுக்கு இதுவும் ஒரு நிரூபகம் என்று சொல்லலாம்படி வலிமையுடன் இவனைப் பற்றிக் கிடக்கிறது. *( அருவினை )* இதனுலேயே இவனுல் அழிக்க அரிதானதாயிருக்கிறது. *(அருவினை)* அநாதி$_3$காலமாக இவனுல் ஸம்பாதி$_3$க்கப்பெற்றதாய், மலைமலையாயிருப்பதாய். புண்யபாபரூபமான கர்மங்களைக் குறிக்கிறது. *(அல்லல்நோய்)* அல்லல் என்று முன்னும் பின்னும் சொல்லப்படும் பாபங்கள் காரணமாக வரும் மனத்துன்பங்களையும், 'நோய்' என்று அவற்ருலேயே நேரும் *ஶரீர*த்துன்பங்களையும் சொல்லுகிறது. இவையே முறையே ஆதி$_4$ என்றும், வ்யாதி$_4$ என்றும் வடமொழியில் சொல்லப்பெறும். *(பாவம்)* 'அருவினை' என்று முன்செய்த வினைகளைக் குறித்தது. இங்கு இந்த *ஶரீர*ங்கொண்டு

**தாலே பண்ணின நிஷித்3தா4நுஷ்டா2நம்.** (மிடைந்தவை) **ஶரீராரம்ப4ஹேதுவான பாபங்களுமாக நெருங்கினவை.** (மீண்டொழியவேண்டில்) **39.“अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि” (அஹம் த்வா ஸர்வபாபேப்4யோ மோக்ஷயிஷ்யாமி) என்னும் படி ஒரு ராஜகுலஸம்ப3ந்த4த்தாலே மீளாதபடி போக**

---

மான து3:க்க2ங்கள், ஶாரீரமான வ்யாதி4, வர்த்தமான ஶரீரங்கொண்டு பண்ணுகிற நிஷித்3தா4சாரம் என்றாற் போலே ப3ஹுவித4மாய்க்கொண்டு பரணிக்கூடுவரிந்தாற்

---

செய்கிற புண்யபாபங்களைக் குறிக்கிறது. புண்ணியத்தோடு பாபத்தோடு வாசியற இவனை ஸம்ஸாரத்தில் கட்டும் விலங்குகளாயிருக்கையாலே இரண்டும் இவனுக்கு அநிஷ்டமாகையாலே இரண்டையுமே ‘பாவம்” என்கிறார். ‘அருவினை’ ‘பாவம்’ என்பவை இவன்செய்யும் நற்கருமங்களையும், தீய கருமங்களையும், அதுகாரணமாகப் பரமபுருஷனுக்கு இவன்பால் ஏற்படும் பிரீதிகோபங்களையும் குறிக்கின்றன. ‘அருவினை’ என்று அஜ்ஞானம் முதலியவற்றையும்,‘பாவம்’என்று அதற்குக் காரணமான கர்மங்களையும் குறிப்பதாகவும் கொள்ளலாம். *(மிடைந்தவை)* இவையெல்லாம் இச்சேதனன் தானே தன்னால் வெளியேறமுடியாதபடி சூழ்த்துக்கொண்டவை. பட்டுப் பூச்சியைப்போன்ற சில பூச்சிகள் தம்மைச் சுற்றித் தாமே கூடுகட்டித் தம்மை மூடிக்கொண்டுவிடும். பிறகு அவற்றாலும் அக்கூட்டைவிட்டு வெளியேறமுடியாமல் அங்கேயே கிடந்து அழியும். அதுபோலவே இச்சேதனனும் தன்னையே அறிய முடியாதபடி தன்னைச் சுற்றிப் பாபங்களாகிற கூட்டைக் கட்டிக்கொண்டு வெளியேறமுடியாமல் தவிக்கிறான் என்று கருத்து. *(மீண்டு ஒழியவேண்டில்)* இத்தனைகாலமாக இவன் பயப்பட்டுவந்த பாவங்கள் இவனைக்கண்டு பயப்பட்டு ‘சும்மெனாதே கைவிட்டோடி’ [பெரியாழ்திரு 5-4-3] என்கிற படியே ஓடவேண்டுமானால். தொடர்கிற பாம்பைத் திரும்பியோடச் செய்யவேண்டுமானால். *(ஒழியவேண்டில்)* வாஸனையோடே விட்டுப்போகவேண்டுமானால். *‘‘மாமேகம் ஶரணம் வ்ரஜ-ஸர்வபாபேப்4யோ மோக்ஷயிஷ்யாமி’’* [கீ3தைசரமஶ்லோகம்]



**வேண்டில்.** (நுடங்கிடையை) **பிரியத்தகாதவளை.** (முன்னித்யாதி3) **பண்டு லங்கையிலே வைத்தவனுடைய மிடுக்கொழிய.** (தன் வில் அங்கை வைத்தான்) **தன்னுடைய திருவில்லை அழகிய திருக்கையிலே வைத்தவன் உபாயம். இத்தால், ஸர்வேஶ்வரனுக்கு போ4க்3யமாயிருந்துள்ள ஆத்மாவை ‘‘என்னது’’ என்றிருக்குமவன் பிராட்டியைப் பிரித்த ராவணனோடு ஒக்குமென்னுமிடமும், ‘‘இவ்வாத்மா அவனுடையது’’ என்று அநுகூலித்தவனுக்குப் பிராட்டியிருந்த மார்விலே அம்பேற்றுப் பரிஹரித்தாற்போலே பரிஹரிக்குமென்னுமிடமும். அவனோடு கூடினவன் உபாயமென்கை**

---

போலே ஆத்மாவைத் தெரியாதபடி மூடிக்கிடக்கிற இவை வாஸனையோடே விட்டுப்போகவேண்டில், க்ஷணகாலமும் விஶ்லேஷிக்கத்தகாதபடி நேரிய இடையழகையுடைய பிராட்டியை முன்பொரு காலத்திலே லங்கையிலே கொண்டு போய்ச் சிறைவைத்த ராவணனுடைய மிடுக்கு அழியும்படிக் கீடாகப் பண்டொரு நாளிலே தன்னுடைய ஸ்ரீஶார்ங்க3த்

---

[என்னையொருவனையே சரணமடை; எல்லாப்பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்] என்ற ஸர்வஶக்தியை ஶரணமடைவதே வழி என்கிறார் மேலே.—*(நுடங்கிடையை)* துவளாநிற்கும் நுண்ணிய இடையையுடைய சீதாபிராட்டியை. ஒருகணம் பிரிந்தாலும் தாளமாட்டாள் என்று துணுக்குறவேண்டிய தே3வியை. *(முன் இலங்கை வைத்தான்)* முன்னொரு காலத்தில் பிரித்து இலங்கையிலே சிறைவைத்த பாவியான இராவணனுடைய. *(நுடங்கிடையை இலங்கை வைத்தான்)* தாயையும் தகப்பனையும் பிரித்தான். ஏகத்3ரவ்யத்தை பி4ன்னமாக்கினான்! *(முன்)* அதுவும் ஒருநாளே! எனத் துன்புறுகிறார். *(முரண் அழிய)* அவனுடைய ப3லம் அழியும்படியாக. *(முன் ஒருநாள்)* இதுவும் ஒருநாளே! என இன்புறுகிறார். *(தன் வில் அங்கை வைத்தான் சரண்)* தன் ஶார்ங்க3வில்லை அழகிய கையிலே வைத்தவனே ஸர்வ பாபங்களும் போவதற்கு உபாயமாவான். *(தன் வில் அங்கை வைத்தான்)* தன் வில்லிலே அழகிய கையை வைத்தவன் என்றுமாம். தோளில் மாட்டியிருக்கும் வில்லிலே கையை வைத்தவுடனேயே ராவணனின் மிடுக்கு அழிந்தது என்று கருத்து.

யாலே, பற்றுவார்கள் அவள் முன்னாகப் பற்றவேணுமென்னு மிடமும் சொல்லுகிறது.

திருவுள்ளம்! இந்த்$_3$ரிய ஜயம் பண்ணு என்றது, தொழு என்றது, திருநாமம் சொல்லு என்றது, நினை என்றது. பல்படிகள் சொன்ன இவற்றுக்குத் தாத்பர்யமென்? என்னில்; இதுக்குக் கீழெல்லாம் ஷட்கத்ரயத்திற் சொன்ன வார்த்தைபோலே ஸ்வரூபம் விஶத$_3$மாகைக்குச் சொன்ன நிலை; இது சரமஶ்லோகத்தில் நிலைபோலே. உணர்ந்தவன்று அவனல்லதில்லை.

---

திருவில்லை அழகிய திருக்கையிலே வைத்த த$_3$ஶரத$_2$ாத்மஜனே உபாயம்.

இத்தால் பிராட்டி விஷயத்திற்போலே ஆஶ்ரிதவிஷயத்தில் ஈஶ்வரன் உகந்து கார்யஞ்செய்யுமென்னுமிடமும், அவன் ஸ்வரக்ஷணத்திலே இரங்குமன்று இவனுக்கு க்ருத்

---

இப்பாசுரம் இந்நூலாகிற ரத்னஹாரத்திற்கு நடுநாயகக் கல்போலே அமைந்துள்ளது. இதிலிருந்து தெளிவாகும் ஸாரார்த்த$_2$ங்களாவன, — வினை முதலியவற்றால் சூழப்பெற்று இந்த ஸம்ஸாரத்தில் ஜீவன் இருப்பது ராக்ஷஸிகளால் சூழப்பட்டு அஶோகவனிகையிலே பிராட்டியிருந்த இருப்பை ஒக்கும். பிராட்டியானவள் தன்னை விடுவித்துக்கொள்ளத் தான் முயற்சி செய்யாமல், "*தத் தஸ்ய ஸத்$_3$ருஶம் ப$_4$வேத்*" [ரா-ஸு 39-30] [என்னை அழைத்துச்செல்வது ராமபிரானுக்கே தக்கது] என்று இருந்தாற்போலே, இவனும் மற்ற உபாயங்களில் கைவைக்காமல் அவனையே க$_3$தியாகப் பற்றிநிற்கவேணும், இதுவே இவன் செய்யவேண்டியது என்பதையும், இப்படி இவன் இருந்தானாகில் அவன் பிராட்டியின் காரியத்தை மார்பிலே அம்பேற்று உகந்து செய்ததுபோலே இவனுடைய பாப விமோசனத்தையும் உகந்து செய்வான் என்பதையும், அவளோடு கூடியவன் உபாயமென்கையாலே அவனைச் சரண்புகும் போது, பிராட்டியைப் புருஷகாரமாக முன்னிட்டுச் சரண்புக வேண்டும் என்பதையும், ஸர்வேஶ்வரனுக்கு இனியதான ஆத்மவஸ்துவை 'என்னுடையது' என்று நினைப்பவர்கள்



(அடைந்த அருவினை) அவித்$_3$யாதி$_3$கள். ஆத்மா ஹேய ஸம்ஸர்க்க$_3$த்துக்கு அநர்ஹனாகையாலே "அடைந்த" என்றது. பரமாத்மாவுக்கும் ப்ரவேஶம் ஒக்குமிறே. 59. 'अनशन' (அநஶநந்). (அல்லல் நோய்) ஆதி$_4$வ்யாதி$_4$. (பாவம்) ஶரீரத்துடன் பண்ணும் பாவம். (மிடைந்தவை) ஸமிதையிடாமாணிபோலே; பரணிக்கூடு வரிந்தாற்போலே. (மீண்டொழியவேண்டில்) தொடருகிற பாம்பைத் திரிய விடுத்தாற்போலே. 39. "सर्वपापेभ्यो मोक्षयिष्यामि" (ஸர்வ பாபேப்$_4$யோ மோக்ஷயிஷ்யாமி) இறே. ஸர்வஶக்தியைக் கொண்டு கார்யங்கொள்ளவேண்டாவோ? (நுடங்கிடையை)

---

யாம்ஶமுள்ளதென்னுமிடமும், அவன் அபேக்ஷிதம் செய்யுமிடத்தில் இவள் புருஷகாரமென்னுமிடமும், அவன் வஸ்துவை எனக்கென்பார் ராவணாதி$_3$கள் பட்டது படுவர் என்னுமிடமும் சொல்லிற்றாய்த்து. இந்த்$_3$ரிய ஜயத்தைப் பண்ணு. அவனைத்தொழு, அவன் திருநாமத்தைச் சொல்லு,

---

பிராட்டியைத் தனக்கென நினைத்த இராவணன் பட்டது படுவார்கள் என்பதையும் இப்பாசுரம் உணர்த்துகிறது.

மற்ற உபாயங்களைவிட்டு, அவனையே பற்றவேணும் என்று இப்பாசுரம் சொல்லுகிறதாகில், முன் பாசுரங்களில் "சிந்தித்திரு" [41] "வாரி சுருக்கி...உணர்வார் காண்பரே" [47] "மருவாழி நெஞ்சே" [48] 'முயல்கிற்பார்க்கல்லால்.........ஆதி காண்பார்க்குமரிது" [49] "அரிய புலனைந்தடக்கி......புல்கில்...... எளிது" [50] "திருநாமம் எண்" [51] "தொழுது எழுதும் எழு" [58] என்று மற்ற உபாயங்களைப் பற்றச்சொல்லுவது போலே அருள்செய்வானேன்? எனில்: இப்பாசுரத்துக்கு விரோத$_4$மில்லாமல் காணும்போது, தே$_3$ஹயாத்ரை நடப்பதற்காகத் திருநாமஸங்கீர்த்தனம் முதலானவற்றைச் செய்யும்படி அருளுகிறாரேயொழிய உபாயபு$_3$த்$_3$தி$_4$யோடு அவற்றைச்செய்யச் சொல்லி விதி$_4$க்கவில்லை என்று கொள்ளலாம். அப்படியல்லாமல், கீ$_3$தையில் கண்ணன் மூன்று ஷட்கமாயிருக்கும் பதினெட்டு அத்தியாயங்களாலும் கர்மம் ஜ்ஞானம் ப$_4$க்தி

ஏகத்$_3$ரவ்யத்தை பி$_4$ந்நமாக்கின. (இலங்கை வைத்தான்) தாயையும் தமப்பனையும் பிரித்த பையல் மிடுக்கழிய. பிராட்டி அம்பெய்யுமன்று இவனால் போக்கலாவது. 60. "तत्तस्य सदृशं भवेत्" (தத் தஸ்ய ஸத்$_3$ருஶம் ப$_4$வேத்) கூர்மையை விஶ்வஸித்திருக்குமத்தனை; அவளுக்குப் பரியு மாபோலே பரியும் அவதார ஸௌலப்$_4$யம். பிறந்து முன்னே உன்னைப் பெறுகைக்கு யத்நம் பண்ணுநின்றான்; இனி ப்ரதிபத்தியே உள்ளது. 59.

60. சரணா மறைபயந்த தாமரையா னோடு
மரணாய மன்னுயிர்கட் கெல்லாம்—அரணாய
பேராழி கொண்ட பிரானன்றி மற்றறியாது
ஓராழி சூழ்ந்த வுலகு.

---

அவனை நினை என்றாற்போலே கீழ் பலபடியாகச் சொல்லிற் றெல்லாம் ஷட்கத்ரயத்தில் வார்த்தைபோலே, ஸ்வரூபம் விஶத$_3$மாகச் சொன்னவை; இது சரமஶ்லோகத்தில் நிலைபோலே, உணர்ந்தவன்று அவனல்லது உபாயமில்லை யென்கை. 59.

---

முதலான பல உபாயங்களையும் விதி$_4$த்து, 'எளியெனும்பனை நம்மால் இவை செய்யப்போமோ? இவற்றைச்செய்து கடைத் தேறுவதுதான் எப்படி?' என்னும் ஶோகத்தை அர்ஜுன னுக்கு விளைத்து, அதற்குப்பின் சரமஶ்லோகத்தை உபதே$_4$ஶித் தாற்போலே. இவரும், அனுஷ்டி$_2$க்க அரிதாய், தம் அத்யந்த பரதந்திர ஸ்வரூபத்திற்கு ஒவ்வாததான மற்ற உபாயங்களை முன் பாசுரங்களில் திருவுள்ளத்தை நோக்கி உபதே$_4$ஶிக்க, அதனால் ஸ்வரூபம் தெளிவடைந்து திருவுள்ளத்திற்கு ஶோகம் பிறக்க, இந்தப்பாசுரத்தில் ஸ்வரூபத்திற்கு அனுகு$_4$ணமான ஶரணாக$_3$தியை வெளியிடுவதாகவும் கொள்ளலாம். இச்சேதனன் தன் ஸ்வரூபத்தை உணர்ந்தவன்று அவனல்லது உபாயமில்லை என்பது இப்பாசுரத்தின் ஸாரார்த்த$_2$ம். இந்நூலின் ஸாரார்த்த$_2$மும் இதுவே. 59.



பதவுரை:— **சரண்**-(நாலுவகைப் புருஷார்த்தங்களுக்கும்) உபாயமாக, **மறை**—வேதத்தை, **பயந்த**—உபதேசிக்கப் பெற்ற, **தாமரையானோடு** — உந்தித்தாமரையில் பிறந்த பிரமனுடன் கூட, **மரணாய**—மரணத்தை இயற்கையாகக் கொண்ட, **மன் உயிர்கட்கு எல்லாம்**—நித்யமான ஜீவர் களுக்கெல்லாம், **அரண் ஆய** — ரக்ஷகமாயிருப்பவைகளை, **பேராழி கொண்ட பிரான் அன்றி** — பெரிய சக்கரத்தைக் கையில் கொண்ட எம்பிரானைத் தவிர, **மற்று**—(அவனைக் காட்டிலும்) வேறாயிருப்பதும், **ஓர் ஆழி சூழ்ந்த**—ஒப்பற்ற கடலினால் சூழப்பட்டிருப்பதுமான, **உலகு**—உலகிலுள் ளோர், **அறியாது**—அறியமாட்டார்கள்.

அவ:— அறுபதாம் பாட்டு. (சரணித்யாதி$_3$) **கீழ் அவனையே உபாயமென்றது; பேறு இவர்களதேயானபின்பு இவ்வாத்மாக்கள் உபாயமாலாகாதோ? என்னில்; கீழ் போக்கறியான்; இப்போது தாங்கள் படுகிறது இன்ன தாலே என்றறியார்கள்; வரக்கடவது அறியார்கள்.**

---

அவதாரிகை:— இவன் ப$_2$லபோ$_4$க்தாவாயிருக்க, அவன் ஸாத$_4$னமாகவேண்டுகிறதென்? என்ன; ஸர்வஜ்ஞனாய்,

---

60. *அவ:*—முன் பாசுரத்தில் அவனே உபாயம் என்றார்; "மோக்ஷமாகிற பயன் இச்சேதனனுடையது; ஆகையால் உபாயமும் இவனாலேயாகவேண்டியிருக்க, அவன் 'உபாயம் என்பானேன்?" என்னும் கேள்வியெழ, 'இவனுடைய தன்மையைப் பார்த்தால் தனக்குக்கீழ் நடந்தவற்றையும் அறியான்; இப்போது இப்பாடுபடுகிறது எதனாலே என்பதை யும் அறியான். இனி வரப்போவதையும் அறியான். ஸர்வேஶ் வரனான அவனேயென்னில், இவற்றையெல்லாம் அறியும் ஸர்வஜ்ஞனாயிருப்பதோடன்றியில் இவனுடைய தாழ்வுகளைத் தவிர்த்து வாழ்வளிக்கவல்ல ஸர்வஶக்தியுடையவனாயிருக் கிறான். அப்படியிருக்கும்போது அவன் உபாயமாகமுடியுமே யொழிய இவன் உபாயமாகமுடியுமோ?' என்கிறார்.

ஈஶ்வரன் இவை எல்லாம் அறிந்து பரிஹரிக்கவல்ல ஜ்ஞாந ஶக்த்யாதி$_3$களை உடையவன். a "பழகியான் தாளே" என்னுமாபோலே. ஆகையாலே அவனே உபாயமாமித்தனை; இத்தை லோகம் அறியாது என்கிறது.

---

ஸர்வஶக்தனுயிருப்பாளுெருவன் உபாயமாமித்தனைபோக்கி, அஜ்ஞனுய், அஶக்தனுன இவனுல் செய்யலாவதுண்டோ? என்கிருர்.

---

இப்பாசுரத்தை மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது, "உயிர்களுக்கெல்லாம் ரக்ஷகனுன ஸர்வேஶ்வரனைத் தவிர வேறுென்றையும் உலகம் அறியாது" என்னும் பொருள் தோன்றும். ஆப்பான் என்பவர் இப்பொருளைச்சொல்லி, "இவ்வுலகம் எம்பெருமானையன்றி அறியாமலிருந்ததோ ?" என்று ஜீயரைப் பரீக்ஷிப்பதற்காகக் கேட்க, அவரும் 'நீரே பொருளை உரைப்பீர்' என்று கேட்க, "உலகம் என்பது உயர்ந்தோரைக் குறிக்குமாகையால், உயர்ந்தோர் எம்பெருமானை யன்றி அறியார்" என்று ஆப்பான் உரைக்க, இதுபற்றி பட்டரைக் கேட்க, "உலகு என்னும் பத$_3$ம் உயர்ந்தோரைக் குறிப்பதாகில் 'ஓராழிசூழ்ந்த உலகு' என்று விஶேஷித்திருப்பது பொருந்தாது. இப்படி விஶேஷித்திருப்பதாலேயே உயர்ந்தாரோடு தாழ்ந்தாரோடு வாசியற எல்லா உலகினரையும் இது குறிக்கிறதென்பது தெளிவு. ஆகையால், மன்னுயிர்களுக் கெல்லாம் அரணுய - ரக்ஷகமாயிருப்பவைகளை ஸர்வேஶ்வரன் அறிவானேயொழிய உலகம் அறியாது" என்று பட்டர் உணர்த்தினர் என்னும் ஐதிஹ்யம் பெரியவாச்சான்பிள்ளையுரையில் காணத்தக்கது.

*வ்யா:—(சரணு மறை பயந்த)* தாங்கள் விரும்பிய பலன்களைப் பெறலாம்படியான உபாயங்களை அறிவிக்கையாலே வேத$_3$ம் 'சரண்' [உபாயம்] எனப்படுகிறது. இப்படிப்பட்ட வேத$_3$த்தை உலகினர்க்கு உபதே$_3$சிக்கையாலே பிரமனை மறை பயந்தவன் என்கிறது. இல்லாவிடில் வேத$_3$த்தை அபௌருஷேயம் என்பது ஒட்டாதே. 'பயந்த' என்றது 'பயக்கப் பெற்ற' என்றபடியாய், தனக்கும் பிறர்க்கும் நன்மைக்காக

---

a நான்-திருவ 22.



வ்யா:— (சரணுவித்யாதி$_3$) எல்லார்க்கும் ஹிதத்தைச் சொல்லக்கடவதான வேத$_3$த்தை ஓதுவிக்கப்பட்ட ப்ரஹ்மாவோடு. "சரணுமறைபயந்த" என்றத்தை. "அரணுய" என்றத்தோடே கூட்டி ஈஶ்வரனுக்கு விஶேஷணமாக்கவுமாம். (மரணுய மன்னுயிர்கட்கெல்லாம்) கல்பாதி$_3$யிலேயுண்டாய், கல்பாந்தத்திலில்லையாகிற ப்$_3$ரஹ்மாவோடேகூட 61. "न जायते म्रियते वा" (ந ஜாயதே ம்ரியதே வா) 62. "जायस्व म्रियस्व" (ஜாயஸ்வ ம்ரியஸ்வ) என்று ஜநநமரண த$_4$ர்மாக்க

---

உரை:— 'அபி$_4$மதஸித்$_3$தி$_4$க்கு அநுரூபமான உபாயங்களை அறிகைக்கு ஸாத$_4$னமான வேத$_3$த்தை நாட்டுக்கு உபதே$_3$ஶமுகே$_2$ந உண்டாக்கின ஜ்ஞாநமாஹாத்ம்யத்தை உடையோம்' என்று அபி$_4$மானித்திருக்கிற ப்$_3$ரஹ்மா

---

வேத$_3$ங்களை எம்பெருமானுலே ஓதுவிக்கப்பட்ட பிரமன் என்கிறதாகவுமாம். ஆப்பான் நிர்வாஹத்தில் "மறை பயந்த..........மன்னுயிர்கட்கெல்லாம் அரணுய........பிரான்" என்று ஸர்வேஶ்வரனுக்கு விஶேஷணமாகவுமாம். *(மறை பயந்த தாமரையானேடு)* 'இப்படிப்பட்ட வேத$_3$த்தையும் உபதே$_3$சிக்கவல்ல ஞானப்பெருமையை உடையேன்' என்னும் அபி$_4$மானத்தையுடைய பிரமன். *(தாமரையான்)* 'எம்பெருமானிடமிருந்து நேரே தாமரையில் பிறந்தோம்' என்று அபி$_4$மானித்திருப்பவன். *(தாமரையானேடு மரணுய உயிர்கட்கெல்லாம்)* கல்பத்தின் தொடக்கத்தில் உண்டாகி, கல்பத்தின் முடிவில் அழியும் பிரமனேடு, *"ஜாயஸ்வ ம்ரியஸ்வ"* என்று முதல் கணத்தில் தோன்றி மறுகணத்தில் அழியும் கிரிமிகளோடு வாசியற எல்லா உயிர்களுக்கும். *(மரணுய உயிர்கள்)* மரணத்தையே இயற்கையாக உடைய உயிர்கள் என்று ஶரீரத்தின் தன்மையைச் சொல்லுகிறது. *(மன்னுயிர்)* நிலை நிற்கும் உயிர்கள் என்ற ஆத்மாவின் தன்மையைச் சொல்லுகிறது. *"ந ஜாயதே ம்ரியதே வா கத$_3$ாசித்"* [கீ$_3$தை 2-20] [(ஆத்மா) ஒருபோதும் பிறக்கிறதுமில்லை; இறப்பதுமில்லை] என்று சொல்லப்பட்டதன்றே. *(மரணுய மன்னுயிர்கட்கெல் லாம்)* மரணத்தையே இயற்கையாக உடையவர்கள் என்றது

ளான உயிர்களுக்கெல்லாம். (அரணாய) ரக்ஷகமான. (பேராழியித்யாதி$_3$) கீழ் பெருமாள் ப்ரஸ்துதராகையாலே கடலை வெதுப்பித்து, தமக்கு வசமாக்கிக்கொண்ட சக்ரவர்த்தித் திருமகனென்னவுமாம். கையிலே திருவாழியையுடையனாய் உபகாரகனான ஸர்வேஶ்வரனுடைய உபாயப$_4$ாவத்தை அறிவர். (மற்றறியாதோராழி சூழ்ந்த உலகு) மற்றாயிருந்துள்ள கடல்சூழ்ந்த லோகமானது உபாயமாக அறியாது.

(சரணாமறைபயந்த) அபி$_4$மதஸித்$_3$தி$_4$களுக்கடைத்த உபாயபே$_4$த$_3$ங்களையுடைய வேத$_3$ங்களை ஜக$_3$த்துக்கு ஓதுவிக்கும் ப்$_3$ரஹ்மவித$_3$ாம்வரனான ப்$_3$ரஹ்மா மந்த்ரக்ருத் என்பது. (மரணாய) சாவது பிறப்பதாகிற ஶரீரத$_4$ர்மம். (மன்னுயிர்) ஆத்மத$_4$ர்மம்; மரணத$_4$ர்மங்களுடைய அஜ்ஞ

வோடே கூட மரணத$_4$ர்மாக்களாகையாலே அறிவுகேடராய், நித்யமான ஸ்வரூபத்தை உடையரான ஆத்மாக்களுக்

மற்றுள்ள தாழ்வுகளுக்கெல்லாம் உபலக்ஷணமாய், இவர்களுடைய அறிவுகேடு அஶக்தி முதலானவற்றைக் காட்டுகிறது. (*அரணாய*) இவர்களுக்கு ரக்ஷகமானவற்றை. ஆப்பான் நிர்வாஹத்தில் "அரணாய பிரான்" என்று கூட்டுவது. (*பேராழி கொண்டபிரானன்றி*) ரக்ஷணத்துக்குறுப்பாக மிகப்பெரியவனான ஸுதர்சனாழ்வானை த$_4$ரித்த பெருமானே இவற்றுக்கு ரக்ஷையானவற்றை அறிவான். (*பிரான்*) உபகாரம்செய்தவன். (*பேராழி கொண்ட பிரான்*) முன் பாசுரத்தில் ராமபிரானைச் சொல்லுகையாலே, இங்கேயும், 'பெரிய கடலை வெதுப்பித் தன்வசப்படுத்திக்கொண்ட பிரான்' என்று அப்பிரானையே சொல்லுகிறதாகவுமாம். (*மரணாய மன்னுயிர் — பேராழி கொண்ட பிரான்*) இவற்றின் அஜ்ஞான அஶக்திகளையும், அவனுடைய ஜ்ஞானஶக்திகளையும் சொல்லுகிறது. (*மற்று ஓராழிசூழ்ந்த உலகு அறியாது*) அவனுக்கு எதிர்த்தட்டாயிருக்கும் உலகம் தனக்கு நன்மைகளைத்தான் அறியாது. (ஓராழி சூழ்ந்த உலகு) ஒப்பற்ற கடலாலே சூழப்பட்ட உலகம். 'உலகம்' என்றது உலகிலுள்ளாரைக் குறிக்கிறது.



னாய், அஶக்தனாய். அரணானவை — இவற்றை விநாஶகன் அறியுமத்தனை. 63. "मूढोऽयं नाभिजानाति" (மூடோ$_4$யம் நாபி$_4$ஜாநாதி). 64. "वेदाहं" (வேத$_3$ாஹம்). ஆப்பான், ஜீயர்க்கு, "ஜீயரே! இவ்வுலகு எம்பெருமானையல்லாது இருந்ததோ?" என்ன; "அதுக்குப் பொருளென்?" என்ன; "உயர்ந்தோர் எம்பெருமானை யல்லதறியார்" என்ன; இத்தை ப$_4$ட்டரைக் கேட்க, "அதுக்கொரு குற்றமுண்டு. 'ஓராழி சூழ்ந்த' என்று விஶேஷிக்கவொண்ணாது" என்ன; 'இதுக்குப் பொருளோ?' என்ன; "ஜீயரே நான் சொல்லும் பொருளென்?" என்ன; "உலகறியாது" என்ன; "அதுவே பொருள்" என்றார். இத்தைப் பிள்ளையும் ஜீயருக்கு உரைக்க, 'திருக்கலிகன்றிதாஸர் மறந்ததை உணர்த்தினார்' என்றருளிச் செய்தார். 60.

61. உலகு முலகிறந்த வூழியும் ஒண்கேழ்
விலகு கருங்கடலும் வெற்பும் — உலகினில்
செந்தீயும் மாருதமும் வானும் திருமால்தன்
புந்தியி லாய புணர்ப்பு.

கெல்லாம் ரக்ஷையானவற்றை, ரக்ஷணபரிகரமான பெரிய திருவாழியை உடையனான உபகாரகனையல்லது, வேறு அத்$_3$விதீயமான கடலாலே சூழப்பட்ட பூ$_4$லோகத்திலுள்ள ப்ராணியானது அறியாது.

இத்தால் சிறியாரோடு பெரியாரோடு வாசியறத் தந்தாமுடைய ரக்ஷணம் தாங்களறியமாட்டார்கள்; இவனே ஸர்வர்க்கும் ரக்ஷணப்ரகாரம் அறியுமவன் என்றதாய்த்து. 60.

ஆக, இப்பாசுரத்தால் "சிறியாரோடு பெரியாரோடு வித்தியாசமில்லாமல் இவ்வுலகிலுள்ளாரனைவரும் தங்களுக்கு நன்மை யெது என்பதைத் தாங்களறியார்கள். ஸர்வேஶ்வரன் ஒருவனே இவர்களனைவர்க்கும் நன்மையை அறியவல்லவன்' என்கிறது. 60.

**பதவுரை:—** **உலகும்** — எல்லா லோகங்களும், **உலகிறந்த ஊழியும்**—உலகம் அழிந்தபோதும் இருக்கும் காலமும், **ஒண் சேழ் விலகு கரும் கடலும்**—அழகிய நிறத்தையுடையதாய், அலையெறியாநிற்பதாய், கறுத்திருப்பதான கடலும், **வெற்பும்**—(உலகிற்கு ஆத$_4$ாரமான) மலைகளும், **உலகினில்** — லோகத்தில் காணப்படுகிற, **செம் தீயும்**—சிவந்த அக்$_3$நியும், **மாருதமும்**—காற்றும், **வானும்**—ஆகாசமும், **திரு மால் தன்**—பிராட்டியுடன் கூடிய எம்பெருமானுடைய, **புந்தியில் ஆய**—ஸங்கல்பத்தினால் உண்டாகிய, **புணர்ப்பு**—ஸ்ருஷ்டி.

**அவ:— அறுபத்தோராம் பாட்டு.** (உலகு) **ஹிதத்திலே அறியாததுக்கு. தந்தாமுடைய உத்பத்தியிலே வைத்து அறிவுணர்த்துகிறார்.**

---

**அவதாரிகை:—** அவனையொழிய இவை தந்தாமுக்கு ஹிதமறியாதென்றீர்; அவன்றான் இவைதன்னை நோக்க வேண்டுமென்கிற ஹேதுவென்? என்னில்; பெற்றவனையொழிய வளர்ப்பாருண்டோ? என்கிறார்.

---

61. *அவ:*—அவனைத்தவிர மற்ற உயிர்கள் தங்களுக்கு நன்மையைத் தாங்களறியார்கள் என்றீர். அவன்தான் இவைகளை ரக்ஷிக்கவேண்டுமென்று நிர்ப்பந்தமென்ன? எனில்; இவற்றைப் பெற்றவன் அவனாகையாலே அவன் நோக்கா-தொழியான் என்கிறார்.

*வ்யா:*—*(உலகும்)* பூ$_4$மி முதலான உலகங்களும். *(உலகிறந்த ஊழியும்)* உலகங்களெல்லாம் காலவசப்பட்டு அழிந்தபோதுமிருக்கும் ஸம்ஹாரகாலமும். இத்தால் இந்த லீலாவிபூ$_4$தியில் காலம் அநித்யம் என்னும் பக்ஷம் ஆழ்வார் உகந்ததன்று என்று தெளிவாகிறது. *(ஒண்கேழ் விலகு கருங்கடலும்)* அழகிய நிறத்தையுடையதாய், அலையெறிவதாய், கண்குளிரக் கறுத்திருப்பதான கடலும். *(வெற்பும்)* பூ$_4$மிக்கு ஆணியடித்தாற்போலே ஆத$_4$ாரமாயிருக்கும் குலமலைகளும். *(உலகினில் செந்*



**வ்யா—** (உலகும்) **லோகமடங்கத் தானே ஸம்ஹரித்த காலமும். (ஒண்கேழ்) அழகிய நிறத்தையுடையதாய் அலையெறியாநின்ற கடலும். லோகத்துக்காத$_4$ாரமான மலையும். (செந்தீயித்யாதி$_3$) இவ்வோக்கமான கடலிலே லோகம் அலைந்து நோவுபடப்புக்கவாறே, 'ஐயோ! நோவுபடாநின்றதே!' என்று அதுக்கு து$_3$:க்கி$_2$த்த பிராட்டிக்கு ப்ரியமாகத் தன் ஸங்கல்ப ஜ்ஞாநத்தாலே ஸ்ருஷ்டித்து.**

(ஒண்ணித்யாதி$_3$) **தெளிந்து அழகியதாய்ச் சலிக்கின்ற கடலும்,** (வெற்பும்) **பூ$_4$மிக்கு ஆணியடித்தாற்போலே இருக்கும்.** (திருமாலித்யாதி$_3$) **தாய்க்கு ப்ரியமாக ப்ரஜைகளை நோக்குமித்தனையிறே. இத்தலை அறிந்தோ ஸ்ருஷ்டித்தது? விலக்காமையே உள்ளது. 61.**

---

**உரை:—** பூ$_4$ம்யாதி$_3$களான லோகங்களும், லோகங்களெல்லாம் காலசேஷமாம்படி அழிந்துகிடக்கிற ஸம்ஹார காலமும் அழகிய நிறத்தையுடைத்தாய், அலையெறியாநின்றுள்ள ஶ்ரமஹரமான கடலும், பூ$_4$மிக்கு ஆணியடித்தாற்போலிருக்கிற குலபர்வதங்களும், பின்னையும் லோகத்திலுண்டான சிவந்த நிறத்தையுடைய தேஜ:பதா$_3$ர்த்த$_3$ங்களும், வாயுவும், ஆகாசமும் இவையெல்லாம் பிராட்டிக்குகப்பாக ஜக$_3$த்ஸ்ருஷ்டியிலே ஒருப்பட்ட ஶ்ரிய:பதியுடைய ஸங்கல்பகல்பிதமான வகுப்பையுடையன. 61.

---

*தீயும்)* உலகிலேயுள்ள சிவந்த ஒளிப்பொருள்களும். *(மாருதமும்)* உலகினர் உயிர்வாழ உதவும் காற்றும். *(வானும்)* மற்ற அனைத்துக்கும் இடமளிக்கும் ஆகாயமும். இங்கு இவற்றைச் சொன்னது ப்ரக்ருதிகார்யமான மஹான், அஹங்காரம், தந்மாத்ரைகள், இந்த்$_3$ரியங்கள் முதலான மற்ற பொருள்களுக்கும் உபலக்ஷணம். *(திருமால் தன் புந்தியிலாய புணர்ப்பு)*பிராட்டியை உகப்பிப்பதற்காக உலகைப் படைப்பதில் ஈடுபட்ட லக்ஷ்மீநாத$_2$னின் ஸங்கல்பத்தாலுண்டான பிரிவுகளையுடைய ஸ்ருஷ்டிகளாகும். ஜீவர்கள் அறியாமலும், அபேக்ஷிக்காமலுமிருக்க, அவர்கள் தடுக்காமலிருந்ததையே பற்றாசக்கொண்டு அவர்களை ரக்ஷிக்கையாலே அவனே உபாயம் என்று கருத்து.

*(திருமால் தன் புந்தியிலாய புணர்ப்பு)* 'திருமால் தன்' என்று பிராட்டியோடு கூடிய ப4க3வானின் ஸ்ருஷ்டிகள் என்கையாலே ஜக3த்ஸ்ருஷ்டி முதலானவற்றிலே பிராட்டிக்கும் ஒருவகையான அந்வயம் உண்டென்று உணர்த்தப்படுகிறது. 'திருமால்' என்று பிராட்டியை விஶேஷணமாகவும் எம்பெருமானை விஶேஷ்யமாகவும் நிர்த்தே3ஶிக்கையாலே இவளுடைய அந்வயம் அப்ரதா4நமானது என்றும், அவனுடையதே ப்ரதா4நமானது என்றும் காட்டப்படுகிறது. எல்லாவுலகையும் தனக்கு ஶரீரமாகவுடையவன் அவனேயாகையாலே, அவனுக்கே 'ப3ஹு ஸ்யாம்' [நான் பலவாகக் கடவேன்] என்கிற ஸங்கல்பமும், உலகிற்கு நிமித்தோபாதா3ன காரணமாயிருக்கும் தன்மையும் கூடும். இவளுக்கு அவை கூடா. ஜக3த்ஸ்ருஷ்டியில் அவனைத் தூண்டுவதும், ஸ்ருஷ்டி லீலாரஸத்தில் அவனோடு பங்குபெறுவதும் இவளுக்குள்ள அப்ரதா4நமான அந்வயங்கள். *"யதா2 முக்தஸ்ய ப4க3வதா பரமஸாம்யே ஶ்ருதிஸ்ம்ருத்யாதி3ஸித்3தே4பி ஜக3த்3வ்யாபார வர்ஜமிதி லக்ஷணபூ4தைராகாரைர் வைஷம்யம் ஸ்தா2ப்யதே ததே2ஹாபி ப4வதி'* [முக்தன் பரமபுருஷனோடு பரமஸாம்யமுடையவனென்பது ஶ்ருதிஸ்ம்ருதி ஸித்3த4மாயினும், ஜக3த் வ்யாபாரம் தவிரவே பரமஸாம்யம் என்று ப்ரப்3ரஹ்மலக்ஷண பூ4தமான ஆகாரங்களால் எப்படி வேறுபாடு ஸ்தா2பிக்கப்படுகிறதோ, அப்படியே பிராட்டி விஷயத்திலும் கொள்ள வேண்டும்.] என்று சது:ச்லோகி இரண்டாம் ஶ்லோகபா4ஷ்யத்தில் அருளிச்செய்கையாலே தே3சிகருக்கும் இவ்விஷயத்தில் கருத்து வேற்றுமையில்லை. ஸகல பூர்வாசார்யர்களின் கருத்தும் இதுவேயாகும். இவ்வந்வயத்தை இல்லைசெய்வாரும் யாருமில்லை.

"ஈஷத் த்வத்கருணா நிரீக்ஷண ஸுதா4
ஸந்து4க்ஷணாத்2 ரக்ஷ்யதே
நஷ்டம் ப்ராக் தத3லாப4தஸ்
த்ரிபு4வநம் ஸம்ப்ரத்யநந்தோத3யம் ।
ஶ்ரேயோ ந ஹ்யரவிந்த3லோசந
மந:காந்தாப்ரஸாத3ாத்3ருதே
ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்4வஸு
ந்ருணாம் ஸம்பா4வ்யதே கர்ஹிசித் ॥"



[அந்தக் கடாக்ஷம் இல்லாமையாலே, முன் நஶித்துக்கிடந்ததான மூவுலகமும், இப்போது சிறிதுபோது உன்னுடைய கருணைகடாக்ஷமாகிற அம்ருதவர்ஷத்தினால் அளவற்ற பெருமையை உடையதாகும்படி ரக்ஷிக்கப்படுகிறது. மனிதர்களுக்கு ஐஶ்வர்யம், கைவல்யம், பரமபத3ம் இவைகளில் மேன்மையானது தாமரைக்கண்ணனின் மனத்துக் கினியவளான ஸ்ரீதே3வியின் அருளில்லாமல் ஏற்படாதன்றோ.] என்று ஆளவந்தாரும்,

ஸ்வஸ்தி ஸ்ரீர் தி3ஶதாத3ஶேஷஜக3தாம்
ஸர்க்கோ3பஸர்க்க3 ஸ்தி2தீ:
ஸ்வர்க்க3ம் து3ர்க்க3திமாபவர்க்கி3கபத3ம்
ஸர்வம் ச குர்வந் ஹரி: ।
யஸ்யா வீக்ஷ்ய முக2ம் தத3ிங்கி3தபராதீ4நோ வித4த்தேऽகி2லம்
க்ரீடே3யம் க2லு நாந்யதா2ऽஸ்ய ரஸதா3
ஸ்யாதை3கரஸ் யாத் தயா ॥

[எல்லாவுலகையும் படைத்தளித்து அழிப்பதையும், ஸ்வர்க்க3 நரகமோக்ஷங்களைக் கொடுப்பதையும் செய்யும்போது ப4க3வான் எவளுடைய திருமுகமண்டலத்தைப் பார்த்துக்கொண்டு அதனுடைய இங்கி3தத்திற்கு வசப்பட்டவனாய் எல்லாக் காரியங்களையும் செய்கிறானோ, அந்தப்பிராட்டி (நமக்கு) மங்க3ளத்தை அளிக்கட்டும்; ப4க3வான் அவளுடன் ஒரே அபி4ப்ராயத்தை உடையவனாயிருக்கிறபடியால், அவளுடைய இங்கி3தபராதீ4னனாகக் காரியங்களைச் செய்யாவிடில் அக்காரியங்கள் ரஸத்தை அளிக்கமாட்டா.] என்று ஆழ்வானும்

"யத்3ப்4ருப4ங்க3ா: ப்ரமாணம் ஸ்தி2ரசரரசநாதாரதம்யே
முராரே:"

[எவளுடைய புருவநெறிப்புகள் ப4க3வானுடைய ஸ்தா2வரஜங்ஜங்க3ம ஸ்ருஷ்டியிலுள்ள ஏற்றத்தாழ்வுகளுக்குக் காரணமோ...] என்றும்.

"நம: ஸ்ரீரங்க3நாயக்யை யத்3ப்4ருவிப்4ரமபே4த3த: ।
ஈஶேஶிதவ்ய வைஷம்ய நிம்நோந்நதமித3ம் ஜக3த் ॥"

[எவளுடைய புருவநெறிப்புகளின் வித்யாசத்தாலே இவ்வுலகம் நியமிப்பவர்களும், நியமிக்கப்படுபவர்களுமாகிற பேத3த்தினால் ஏற்றத்தாழ்களை உடையதாயிருக்கின்றதோ அப்படிப்பட்ட ஸ்ரீரங்க3நாயகிக்கு நமஸ்காரம்.] என்றும்,

**ஶ்ரியை ஸமஸ்தசித3சித்3 விதா4நவ்யஸநம் ஹரேः ।**
**அங்கீ3காரிபி4ராலோகைஸ் ஸார்த்த2யந்த்யை**
**க்ருதோऽஞ்ஜலிः ॥**

[ஸகலசேதநாசேதனங்களையும் படைப்பதால் ப4க3வானுக்குண்டாகும் சிரமத்தைத் தன் அங்கீ3காரத்தைக் காட்டும் கடாக்ஷங்களாலே ஸபலமாகச் செய்கின்ற பிராட்டியின் பொருட்டு அஞ்ஜலியானது (அடியேனால்) செய்யப்பட்டது.] என்றும்,

**உல்லாஸபல்லவிதபாலிதஸப்தலோகீ-**
**நிர்வாஹகோரகிதநேமகடாக்ஷலீலாம் ।**
**ஸ்ரீரங்க3ஹர்ம்யதலமங்க3ளதீ3பரேகா2ம்**
**ஸ்ரீரங்க3ராஜமஹிஷீம் ஶ்ரியமாஶ்ரயாமः ॥**

[ஏழுலகங்களையும் (ப4க3வான்) படைத்தவுடன் தளிர்விடுவதாகவும், (அவனாலே) ரக்ஷிக்கப்பட்ட ஏழு உலகங்களின் நிர்வாஹத்தினால் மொட்டுவிடுவதாகவுமிருக்கிற அர்த்த4 கடாக்ஷலீலையை உடையவளும் திருவரங்க மாளிகைக்கு (ஒரு) மங்கள தீபக்கொழுந்து போலிருப்பவளும், ஸ்ரீரங்க3நாத2னுடைய தி3வ்ய மஹிஷியானவளுமான ஸ்ரீதே3வியை ஆஶ்ரயிக்கிறோம்.] என்றும் ப4ட்டரும் ப4க3வானுடைய ஜக3த்3வ்யாபாராதி3 ஸர்வகார்யங்களிலும் இவளுக்கு ப்ரேரகத்வரூபமான அந்வயம் உண்டென்று அருளிச்செய்தார்களன்றோ. இவ்விடத்தில் "'இப்படி ஜக3த்காரணத்வத்தில் இவளுக்கு அந்வயமுண்டோ?' என்று ப்ரஶ்னம் பண்ணின நடாதூரம்மாளைக் குறித்துப் பிள்ளான் 'இவ்வர்த்த2த்தில் ஸந்தே3ஹமுண்டோ?' 'ஆவாப்4யாம் கர்மாணி கர்த்தவ்யாநி ப்ரஜாஶ்ச உத்பாத3யிதவ்யா:' [நம்மிருவராலும் கர்மங்கள் செய்யப்பட வேண்டும். குழந்தைகளும் பிறப்பிக்கப்படவேண்டும்.] என்று ப்ரமாணம் சொல்லுகையாலே ஸஹத4ர்ம சாரிணியான இவளுக்கு அந்வயமுண்டு' என்று அருளிச்செய்தார்" என்னும் ஐதிஹ்யம் அநுஸந்தி4க்கத்தக்கது. 61.



**62. புணர்மருதி னூடுபோய்ப் பூங்குருந்தம் சாய்த்து**
**மணமருவ மால்விடையேழ் செற்று—கணம்வெருவ**
**ஏழுலகந் தாயனவு மெண்டிசையும் போயினவும்**
**சூழரவப் பொங்கணையான் தோள்.**

**பதவுரை—புணர் மருதின்**—(ஒன்றோடொன்று) இடைவெளியின்றிச் சேர்ந்திருக்கிற இரு மருதமரங்களின், **ஊடு போய்**—நடுவே தவழ்ந்து சென்றும், **பூம் குருந்தம் சாய்த்து**-அழகிய குருந்தமரத்தைத் தள்ளியும், **மணம் மருவ**—(நப்பின்னைப் பிராட்டியை) மணம் புரிவதற்காக, **மால் விடை ஏழ் செற்று**—பெரிய எருதுகள் ஏழையும் கொன்றும், **கணம் வெருவ**—தேவாஸுரர்களெல்லாம் 'என்வருகிறதோ' என்று அஞ்சும்படியாக, **ஏழ் உலகம் தாயனவும்**—ஏழு லோகங்களையும் கடந்தவையும், **எண் திசையும் போயினவும்**—எட்டு தி3க்குகளிலும் வியாபித்தவையும், **சூழ் அரவ**-பரந்த திருவநந்தாழ்வானாகிற, **பொங்கு அணையான்**—கிளர்ந்த படுக்கையையுடையவனுடைய, **தோள்**—திருத்தோள்களாகும்.

**அவः— அறுபத்திரண்டாம் பாட்டு.** (புணர்) **உதீபந்நமானபின் இவரதோ தம் கார்யத்துக்குக் கடவராயிருக்கிறது என்கிறது.**

---

**அவதாரிகை:—** இவற்றை உண்டாக்கித் தான் கடக்கவிருக்கையன்றிக்கே, இவற்றைக் களைபிடுங்கி நோக்குவானும் அவனேயென்கிறார்.

---

62. *அவதாரிகை:*—இப்படி இவற்றை உண்டாக்கிவிட்டுத் தான் தூ3ரத்திலிருக்கின்றானோ? இவைகளுடைய விரோதி4களை நீக்கி ரக்ஷிப்பவனும் இவனேயன்றோ என்கிறார்.

*உரை:—(புணர்மருதின் ஊடுபோய்)* இடைவெளியில்லாமல் ஒன்றோடொன்று ஒட்டிக்கிடக்கும் இரட்டை மருதமரங்களினிடையே இடைவெளிகண்டு அவற்றினிடையே போய் அவற்றை முறித்து நள கூப3ரர்களுக்கு ஶாபவிமோசனத்

**வ்யா:—** (புணரித்யாதி3) **ஒன்றென்னலாம்படி நிர்விவர மாயிருந்த மருதினிடை போய்.** (பூங்குருந்தம் சாய்த்து) **த3ர்ஶநீயமான குருந்தத்தைச் சாய்த்தும்.** (மணமித்யாதி3) **நப்பின்னைப்பிராட்டியுடைய பாணிக்3ரஹண மங்க3ளமானது தலைக்கட்டும்படிக்கீடாகப் பெரிய எருதுகள் ஏழையும் செற்று.** (கணமித்யாதி3) **65. “ஸங்கைஸ்ஸுராண்’** (ஸங்கை4ஸ்ஸுராணும்)

---

**உரை:—** இடைவெளியறப் பொருந்திநின்ற யமளார்ஜுனங்களின் நடுவே ஊடறுத்துக்கொண்டு தவழ்ந்துபோய் இலையும் கொம்பும் தெரியாதபடி பூத்துக்கிடந்த குருந்தத்தைத் தள்ளிப்பொகட்டு, பிராட்டியைக் கைப்பிடிக்கையாகிற கல்யாணம் தலைக்கட்டுகைக்காகப் பெரிய வடிவையுடைய ருஷப4ங்களேழையும் முடித்து, **“ஸங்கை: ஸுராண்”**

---

தையும், அவற்றிலே ஆவேஶித்திருந்த அசுரர்களுக்கு அழிவையும் உண்டாக்கின விருத்தாந்தத்தைக் கூறுகிருர். “பொய்ம்மாய மருதான அசுரரைப் பொன்றுவித்து” [பெரியாழ்திரு 3-1-3] என்று பெரியாழ்வார் அருளிச்செய்கையாலே இவற்றில் அஸுராவேஶமும் உண்டு. களையறுத்ததைக் காட்டும் பிரகரணமாகையாலே இவருக்கும் விவக்ஷிதமாயிருக்கத்தகும். *(பூங்குருந்தம் சாய்த்து)* இலையும் கொம்பும் தெரியாதபடி பூத்துக்கிடக்கும் குருந்தமரமாய் நின்றுன் ஓரசுரன்—‘பூக்களைக் கண்டு கண்ணன் மயங்கி நிற்கும்போது அவன்மேலே விழுந்து அவனை அழிப்போம்’ என்னும் நினைவுடன். அம்மரத்தைச் சாய்த்து அவனை அழித்து அவனுடைய நினைவை அவனேடே போம்படி பண்ணிய செயலைச் சொல்லுகிருர். *(மணம் மருவ மால் விடை ஏழ் செற்று)* நப்பின்னைப் பிராட்டியை மணம் செய்வதற்காக, அவளுடைய தந்தையாலே வளர்க்கப்பட்டிருந்த அஸுராவேசமுள்ள பெரிய எருதுகள் ஏழையும் அழித்த காரியத்தைக் கூறுகிருர். *(கணம் வெருவ ஏழுலகம் தாயனவும்)*

**ஸங்கை4ஸ் ஸுராணும் தி3வி பூ4தலஸ்தை2ஸ்**
**தத2ா மநுஷ்யைர் க3க3நே ச கே2சரை: ।**
**ஸ்துத: க்ரமாந் ய: ப்ரசகார ஸர்வத3ா**
**மமாஸ்து மாங்க3ள்யவிவ்ருத்3த4யே ஹரி: ॥** [விஷ்ணுதர்மம்]



**என்கிறபடியே அநுகூலரோடு ப்ரதிகூலரோடு வாசியற “இது என்னுகப்புகுகிறதோ!” என்று வெருவும்படிக்கீடாக ஏழு உலகையும் அநாயாஸேந கடந்தனவும். எட்டு தி3க்குக்களிலும் போய் வ்யாபித்தனவும்.** (சூழித்யாதி3) **பரந்து. மென்மை குளிர்த்தி நாற்றங்களையுடைத்தாயிருந்துள்ள திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவன்.**

**அவ:— களைபிடுங்கும்படி.**

**வ்யா:—** (பூங்குருந்தம்) **பூவைக்காட்டி அந்யபரதை பண்ணி வஞ்சிக்கப்பார்க்கை.** (மணமித்யாதி3) **தனக்கு வந்த கர்மத்தைத் தீர்த்தபடி.** (ஏழுலகித்யாதி3) **பிராட்டிக்குச் செய்யும் செயலை இந்த்3ரனுக்குச் செய்கை.** (எண்டிசையும் போயினவும்) **தி3க்குகளை வெளியடைக்கை.** (சூழர

---

**(ஸங்கை4: ஸுராணும்)** என்கிறபடியே அனுகூலப்ரதிகூல விப4ாக3மற ஸர்வப்ராணிக3ணமும் ‘என்னுகத் தேடுகிறதோ?’ என்று நடுங்கும்படி ஸப்தலோகங்களையும் வருத்தமற அளந்துகொண்டனவும், எட்டு திக்குகளிலும்போய் வியாபித்தனவும், விஸ்த்ருதனய், மென்மை குளிர்த்தி நாற்றங்களை

---

[ஸ்வர்க்க3த்தில் தே3வஸமூஹங்களாலும், அப்படியே பூ4மி ப்ரதே3ஶத்திலிருக்கும் மனுஷ்யர்களாலும், ஆகாசத்தில் ஆகாஶ ஸஞ்சாரிகளாலும் துதிக்கப்பட்டவனுய் எந்த ப4க3வான் திருவடிகளை வைத்தருளினுனே, (திரிவிக்கிரமாவதாரம்செய்த) அந்த ஹரி எனக்கு எப்போதும் மங்க3ளங்களின் விருத்தி4யின் பொருட்டு ஆகட்டும்.] என்கிறபடியே தே3வர்முதலான அநுகூலக3ணங்களும், அஸுரர் முதலான பிரதிகூலக3ணங்களும், மற்றும் உதா3ஸீநக3ணங்களும் ‘என் வருகிறதோ?’ என்று நடுங்கும்படியாக ஏழுலகங்களையும் சிரமமில்லாமல் கடந்தனவும். *(எண்டிசையும் போயினவும்)* எட்டு தி3க்குகளிலும் வியாபித்தனவும். அணைக்கும் பிராட்டிக்காக ஏறடர்த்துக் காரியம் செய்ததுபோலே, அநந்யப்ரயோஜனனை இந்திரனுக்கும் மாவலியையடக்கிக் காரியம் செய்ததைக் குறிப்பிடுகிருர். *(எண்டிசையும் போயின)* என்று விஶ்வரூபப்ரத3ர்ஶன ஸமயங்

வித்யாதி3) இப்படிப் படுக்கையில் கண்வளரப்பெருதே அலமந்து திரிவதே! 66. "पाण्डरस्यातपत्रस्य छायायां जरितं मया" (பாண்டூரஸ்யாதபத்ரஸ்ய ச2ாயாயாம் ஜரிதம் மயா) ஸிம்ஹாஸநத்திலிருக்க அவஸரம் பெற்றிலன்; இக்காலத்திலேயிறே நிழலிலே முத்துக்குடையிடுவது. 62.

**63. தோளவனை யல்லால் தோழாஎன் செவியிரண்டும்**
**கேளவன தின்மொழியே கேட்டிருக்கும் – நாநாளும்**
**கோணு கணையான் குரைகழலே கூறுவதே**
**நாணுமை நன்னேன் நயம்.**

**பதவுரை:—** **தோள்**—(என்னுடைய) கைகள், **அவனையல்லால் தொழா**—அப்பெருமானைத் தவிர வேறொருவரையும் தொழமாட்டா; **என் செவி இரண்டும்**—என்னுடைய இரண்டு காதுகளும், **கேள் அவனது**—(எனக்கு எல்லா

---

யுடைய திருவனந்தாழ்வானுகிற ஓங்கிய திருப்படுக்கையிலே கண்வளர்ந்தருளின ஸர்வேஶ்வரனுடைய திருத்தோள்கள் கிடீர்! 'அந்தப் படுக்கையும் பொருத ஸௌகுமார்யத்தை யுடையவன்கிடீர் இச்செயல்களைச் செய்தான்! அப்படுக்கையில் கண்வளரப்பெருமல் இப்படி அலமந்து திரிவதே!' என்று வயிறுபிடிக்கிருர். 62.

---

களில் தி3க்குகளில் வியாபித்ததைச் சொல்லுவதாகவுமாம். இவற்றையெல்லாம் செய்தது எதுவென்னில்: (*சூழரவப் பொங் கணையான் தோள்*) பரந்திருப்பவனுய், மென்மை, குளிர்த்தி, நறுமணம் முதலான படுக்கையின் லக்ஷணங்களைப் பூர்ணமாகப் பெற்றவனுய், பகவத்ஸ்பர்ஶத்தாலே ஓங்கிநிற்பவனுன திருவனந்தாழ்வானுகிற திருப்படுக்கையிலே கண்வளர்ந்தருளின ஸர்வேஶ்வரனுடைய திருத்தோள்களன்றே இக்காரியங்கள் அனைத்தையும் செய்தன. அந்தப் படுக்கையும் உறுத்தும்படியான மென்மையை உடையவனன்றே இம்முரட்டுச் செயல்களைச் செய்தான்! மென்மைக்குச்சேர அப்படுக்கையிலேயே கண்வளரப்பெருமல் அடியார்க்காக இப்படிப் பாடுபட்டுத் திரிவதே! என்று வயிறெரிகிருர். 62.



விதமான) உறவுமாயிருக்கும் அவனுடைய, **இன் மொழியே**—இனிய சொற்களையே **கேட்டு இருக்கும்**—கேட்டு உயிர் த4ரித்திருக்கும்; **நா**—என்னுடைய நாக்கு, **நாளும்**—தினந்தோறும், **கோண் நாகணையான்**—ஒளிமிக்க ஆதிசேஷனைப் படுக்கையாக உடையவனுடைய, **குரை கழலே**—(ஆப4ரண வொலியினுல், ஶப்3தி3யாநிற்கும் திருவடிகளையே, **கூறுவதே**-சொல்லுவதாயிருக்கும்; **நயம்**—(ஸம்ஸாரிகள்) விரும்புமவையான விஷயங்களை, **நாணுமை நன்னேன்**—(நான்) வெட்கமில்லாமல் அணுகமாட்டேன்.

**அவ:— அறுபத்துமூன்றும் பாட்டு. (தோள்) இப்படி அவன் ஸௌலப4னென்று அநுஸந்தி4த்த பின்பு என்னுடைய இந்த்3ரியங்கள் அவனையல்லது அறிகிறதில்லை.**

**வ்யா:— (தோளித்யாதி3) நான் வேறேயொன்றைத் தொழச் சொன்னுலும் என் தோளானது அவனையல்லது தொழுகிறதில்லை. (என்செவியித்யாதி3) என் செவிகள்.**

---

**அவதாரிகை:—** இப்படியிருக்கிற அவன் பக்கலிலே என்னுடைய ஸர்வேந்த்3ரியகளும் ப்ரவணமாய்த்து; நானும் ப்ரவணனுனேன் என்கிருர்.

**உரை:—** என்னுடைய தோள்களானவை நான் 'வேறு சிலரைத் தொழு' என்னிலும் அந்த ஸர்வேஶ்வரனையல்லது

---

63. *அவதாரிகை:—* 'இப்படியிருக்கிற அவனிடம் என்னுடைய எல்லா இந்திரியங்களும் ஈடுபட்டன ; அதனுலே நானும் ஈடுபட்டேன்' என்கிருர். "முடியானே" [திருவாய் 3-8] என்னும் திருவாய்மொழியில் நம்மாழ்வார்க்கு ஏற்பட்ட அநுப4வம் இதுவேயாகும்.

*வ்யா:—(தோள் அவனையல்லால் தொழா)* என்னுடைய தோள்களானவை நான் 'வேறு சிலரைத் தொழு' என்றுலும் அந்த ஸர்வேஶ்வரனையல்லது தொழ மறுக்கின்றன. (*என் செவி இரண்டும்...*) என் இரண்டு காதுகளும் இயற்கை

உறவானவனுடைய இனிய மொழியைக் கேட்டிராநின்றது. (நா நாளும்) என்னுடைய நாக்கானது எப்போதும். (கோள் நாகணையித்யாதி3) "கோள்" என்று ஒளிக்கும், மிடுக்குக்கும் பேர். 67. "प्रकृष्टविज्ञानबलैकधामनि" (ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநப3லைகதா4மநி) என்னும்படியே, அநந்தஶாயியான ஸர்வேஶ்வரனையே கூறுமத்தனை. (நயம் நாணமை நள்ளேன்)

---

தொழுகிறனவில்லை; என்னுடைய செவிகளிரண்டும் நிருபாதி4க ப3ந்து4வான அவனுடைய "संश्रवे मधुरं" (ஸம்ஶ்ரவே மது4ரம்) ஆன பேச்சைக்கேட்டு அத்தாலே த4ரித்திருக்கும். நாவானது ஸர்வகாலமும் மிடுக்கையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரனுடைய ஆப4ரணத்4வனியை உடைத்தான திருவடிகளையே சொல்லாநிற்கும்.

---

யுறவினனுன அவனுடைய செவிக்கினிய செஞ்சொல்லைக் கேட்டு அதனாலே உயிர்த4ரிக்கும். *(கேள் அவனது)* "*மாதா பிதா ப்4ராதா—நாராயண:*" என்று ஸுபா3லோபனிஷத்திற் சொல்லியபடியே இயற்கையிலே எல்லா உறவாகவுமிருக்கும் அவனுடைய. கேள்—உறவினர். இன்ன உறவு என்று விஶேஷியாமையாலே எல்லா உறவுமிவனே என்கை. (இன்*மொழியே) "ஸம்ஶ்ரவே மது4ரம் வாக்யம்"* [ரா-ஸு 31-1] [கேட்பதற்கு இனிய வாக்கியம்] என்னும்படியிருக்கை. *(மொழியே கேட்டு)* நான் கேளாதெ என்றாலும் அதையே கேட்கும். *(கேட்டு இருக்கும்)* கேளாவிடில் இராது என்று கருத்து. *(நா நாளும்...)* என் நாவானது. ப3லமுடையவனான திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரனுடைய வீரக்கழலொலியையுடைய திருவடிகளையே எப்போதும் பேசிக்கொண்டிருக்கும். *(கோள் நாகணை)* கோள் - ப3லம். "*அமிதௌஜா: பர்யங்க:*" [கௌஷீதகி] [அளவற்ற ப3லத்தையுடையவன் படுக்கை] என்று உபனிஷத்திலும், "*ப்ரக்ருஷ்ட விஜ்ஞாநப3லைகதா4மநி அநந்தபோ4கிநி*" [ஸ்தோ-ர 39] [மிகச் சிறந்த அறிவுக்கும் ப3லத்திற்கும் ஒரே இருப்பிடமான திருவனந்தாழ்வானிடத்தில்] என்று ஆளவந்தாராலும் அருளிச் செய்யப்பட்டபடியே, பிராட்டியும் பெருமாளும் ஏறித்துகைக்கலாம்படியான அளவற்ற ப3லத்தையுடைய ஆதி3ஶேஷன்.



ஆசைப்படப்படுவதான ஶப்3த3ாதி3களை லஜ்ஜியாதே கிட்டேன்; ஹாஸ்யமான விஷயமென்றுமாம். அவன் ரக்ஷகனுகவுமாம், தவிரவுமாம்.

(தோளவனை) அவன்தான் தனக்குப் பகையென்னலாம்படி இருந்தாலும் என் செவிதானும் கேட்பது. ஆசைப்படும் விஷயங்கள். (நாணமை நள்ளேன்) ஆண்பிள்ளைச் சோற்றுள்வியை ஆசைப்பட்டவனைப்போலே உணர்ந்தவனுக்கு லஜ்ஜிக்கவேணும். (கோள்) பிராட்டிக்கும் தனக்கும் கிடக்கைக்குண்டாகை. 63.

64. நயவேன் பிறர்பொருளை நள்ளேன் கீழாரோடு
உயவே னுயர்ந்தவரோ டல்லால்—வியவேன்
திருமாலை யல்லது தெய்வமென் றேத்தேன்
வருமாறென் னென்மேல் வினை.

---

நாட்டார் விரும்பி மேல்விழுகிற விஷயங்களை அவர்களில் வ்யாவ்ருத்தனான நான் நிர்லஜ்ஜனாய்க்கொண்டு செறியேன். ஜ்ஞானம் பிறந்தபின்பு லஜ்ஜித்து மீளவேண்டும்படி காணும் விஷயப்ராவண்யத்தின் பொல்லாங்கிருப்பது. 63.

---

(*குரை கழல்*) ஒலிக்கும் வீரக்கழல் முதலான ஆப4ரணங்களை அணிந்த திருவடி. நாட்டிலுள்ள மற்றவர்கள் ஈடுபடும் இதர விஷயங்களை விட்டு, இப்படி நீர் ஸர்வேந்திரியங்களாலும் ப4க3வத்3விஷயத்தையே பற்றியிருப்பதே! என்று ஸம்ஸாரிகளுக்குக் கருத்தாகக்கொண்டு கூறுகிறார்; (*நயம் நாணமை நள்ளேன்*) நயம்—(*பிறரால்*) விரும்பப்படுவது. ஸம்ஸாரிகளால் விரும்பப்படுவது. ஸம்ஸாரிகளால் விரும்பப்படும் சப்தஸ்பர்ஶ ரூபரஸக3ந்த4ங்களாகிற பிராகிருதவிஷயங்களை நான் லஜ்ஜையில்லாமல் அணுகமாட்டேன். (*நாணமை*) ஸ்வருபஜ்ஞானம் பிறந்த பின்பு வெட்கத்தோடு மீளவேண்டும்படியன்றோ பிராகிருதவிஷயங்களின் தீமை உள்ளது. "ஆண்பிள்ளைச் சோற்றுள்வியை (*பெண்வேடம் பூண்ட ஆண்பிள்ளையை*) ஆசைப்பட்டவனைப்போலே, உணர்ந்தவனுக்கு லஜ்ஜிக்கவேணும்' என்பர் பெரியவாச்சான்பிள்ளை. 63.

**பதவுரை:—பிறர் பொருளை**—விலக்ஷணனான எம்பெருமானுடைய உடைமையான ஆத்மவஸ்துவை, **நயவேன்**—(எனக்கென்று ஆசைப்படமாட்டேன்; **கீழாரோடு**—(ஆத்மாவைத் தம்முடையதாக நினைத்திருக்கும்) ஸம்ஸாரிகளோடு **நள்ளேன்**—நெருங்கமாட்டேன்; **உயர்ந்தவரோடல்லால் உயவேன்**—(எம்பிரானுக்கு அடிமைப்பட்டிருக்கையாலே) உயர்ந்திருப்பவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களைத் தவிர வேறு மனிதரிடம் பேசமாட்டேன்; **திருமாலை அல்லது** லக்ஷ்மீநாதனைத் தவிர வேறு சிலரை, **தெய்வம் என்று ஏத்தேன்**—தேவதை என்று துதிக்கமாட்டேன்; **வியவேன்**—(அவர்களைக் கண்டு) வியக்கவும்மாட்டேன்; **என் மேல்**—(இப்படிப்பட்ட) என் மேல், **வினை வரும் ஆறு என்**—பாபம் வரும் வழி எப்படி?

அவ:—**அறுபத்துநாலாம் பாட்டு.** (நயவேன்) **ப்ராப்தத்தைச் செய்து அப்ராப்தத்தைச் செய்யேனென்றிருக்கிற என்பக்கல் பாபத்துக்கு வரப்போமோ? என்கிறார்.**

---

**அவதாரிகை:—**உமக்கும் உம்முடைய கரணங்களுக்கும் பகவத்விஷயத்திலே இதரவிஷயங்களைக் கடைக்கணியாதபடி ப்ராவண்யம் உறைத்தாலும் துர்வாஸனையாலே அவை வந்து மேலிடில் செய்வதென்? என்ன,— நான் நின்ற நிலை இதுவானபின்பு எங்ஙனே அவை வந்து மேலிடும்படி? என்கிறார்.

---

64. *அவதாரிகை:—* 'உமக்கும் உம்முடைய இந்திரியங்களுக்கும் மற்ற விஷயங்களில் பற்று சிறிதுமில்லாதபடி பகவத்விஷயத்தில் ஈடுபாடு மிக்கிருந்தாலும், அநாதிவாஸனையாலே மற்ற விஷயங்கள் உம்மையும் உம்முடைய இந்திரியங்களையும் வெற்றிகொண்டு விட்டால் என்செய்வீர்' என்று ஸம்ஸாரிகள் கேட்க, 'நான் நின்ற நிலை இதுவானபின்பு எப்படி அவை வந்து மேலிடும்?' என்கிறார்.

*வ்யா:—* *(நயவேன் பிறர்பொருளை)* பிறர்பொருளை விரும்பமாட்டேன். *ஶா*ஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்படும் ஸாதாரண



**வ்யா:—** (நயவேன் பிறர்பொருளை) **பிறர்பொருளை ஆசைப்படேன். த்ரவ்யத்துக்கு உத்கர்ஷமாவது:- த்ரவ்யந் தன்னுடைய நன்மையாலும், உடையவனுடைய நன்மையாலும்; த்ரவ்யம் பரிணாமியான அசித்தன்றிக்கே ஆத்ம த்ரவ்யமாயிருந்தது; 68. "यस्यात्मा शरीरं" (யஸ்யாத்மா ஶரீரம்), 8. "पतिं विश्वस्य" (பதிம் விஶ்வஸ்ய) என்று ஓதப்படுகிறவன் உடையவன். உத்க்ருஷ்டமான ஆத்மாவை "என்னது"**

---

**உரை:— "उत्तमः पुरुषस्त्वन्यः" (உத்தம: புருஷஸ்த்வந்ய:)** என்கிறபடியே ஸர்வவிஸஜாதீயனான ஸர்வேஶ்வரனுடைய ஆத்மத்ரவ்யத்தை என்னதென்று விரும்பேன். பிறரதான ஆத்மாவை என்னது என்றிருக்கும் தாழ்ந்த ஸம்ஸாரிகளோடு செறியேன். உத்துங்கமான ஆத்மவஸ்து

---

மான கருட்டு தன்னிடமில்லை என்று ஆழ்வார் பெருமையாகக் கூறிக்கொள்ள ப்ரஸக்தியேயில்லை. திருட்டுகளில் மிகக்கொடிய திருட்டு தன்னிடமில்லை என்பதே ஆழ்வாருடைய கருத்து. திருடப்படும் பொருளையிட்டும், திருடப்படுகிறவனையிட்டும் திருட்டில் ஏற்றத்தாழ்வுண்டு. அழியக்கூடிய அசேதனப் பொருள்களைக் காட்டிலும், அழியாததான ஆத்மவஸ்து மிக வுயர்ந்தது. ஸர்வேஶ்வரன் அனைவரிலும் உயர்ந்தவன். அவனுக்கு ஸ்ரீகௌஸ்துபம்போலே இனியதான ஆத்மவஸ்துவைத் திருடுவதே மிகக்கொடிய திருட்டாகும். அதாவது – அவனுடையதான ஆத்மாவைத் தன்னுடையதென நினைக்கை.

**யோऽந்யதா ஸந்தமாத்மாநமந்யதா ப்ரதிபத்யதே।**
**கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா ॥**

[பகவானுடைய உடைமையாயிருக்கும் ஆத்மாவை, எவனொருவன் தனக்குச் சொந்தமாக நினைக்கிறானோ, ஆத்மாவை அபஹரிப்பவனான அந்தத் திருடனால் செய்யப்படாத பாபம் எது?] என்கிறபடியே இதையே மிகக்கொடிய பாபமாக ஶாஸ்திரமும் சொல்லிற்று. ராவணன் செய்ததையொத்த இத் திருட்டு தன்னிடமில்லை என்கிறார். *(பிறர்)* *"உத்தம: புருஷஸ்த்வந்ய:"* [கீதை 15-17] [பரமபுருஷன் மற்ற புருஷர்களிலும்

என்றிரேன். (நள்ளேன் கீழாரோடு) ஆத்மாவை "என்னது" என்றிருக்குமவர்களாயிற்று கீழாராகிறார்; அவர்களோடே கிட்டேன், தங்கள்படியாக்கிக்கொள்வரென்று. (உயவேன் உயர்ந்தவரோடல்லால்) உத்தமரென்னுமவர்களோடல்லது உசாவேன். (வியவேன் திருமாலையல்லது) ஶ்ரிய:பதியைக் கண்டல்லது விஸ்மயப்படேன். (தெய்வமென்றேத்தேன்) அவனையல்லது வேறு சிலரை தெய்வமென்று ஸ்துதியேன். (வியவேன் திருமாலை) ஶ்ரிய:பதியினுடைய ஐஶ்வர்யத்தை அர்த்த$_2$வாத$_3$மென்றிரேன். (வருமாறென் என்மேல்வினை) 69. "अवश्यमनुभोक्तव्यं" (அவஶ்யமநுபே$_4$ாக்தவ்யம்) என்கிற வசநத்தைக்கொண்டு என்பக்கலிலே வரப்போமோ பாபத்துக்கு? என்கிறார்.

---

ஸர்வோத்தமனை ஸர்வேஶ்வரனுடையது என்றிருக்கும் ஶ்ரீவைஷ்ணவர்களையொழிய ஏதேனுமொன்றை உசாவேன். ஸர்வாதி$_4$கனான ஶ்ரிய:பதியையொழியப் புறம்பே சிலரை ஆஶ்ரயணீய தே$_3$வதைகளென்று பு$_3$த்$_3$தி$_4$பண்ணி வாய்விட்டுப் புகழேன். இவ்வாகாரங்கள் நமக்கு உண்

---

வேறுபட்டவன்] என்றதை அடியொற்றிப் பரமபுருஷனைப் 'பிறர்' என்கிறார். (*நள்ளேன் கீழாரோடு*) பரமபுருஷனுடைய ஆத்மவஸ்துவைத் தம்முடையதாக நினைத்திருக்கும் தாழ்ந்தவர்களோடு சேரமாட்டேன். (*உயவேன் உயர்ந்தவரோடல்லால்*) பரமபுருஷனுக்கு ஶ்ரீகௌஸ்துப$_4$ம்போலே இனிய ஆத்மவஸ்துவைத் தம்மதாக நினையாமல் ஸர்வோத்தமனை அவனுடையதாக நினைத்திருக்கும் ஶ்ரீவைஷ்ணவர்களைத் தவிர வேறெவரிடமும் பேச்சுவார்த்தைகள் வைத்துக்கொள்வதில்லை. (*திருமாலையல்லது தெய்வமென்றேத்தேன்*) திருவுடைய தேவனாகையாலே புருஷோத்தமனை அவனைத்தவிர மற்றொரு திருவில்லாத் தெய்வத்தை அடையத்தக்க தெய்வமென்றெண்ணி, வாய்விட்டுத் துதிக்கமாட்டேன். (இவ்வாழ்வாரைச் சமரசவாதியென்று சிலர் கூறுகிறார்களே, அவர்கள் அறிவிலிகளாகவாவது வஞ்சகர்களாகவாவது இருக்கவேண்டும்.)



(நயவேன்) வாக்யார்த்த$_2$ம்:— க்ருதக்ருத்யனென்கிறார். எம்பெருமான் விரும்பும் ஆத்மாவை அபஹரியேன். ராவணன் செயலைச்செய்யேன். கீழார் — அவனுக்குக் கூட்டுப்படும் மாரீச ப்ரப்$_4$ருதிகள். உயர்ந்தவர் - விஶ்வாமித்ராதி$_3$கள். 70. "महात्मानस्तु" (மஹாத்மாநஸது) "பெரியோர்" (வியவேன்) 71. "तृणीकृतविरिञ्चादिनिरङ्कुशविभूतयः" (த்ருணீக்ருத விரிஞ்சாதி$_3$நிரங்கு விபூ$_4$தய:) ப்$_3$ரஹ்மாதி$_3$களைக் கண்டால் அடுப்படைக்கல்லாக நினைத்திருக்குமததனை. (திருமாலையல்லது வியவேன் - தெய்வமென்றேத்தேன் - வருமாறென்னென்மேல் வினை) 69. "अवश्यमनुभोक्तव्यं" (அவஶ்யமநுபே$_4$ாக்தவ்யம்) என்கிறவை என்னை நலியவோ? 64.

65. வினையா லடர்ப்படார் வெந்நரகில் சேரார்
தினையேனும் தீக்கதிக்கண் செல்லார் — நினைதற்
கரியானைச் சேயானை ஆயிரம்பேர்ச் செங்கட்
கரியானைக் கைதொழுதக் கால்.

---

டாய்த்தே என்று ஆச்சர்யப்படேன். இப்படியானபின்பு ப$_4$க$_3$வத$_3$நுக்$_3$ரஹபாத்ரரான நம்முடைய மேலே தந்நிக்$_3$ரஹரூபமான பாபம் வந்து மேலிடும்படி எங்ஙனே? திருமாலையல்லது வியவேன்; அவனையல்லது தை$_3$வமென்றேத்தேன் என்னவுமாம். 64.

---

(*வியவேன்*) அவனைப் பற்றியவர்க்கு இவை தாமே வருமாகையாலே, "இப்பெருமைகள் நமக்கு எப்படி வந்தன' என்று ஆச்சரியப்படமாட்டேன். (*வியவேன் திருமாலை*) 'திருமாலுக்குச் சொல்லப்படும் பெருமைகள் வெறும் புகழ்ச்சி என நினையேன்' என்றும் கொள்ளலாம். (*வியவேன் திருமாலையல்லது........*) "திருமாலைத்தவிர வேறொருவரின் ஸ்வரூபரூபகு$_3$ணவிபூ$_4$திசேஷ்டிதங்களைக் கண்டு ஆஶ்சர்யப்படமாட்டேன்; அவனைத் தவிர வேறொருவரை தெய்வமாகத் துதிக்கமாட்டேன்" என்றும் கொள்ளலாம். (*வருமாறென் எனமேல்வினை*) இப்படியிருக்கும்போது ப$_4$க$_3$வானுடைய அனுக்$_3$ரஹத்திற்கு இலக்கான என்மேல், அவனுடைய நிக்$_3$ரஹரூபமான பாபங்களும், அதுகாரணமாக வரும் விஷயாநுப$_4$வமும் எப்படி வந்து வெற்றிகொள்ள முடியும்? 64.

**பதவுரை:— நினைதற்கு அரியானை** — தம் (முயற்சியாலே) அறியமுடியாதவனும், **சேயானை**-வெகுதூரத்திலிருப்பவனும், **ஆயிரம பேர் செம் கண் கரியானை** — ஆயிரம் திருநாமங்களையும், சிவந்த திருக்கண்களையும், கறுத்த திருமேனியையும் கொண்டவனுமான எம்பிரானை, **கைதொழுதக்கால்**— கையாலே வணங்கினால், **வினையால் அடர்ப்படார்** —கர்மங்களால் துன்புறுத்தப்படார்கள்; **வெம் நரகில் சேரார்**— கொடிய நரகத்தில் சேரார், **தினையேனும்**—சிறிதாவது, **தீ கதிக்கண் செல்லார்** — கெட்ட கதிகளுக்குப் போக மாட்டார்கள்.

வ்யா:— **அறுபத்தைந்தாம் பாட்டு.** (வினையித்யாதி3) **பாபத்தால் அடக்கப்படார்.** (வெந்நரகில் சேரார்) **பாப ப2லமான நரகிலும் சேரார்.** (தினையித்யாதி3) **த4ர்மபுத்ரன் நரகத3ர்ஶநம் பண்ணினவோபாதியும் கூடாது இவர்களுக்கு.** (நினைதற்கரியானை) **ஸ்வயத்நத்தாலே அறியப் போகாதவனை.** (சேயானை) **அதுக்கடி தூ3ரஸ்த2னுகை.**

---

அவதாரிகை:— இது எனக்கு ஒருவனுக்குமேயன்று; அவனை ஆஶ்ரயித்தார்க்கெல்லாம் ஒக்குங்கிடீர் என்கிறார்.

**உரை:—** ஸ்வயத்நத்தால் அளவிட்டு நினைக்கைக்கு மிகவும் அரியனாய், மநோரத2பத2த்துக்கு எட்டாதபடி அதிதூ3ரஸ்த2னாய், தன்னருளாலே அறிந்து அநுப4விக்க

---

65. *அவதாரிகை:*— முன் பாசுரத்திற்சொன்ன பெருமை எனக்கு ஒருவனுக்கு மாத்திரமன்று. அவனை அடைந்தார் அனைவர்க்கும் உள்ளதொன்று கிடீர் என்கிறார்.

வ்யா:— *(நினைதற்கு அரியானை)* "யாரும் ஓர் நிலைமையன் என அறிவரிய எம்பெருமான்" [திருவாய் 1-3-4] என்கிறபடியே எத்தனையேனும் விஞ்சிய அறிவையுடையவர்களுக்கும் தம் முயற்சியாலே அறிய அரியவனை. இதற்குக் காரணம் சொல்லுகிறது மேலே,—*(சேயானை)* மனக்குதிரைக்கும் சென்றுகிட்ட



(ஆயிரமித்யாதி3) **தான் கொடுத்த அறிவை உடையவர்களுக்கு ஏத்துகைக்கு ஆயிரம் திருநாமத்தையும், கண்டு அநுப4விக்கைக்கு** ஶ்ரமஹரமான **வடிவையுமுடையவனை.** (கைதொழுதக்கால்) **அஞ்ஜலி பண்ணினால்.**

(வினையாலடர்ப்படார்) **என்னைப்போலே விதே4யகரணமின்றியே பாவநமென்று ஆஶ்ரயித்தார்க்குப் பாபம் போம்.** (வினை) **இங்கு அநுப4விக்கும் பாபப2லம் அநுப4வியார்.** (வெந்நரகு) **போய் அநுப4விக்கும் பாபப2லம்.** (தினை) **அஸத்யாப4ாவநதாலே.** (நினைதற்கரியானை) **ஸ்வயத்நததாலே**

---

இழிந்தார்க்கு இழிந்தவிடமெங்கும் துறையாம்படி கு3ண சேஷ்டிதங்களுக்கு வாசகமான ஆயிரம் திருநாமங்களையுடையனாய், வாத்ஸல்யஸூசகமாய்ச் சிவந்த திருக்கண்களையும், அதுக்குப் பகைத்தொடையான கறுத்த வடிவையுமுடையனான ஸர்வேஶ்வரனை, அஞ்ஜலிப்ரணமாத்3யநுவர்த்தனங்களைப் பண்ணி ஆஶ்ரயித்தால் புண்யபாபரூபகர்மங்

---

முடியாதபடி மிகவும் தூரத்திலிருப்பவனை. *(ஆயிரம்பேர்)* "மயர்வற மதிநலமருளினன" என்கிறபடியே அவனுடைய அருளாலே அவனை அநுப4விக்க இழிந்தவர்களுக்கு, இறங்கினவிடமெல்லாம் அனுப4விக்கும் துறையாம்படி கு3ணச்செயல்களைச் சொல்லும் ஆயிரம் பெயர்களை உடையவனை. *(ஆயிரம் பேர்)*வாய்க்கினிய விருந்து. *(செங்கட் கரியானை)* கண்ணுக்கினிய விருந்து. வாத்ஸல்யத்தைக் கோட்சொல்லித்தரும் சிவந்த திருக்கண்களையும், அதுக்கு நிறச்சேர்த்தியழகைத்தரும் கரிய திருமேனியையும் உடைய ஸர்வேஶ்வரனை. (*கைதொழுதக்கால்*) கைகூப்புவது, வணங்குவது முதலான ஶேஷவ்ருத்திகளைப் பண்ணி ஆஶ்ரயித்தால். *(வினையால் அடர்ப்படார்)* புண்யபாபரூபமான பாபங்களாலே துன்பப்படமாட்டார்கள். *(வெந்நரகில் சேரார்)* அந்தப் புண்யபாபங்களுக்குப் ப2லமான ஸம்ஸாரமாகிற கொடிய நரகிலும் சேரார். *(வினையால் அடர்ப்படார் வெந்நரகில் சேரார்)* பாபபலன்களை இவ்வுலகில் அனுபவியார்; கொடியநரகில் சென்றும் பாபபலன்களை அனுபவியார்;

நினைப்பார்க்கு அரியானை. (சேயானை) இவன் குற்றமன்று. வஸ்துஸ்வபாவம். (ஆயிரமித்யாதி) தானே காட்டுவார்க்கு இழிந்தவிடமெல்லாம் துறையாகை. (கைதொழுதக்கால்) பாலைக்குடிக்க நோய் போம். வருத்தது செய்ய அமையும். 65.

66. காலை யெழுந்துலகம் கற்பனவும் கற்றுணர்ந்த
மேலைத் தலைமறையோர் வேட்பனவும்— வேலைக்கண்
ஓராழி யானடியே யோதுவது மோர்ப்பனவும்
பேராழி கொண்டான் பெயர்.

**பதவுரை:— காலை எழுந்து**—(ஸத்வகுணத்தை வளரச்செய்வதான) காலை வேளையில் கண் விழித்து எழுந்து, **உலகம்**—உயர்ந்தோரான முமுக்ஷுக்கள், **கற்பனவும்**—அப்யாஸம் செய்பவையும், **கற்று உணர்ந்த மேலை தலைமறையோர்**—படித்து அறிந்தவர்களான வைதிகஶ்ரேஷ்டர்கள், **வேட்பனவும்**—காண ஆசைப்படுபவையும், **வேலைக்கண்**—திருப்பாற்கடலினுள், **ஓர் ஆழியான் அடியே**—ஒப்பற்ற திருவாழியைக் கைக்கொண்டு கண்வளர்ந்தருளும் எம்பிரானது அடிகளே; **ஓதுவதும்**—(இப்பெரியோர்கள்) கேட்பவையும், **ஓர்ப்பனவும்**—நினைப்பவையும், **பேர் ஆழி கொண்டான் பெயர்**—பெரிய சக்கரத்தைக் கொண்டவனுடைய திருநாமங்களே.

---

களாலே நெருக்குப்படார்; அதுக்குப் பலமாக வரக்கடவதாய், அதிக்ரூரமான ஸம்ஸாரமாகிற நரகத்திலே சென்று கிட்டார். ஏகதேஶமும் துர்மார்க்கங்களில் போகார். 65.

---

''ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி'' [கீதை 18-66] என்னுமவன் 'பொறுத்தேன்' என்னப் பாபங்கள் தீருகையாலே. (*தினையேனும் தீக்கதிக்கண் செல்லார்*) புண்யபாபங்களுக்குக் காரணமான தீயவழிகளில் சிறிதும் செல்லமாட்டார்கள். தர்மபுத்ரன் நரகத்தைப் பார்த்ததுபோலும் இவர்களுக்குச் சிறிதேனும் நரகாதி, துர்மார்க்கஸம்பந்தம் கூடாது என்றுமாம். 65.



வ்யா:— அறுபத்தாறும் பாட்டு. (காலையெழுந்து) ஸத்வோத்தரமான காலத்திலே எழுந்திருந்து. (உலகம்) மோக்ஷேச்சையுடையவர்கள் கற்பனவும். (கற்றுணர்ந்த இத்யாதி) அறிவு தலைக்கட்டினவர்கள் பாவநாப்ரகர்ஷத்

---

அவதாரிகை:— அறிவுடையராயிருப்பார்களாகில் பஜநீயன் அவனே கிடீர்! என்கிறார்.

உரை:— ''கிளரொளியிளமை'' என்கிறபடியே பஜநானுரூபமான கரணபாடவமுள்ள பால்யாவஸ்தையிலே ஆஶ்ரயணோந்முகராய்க்கொண்டு கிளர்ந்து லோகமடங்க அப்யஸிக்குமவையும், ஜ்ஞாதவ்யார்த்தங்களை ஓராசார்யன் பக்கலிலே கேட்டு அவற்றை அலகலகாக அறிந்திருப்பார்களாய் அத்தால் வந்த மிக்க உயர்த்தியை உடையரான பரமவைதிகரடங்கலும் அறிவின் பலமாக ஸாக்ஷாத்

---

66. *அவதாரிகை:—* அவனை அடைந்தவர் இடர்ப்படார் என்றார் சென்றபாட்டில்; அறிவுடையவர்களாயிருந்தால் அவனை அடையாதிருக்கமுடியுமோ? என்கிறார் இப்பாட்டில்.

*வ்யா:— (காலை எழுந்து உலகம் கற்பனவும்)* அனைவர்க்கும் ஸத்வகுணம் விஞ்சியிருக்கும் காலைவேளையில் எழுந்திருந்து உயர்ந்தோர் கற்கின்றனவும். ''உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே'' என்கிறபடியே 'உலகம்' என்னும் சொல் உயர்ந்தோரான முமுக்ஷுக்களைக் குறிக்கிறது. 'காலை' என்று ஆயுளுக்கு ஆரம்பநிலையாகிற இளமையைக் குறிப்பதாய், ''கிளரொளியிளமை கெடுவதன் முன்னம்'' [திருவாய் 2-10-1] என்கிறபடியே அவனை நினைக்கத்தக்கபடி ஐம்புலன்களும் வலிமையோடிருக்கும் இளமையிலே அவனை அடைய விரும்பிக் கிளர்ந்து உலகமெல்லாம் (உயர்ந்தோரனைவரும்) கற்கின்றவையும். *(கற்றுணர்ந்த மேலைத்தலைமறையோர் வேட்பனவும்)* அறிய வேண்டிய விஷயங்களையெல்லாம் ஓராசார்யனிடம் கேட்டு அவற்றை அலசி அலசி ஆராய்ந்து அறிந்திருப்பவர்களாய், அதனால் உண்டான மிகுந்த சிறப்பையுடையவர்களான பரமவைதிகர்களனைவரும் அறிவின் பலனாகக்காணவிரும்புகின்ற

தாலே ஸாக்ஷாத்கரிப்பனவும். (வேலையித்யாதி3) இவற்றினுடைய ரக்ஷணத்துக்காகத் திருப்பாற்கடலிலே கையும் திருவாழியுமாய்க் கிடக்கிற ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளையே. (பேராழி கொண்டான் பெயரே ஓதுவதும் ஓர்ப்பனவும்) ஸர்வேஶ்வரனுடைய திருநாமங்களே இவர்களுடைய ஶ்ரவணத்துக்கும் ஆநந்த3த்துக்கும் விஷயமாவது.

(காலை) ஸத்வோத்தரமான காலம். (வேலைக்கண் ஓராழியானடியே) கரையையுடைத்தாய், ஒப்பில்லாத கடல். (பேராழி கொண்டான்) இவர்களை ரக்ஷிக்கைக்கு உருவின பத்திரமும் தானுமாயிருக்கை. "கைகழலாநேமியான்" 66.

---

கரிக்க ஆசைப்படுவனவும், கரையோடே கூடி இடமுடைத்தாய், அத்3விதீயமான கடலிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரன் திருவடிகளே. அதுக்கு ஸாத4நமாக ஶ்ரவணம் பண்ணுவதும் மனனம் பண்ணுவதும் ரக்ஷணபரிகரமான பெரிய திருவாழியையுடையனான ஸர்வேஶ்வரனுடைய கு3ணசேஷ்டிதாதி3களுக்கு வாசகமான திருநாமங்கள். பேராழிகொண்டான் — பெரியகடல்போலே ஶ்ரமஹரமான வடிவை எடுத்துக்கொண்டிருக்கிறவன் என்னவுமாம். அப்போது 'ஓராழியான்' என்றது அத்3விதீயமான திருவாழியை உடையவனென்று கொள்வது. 66.

---

வையும். *(வேலைக்கண் ஓராழியானடியே)* கரையோடே கூடியதாய், பெரிதான இடமுடையதாய், ஒப்பற்றதாயிருக்கும் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளே இப்பெருமைகளை உடையவை. வேலை–கரை. கண்–இடமுடைமை. அன்றிக்கே, வேலை என்று திருப்பாற்கடலைக் குறிப்பதாய், திருப்பாற்கடலிலே ஒப்பற்ற திருவாழியை ஏந்திநிற்பவனுடைய திருவடிகளே என்றுமாம். *(ஓதுவதும் ஓர்ப்பனவும் பேராழிகொண்டான் பெயர்)* அவ்வடியை அடைவதற்கு ஸாத4நமாகக் கேட்பதும் மனனம் செய்வதும், அடியார்களை ரக்ஷிப்பதற்குறுப்பாகப் பெரிய திருச்சக்கரத்தை ஏந்திநிற்பவனுடைய பெயர்களேயாகும். *(பெயர்)* அவனுடைய



**67. பெயருங் கருங்கடலே நோக்குமாறு ஒண்பூ**
**உயருங் கதிரவனே நோக்கும்—உயிரும்**
**தருமனையே நோக்குமொண் தாமரையாள் கேள்வன்**
**ஒருவனையே நோக்கு முணர்வு.**

**பதவுரை:**— ஆறு—நதி3யானது, **பெயரும் கரும் கடலே நோக்கும்** — அலையெறிகின்ற கறுத்த கடலையே நோக்கிச் செல்லும்; **ஒண்பூ**—ஒளிபொருந்திய தாமரைப்பூ, **உயரும் கதிரவனே நோக்கும்** — மிக உயர்ந்த இடத்திலேயிருக்கும் ஸூர்யனைக்கண்டே மலரும்; **உயிரும்**—(அவைஷ்ணவர்களுடைய) ஆத்மாக்கள், **தருமனையே நோக்கும்**—(ஆயுள் முடிவில்) யமத4ர்மராஜனையே அடையும்; (அப்படியே), **உணர்வு**—ஞானமானது, **ஒண் தாமரையாள் கேள்வன் ஒருவனையே**—ஒளிபொருந்திய தாமரையில் வஸிக்கும்லக்ஷ்மியின் நாதனாகிய நாராயணனை மட்டுமே, **நோக்கும்**—அறியும்.

**அவ:— அறுபத்தேழாம் பாட்டு.** (பெயரும்) **மோக்ஷேச்சை2யுடையவர்களுக்கும் அறிவு தலைநின்றவர்களுக்கும், அவனுடைய திருவடிகளை ஏத்துவது, அவனுடைய திருநாமங்களையே ஏத்துவது என்று சொல்லிற்று, ஜ்ஞாநத்துக்கு அவனே விஷயமாகையாலே என்கிறது.**

---

**அவதாரிகை:**— இப்படி அறிவில் தலைநின்றவர்கள் அவனை ஆசைப்படுகைக்கடி அறிவுக்கு க3ந்தவ்யபூ4மி ஶ்ரிய:பதியல்லதில்லாமையாலே என்கிறார்.

---

கு3ணங்களையும் செயல்களையும் காட்டும் பெயர்கள். 'ஓராழியான்' என்றதை சக்ரத4ாரி என்று கொள்ளும்போது, 'பேராழி கொண்டான்' என்றதை, பெரிய கடல்போலே, கண்டார் களைப்பையாற்றும் வடிவை எடுத்துக்கொண்டிருக்கிறவன் என்று பொருள்கொள்வது. 66.

67. *அவதாரிகை:*— இப்படி அறிவிற்சிறந்தவர்களை வரும் அவனை ஆசைப்படுவதற்குக் காரணம், அறிவுக்குப் போக்கிடம் திருமாலையல்லது வேறொரு தத்துவமில்லாமையாலே என்கிறார்.

வ்யா:— (பெயருமித்யாதி3) ஆறானது, பூர்ணமாய்ச் சலியாநின்ற கடலையே நோக்காநின்றது. ஆறு கடலை நிறைக்கைக்கன்று புகுகிறது; புக்கல்லது தான் த4ரிக்க மாட்டாமை. தாமரைப் பூவானது, தூ3ரஸ்த2னாகிலும் ஆதி3த்யனுக்கு அலருமத்தனை; அக்3ந்யாதி3களுக்கு அல ராது. (உயிரும் தருமனையே நோக்கும்) யமனைக் கிட்டி யல்லது வேறோரிடத்தில் புகவொண்ணாது. (ஒண்தாமரை

---

உரை:— காற்றுவளத்திலே கொந்தளித்துக் கிளரக் கடவதாய், பரப்பையுடைத்தான கடலை ஆறானது நோக்கா நிற்கும். அழகிய தாமரைப்பூவானது உச்சஸ்தூலவர்த்தி யான ஆதி3த்யனையே நோக்காநிற்கும், ப4க3வத்பரரல்லாத நாட்டில் ப்ராணிகளடங்கலும் ஶரீரவிஶ்லேஷாநந்தரத்தில் த4ர்மராஜாவான யமனையே சென்று கிட்டாநிற்கும். இவை

---

வ்யா:— (*பெயரும் கருங்கடலே நோக்கும் ஆறு*) காற்ற டிக்கும் திசையிலே அலையெறிவதாய், கறுத்திருப்பதாய், பரப்பையுடையதான கடலைநோக்கியே செல்லாநிற்கும் ஆறு. ஆறு கடலை நிறைப்பதற்காகப் புகவில்லை; புகுந்தல்லது நிற்க மாட்டாமையாலே கடலுடன் கலக்கிறது. இவ்வாறே அறிவும் கடல்வண்ணனை திருமாலையடைந்தல்லது நிற்கமாட்டாது என்கை. (*ஒண் பூ உயரும் கதிரவனே நோக்கும்*) அழகிய தாமரைப் பூவானது உயரவிருக்கும் சூரியனின் வரவையே பார்த்திருந்து அவனுக்கே மலருமேயொழிய, அருகிலிருக்கும் நெருப்பு முதலானவற்றுக்கும் மலராது. "செந்தழலே வந்த ழலைச் செய்திடினும் செங்கமலம் அந்தரஞ்சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்" [பெருமாள் திரு 5-6] என்கிறபடியே. அதுபோலவே உண்மையறிவாகிற கமலம் ஆதி3த்யவர்ணனை திருமாலையே விஷயமாகக் கொள்ளுமேயொழிய சந்திரமௌளி முதலாய மற்ற தெய்வங்களை நோக்காது என்கை. (*உயிரும் தருமனையே நோக்கும்*) ப4க3வானையடையாத ஜீவர்களுடைய உயிர் உடம்பைவிட்டுப் பிரியும்போது த4ர்மராஜாவான யமனையே சென்றடையும், அப்படியே அறிவும் த4ர்மஸ்வரூபி யான தாமரையாள் கேள்வனையே சென்றடையும், (*தாமரை*



யித்யாதி3) ஜ்ஞாநமாகில் ஶ்ரிய:பதியை அறியுமத்தனை; மற்றொன்றை அறியாது. 72. "तत् ज्ञानमज्ञानमतोऽन्यदुक्तं" (தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யது3க்தம்) 73. "विद्याऽन्या शिल्पनैपुणं" (வித்3யாऽந்யா ஶில்பநைபுணம்) என்னும்படியே. 67.

---

யிவை நியதமானப்போலே, ஜ்ஞாநமானது அழகிய தாமரைப் பூவை இருப்பிடமாகவுடைய பெரியபிராட்டி யார்க்கு வல்லப4னான ஸர்வேஶ்வரன் ஒருவனையுமே சென்று பற்றாநிற்கும். ஜ்ஞாநமாகில் ஶ்ரிய:பதியைப் பற்றி யல்லது நில்லாது என்கை. ப4க3வத்3வ்யதிரிக்த விஷயங் களைப் பற்றிப் பிறக்கும் ஜ்ஞாநமெல்லாம் அஜ்ஞாநகல்பம். "तत् ज्ञानमज्ञानमतोऽन्यदुक्तं" (தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யது3க்தம்) "विद्यान्या शिल्पनैपुणं" (வித்3யாந்யா ஶில்பநைபுணம்) என்னக்கடவதிறே. 67.

---

*யாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு*) கருங்கடலை ஆறு நோக்குவதும், தாமரை கதிரவனை நோக்குவதும், உயிர் தருமனை நோக்குவதும் இயற்கை நியதியானாற்போலே, அறி வென்று ஒன்று உள்ளதாகில் அது தாமரையாளான லக்ஷ்மி யின் நாதனான நாராயணன் ஒருவனையே நோக்கும். திருவில் லாத்தேவரான வேறெவரையும் நோக்காது என்று கருத்து. சிலருடைய அறிவு மற்ற தெய்வங்களையும் விஷயங்களையும் நோக்குகிறதே எனில்; அவ்வறிவுகள் அறிவேயல்ல; அறியா மையை ஒத்தவையே என்பதைப் பின்வரும் பிரமாணங்கள் பேசின.

"ஸம்ஜ்ஞாயதே யேந தத3ஸ்ததோ3ஷம்
ஶுத்3த4ம் பரம் நிர்மலமேகரூபம் ।
ஸந்த்3ருஶ்யதே வாऽப்யதி4க3ம்யதே வா
தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யது3க்தம் ॥"
[வி-பு 6-5-87]

[எந்த அறிவினால் தே3ாஷமற்றதும், ஶுத்3த4மானதும், மிகவும் மலமற்றதும், ஒப்புயர்வற்றதுமான அந்தப் பரவஸ்து அறியப் படுகிறதோ, பார்க்கப்படுகிறதோ, அடையப்படுகிறதோ அதுவே ஜ்ஞானம்; அதைக்காட்டிலும் வேறானது அஜ்ஞானமெனப் படுகிறது.]

**68.** **உணர்வாரா ருன்பெருமை யூழிதோ றூழி**
**உணர்வாரா ருன்னுருவந் தன்னை—உணர்வாரார்**
**விண்ணகத்தாய் மண்ணகத்தாய் வேங்கடத்தாய்**
**பண்ணகத்தாய் நீ கிடந்த பால்.** [நால்வேதப்

**பதவுரை:—விண் அகத்தாய்**—ஸ்ரீவைகுண்ட2த்தில் எழுந்தருளியிருப்பவனே!, **மண் அகத்தாய்**—இவ்வுலகிலும் அவதரித்தவனே!, **வேங்கடத்தாய்**—திருவேங்கடமலையிலும் நிற்பவனே! **பண்**—ஸ்வரத்தை ப்ரதா4னமாக உடைய, **நால் வேத அகத்தாய்**—நாலு வேதங்களிலும் விளங்குபவனே!, **உன் பெருமை**—உன்னுடைய மேன்மையை, **உணர்வார் ஆர்** அறியவல்லவர் யார்? **ஊழி தோறு ஊழி**—கல்பங்கள்தோறும் (ஆராய்ந்தாலும்), **உன் உருவம் தன்னை**—உன்னுடைய ஸ்வரூபத்தையும் ரூபத்தையும், **உணர்வார் ஆர்**—யார் அறிய முடியும்? **நீ கிடந்த பால்**—நீ பள்ளிகொண்ட பாற்கடலை, **உணர்வார் ஆர்**—யார் (அளவிட்டு) அறியமுடியும்?

**அவ:—** அறுபத்தெட்டாம் பாட்டு. (உணர்வாரார்) **கீழ் ஜ்ஞாநத்துக்கு விஷயம் அவன் என்றது; உணர அரிது என்கிறது இப்பாட்டில்.**

---

**அவதாரிகை:—** இப்படி அறிவுக்குப் பர்யவஸாநபூ4மி அவனல்லது இல்லையாயிருக்க, அவன் தன்மை அறிவார் தான் இல்லை என்கிறார்.

---

**"தத் கர்ம யந்ந ப3ந்த4ாய ஸா வித்3யா யா விமுக்தயே।**
**ஆயாஸாயாபரம் கர்ம வித்3யாந்யா ஶில்பநைபுணம்॥"**
[வி-பு 1.19.41]

[எந்தக் கர்மம் ப3ந்த4த்திற்குக் காரணமல்லவோ அதுவே கர்மம்; எது முக்திக்குக் காரணமோ அதுவே வித்3யை; மற்ற கர்மம் *ஶ்ரமத்திற்கே*. மற்ற வித்3யை *ஶில்பஶாஸ்த்ர* பாண்டி3த்யம் போன்றதே.] 67.

68. *அவதாரிகை:—* சென்ற பாசுரத்தில், "நாராயணம் மஹாஜ்ஞேயம்" என்கிறபடியே அறிவென்று பேர் பெற்றதெல்லாம் அவனையே அறியும் என்றார். இப்பாசுரத்தில், அவனை அளவிட்டு அறிவார் எவருமில்லை என்கிறார்.



**வ்யா:—** (உணர்வாராருன் பெருமை) **74. "जुष्टं यदा पश्यत्यन्यमीशं"** (ஜுஷ்டம் யதா3 பஶ்யத்யந்யமீஶம்) **என்கிறபடியே, கு3ணங்களோடே கூடியிருக்கிற உன்னை உணர்வாரார்? என்கிறது.** (ஊழியித்யாதி3) **காலத்தையெல்லாம் ஒரு போகியாக்கி உன்னுடைய ஸ்வரூபரூபகு3ணங்களை உணரப்புக்கால் உணரவரிது என்கிறது.** (விண்ணகத்தாய் மண்ணகத்தாய்) **ஸ்ரீவைகுண்ட2த்திலேயிருந்த நீ அவதாரரூபேண பூ4மியிலே வந்தவதரித்து அத்தாலே ஸௌலப்4யத்தை**

---

**உரை:—**பரமபத3த்திலே மேன்மை தோற்ற எழுந்தருளியிருக்குமவனாய், பூ4ய்யுபலக்ஷிதையான லீலாவிபூ4தியிலே நீர்மைதோற்றவந்து அவதரிக்கும் ஸ்வபா4வனாய், இரண்டிடத்துக்கும் பொதுவாய்க்கொண்டு மேன்மை நீர்மைக

---

*வ்யா:—* (*விண்ணகத்தாய்*) பரமபத3த்திலே மேன்மை தோற்ற எழுந்தருளியிருக்கிறவனே! (*விண்ணகத்தாய் உணர்வார் ஆர் உன் பெருமை*) "*யோ அஸ்யாத்4யக்ஷ: பரமே வ்யோமந்-ஸோ அங்க3 வேத3 யதி3 வா ந வேத3*"[எவனொருவன் இவ்வுலகிற்கெல்லாம் தலைவனாய், பரமபத3த்திலிருக்கிறானோ, அவனே தன் பெருமையை அறிவானோ மாட்டானோ] என்று பரமபதத்திலிருக்கும் உனக்கே உன் பெருமையை அறிய முடியுமோ என்று வேதம் ஐயமுறும்போது, உன் பரத்வத்தை வேறொருவரால் அறியமுடியுமோ? என்கை. (*மண்ணகத்தாய் உணர்வாரார் உன் பெருமை*) பரமபதத்திலிருந்து கீழேயிறங்கி பூமி முதலான கீழுலகங்களிலே நீர்மை தெரியும்படியாக அவதரித்த பின்புதான் உன்பெருமையை ஒருவரால் அறியமுடியுமோ? கடல் கிட்ட வந்தாலும் அதை அளவிடமுடியுமோ? "*தஸ்ய தீ4ரா: பரிஜாநந்தி யோநிம்*" [பு-ஸூ] [உயர்வறவுயர்ந்த அவனுடைய அவதாரத்தை மயர்வறமதிநலமுடையவர்கள் அறிகின்றார்கள்] என்று வேதம் அவதாரத்தைச் சில அறிவாளிகள் அறிவதாகச் சொல்லிற்றே எனில்: அங்கு "பரிஜாநந்தி" [அறிகிறார்கள்] என்றதும் க்ஷணந்தோறும் 'எத்திறம்' என்னும்படியேயாகும் என்பர் பெரியவாச்சான்பிள்ளை. (*மண்ணகத்தாய்*) 'மண்' என்றது பிராக்ருதலோகங்கள் அனைத்துக்கும் உப

யுடையவனே! கடல் கிட்டிற்றென்று பரிச்சே2தி3க்கப் போகாதிறே. (வேங்கடத்தாய்) ஸம்ஸாரிகளுடைய ஸகல து3ரிதங்களும் போம்படி திருமலையிலே வந்து நிற்கிறவனே! (நால்வேதப்பண்ணகத்தாய்) ஸ்வரத்துக்குள்ளீடாய் நின்று ப்ரதிபாதி3க்கிற வேத3ங்களுக்கு ப்ரவர்த்தகனானவனே! நீ கிடந்த பால் உணர்வாரார்?

---

ளிரண்டும் கரைபுரளும்படி திருமலையிலே வந்து நின்றருளினவனாய், ஸ்வரப்ரதா4னமான நாலு வேத3த்தாலும் உக்த வைப4வயுக்தனாக ப்ரதிபாதி3க்கப்படும் ஸ்வபா4வனானவனே!

---

லக்ஷணம். *(வேங்கடத்தாய் உணர்வாரார் உன்பெருமை)* எல்லாருக்கும் உய்யலாம்படி ஸர்வஸஹிஷ்ணுவாய், அர்ச்சக பராதீ4னமான ஸ்வரூபரூபகு3ணவிபூ4திகளையுடையவனாய், வானோர்க்கும் மண்ணோர்க்கும் பொதுவானவனாய், மேன்மை நீர்மைகளிரண்டும் வெள்ளமிட வேங்கடத்திலே நீ நிற்கும் பெருமையைத்தான் ஒருவரால் அறியமுடியுமோ? "ஹ்ருத3யாலுபி4: *ஶீ*லாத் ஜடீ3பூ4யதே"[ர-ஸ்த] என்கிறபடியே நெஞ்சுடையார் இந்த ஸௌ*ஶீ*ல்யத்தைக்கண்டு மோஹத்தையடைகின்றார்களன்றே. *(நால் வேதப்பண்ணகத்தாய் உணர்வாரார் உன் பெருமை)* "*வேத3ாஹமேதம் புருஷம்*" [நான் இப்புருஷனை அறிந்தேன்] என்ற வேத3புருஷனும் எப்படியறிந்தது என்னும் கேள்வியெழ "*மஹாந்தம்*" என்று அளவிட்டு அறியமுடியாதபடி அறப்பெரியவன் என்று அறிந்தேன் என்றானன்றே. பிறர் இவனை அறிவதைப்பற்றிப் பேசும்போதும், "*யஸ்யாமதம் தஸ்யமதம்*" [எவன் பரம்பொருளை அளவிட்டு அறியவில்லையோ, அவனுக்கே அது அறியப்பட்டதாகிறது.] என்றல்லவோ கோ4ஷித்தான் வேத3புருஷன். *(நால்வேதப்பண்ணகத்தாய்)* உதா3த்தம் அநுதா3த்தம் முதலான ஸ்வரங்களை ப்ரதா4னமாகக் கொண்ட நாலுவேத3ங்களாலும் இப்படி அளவிட்டு அறியமுடியாதவனாக ஓதப்படுபவனே என்றபடி. *(உணர்வாரார் உன் பெருமை)* இப்படியிருக்கிற உன்னுடைய மேன்மை நீர்மை முதலான கு3ணங்களால் வந்த பெருமையை யார்தான் அளவிட்டு அறியமுடியும்?



(உணர்வாரார் இத்யாதி3) உன்னாலும் அறியவொண்ணாது உன் ஐஶ்வர்யம். (ஊழிதோறூழி இத்யாதி3) காலமெல்லாம் கூடினாலும் ஸௌலப்4யம் அறியவொண்ணாது. விண்ணகம் - அவதாரம் இவை என்கை. விண்ணகத்தானாய், பாற்கடலானாய், மண்ணகத்தானாய் வேங்கடத்தானாய் நின்றான். (நால்வேதப்பண்ணகம்) ஐஶ்வர்யம் ப்ரதிபாதி3க்கிறது கண்ணுக்கு விஷயமிறே. மற்றையது இங்கு சொல்லிற்று அநுவாத3ம் காண்கையாலே. 75. "तस्य योनिं" (தஸ்ய யோநிம்) அவனுடைய பிறப்பு. உயர்வற உயர்நலமுடையவன் பிறப்பிறே. 75. "धीराः" (தீ4ராः) "धीमतां अग्रेसराः" (தீ4மதாம் அக்3ரேஸராः) மயர்வற மதிநலம் பெற்றார். 75. "परिजानन्ति" (பரிஜாநந்தி) க்ஷணந்தோறும் 'எத்திறம்' என்பர். 68.

---

இப்படியிருக்கிற உன்னுடைய கு3ணவைலக்ஷண்யத்தால் வந்த பெருமையைக் காலதத்வமெல்லாம் கூடினாலும் அறியவல்லார் ஆர்? அந்த கு3ணங்களுக்கு ஆஶ்ரயமாயிருக்கிற உன்னுடைய தி3வ்யாத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தைத்தான் அறியவல்லார் ஆர்? நீ ஆர்த்தரக்ஷணத்துக்காகப் பள்ளிகொண்டருளுகிற திருப்பாற்கடலை அறியவல்லார் ஆர்? 68.

---

*(உணர்வாரார் உன் உருவந்தன்னை)* அந்த கு3ணங்களுக்கு இருப்பிடமான உன் ஸ்வரூபத்தின் பெருமையைத்தான் யார் அறிவார்? அன்றிக்கே, அந்த கு3ணங்களை வெளிக்காட்டும் உன் தி3வ்யமங்க3ள விக்3ரஹத்தின் பெருமையைத்தான் யாரறிவார்? என்றுமாம். *(ஊழிதோறூழி உணர்வாரார்)* ஒரு காலத்திலன்றிக்கே காலமுள்ளபொழுதெல்லாம் எப்போதும் நின்று எல்லாரும் அறியப்பார்த்தாலும் உன் ஸ்வரூபரூப கு3ணப் பெருமைகளை அறியமுடியுமோ? "யானுமேத்தி ஏழுலகும் முற்றும் ஏத்திப் பின்னையும் தானும் ஏத்திலும் தன்னை ஏத்த ஏத்த எங்கெய்தும்" [திருவாய் 4-3-10] என்றாரன்றே நம்மாழ்வாரும். *(நீ கிடந்த பால் உணர்வார் ஆர்)* உன் ஸ்வரூபரூபகு3ணங்களை உணர்வது ஒருபுறமிருக்கட்டும். உன் விபூ4திக்கடலிலே ஒருதுளியாய், வருந்தினார் கூப்பீடு கேட்

69. **பாலன் றனதுருவா யேழுலகுண்டு ஆலிலையின்**
**மேலன்று நீவளர்ந்த மெய்யென்பர் — ஆலன்று**
**வேலைநீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ**
**சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு.**

**பதவுரை:— பாலன் தனது உருவாய்** — சிறு குழந்தையின் ரூபத்தை உடையவனாய், **ஏழுலகு உண்டு** — ஸப்த லோகங்களையும் அமுதுசெய்து, **ஆல் இலையின் மேல்** — ஆலமரத்தின் தளிரின்மேல், **அன்று** — ப்ரளய காலத்தில், **நீ வளர்ந்த** — நீ கண்வளர்ந்தருளினதை, **மெய் என்பர்** — உண்மை என்று (வைதி$_3$கர்கள்) சொல்லுவார்கள்; **அன்று** — அப்போது, **ஆல்** — அந்த ஆலந்தளிர், **வேலை நீர்** — (நீ கண்வளர்ந்த) ஸமுத்$_3$ர ஜலத்திலே, **உள்ளதோ** — இருந்ததோ? **விண்ணதோ** — (ஆத$_4$ாரமற்றதான) ஆகாஶத்திலிருந்ததோ? **மண்ணதோ** — (கரைந்துபோன) பூ$_4$மியிலிருந்ததோ? **சோலை சூழ் குன்று எடுத்தாய்** — தோட்டங்களால் சூழப்பட்ட கோ$_3$வர்த்த$_4$னமலையை (குடையாக) எடுத்தவனே! **சொல்லு** — (நீதான்) சொல்லவேணும்.

**அவ:— அறுபத்தொன்பதாம் பாட்டு.** (பாலன்) **எல்லா மொழிய ஓரோவொன்றை அறியப்போமே? என்கிறது.**

---

**அவதாரிகை:—** வேறொருவரால் அறியவொண்ணாமை கிடக்கிடீர்! ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனான உன்னாலேதான் உன்னை அறியப்போமோ? என்கிறார்.

---

பதற்காக நீ கண்வளர்ந்தருளுமிடமான திருப்பாற்கடல் ஒன்றையேனும் அளவிட்டு அறியவல்லார் உண்டோ?

இத்தால், இவனுடைய ஸ்வரூபரூபகு$_3$ணவிபூ$_4$திகளில் ஒரு சிறிதும் ஒருவராலும் அளவிட்டு அறியமுடியாது என்றதாயிற்று. 68.

69. *அவதாரிகை:*—வேறொருவரால் உன் ஸ்வரூபரூபகு$_3$ணவிபூ$_4$திகளை அறியமுடியாது என்பது இருக்கட்டும்; இயற்கையிலேயே எல்லாமறிந்தவனான நீயே உன்னுடைய சேஷ்டிதமொன்றை அறியவல்லவனோ? என்கிறார்.



வ்யா:— (பாலன் இத்யாதி$_3$) **ரக்ஷகாபேக்ஷமான வடிவையுடையையாய்.** (ஏழுலகுண்டு) **ஸ்வவ்யதிரிக்த ஸகலபத$_3$ார்த்த$_2$த்தையும் ரக்ஷித்து.** (ஆலிலையின்மேல்) **ஸர்வர்க்கும் ஆத$_4$ாரமான ஸர்வரக்ஷகனுக்குக் கண்வளரப்போகாத ஆலிலையின் மேலே.** (அன்று இத்யாதி$_3$) **அன்று வளர்ந்தத்தை ஆப்ததமரானவர்கள் மெய்யென்பர்கள். வேத$_3$மர்யாதை$_3$ இல்லையாகில் ஶூன்யமாதல், உண்டாகில் ஸத்யமாதலே யுள்ளது.** (சோலை இத்யாதி$_3$) **ஏழு வயஸ்ஸிலே மலையைக் கீழ்மேலாக எடுத்த நீ அவற்றைச் சொல்லவேணும்.** (அன்று) **தி$_3$க்கெல்லாம் அழிந்த அன்று.** (வேலை இத்யாதி$_3$)

---

**உரை:—** ஒரு குறட்டைத் தெறித்தால் ஒரு குறட்டிலே பால்பெருகும்படி முக்$_3$த$_4$சிசுவான விக்$_3$ரஹத்தையுடையனாய், ஸப்தலோகங்களையும் திருவயிற்றிலே வைத்து ஒரு பவனான ஆலந்தளிரிலே அந்த ப்ரளயஸமயத்திலே ஸர்வஶக்தியான நீ கண்வளர்ந்தருளின இத்தைப் பரமார்த்த$_3$

---

*வ்யா:—(பாலன் தனதுருவாய்)* **பா$_3$லன் என்றால் எப்படிப்பட்ட பா$_3$லன்? அன்றுபிறந்த குழந்தையைப்போன்ற பா$_3$லன். தாயானவள் குழந்தை உள்ளே குறட்டை (மூச்சை) இழுக்கும் போது பாலைத் தெறித்தால்** *(பீச்சினால்)* **வெளியே குறட்டை** *(மூச்சை)* **விடும்போது வயிறுநிரம்பி வாய்வழியாகவும் மூக்குவழியாகவும் பால் பெருகி வரும்படியான அத்தனை சிறிய இளங் குழந்தையின் உருவத்தையுடையவன் என்கை. ஸர்வலோக ரக்ஷகனானவன் தனக்கு ஒரு ரக்ஷகர் வேண்டும்படியான வடிவைக்கொண்டு செய்த செயல் என்னவெனில்:** *(ஏழுலகுண்டு)* **ஏழுலகங்களையும் பிரளயம் அழிக்காதபடி தான் விழுங்கித் தாயிருக்கும் வண்ணமே திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்தான் என்கிறார்.** *(ஏழுலகுண்டு)* **ஏழுலகம் என்றது ஸர்வேஶ்வரனால் ரக்ஷிக்கப்படும் எல்லாப் பொருள்களையும் உபலக்ஷணமுறையாலே காட்டுகிறது** *(ஆலிலையின்மேல்)* **அன்று துளிர்த்த ஓராலந்தளிரின்மேலே கண்வளர்ந்தானே! அனைத்துக்கும் ஆத$_4$ாரமான ஸர்வேஶ்வரன் ஓராலந்தளிரிலே கண்வளருவதே!** *(அன்று)* **மஹாப்ரளயகாலத்தில்.** *(நீ வளர்ந்த)* **நீ கண்வளர்ந்**

நீ கண் வளர்ந்த பாற்கடலுள்ளதோ ? நிராலம்பநமான ஆகாஶத்ததோ ? கரைந்து போன பூமியிலதோ? சொல்ல வேணும். பின்பு மலை எடுத்த ஆஶ்சர்யம் இதுக்கு ஸத்ருஶமோ ? இத்தால் அவன்தன் படியை அவன் தானே சொல்லுகையும் அரிது என்றபடி.

(பாலன்றனதுருவாய்) பாலனுடைய ரூபத்தையுடையையாய். அப்ராக்ருதமாய் மஹத்தரமான திருமேனியைச் சிறுக்கி ஸஜாதீயமாக்குகை மெய்யென்பர் ருஷிகள். "எத்

---

மென்றுகொண்டு பரமாப்தரான ருஷிகளடங்கலும் சொல்லா நின்றார்கள். அந்த ஆலானது ஸர்வமும் அழிந்தவன்று வெள்ளங்கோத்துக் கிடக்கிற ஸமுத்ர ஜலத்திலே உள்ளதோ ? அன்றிக்கே, நிராலம்பநமான ஆகாஶத்திலே உள்ளதோ? இல்லையாகில், ப்ரளயஜலத்திலே கரைந்து

---

தை. (*மெய் என்பர்*) உண்மை என்று ரிஷிகள் சொல்லுவர். அப்ராக்ருதமான மிகப்பெரிய திருமேனியை, ப்ராக்ருதமான மிகச்சிறிய குழந்தையின் வடிவாக்குவது; அவ்வடிவினுள்ளே மிகப்பெரிய எல்லாவுலகங்களையும் அடக்குவது; அவ்வடிவைக் கொண்டு மிகச் சிறியதொரு ஆலந்தளிரிலே கண்வளருவது; இவை எல்லாவற்றையும் உண்மையென்று பரமாப்தரான ரிஷிகளனைவரும் சொல்லுகிறார்கள். மெய்யல்லதறியாத அவர்கள் இச்செயலிலே 'எத்திறம்' என்று ஈடுபடுகையாலே இதைப் பொய்யென்னவொண்ணாது. (*மெய்*) உன் திருமேனி அப்ராக்ருத மென்பதும் மெய்; அதை ப்ராக்ருத ஸஜாதீயமாக்கினாய் என்பதும் மெய். அது மிகப்பெரியதென்பதும் மெய்; அதைமிகச் சிறியதாக்கினாய் என்பதும் மெய். அது ஸர்வாதாரமென்பதும் மெய்; அதற்கு ஓராலந்தளிரை ஆதாரமாக்கினாய்என்பதும்மெய்; இவை சில அகடிதகடநாஸாமர்த்யங்களிருந்தபடியென் ?

இவ்வளவேயோ ? (*ஆலன்று வேலைநீர் உள்ளதோ*) ஏழுலகுண்ட உன்னைத் தாங்கிநிற்கும் ஆலிலை—எல்லாம் அழிந்த அன்று. வெள்ளமிட்டுக்கிடக்கிற ப்ரளயஜலத்திலே உள்ளதோ? (*விண்ணதோ*) அப்படியில்லாவிடில், ஒரு வஸ்துவும் பற்றி



திறம்" என்ன, "பொய்" என்னவொண்ணாது. (மெய்) நீயே ஸர்வத்துக்கும் தாரகனானமையும் மெய். இருந்த படியென்? (சோலை இத்யாதி) ஏழு பிராயத்திலே பெரிய மலையையெடுத்த ஆஶ்சர்யமும் சொல்லவேணும். இது ஆழ்வார் வந்தால் கேட்கவிருந்தோமோவென்றானே எம் பெருமான். இது அத்யந்தம் விஸ்மயம் என்கிறார். 69.

70. சொல்லுந் தனையும் தொழுமின் விழுமுடம்பு
செல்லுந் தனையும் திருமாலை—நல்லிதழ்த்
தாமத்தால் வேள்வியால் தந்திரத்தால் மந்திரத்தால்
நாமத்தா லேத்துதிரேல் நன்று.

பதவுரை:— **திருமாலை** — லக்ஷ்மீநாதனை, **சொல்லுந் தனையும்** — சொல்லுவதற்கு ஶக்தியுள்ளபோதெல்லாம் (சொல்லி), **தொழுமின்** — வணங்குங்கள்; **விழும் உடம்பு**— நஶிப்பதை இயற்கையாகக்கொண்ட ஶரீரமானது, **செல்**

---

போன பூமியிலேயுள்ளதோ ? ஏழு திருநக்ஷத்ரத்திலே ஏழுநாள் ஒருபடிப்பட சோலைகளாலே சூழப்பட்ட கோவர்த்தநபர்வதத்தை எடுத்து தரித்துக்கொண்டு நின்றவனே! இத்தை அருளிச்செய்யவேணும். உன்னாலும் உன்படி சொல்லமுடியாது என்று கருத்து. 69.

---

நிற்கமுடியாத ஆகாயத்திலே உள்ளதோ? (*மண்ணதோ*) அப்படியுமில்லாவிடில் ப்ரளயஜலத்திலே கரைந்துபோன பூமியிலேயுள்ளதோ? (*சொல்லு*) எல்லாமழிந்தவன்று வேலைநீர், விண், மண் முதலிய ஒன்றுமில்லையாகையாலே இவற்றிலெல்லாம் அவ்வாலந்தளிர் இருந்திருக்க முடியாது. அது எங்கேயிருந்தது என்பதை நீயே சொல்லவேணும். (*சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு*) ஏழுபிராயத்திலே ஏழுநாள் ஆடாமல் அசையாமல், சோலைகளாலே சூழப்பட்ட கோவர்த்தன பர்வதத்தைத் தாங்கிநின்றவனே! இச்செயலும் எப்படி முடிந்தது என்பதைச் சொல்லவேணும். இச்செயலும் முன் சொன்ன செயலுக்கு ஒப்பாகாது என்றுமாம். (*சொல்லு*) இவ்வொரு செயலின் பெருமையை உன்னாலும் சொல்லமுடியாது. 69.

**லுந்தனையும்** — இருக்கும் வரையிலும், **நல் இதழ் தாமத்தால்**—அழகிய பூவிதழ்களைக் கொண்ட மாலையாலாவது, **வேள்வியால்** — யாக2த்தாலது, **தந்திரத்தால்** — (மந்திரமில்லாத) கிரியைகளாலாவது, **மந்திரத்தால்**—(கிரியையற்ற) மந்திரத்தினாலாவது, **நாமத்தால்**—திருநாமஸங்கீர்த்தனத்தினாலாவது, **ஏத்துதிரேல்**—(ஆஶ்ரயித்துத்) துதிப்பீர்களாகில், **நன்று**—நன்மை தருவது.

அவ:— **எழுபதாம் பாட்டு.** இப்படி **அபரிச்சி2ந்ந ஶக்தியான பின்பு அவனை எல்லாரும் ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.**

**வ்யா:**— (சொல்லும் இத்யாதி3) **நாக்குச் சொல்லப் பாங்கானபோதெல்லாம் சொல்லி ஆஶ்ரயியுங்கோள்.** (விழுமுடம்பு செல்லுந்தனையும்) **உடம்பு பாங்கான போதெல்லாம்**

---

**அவதாரிகை:**— இப்படியான பின்பு ஜக3த்திலுள்ளாரடங்கலும் அநந்யபரராய்க்கொண்டு அவனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

**உரை:**—புருஷகாரபூ4தையான பிராட்டியோடே நித்ய ஸம்யுக்தனான ஸர்வேஶ்வரனை, 'இப்போது விழும், இப்போது

---

70. *அவதாரிகை:*—இப்படி ஒரு செயலின் பெருமையையும் அவனாலேயும் சொல்லமுடியாதபடி அத்தனை பெரிய ஸ்வரூபரூபகு3ணவிபூ4தி சேஷ்டிதங்களை உடையவனானபின்பு, உலகிலுள்ளாரனைவரும் வேறொன்றிலும் ஈடுபடாமல் அவனை அடையுங்கள் என்கிறார்.

*வ்யா:—(திருமாலைத் தொழுமின்)* புருஷகாரமாயிருக்கும் பெரிய பிராட்டியாரோடே எப்போதும் சேர்ந்திருக்கும் ஸர்வேஶ்வரனைத் தொழுங்கள். *(திருமாலை)* உங்கள் குற்றங் கண்டு அஞ்சவேண்டாதபடி, அவனுடைய சீற்றத்தை ஆற்றிச் சேரவிடுமவள் எப்போதும் அருகிலிருக்கிறாள். *(விழுமுடம்பு செல்லுந்தனையும் தொழுமின்)* 'இப்போது விழும், இப்போது விழும்' என்னும்படி மின்னின் நிலையிலதான ஶரீரமானது விழும்வரையிலும் தொழுங்கள். பாங்காயிருக்கும்



**ஆஶ்ரயியுங்கோள்.** (திருமாலை) **பாங்கானபோது ஆஶ்ரயிக்க. யாவத3ாத்மப4ாவி ஆஶ்ரயித்தானாகக் கொள்ளும் பித்தனைச் சொல்லுகிறது.** (நல்லிதழ்த் தாமத்தால்) **நல்ல செவ்விப்பூவையுடைய மாலையால்.** (வேள்வியால்) **செவ்வி மாலை கிடையாதாகில் கர்த்தவ்யமான கர்மத்தாலே; அது கிடையாதாகில் அதுக்கடியான தந்த்ரத்தாலே; அது அடையப் போகாதாகில் மந்த்ரத்தைக் கொண்டு செய்வது. க்ரியாரூபமான தந்த்ரம் அரிதாகில் வாக்3வ்ருத்தியான மந்த்ரத்தாலே செய்வது. மந்த்ரத்துக்கு தே3ஶகாலநியதியும் அதி4காரி நியதியும் வேணுமென்றிருந்திகோளாகில் நாமத்**

---

விழும்' என்னும்படி அஸ்தி2ரமான ஶரீரமானது விழுமளவும் அழகிய பூக்களாலேயுண்டான திருமாலையாலும் யாக3ாதி3 ஸத்கர்மங்களாலும், மந்த்ரவிது4ரமான கேவலக்ரியைகளாலும், க்ரியாவிது4ரமான மந்த்ரங்களாலும் ஆஶ்ரயியுங்கோள். இதுக்கே ஶக்தமின்றிக்கேயிருக்கில், உங்கள் வாக்கு உக்தி ஸாமர்த்2யத்தை உடைத்தாய்க்கொண்டு சொல்லுமளவும்,

---

வரையில் தொழுங்கள் என்றுமாம். தொழுவதற்கு உபகரணங்கள் எவையென்னில்: *(நல்லிதழ்த் தாமத்தால் தொழுமின்)* சாத்துவதற்காக அழகிய பூவிதழ்களைக்கொண்ட மாலையைக் கைக்கொண்டு தொழுங்கள். (வேள்வியால்) அழகிய பூமாலை கிடைக்கவில்லையென்றால். மந்திரங்களும் கிரியைகளுமடங்கிய யாக3ம் முதலான நல்ல நித்யநைமித்திகாதி3 கர்மங்களாலே ஆஶ்ரயியுங்கள். *(தந்திரத்தால்)* அதுவும் முடியவில்லையானால் மந்திரமில்லாத வெறும் அஞ்ஜலி நமஸ்காராதி3 க்ரியைகளாலே தொழுங்கள். *(மந்திரத்தால்)* தே3ஹத்தில் அஶக்தியாலே அதுவும் முடியவில்லையாகில், கிரியையற்ற வெறும் அஷ்டாக்ஷராதி3 மந்திரங்களாலே அவனை மனனம் செய்யுங்கள். மந்திரங்களைச் சொல்லுவதற்கும் தே3ஶகாலநியதியும் அதி4காரி நியதியும் வேணுமே என்னில்: *(சொல்லுந்தனையும் நாமத்தால் ஏத்துதிரேல் நன்று)* முற்கூறிய ஒன்றும் முடியாவிடில், உங்கள் வாக்கானது பேசுவதற்கு வல்லமைபெற்றிருக்கும் வரையில் ஒரு நியதியையும் அபேக்ஷியாத அவனுடைய

தாலே ` ஏத்துவது. தாய்பேர் சொல்லக் குளித்துவர வேண்டாவிறே. (திருமாலை) நியதியுண்டென்னில்; "அம்மே" என்னுமோபாதி சொல்ல அமையும். 70.

71. நன்று பிணிமூப்புக் கையகற்றி நான்கூழி
நின்று நிலமுழுது மாண்டாலும்—என்றும்
விடலாழி நெஞ்சமே வேண்டினேன் கண்டாய்
அடலாழி கொண்டான்மாட் டன்பு.

**பதவுரை:—ஆழி நெஞ்சே**—கடல் போன்று ஆழ்ந்த மனமே! **பிணி மூப்பு நன்று கையகற்றி**—நோயையும், கிழத்தனத்தையும் நன்ருகப் போக்கடித்து (கைவல்யத்தைப் பெற்று), **நான்கு ஊழி நின்று**—நாலு யுக$_3$ங்களிலும் நிலையாயிருந்து, **நிலம் முழுதும் ஆண்டாலும**—அண்ட$_3$ம் முழுவதையும் ஆளும் சிறந்த செல்வத்தைப் பெற்ருலும், **அடல் ஆழி கொண்டான் மாட்டு**—சண்டை செய்யும் திருவாழியாழ்வானைக் கைக்கொண்டவனிடம், **அன்பு**—ஸ்நேஹத்தை, **விடல்**—விடாதே; **வேண்டினேன் கண்டாய்**—யாசிக்கிறேன் கிடாய்.

---

கு$_3$ணதி$_3$சளுக்கு வாசகமான திருநாமங்களாலே ஸ்ரிய:பதியைப் புகழ்வுதிகோளாகில், அது மிகவும் நல்லது. 70.

---

கு$_3$ணசேஷ்டிதாதி$_3$களைச் சொல்லும் திருநாமங்களைக்கொண்டு துதித்தீர்களானல் அதுவே மிக நல்லது. (*திருமாலை நாமத்தால் ஏத்துதிரேல்*) தாய்பேர் சொல்லக் குளித்து வர வேண்டாமே! ஆபத்துக்காலத்திலே 'அம்மா' என்பது போலே சொன்னலும் போதுமே. 'திருநாமஞ்சொல்ல ஒரு நியதி வேண்டியதில்லையோ?' என்று ப$_4$ட்டரை நஞ்ஜீயர் கேட்க, 'க$_3$ங்கை$_3$யிலே நீராடப்போகிறவன் சுத்$_3$தி$_4$க்காக மற்ருெரு உவர்க்குழியிலே நீராடவேண்டுமோ ?' என்று ப$_4$ட்டர் அருளினர் என்னும் ஐதிஹ்யத்தை இங்கு அநுஸந்தி$_4$ப்பது. பதவுரையிலுள்ளதுபோலே, 'சொல்லுந்தனையும் தொழுமின் விழுமுடம்பு செல்லுந்தனையும்... நன்று' என்று கூட்டியும் பொருள்கொள்ளலாம். 70.



அவ:— எழுபத்தோராம் பாட்டு. (நன்று) ஐஶ்வர்ய கைவல்யங்களில் புகாதே அவன்தன்னையே ஆசைப்படப் பார் என்கிருர்.

வ்யா:— (நன்று இத்யாதி$_3$) இத்தால் கைவல்யத்தைச் சொல்லுகிறது. (நான்கூழியித்யாதி$_3$) ப்$_3$ரஹ்மாவினுடைய

---

**அவதாரிகை:**— நாட்டாரைக்கொண்டு கார்யமென் ? நெஞ்சே! நீ இவ்விஷயத்தை விடாதே கிடாய்! என்கிருர்.

**உரை:**—கேவலாத்மாநுப$_4$வத்துக்கு விலக்கான வ்யாதி$_4$ ஜரை தொடக்கமானவற்றை நன்ருகக் கைகழலவிட்டு

---

71. *அவதாரிகை:*—மற்றுள்ளார் எவ்வளவு உபதே$_3$ஶித்தாலும் திருந்தாமலிருப்பதைக்கண்டு,"ஆரானுமாதானும் செய்ய அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே" [பெரிய திருவ-25] என்ற நம்மாழ்வாரைப்போலே, 'உலகிலுள்ளார் எக்கேடு கெட்டால் நமக்கென்ன ? நெஞ்சே! நீ இவ்விஷயத்தைக் கைவிடாதேகிடாய் !' என்கிருர்.

*வ்யா:*—(*நன்று பிணி மூப்புக் கையகற்றி*) பிணி - வியாதி; மூப்பு-கிழத்தனம். இவையிரண்டும் மரணம் முதலான மற்ற சரீரத$_4$ர்மங்களுக்கும் உபலக்ஷணம். இவையே இந்த ஜீவன் தன் ஆத்மாவை அனுப$_4$விப்பதற்கு விலக்காயிருக்கின்றன. இவையும் இவற்றுக்குக் காரணமான *ஶரீரமும்* கழிந்தால் ஆத்மாநுப$_4$வம் தானே ஏற்படும். இதுவே கைவல்யமோக்ஷம் எனப்படுவது. இதைப் பெறுவதற்காகச் சிலர் பரமபுருஷனை அடைவதுண்டு என்பதை "*ஜராமரண மோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே*" [கீ$_3$தை 7-29] [மூப்பும் மரணமும் விடுவதற்காக எவர்கள் என்னையடைந்து முயலுகின்றனரோ......] முதலான விடங்களில் கண்ணன் காட்டினன். கைவல்யமெனப்படும் அந்தப் புருஷார்த்த$_2$த்தை எடுக்கிருர் இங்கு. (*நன்று...*) இவ்வுலகில் *ஶரீரத்தோடு* இருக்கும் வரையில் பிணிமூப்புக்களை அடியோடு களைவதென்பது ஆகாது. பிணி மூப்புக்களுக்குக்

**ஐஶ்வர்யத்தைப் பெற்றாலும். (ஆழி நெஞ்சமே) அளவுடைய நெஞ்சே! நீயே முற்பட்டிருக்கிற உன்னை இரக்கிறேனிறே.**

இப்படி ப்ரக்ருதிவிநிர்முக்தனான ஆத்மாவை அநுப4விக்கையாகிற கைவல்யபுருஷார்த்த2த்தோடே காலதத்வமுள்ள

காரணமான ஶரீரம் நீங்கப்பெற்று கைவல்யத்தைப் பெற்றால் தான் அவை அடியோடு களையப்படுகின்றன. *(கையகற்றி)* பிணி மூப்புக்களைவதே இவனுக்கு முக்கிய புருஷார்த்த2ம். ஞானிக்கோவெனில் ப4க3வத் கைங்கர்யமே முக்கிய புருஷார்த்த2ம். இக்காரணங்களால் 'நன்று பிணிமூப்புக் கையகற்றி' என்று கைவல்யமோக்ஷமே கூறப்படுகிறதென்று விளங்குகிறது. *(நான்கூழி நின்று)* ஊழி என்று கற்பகாலம். "ஸஹஸ்ரஶீர்ஷா" என்றவிடத்தில் ஸஹஸ்ரஶப்3த3ம்போலே 'நான்கூழி' என்றவிடத்தில் 'நான்கு' என்பதும் 'அநந்தம்' என்னும் பொருளையுடையது. இத்தால் பிரகிருதியினின்றும் நீங்கிய ஆத்மாவை அனுப4விக்கையாகிற இக்கைவல்யமோக்ஷமானது காலதத்துவமுள்ளவரையிலும் நித்யமாயிருப்பது என்று உணர்த்தப்படுகிறது. "குறுகாநீளா இறுதிகூடா எனையூழி சிறுகா பெருகா அளவில் இன்பம்" [திருவாய் 6-9-10] என்று இதைப் பேசினாரன்றோ நம்மாழ்வாரும். "நான்கூழி நின்று" என்பதைப் பின்னே கூட்டியும் பொருள்கொள்ளலாம். *(நான்கு ஊழி நின்று நிலம் முழுதும் ஆண்டாலும்)* பல கற்ப காலங்கள் நிலையாயிருந்து, பூ4மி முதலாக ப்3ரஹ்மலோகம் வரையிலிருக்கும் இந்த அண்ட3ம் முழுவதையும் தன் வஶமாக்கிப் பிரமனாயிருந்து ஆண்டாலும். ஐஶ்வர்யமெனப்படும் புருஷார்த்த2த்தின் மேலெல்லையைச் சொல்லுகிறது. *(நான்கு ஊழி நின்று) "புநஸ் த்ரைலோக்ய தா4த்ருத்வம் ப்ராப்தவாந்"* என்கிற ரீதியிலே ஒரு கல்பத்தில் பிரமனாயிருப்பவனே. பரம புருஷனை ஆராதி4த்து மறுகல்பத்திலும் பிரமனாவதுண்டாகையாலே. இப்படிப் பல கற்பங்களில் பிரமனாயிருந்து உலகாண்டாலும். 'ஊழி' என்று யுக3த்தைக் குறிப்பதாகக் கொண்டு, 'நான்கூழி' என்று பிரமனுக்கு ஒரு பகலான சதுர்யுக3த்தைச் சொல்லி, பிரமனின் ஆயுட்காலத்தை உபலக்ஷிப்பதாகவும் கொள்ளலாம். இங்கேயும் 'நான்கூழி' என்று அநந்த



(அடலாழி கொண்டான் மாட்டன்பு விடல்) **விடாதே**

தனையும் நெடுகிநின்று பூ4மிதொடக்கமாக ப்3ரஹ்மலோக பர்யந்தமாக உண்டான இவ்வண்டை3ஶ்வர்யமெல்லா

காலத்தைக் குறிப்பதாகக்கொண்டு, பிரமனின் ஐஶ்வர்யமும் நிலையற்றது என்னும் குறையும் நீங்கி, நித்யமான ப்3ரஹ்ம ஐஶ்வர்யத்தைப் பெற்றாலும் என்றுமாம். *(நன்று-நின்று)* கைவல்யத்திற்கு ப4க3வத3நுப4வத்தைக் காட்டிலும் அல்பமானது என்னுமொரு குறையுண்டு. ப்3ரஹ்மாவின் ஐஶ்வர்யத்திற்கும் அஸ்தி2ரமானது என்னும் குறையுண்டு. இவ்விரண்டு குறைகளும் நீங்கி 'அளவில் இன்பம்' என்கிறபடியே கைவல்யமே நன்றான – மிகச்சிறந்த – இன்பமானாலும். ப்3ரஹ்மாவின் செல்வம் நிலைநிற்கும் நித்யைஶ்வர்யமானாலும். *(கையகற்றி...ஆண்டாலும்)* இவ்விரண்டு புருஷார்த்த2ங்களையும் ஒரே அதி4காரி ஒரே காலத்தில் பெறுவதென்பது இயலாத காரியம். அதுவும் கூடி, நன்றான கைவல்யபுருஷார்த்த2மும், நிலைநிற்கும் ஐஶ்வர்யமும் ஒரேகாலத்தில் எனக்குக் கிடைப்பதாயிருந்தாலும். *(ஆழி நெஞ்சே)* கடல்போலே பேரளவுடைய க3ம்பீ4ரமான நெஞ்சே! குறைகள் நீங்கப்பெற்ற ஐஶ்வர்ய கைவல்யபுருஷார்த்த2ங்களைப் பெற்றாலும் அது அவனுக்கே ஆளாகும் சிறு காலத்தையும் ஒவ்வாது என்பதை அறிந்திருப்பாயன்றோ நீ என்று கருத்து. *(ஆழி நெஞ்சே)* என்னிலும் முற்பட்டுநிற்கும் உன்னையன்றோ யாசிக்கிறேன் நான். *(அடலாழி கொண்டான் மாட்டு அன்பு விடல்)* எத்தனையேனும் சிறந்த புருஷார்த்த2ங்களைப் பெறுவதாயிருந்தாலும் ஸுத3ர்ஶனதா4ரியான பரமபுருஷனிடம் அன்பை விடாதே. *(அடல் ஆழி கொண்டான்)* அடியார்களின் விரோதி4களிடம் போர்புரிவதையே தொழிலாகக்கொண்ட ஸுத3ர்சனத்தை தா4ரித்தவன். *(அன்பு என்றும் விடல்)* அவன் விஷயத்தில் அன்பை விடாதே. இதர புருஷார்த்த2ங்கள் அல்பாஸ்தி2ரங்களாகையாலே அவனைப்பற்று என்று சொல்லுகிறேனல்லேன். அவை அநந்தஸ்தி2ரப2லமானாலும், இவனை அனுப4விப்பது அல்பாஸ்தி2ரமானாலும் இவனிடம் அன்பை விடாதேகிடாய்.

**கொள்.** (வேண்டினேன் கண்டாய்) **பால்குடிக்க இரக்கிறேனிறே. ஐஶ்வர்யம் நிலை நில்லாது; கைவல்யம் ப4க3வத் கைங்கர்யத்தைப் பார்க்க அல்பமென்கை.**

**அன்றியே, இரண்டையும் சேர்த்துத் தரிலும், விடல்— இவை நன்றானவன்றும் அவனல்லாமை(யை)யும், பற்றுகைக்கு அவனாக அமையும்.** (வேண்டினேன்) **இவ் வர்த்த2ம்.** (அடலாழியித்யாதி3) **எனக்குக் கைக்கூலி தந்து பற்றும் விஷயம். 71.**

**72. அன்பாழி யானை யணுகென்னும் நாவவன்றன்**
**பண்பாழித் தோள்பரவி யேத்தென்னும்—முன்பூழி**
**காணானைக் காணென்னும் கண்செவி கேளென்னும்**
**பூணாரம் பூண்டான் புகழ்.**

**பதவுரை:—அன்பு—**அன்பு நிரம்பியதான மனம், **ஆழி யானை அணுகு என்னும்—**'சக்கரபாணியைக் கிட்டுவாயாக'

---

வற்றையும் ஸ்வாதீ4நமாக நிர்வஹிக்கப்பெற்றாலும். அளவுடைய நெஞ்சே! யுத்3தோ4ந்முக2மான திருவாழியைத் திருக் கையிலே தா4ரித்துக்கொண்டிருக்கிற ஸர்வேஶ்வரன் விஷயத்திலுண்டான ஸ்நேஹத்தை ஸர்வகாலத்திலும் விடாதே கொள்; இவ்வேப்பங்குடிநீரைக் குடிக்கைக்கு உன் காலைப் பிடித்து வேண்டிக்கொள்கிறேன்கிடாய்! என்கிறார். 71.

---

கு3ணக்ருததா3ஸ்யத்தைக் காட்டிலும் ஸ்வரூபக்ருததா3ஸ்யத்தின் ஏற்றத்தைக் காட்டுகிறார். *(வேண்டினேன் கண்டாய்)* உண்மையில் அவை அநந்தஸ்தி2ரப2லங்களுமன்று; இவனையடைவது அல்பாஸ்தி2ரமுமன்று. இப்படிப்பட்ட விலக்ஷண விஷயத்தைப் பற்றுகைக்கன்றோ நான் உன்னை யாசிக்கிறேன்: பால்குடிக்கக் கால்பிடிக்கவேண்டுமோ? இவ்வேப்பங்குடி நீரைக் குடிக்கவன்றோ உன் காலைப்பிடித்து வேண்டிக் கொள்ளுகிறேன். [வேப்பங்குடிநீர் — வேப்பங்கஷாயம். இங்கு விபரீத லக்ஷணையாலே இனிய பொருளைக் காட்டுகிறது.] 71.



என்று சொல்லும்; **நா-**நாக்கு, **அவன் தன் பண்பு ஆழி தோள் பரவி ஏத்து என்னும்-**'அப்பெருமானுடைய அழகுக்கடலான திருத்தோள்களை முறைகெடத் துதிப்பாயாக' என்று சொல்லும்; **முன்பு ஊழி காணானைக்காண் என்னும் கண்-**கண்ணானது '(நாம் அபராத4ம் பண்ணிப்போந்த) அநாதி3யான காலத்தைக் காணாதவனான எம்பிரானைக் காண்பாயாக' என்று கூறும்; **செவி-**காதோவென்னில், **பூண் ஆரம் பூண்டான் புகழ் கேள் என்னும்—**'ஆப4ரணமாயிருக்கும் முத்துமாலையை தா4ரித்தவனுடைய கீர்த்தியைக் கேட்பாயாக' என்று கூறும்.

**அவ:—எழுபத்திரண்டாம் பாட்டு.** (அன்பு) **ஶிஷ்யர்கள் ஆசார்யர்களானார்கள்.**

**வ்யா:—** (அன்பு) **என்று நெஞ்சைச் சொல்லிற்று. "அடலாழிகொண்டான் மாட்டன்பு — விடாதே" என்று**

---

**அவதாரிகை:—**இவர் கரணங்கள் இவர்க்கு முன்னே அங்கே ப்ரவணமாய், கு3ருஶிஷ்யக்ரமம் மாறாடி எதிரே நின்று, "ஆழ்வீர்! நீர் இவ்விஷயத்தை விடாதேகிடீர்" என்று அவைதான் தமக்கு முன்னே உபதே3ஶிக்கிற படியை அருளிச்செய்கிறார்.

**உரை:—**அன்பென்றும், அன்புக்கு ஆஶ்ரயமென்றும் தெரியாதபடி அன்புதானே ஒரு வடிவுகொண்டாற்போலே

---

72. *அவதாரிகை:—*'அவனிடம் அன்பை விடாதே' என்று நெஞ்சை வேண்டினார் சென்ற பாசுரத்தில். இவருடைய நெஞ்சு முதலான இந்திரியங்கள் இவர்க்கு முன்னே ப4க3வானிடத்தில் ஈடுபட்டிருப்பவையாகையாலே; தாங்களே இவருக்கு ஆசார்யர்களாகி, 'ஆழ்வீர்! நீர் இவ்விஷயத்தை விடாமலிரும்' என்று இவருக்கு உபதே3ஶிக்கிறபடியை அருளிச்செய்கிறார் இப்பாசுரத்தில்.

*வ்யா:—(அன்பு)* அன்புக்கு இருப்பிடமான நெஞ்சைச் சொல்லுகிறது. இது அன்பு; இது அன்புக்கு இருப்பிடமான

யதி) தம்முடைய பக்கல் கர்த்ருத்வம் தவிர்த்தபின்பு ஒரு அசேதநக்ரியையைப் பற்றுவரன்றே. (செங்கண்மால் கண்டாய்) ஸர்வேஶ்வரன் கண்டாய். 99. "तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी" (தஸ்ய யத2ா கப்யாஸம் புண்ட3ரீகமேவ மக்ஷிணீ).

(இம்மண்ணித்யாதி3) ப்ரதிப3ந்த4கமான அசித்தோடே கூடின சேதநனும் அவனே. அநுக்தமான மஹத3ாதி3களைச் சொல்லுகிறது. அவனையொழிய ஸ்வதந்த்ரமாயிருப்ப தொன்றுமில்லை. (கண்டாய் கடைக்கட்பிடி) இவ்வர்த்த2த்தை, திறம்பாது கடைக்கட்பிடி—கடை போகப்பிடி. இவ்வர்த்த2த்தி னுடைய கடைப்பிடி கண்டாயே என்றுமாம், (அறமித்யாதி3) ஆபாதப்ரதீதியில் அவனையொழிய புண்யபாபமென்று

---

உரை:—எனக்கு ப4வ்யமான நெஞ்சே! புண்யம் பாபமென்று சொல்லப்படுகிற இரண்டுக்கும் நிர்வாஹகனைப் போருகிறவன் புண்ட3ரீகாக்ஷனை ஸர்வேஶ்வரன் தானே கிடாய். இந்த பூ4மியும் அலையெறிகிற கடலும், வாயுவும்,

---

[எந்த ஜீவனை (அண்ட3த்தினுள்ளிருக்கும்) இந்த லோகங்களிலிருந்து மேலே (பரமபத3த்திற்கு) அழைத்துச்செல்ல விரும்புகிருனே, அவனை இந்தப் பரமாத்மாவே நல்ல கர்மங்களைப் பண்ணும்படி செய்கிருன்; எவனைக் கீழே தள்ள விரும்புகிருனே, அவனை இப்பரமபுருஷனே கெட்ட கர்மங்களைப் பண்ணும்படி செய்கிருன்.] என்று மறைமுடியில் ஓதப்படுகிறதன்றே. *(செங்கண்மால் கண்டாய்)* '*தஸ்ய யத2ா கப்யாஸம் புண்ட3ரீகமேவமக்ஷிணீ*' [சா2ந் 1-7] [அவனுக்கு ஸூர்யனால் மலரும் தாமரைபோன்ற இரு கண்கள் உள] என்று வேதா3ந்தங்களிலே பரம்பொருளுக்குச் சொல்லப்பட்ட அடையாளத்தை உடையவன் கிடாய்! *(அறம்பாவம் என்றிரண்டுமாவான்)* புண்ணியத்தைச் செய்தும், பாவத்தைத் தவிர்த்தும் போகும் நாம் எப்படி அவனுக்கு வஶப்பட்டவர்களோ, அப்படியே அப்புண்ணிய பாவங்களும் அவனிட்ட வழக்காயிருப்பவை. அவனுக்கு வஶப்பட்டவை வேறு ஏதேனுமுண்டோ



தோற்றுவது: நிலைநின்று பார்த்தால் அவனே கடவனென்று தோற்றும். "திறம்பாது" என்று நெஞ்சோடே கூட்டவுமாம். "திறம்பாது — அறம்பாவமென்றிரண்டுமாவான்" என்னவுமாம். "திறம்பாது கடைக்கட்பிடி" என்னவுமாம்.

நாட்டார்க்குப் பலவழி உண்டாகிலும் நம்முடைய வழியைப் பற்றியிராய் நீ. (திறம்பாதென்னெஞ்சமே) சொல் என்று அலைகிற நெஞ்சமே. (செங்கண்மால்) நம்முடைய விஷயத்திலிருக்கிறபடி கண்டாயே. (அறமித்யாதி3) பெறுகைக்கும் இழக்கைக்கும் அவனுடைய நிக்3ரஹாநுக்3ரஹங்

---

ஆகாஶமும், இவற்றுக்குப் புறம்பான மஹதா3தி3களுமான இவற்றுக்கெல்லாம் நிர்வாஹகனுயிருக்கின்றுன் அந்தப் புண்ட3ரீகாக்ஷன் தானேகிடாய்! முடிவில் வந்தால்,

---

எனில், இவனுக்குப் பரதந்திரமாயில்லாதிருப்பது ஒன்றுமில்லை என்கிருர் மேலே: *(இம்மண் தான் மறிகடல்தான் மாருதம்தான் வான் தானே கண்டாய்)* நாம் காணநிற்கும் ப்ருதி2வியும், அலையெறிகிற கடலாலே உபலக்ஷிதமான ஜலதத்வமும், வாயுதத்வமும், ஆகாஶதத்வமும் இவற்றாலே உபலக்ஷிக்கப்பட்ட தேஜஸ் தத்வமும். இப்பஞ்சபூ4தங்களாலான அண்ட3மும், அதனுள்ளிருக்கும் எல்லா அசேதனப்பொருள்களும் அவனிட்ட வழக்கே. *(புறந்தான்)* இவ்வண்ட3த்திற்கு வெளியேயுள்ள ப்ரக்ருதிமஹத3ஹங்காரங்களும் ஜீவனும் அவனிட்ட வழக்கே. *(தானே கண்டாய்)* அப்புண்ட3ரீகாக்ஷன் ஒருவனேயன்றே இவையெல்லாவற்றுக்கும் ப்ரகாரியாய், ஶரீரியாய், சேஷியாய், நியாமகனுய், ஸ்வாமியாயிருக்கிருன். *(திறம்பாது கடைக்கண் பிடி)* இவ்வர்த்த2த்தைத் தவருமல் கடைசிவரையில் விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டிரு. *(திறம்பாதென் நெஞ்சமே)* ப4க3வத் விஷயத்தில் அசையாமல் நிலைநிற்கும் என் நெஞ்சமே என்றுமாம். *(திறம்பாது அறம்பாவம் என்றிரண்டும் ஆவான்)* புண்ய பாபங்களிரண்டும் அவனிட்ட வழக்கு என்பது ஒருபோதும் தப்பாது என்றுமாம். '*புண்யாபுண்யாவீஶ்வரப்ரீதிகோபௌ*' [புண்ணியம் என்பது ஈஶ்வரனின் உகப்பேயாகும்; பாபம் என்பது ஈஶ்வரனின் கோபமேயாகும்] என்று இவை அவனு

களையொழியப் போக்கில்லை; ஸர்வமும் ப4க3வத3தீ4ந மன்றோ. (கடைக்கட்பிடி) அறுதியாகப்பிடி. 96.

97. பிடிசேர் களிறளித்த பேராளா உன்றன்
அடிசேர்ந் தருள்பெற்றா ளன்றே - பொடிசேர்
அனற்கங்கை யேற்றா னவிர்சடைமேல் பாய்ந்த
புனற்கங்கை யென்னும் பேர்ப் பொன்.

**பதவுரை:— பிடி சேர்** — பெண் யானையுடன் சேர்ந்து (விஷய ப்ரவணனாய்த்) திரிந்த, **களிறு** — கஜேந்திராழ்வானை, **அளித்த** — ரக்ஷித்த, **பேராளா** — மஹாநுபா4வனே! **பொடி சேர்** — ப4ஸ்மத்தை த4ரித்தவனாய், **அனற்கு** — நெருப்புக்கு, **அம் கை ஏற்றான்** — அழகிய கையை ஏந்திய ருத்3ரனுடைய, **அவிர் சடை மேல்** — ப்ரகாஶிக்கிற ஜடையின் மேலே, **பாய்ந்த** — விழுந்த, **புனல்** — ஜலத்தையுடைத்தான, **கங்கை என்னும் பேர்** — கங்கை என்னும் பேரையுடைய, **பொன்** — சிறந்த பொன், **உன்தன் அடி சேர்ந்து** — உன் திருவடிகளைக் கிட்டி, **அருள்பெற்றாள் அன்றே** — திருவருளை அடைந்தாளல்லவா.

---

இதுவே அர்த்த2தத்வமென்று இத்தைத் தவறாதபடி மநஸ்ஸிலே பிடித்துக்கொள். 96.

---

டைய நிக்3ரஹாநுக்3ரஹங்களேயாயிருக்க, இவை அவனிட்ட வழக்கென்னச் சொல்லவேணுமோ என்று கருத்து. (*அறம் பாவம்*) புண்யாபுண்ய கர்மங்கள் என்றும், அவற்றால் ஏற்படும் நிக்3ரஹாநுக்3ரஹங்கள் என்றும், **பாவனம்** (*பிறரைப் பரிஶுத்3த4ப்படுத்துவது*), அபாவனம் (**பிறரை தோ3ஷமடைவிப்பது**) என்றும் பொருள்கொள்ளலாம். எல்லாம் அவனிட்ட வழக்கு என்றபடி. 96.

*அவதாரிகை:*— அறமும் அவனே என்று பாவனப்பொருள் அவன் ஒருவனேயென்றீர்; கங்கை முதலான மற்றும் சில பொருள்களும் பாவனமாயுள்ளனவே? என்ன, அவற்றின் பாவனத்தன்மையும் அவனோடு ஸம்ப3ந்த4ம் பெற்றிருப்பதா



அவ:— தொண்ணூற்றேழாம் பாட்டு. (பிடிசேர்) "அறம்பாவமென்றிரண்டுமாவான்" என்றதுக்கு வ்யாக்2யாநம் இப்பாட்டு.

வ்யா:— (பிடிசேர்களிறளித்த) ஜந்மஜ்ஞாநவ்ருத்தங்கள். 100. 'शान्तो दान्त उपरतस्तितिक्षुः' (ஶாந்தோ தா3ந்த உபரதஸ்திதிக்ஷு:) என்னுமவனிறே மோக்ஷத்துக்கதி4காரி. அன்றிக்கே, தன் பக்கல் ப்ரவணமாகாதே விஷயப்ரவணமாகையிறே பாபமாவது; தன் பிடிபக்கல் ப்ரவணமாய் தன்

---

அவ:—'அறமும் அவனே' என்று பாவனமாகச் சொல்லாநின்றீர்; கங்கை தொடக்கமானவையும் பாவனமன்றோ? என்ன, அதினுடைய பாவநத்வமும் தச்சரணகமலஸம்ப3ந்த4ாயத்தம் என்கிறார்.

**உரை:**— ஸ்வஹிதமறியாதே பிடியின் பக்கலிலே ப்ரவணமாய், அத்தை விட்டு நீங்கமாட்டாமல் கூடி வர்த்திக்கிற

---

லேயே ஏற்பட்டது என்கிறார். 'அறம் பாவம் என்றிரண்டுமாவான்" என்றதுக்கு வ்யாக்2யானம் இப்பாட்டு என்பர் பெரியவாச்சான்பிள்ளை.

*வ்யா:*—*(பிடி சேர் களிறளித்த)* பெண்யானையோடு சேர்ந்திருப்பதையே இயல்வாகக்கொண்ட ஆண்யானையை ரக்ஷித்தமையைச் சொல்லுகிறது. வேத3ாந்தங்களிலே, "*ஶாந்தோ தா3ந்த உபரதஸ் திதிக்ஷுஸ் ஸமாஹிதோ பூ4த்வா ஆத்மந்யேவாத்மாநம் பஶ்யேத்* [ப்3ருஹ 6-4-23] [உள்ளும் புறமுமிருக்கும் இந்திரியங்களை அடக்கினவனாகவும், (காம்யகர்மம் முதலியவற்றில்) ஆசையற்றவனாகவும், பொறுமையுடன் கூடியவனாகவும், கலங்காத மனத்தையுடையவனாகவுமிருந்துகொண்டு (தன்னுடைய) ஆத்மாவில் (*அந்தர்யாமியாயிருக்கும்*) பரமாத்மாவைக் காணக்கடவன்] என்று மோக்ஷமடைய விரும்புகிறவன் இந்திரியங்களை அடக்கியிருக்கவேணும் என்றது. இந்த கஜேந்திராழ்வானே பிடிசேர்களிறாயிருந்தான். நற்குடிப் பிறப்பும், நல்லறிவும், நல்லொழுக்கமும் மோக்ஷமடையக் காரணம்

பக்கலின்றிக்கே இருந்த களிற்றை ரக்ஷிக்கும்போது பாபம் தானிட்ட வழக்காக வேணுமிறே. (பேராளா) பிடிசேர்ந்த களிற்றை ரக்ஷித்தானென்றால் அவன் செய்தானாகில் கூடும் என்றிருக்கை. (உன்றனடிசேர்ந்தருள் பெற்றாளன்றே) இத்தால் த4ர்மம் அவனிட்ட வழக்கு என்கிறது. (பொடி

---

ஆனையை, அதின் வ்ருத்த தோ3ஷம பார்த்து இகழாதே தண்ணளி பண்ணி ரக்ஷித்த மஹாப்ரப4ாவனானவனே!

---

என்று ஶாஸ்திரங்களில் கேள்விப்படுகிறோம். இவனோ தன் நன்மையைக் குறித்து அறிவற்ற யானையாயிருந்தான். அதிலும் பிடிசேர்களிறாகையாலே நல்லொழுக்கமும் அற்றவனாயிருந்தான், இப்படியிருந்தும் இவனை ரக்ஷித்தபடியென்! என்று கொண்டாடுகிறார். (அளித்த பேராளா) விஷயங்களில் மண்டித்திரிந்த கஜேந்திரனை அவனுடைய ஜந்மஜ்ஞாநவ்ருத்தங்களின் தாழ்வைப்பாராமல் ரக்ஷித்த பெருமையையுடையவனே! (பேராளா) பிடிசேர் களிற்றை வேறொருவரால் ரக்ஷிக்க முடியாது; இவன் செய்தானாகில் முடியும் என்று கருத்து. அப்படியாகில் முன் எடுத்த ஶாஸ்த்ரவசனங்கள் என்னாவது? எனில்: (அளித்த பேராளா) அவை ஒரு ஸாத4னத்தைப் பற்றிநின்று அதனாலே அவனைப் பெறவேணுமென்றிருப்பார்க்கு அவசியமானவை. இந்த கஜேந்திராழ்வான் தன் முயற்சியினின்றும் மீண்டு அவனையே உபாயமாகக் கூப்பிட்டானாகையாலே அவை தேவையில்லை. அவனை உபாயமாகப் பற்றினார்க்கு, இல்லாத ஜந்ம ஜ்ஞாநவ்ருத்தங்களை ஸம்பாதி3த்துக்கொள்ளவோ, இருக்கின்றவைகளைக் குலைத்துக்கொள்ளவோ வேண்டியதில்லை. இருந்தபடியே அவனை உபாயமாகப்பற்றினால் போதுமானது என்னும் ஶாஸ்த்ரார்த்த2த்தைக் காட்டுகிறார். விஷயங்களில் ஈடுபாடாகிற பாபத்தையுடைய இவனையும் ரக்ஷித்தமையாலே பாபம் இவனிட்ட வழக்கு என்பது தெளிவாகிறது. (உன்தன் அடிசேர்ந்தருள் பெற்றாளன்றே) "த்3ரவீபூ4தஸ் தத்3ா த4ர்ம:" [ஈஶ்வரஸம்ஹிதை] என்கிறபடியே நான்முகன் திருவுலகளந்த திருவடியைக் குண்டிகை நீராலே விளக்க நினைத்தபோது த4ர்மமே அவனுடைய கமண்ட3லத்திலே க3ங்க3ாஜலமாயிற்று. இப்படி புண்யஸ்வரூபமான



சேரித்யாதி3) ப4ஸ்மச்ச2ந்நனாய் அக்3நியைக் கையிலே ஏற்றானாயிருந்துள்ள ருத்3ரனுடைய விளங்காநின்ற ஜடைமேலே பாய்ந்த புனலையுடைத்தான கங்கை யென்னும் பேரையுடைத்தான விலக்ஷணையான ஸ்த்ரீ உன் திருவடிகளிலே சேர்ந்தன்றோ நாட்டுக்குப் பாவநமாயிற்று.

---

"भस्मशय्याशयानः" (ப4ஸ்மஶய்யாஶயாந:) என்கிறபடியே பண்ணின தோ3ஷத்துக்கு ப்ராயஶ்சித்தமாக எப்போதும் ப4ஸ்மத்திலே சாயுமவனாய், அக்3னிக்கு அழகிய கையை ஏற்ற பாதகியான ருத்3ரனுடைய ஒளியையுடைத்தான ஜடையின்மேலே தச்சு2த்3த்4யர்த்த2மாக வந்து குதித்த

---

கங்கையும் உன் திருவடியில் சேர்ந்த பின்பன்றோ அனைவரையும் பரிஶுத்3த4ப்படுத்தும் பெருமையை உடையதாயிற்று என்கிறார். இத்தால் புண்ணியமும் இவனிட்ட வழக்கு என்றதாயிற்று. இவ்வண்ணமாக இப்பாசுரம் "அறம்பாவம் என்றிரண்டும் ஆவான்" என்று சென்ற பாசுரத்தில் அருளியதற்கு வியாக்2யானமாயிருக்கிறது. (உன் தன் அடிசேர்ந்து அருள் பெற்றாளன்றே) பெரும்பாவம் செய்தவர்களையும் பரிஶுத்3த4ராக்க வல்லதாம்படி இயற்கையிலே ஶுத்3தி4யையுடைய உன் திருவடிகளைச் சேர்ந்ததாலன்றோ கங்கையானவள் அனைவரையும் பரிஶுத்3த4ராக்கும் பெருமையைப் பெற்றாள். இப்பெருமை எம்பெருமானின் அருளாலே வந்ததாகையால் இதை அருள் என்கிறார். இதை எங்கே கண்டோம்? எனில்; (பொடி சேர் அனற்கு அங்கை ஏற்றான் அவிர்சடைமேல் பாய்ந்த)

மத்3யம் பீத்வா கு3ருத3ாராம்ஶ்ச க3த்வா
ஸ்தேயம் க்ருத்வா ப்3ரஹ்மஹத்யாஶ்ச க்ருத்வா।
ப4ஸ்மச்ச2ந்தோ ப4ஸ்மஶய்யாஶயானோ
ருத்3ரத்4யாயீ முச்யதே ஸர்வபாபை:॥

[சாதாதபஸ்ம்ருதி]

[கள்ளைக் குடித்தாலும், கு3ருத3ாரக3மனம் பண்ணினாலும், திருடினாலும், ப்3ரஹ்மஹத்தி செய்தாலும், சாம்பலைப் பூசிக்கொண்டு, சாம்பலாலான படுக்கையில் படுத்துக்கொண்டு,

அவ:— "பொடிசேர்" என்றவித்தால் ப்ராயஶ்சித்தம் பண்ணி அத்தால் ஶுத்தனன்றியிலே இருக்கிறவனையும் ஶுத்தனாக்கிற்று திருவடிகளில் ஸ்பர்ஶத்தாலே என்கிறது.

வ்யா:— (பிடிசேர் களிறு) அவன் பிடியை நினைக்க நீ அவனை நினைத்திலையோ? ஒருகால் நினைத்தானாகில் முன்பு ஸ்வரூபம் இதுவன்றோ என்கிறது. ஜந்மவ்ருத்தங்களன்று ப்ரயோஜகம் என்கிறார். (அருள் பெற்றாள்) பிறரை ஶுத்தராக்கும்படி பார்த்தருளினாள். 97.

---

நீரையுடையளாய் கங்கையென்னும் பேரையுடைய ஶ்லாக்யையான ஸ்த்ரீயானவள். பாதகிகளையும் பரிஶுத்தராக்கும் ஸ்வத:ஶுத்தியை உடையனான உன் திருவடிகளைக் கிட்டியன்றோ அவள் அந்த ப்ரஸாதமெல்லாம் பெற்றது. விஷயப்ரவணமான களிற்றை ரக்ஷிக்கையாலே பாபம் இவனிட்ட வழக்கென்றும், கங்கையினுடைய பாவநத்வம் தத்ஸம்பந்தாயத்தம் என்கையாலே புண்யம் அவனிட்ட வழக்கென்றும் சொல்லிற்றாய்த்து. 97.

---

ருத்ரனை நினைத்துக்கொண்டிருப்பானாகில் (முன் சொல்லப்பட்ட) எல்லாப் பாபங்களினின்றும் நீங்கப்பெறுகிறான்.] என்கிறபடியே தந்தையின் தலையைக் கிள்ளியது ரிஷிபத்னிகளைக் கற்பழித்தது முதலிய மஹாபாதகங்களுக்குப் பிராயச்சித்தமாக சாம்பற்பொடியை உடம்பு முழுவதும் பூசிக்கொண்டு அதிலேயே என்றும் புரண்டுகொண்டிருப்பவனாய், தன் பாபங்களை எரிப்பதற்காக அக்னியை தரிப்பதற்காக அழகிய கையை ஏந்தியவனுமாய் இப்படி இரண்டு காரணங்களாலும் மஹாபாபங்கள் செய்தவன் என்று விளங்க நிற்கும் உருத்திரனுடைய ஒளியை உடையதான ஜடையிலே "*பாவநார்த்தம் ஜடாமத்யே ததார ஶிரஸா ஹர:*" [ஈஶ்வர ஸம்ஹிதை] [தன்னைப் பரிஶுத்தப்படுத்திக்கொள்வதற்காக ஜடையின் நடுவிலே தலையாலே ஸ்ரீபாததீர்த்தத்தைத் தாங்கினான் அரன்] என்கிறபடியே அவனைப் பரிஶுத்தப்படுத்துவதற்காக வந்து குதித்ததைச் சொல்லுகிறார்.



98. பொன்திகழு மேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும்—என்றும்
இருவரங்கத் தால்திரிவ ரேலும் ஒருவன்
ஒருவனங்கத் தென்று முளன்.

பதவுரை:— **பொன் திகழும் மேனி** — பொன்போலே பிரகாஶிக்கும் வடிவையும், **புரி சடை** — பின்னிய சடையையும், **அம் புண்ணியனும்** — அழகிய புண்யத்தையும் உடையனான ருத்ரனும், **நின்று உலகம் தாய நெடுமாலும்** — நின்று உலகங்களையெல்லாம் அளந்த ஸர்வேஶ்வரனும், **என்றும்** — எப்பொழுதும், **இருவர் அங்கத்தால் திரிவரேலும்** — இரு வடிவுடன் திரிந்தார்களேயாகிலும், **ஒருவன்** — (ஸாதக வேஷம் பூண்ட) சிவன், **ஒருவன் அங்கத்து** — நெடுமாலின் ஶரீரத்தைப்பற்றி, **என்றும்** — எக்காலத்திலும், **உளன்** — ஸத்தையுடையனாயிருப்பன்.

---

(*சடை*) பொடிசேர்ந்திருப்பதும், அனற்கு அங்கையேற்றிருப்பதும் மாத்திரமன்றிக்கே, சடையை தரித்துத் தவம் புரிவதும் பாபம் போவதற்காக என்று தோற்றுகிறது. இவற்றாலெல்லாம் பாபம் போயிற்றோ? எனில், போகவில்லையென்றும், ஸ்ரீ பாததீர்த்தத்தை தரித்ததனாலேயே போயிற்று என்றும் காட்டுகிறார் — (*பொடிசேர்...சடைமேல் பாய்ந்த புனற்கங்கை*) என்னும் பதங்களாலே. தர்ம ஸ்வருபமான இந்த கங்கைக்கு இப்படிப் பரிஶுத்தப்படுத்தும் தன்மை இயற்கையிலேயே அமைந்ததோ? எனில்; இல்லையென்றும் ஸ்ரீபாதஸம்பந்தத்தாலேயே இப்பெருமையை இவள் அடைந்தாள் என்றும் காட்டுகிறார் (*சடைமேற்பாய்ந்த புனற் கங்கை என்னும் பேர்ப்பொன் உன்றன் அடிசேர்ந்து அருள் பெற்றாளன்றே*) சங்கரன் சடையினில் பாய்ந்த நீரையுடைய கங்கை என்னும் பெயரையுடைய ஸ்திரீயானவள், பரம பாவனமான உன்னுடைய திருவடியில் சேர்ந்ததனாலன்றோ பொடி சேர்ந்தும், அனற்கு அங்கையேற்றும், சடைதரித்தும் தீராத மஹாபாபங்களைச் செய்த உருத்திரனின் பாபங்களையும் போக்கவல்ல பெருமையைப் பெற்றாள் என்கிறார். 97.

அவ:— தொண்ணூற்றெட்டாம் பாட்டு. (பொன் திகழுமேனி) ஈஶ்வரனாய், அதி$_4$காரியாய், தானும் சிலர் கார்யத்துக்குக் கடவனாயிருக்கிறவனை, இவனுடைய ஸம்ப$_3$ந்த$_4$த்தாலே ஶுத்$_3$த$_4$னானென்று சொல்லும்படி எங்ஙனே ? என்னில்; ஈஶ்வராபி$_4$மாநியாயிருக்கும்போது சொல்லுமத்தை ப்ரமாணிக்கவொண்ணாது; இவனுடைய ஸ்வரூபத்தைப் பார்க்கலாகாதோ ? என்கிறார்.

---

**அவதாரிகை:**-"அவன் திருவடியில் பிறந்த க$_3$ங்கையை ஜடையிலே த$_4$ரித்தான் என்று ருத்$_3$ரனுக்குக் குறை சொல்லுகிறதென் ? அவனும் ஒரு கார்யத்திலே அதி$_4$கரித்து ஈஶ்வரனுமாயன்றோ போருகிறது? " என்ன, அவனுடைய ஈஶ்வரத்வம் இவனுக்கு ஶரீரபூ$_4$தனானகை யால் வந்ததித்தனைபோக்கி ஸ்வத: இல்லை என்கிறார்,

**உரை:**— பொன்போலே ஒளிவிடுகிற வடிவையும், பின்னின ஜடையையும் உடையனாய், இப்படி ஜடை

---

98. *அவ:*— "ஸர்வேஶ்வரனுடைய திருவடியிலே பிறந்த க$_3$ங்கையை த$_4$ரித்துப் பரிஶுத்$_3$த$_4$னானான் என்று உருத்திர னுக்குக் குறை சொல்லலாமோ? அவனும் ஜக$_3$த்ஸம்ஹார மாகிற ஒரு பெரிய காரியத்துக்கு அதி$_4$காரியாய், 'ஈஶ்வரன்' என்று ப்ரஸித்$_3$தி$_4$பெற்றவனுமாய், தன் ப$_4$க்தர்கள் பலருக் குப் பல ப$_2$லன்களைக் கொடுப்பவனாய், தனக்கே உரிய லோகம், வாஹனம்; க$_3$ணங்கள் முதலானவற்றை உடைய வனாயன்றோ இருக்கிறான்; அவனுடைய இப்பெருமைகளெல் லாம் பொய்யானவையோ?'' என்று சிலர் கேட்க, "அவனு டைய பெருமைகளைப் பொய்யென்று சொல்லவில்லை; அவை யெல்லாம் அவன் பரமபுருஷனுக்கு ஶரீரமாயிருப்பதால் வந்தவையேயொழிய இயற்கையில் ஏற்பட்டவையல்ல'' என்கிறார்.

*வ்யா;— (பொன் திகழும் மேனி)* பொன்னைப்போல் சிவந்து விளங்கும் இவனுடைய மேனியைப் பார்த்தாலே இவன் ஸர்வேஶ்வரனல்லன் என்று தோற்றுமே! "*நீலதோயத$_3$மத்$_4$*



**வ்யா:**— (பொன்திகழுமேனி) ஸர்வேஶ்வரனாயிருக்கும் போது மேக$_4$ஶ்யாமமாயிருக்குமிறே. (புரிசடை) தாழ்சடை யானுக்கும் நீண்முடியானுக்கும் வாசிபார்த்துக்கொள்ளலா மித்தனையிறே. (அம்புண்ணியனும்) 101. "हुत्वात्मानं देवदेवो बभूव'' (ஹுத்வாத்மாநம் தே$_3$வதே$_3$வோ ப$_3$பூ$_4$வ) என்கிற

---

கட்டி அனுஷ்டி$_2$த்த அழகிய புண்யத்தையுடைய ருத்$_3$ர னும் ஸ்வைரமாக நின்று ருத்$_3$ரனோடு அல்லாதாரோடு வாசியற ஸகலலோகங்களையும் அநாயாஸேந அளந்து

---

*யஸ்த$_2$ர''* [தை-நா-11] என்று வேத$_3$ங்கள் நீலமேகத் திருமே னியையுடையவனையன்றோ பரம்பொருளாகப் பறைசாற்றின. இதுமட்டுமோ? (*புரிசடை*) பின்னின சடைமுடியைப் பார்த் தாலும் இவன் ஒருவனைக் குறித்துத் தவம்புரிகிறான் என்று தோற்றுமே! இவனா பரம்பொருளாகமுடியும்? தாழ்சடையா னுக்கும் நீண்முடியானுக்கும் உள்ள வித்தியாசம் தன்னடையே தோற்றுமே! (*அம் புண்ணியனும்*) இப்படிச் சடைகட்டி அனுஷ்டி$_2$த்த அழகிய புண்ணியத்தையுடைய இவன் பரம் பொருளாகமுடியுமோ? "*ந மாம் கர்மாணி லிம்பந்தி*'' [கீ$_3$தை] [என்னைப் புண்யபாபகர்மங்கள் தொடமாட்டா] என்றவ னன்றோ பரம்பொருளாகமுடியும். (*அம் புண்ணியனும்*) அழகிய புண்ணியத்தை அனுஷ்டி$_2$த்தவனும்.

**மஹாதே$_3$வஸ் ஸர்வமேதே$_4$ மஹாத்மா**
**ஹுத்வாத்மாநம் தே$_3$வதே$_3$வோ ப$_3$பூ$_4$வ।**
**ஸர்வாந் லோகாந் வ்யாப்ய விஷ்டப்$_4$ய கீர்த்யா**
**விராஜதே த்$_3$யுதிமாந் க்ருத்திவாஸா: ॥**

*[பா$_4$ர-ஶாந்தி 20-12]*

[மஹாத்மாவான மஹாதே$_3$வர் ஸர்வமேத$_4$மென்னும் யாக$_3$த்தில் தன்னுடைய ஆத்மாவை (உடலை) ஹோமம் செய்து தே$_3$வர்க ளுள் தலைவரானார்; யானைத்தோலை அணிந்தஅவர் எல்லா உலகங் களையும் கீர்த்தியினால் வியாபித்து, (எட்டு ரூபங்களை) த$_4$ரித்து, மிகுந்த காந்தியுள்ளவராய் விளங்குகிறார்.] என்கிறபடியே தன் ஈஶ்வரத்வமும் ஸர்வேஶ்வரனாலே இவனுக்கு

படியே. (நின்றுலகம் தாய நெடுமாலும்) ஸ்வைரமாக அதிமாநுஷ சேஷ்டிதத்தைப் பண்ணினவனும். அவன் தலையிலும் பிறர் தலையிலுமாகத் திருவடிகளை வைத்தவனும். (என்றுமித்யாதி3) இருவரும் ஸபரிகரராய்த் திரிந்தாரே

---

கொண்ட ஸர்வாதி4கனை ஸர்வேஶ்வரனுமாகிற இவர்கள் இருவரும், ஸர்வகாலத்திலும் இரண்டு ஶரீரத்தை உடையராய், அறிவுகேடர்க்கு ஒக்க நினைக்கலாம்படி திரிந்தார்

---

உண்டாயிற்று என்று கருத்து, (*நின்றுலகம் தாய நெடுமாலும்*) உருத்திரன் முதலான எல்லா தே3வர்களின் தலையிலும் அவர்களை வணங்குகிறவர்கள் தலையிலும் ஒருபடியாகத் திருவடியை வைத்து நின்று உலகளந்த மிகப்பெரியவனன்றோ இவன். (*நெடுமாலும்*) திருவடியிலே துகையுண்டவன் பரம்பொருளோ? திருவடியாலே துகைத்தவன் பரம்பொருளோ? என்பதை ஆராயக்கூடாதா? (*நின்று*) நமுசி முதலான எவராலும் தடை செய்யமுடியாதபடி நின்று. (*உலகம் தாய*) உலகனைத்தையும் அநாயாஸமாகத் தாவி அளந்துகொண்ட. (*நெடுமாலும்*) தாய் தன் குழந்தையை அணைப்பதுபோலே, இச்செயலைச் செய்ததும் சேதனரிடம் இவனுக்குள்ள பேரன்பாலேயன்றோ என்றுமாம். இப்படித் தாயன்பையுடைய இவன் பரம்பொருளோ? தன் ப4க்தனிடம் "உன் பிள்ளையை அறுத்துத்தா" என்று கூறும் கொடுமையை உடையவன் பரம்பொருளோ? என்று கருத்து. (*என்றும் இரு அரங்கத்தால் திரிவரேலும்*) அரங்கம்—நாம ரூப லோக பரிகராதி3கள். என்றும் இருவரும் இருவித4மான நாம ரூப வாஹன லோக க்ருத்ய பரிகராதி3களை உடையவர்களாய் ஸஞ்சரித்தார்களேயாகிலும், ஒருவன் நாராயணன் முதலான பெயர் கொண்டிருந்தால், ஒருவன் அரன் முதலான பெயர் பூண்டு திரிகிறான், ஒருவன் கொண்டல் வண்ணனாய்த் திகழ்ந்தால் ஒருவன் பொன்திகழும் மேனியனாய் விளங்குகிறான். ஒருவன் வேதா3த்மாவான க3ருட3னை வாஹனமாகக்கொண்டு ஸஞ்சரித்தால், ஒருவன் எருதின்மேல் ஏறித் திரிகிறான். ஒருவன் ஸ்ரீவைகுண்ட2லோகத்திலிருந்தால் ஒருவன் கைலாஸவாஸியாய் விளங்குகிறான். ஒருவன் ரக்ஷணத்தைச் செய்தால், ஒருவன் ஸம்ஹாரத்தைச் செய்கிறான். ஒருவன்



யாகிலும். (ஒருவன் இத்யாதி3) ஒருவனுக்கு ஸ்தி2தி ஒருத்தன் ஶரீரத்தைப் பற்றி; "வலத்தனன் திரிபுரமெரித்தவன்" என்னும்படியே.

அவ:— ருத்3ரனுடைய ஐஶ்வர்யம் பொய்யோ? என்னில், ப4க3வஜ்ஜ3தீ3நம் என்கிறார்.

---

களேயாகிலும், புண்ணியனான ஒருவன், நெடுமாலான ஒருவனுக்கு ஶரீரபூ4தனாய்க்கொண்டு ஸர்வகாலத்திலும்

---

நித்யஸூரிக3ணங்களால் சூழப்பெற்றிருந்தால், ஒருவன் பூ4த ப்ரேதபிஶாசக3ணங்களால் சூழப்பெற்றிருக்கிறான். ஒருவன் ஸாத்விகாசாரமுள்ள நூறு கோயில்களைப் பெற்றிருந்தால், ஒருவன் தாமஸாசாரமுள்ள ஆயிரங்கோயில்களைப் பெற்றிருக்கிறான். ஒருவன் ஸாத்விகர் சிலரை ப4க்தர்களாகப் பெற்றிருந்தால், ஒருவன் தாமஸர் பலரை ப4க்தர்களாகப் பெற்றிருக்கிறான். ஒருவன் வேத3த்தாலும் ஸாத்விகஶாஸ்த்ரத்தாலும் கோ4ஷிக்கப்பட்டால், ஒருவன் சைவாக3மத்தாலும் தாமஸஶாஸ்த்ரத்தாலும் கோ4ஷிக்கப்படுகிறான். இவற்றையெல்லாம் காணும் அறிவிலிகளுக்கு இருவரும் ஸமமானவரோ என்னும் ஐயம் விளையும்படியிருக்கிறது. (*என்றும் திரிவரேலும்*) இப்படி ஐயம் விளையும்படியாக என்றுமே விளங்கினார்களானாலும். ருத்3ரபதவியும் ப்ரவாஹதோ நித்யமாகையாலே 'என்றும்' என்னக் குறைவில்லை. (*ஒருவன் ஒருவனங்கத்து என்றும் உளன்*) பொன்திகழும் மேனிப் புரிசடையப் புண்ணியன் நின்றுலகம் தாய நெடுமாலின் ஶரீரமாயிருந்துகொண்டு என்றுமே ஸத்தைபெறுவான். அங்கத்து— அங்க3மாக; ஶரீரமாக (*அங்கத்து என்றுமுளன்*) "*ஸ ப்3ரஹ்மா ஸ ஶிவ:*" [தை-நா-11] [அவனே பிரமனுக்கும் ஶிவனுக்கும் அந்தர்யாமி] '*ப்3ரஹ்மா நாராயண:, ஶிவஶ்ச நாராயண:, ஶக்ரஶ்ச நாராயண:, தி3ஶஶ்ச நாராயண:*' [பிரமனுக்கும், சிவனுக்கும், இந்திரனுக்கும், திக்குகளுக்கும் அந்தர்யாமி நாராயணனே.] "*யஸ்யாத்மா ஶரீரம்*" [எவனுக்கு எல்லா ஆத்மாக்களும் ஶரீரமோ] முதலான வேத3வாக்கியங்கள் நாராயணனை ஶிவனுக்கு அந்தர்யாமியாகவும், சிவனை நாராயண

வ்யா:— (நின்றுலகமித்யாதி,) ருத்,ரன் தலையிலும் நாட்டார் தலையிலும் ஒக்க அடியிட்டவன். (இருவரங்கத்

---

லப்,த,ஸத்தாகனுயிருக்கும். அன்றிக்கே, ஒருவன் ஒருவன் திருமேனியில் ஏகதே,ஶத்தைப்பற்றி லப்,த,ஸத்

---

னுக்கு ஶரீரமாகவும் கோ,ஷிக்கையாலே ஶிவபதவியிலிருப்பவன் என்றுமே நாராயணனின் ஶரீரமாயிருப்பவன் என்பதே வேதா,ங்களின் ஒருமிடறான முடிவு என்று கருத்து. இப்படியல்லாமல் (இருவர் அங்கத்தால் திரிவரேலும்) என்று பிரித்தும் பொருள்கொள்ளலாம். இருவரும் ஸமானமானவரோ என்று அறிவிலிகள் ஐயமுறும்படி இருவரும் இரண்டு வடிவுகளை உடையவர்களாய் ஸஞ்சரித்தார்களானாலும், (ஒருவன் ஒருவனங்கத்து என்றும் உளன) சிவன் நெடுமாலின் திருமேனியிலே என்றுமே ஒருபுறம் அடங்கிநின்று ஸத்தை பெறுவான். "பஶ்யைகாத,ஶ மே ருத்,ராந் த,க்ஷிணம் பார்ஶ்வமாஶ்ரிதாந்" [என்னுடைய உடம்பில் வலது புறத்தைப் பற்றியிருக்கும் பதினொரு உருத்திரர்களையும் காண்பாயாக.] என்று பா,ரதம் மோக்ஷத,ர்மத்தில் கூறப்பட்டது, "ப்,ரஹ்மாணமீஶம்" என்றான் கீ,தையில் அர்ஜுனனும். 'வலத்தனன் திரிபுரமெரித்தவன்" [திருவாய் 1-3-9] என்றார் ஆழ்வாரும். (என்றும் உளன்) ஒவ்வொரு காலத்திலே எம்பெருமான் தன் ஸௌஶீல்யத்தாலே தாமஸப்ரக்ருதியான ஶிவனுக்கும் பரமஸத்வமயமான தன் திருமேனியில் இடங்கொடுத்த மஹாகு,ணத்தை நினைத்து ஆழ்வார்கள் எப்போதுமே இடங்கொடுப்பதுபோலே அருளிச்செய்வார்கள். ஶிவன் பிரமன் முதலானோரும் எம்பெருமான் திருமேனியில் ஒருகால் தமக்கு இடம்கொடுத்த பெருமையை என்றுமே நினைத்திருப்பராகையாலே "என்றுமுளன்" என்கிறாராகவுமாம். "வலத்தனன்" என்ற பாசுரத்தின் ஈட்டிலே "இப்படி பின்னை ஸர்வகாலமும் இவர்கள் இருப்பர்களோ? என்னில், ஆபத்துக்களில் திருமேனியில் இடம் கொடுக்கும். அது மஹாகு,ணமாகையாலே. ஆழ்வார்கள் எப்போதும் ஒக்க அருளிச்செய்துகொண்டு போருவர்கள். ஸாமந்தர்க்கு (சிற்றரசர்க்கு) புறம்பே நாடுகள் கனக்க உண்டானாலும், மாளிகைக்குள்ளே



தால்) இரண்டு வடிவுகளாலே என்றுமாம். அங்க,த்தில் ஏகதே,ஶத்திலே உளன் என்றுமாம். 98.

99. உளன்கண்டாய் நன்னெஞ்சே உத்தம னென்றும்
உளன்கண்டாய் உள்ளுவா ருள்ளத்—துளன்கண்டாய்
வெள்ளத்தி னுள்ளானும் வேங்கடத்து மேயானும்
உள்ளத்தி னுள்ளானென் றோர்.

பதவுரை:— **நல் நெஞ்சே** — அநுகூலமான மனமே! **உத்தமன்** — புருஷோத்தமன், **என்றும்** — எல்லாக் காலங்களிலும், **உளன் கண்டாய்**—(நம்மை ரக்ஷிப்பதற்காகவே) இருக்கிறான்; **உள்ளுவார் உள்ளத்து** — தன்னை நினைப்பவர்கள் மனத்திலே, **உளன் கண்டாய்**—நித்யவாஸம் செய்கிறான்; **வெள்ளத்தின் உள்ளானும்**—திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளுபவனும், **வேங்கடத்து மேயானும்** — திருமலையிலே நிற்கிறவனும், **உள்ளத்தின் உள்ளான் என்று**—(என்) ஹ்ருத,யத்தில் நித்யவாஸம் பண்ணுகிறவன் என, **ஓர்**— அறிவாயாக.

---

தாகனுயிருக்கும் என்னவுமாம். இத்தால் 'பரன் திறமன்றிப் பல்லுலகீர் தெய்வம் மற்றில்லை' என்கிறார். 98.

---

(அரண்மனைக்குள்ளே) செம்பாலே நாழியரிசியைத் தங்களுக்கு வரிசையாக நினைத்திருப்பார்களிறே. அப்படியே இவர்களும் திருமேனியிலே பண்ணிவைக்கும் ப்ராப்தி விடார்களிறே. ஒரு கலஹங்களிலே அடையவளைந்தானுக்குள்ளே குடிவாங்கியிருந்து, காலம் தெளிந்தவாறே புறம்பே புறப்பட்டாலும் 'இவ்விடம் இன்னார் பற்று; இவ்விடம் இன்னார் பற்று' என்று பின்னும் ப்ராப்தி சொல்லிவைக்குமாபோலே" என்று அருளியிருப்பது இங்கு அநுஸந்தி,க்கத்தக்கது. ஒன்றுந்தேவிலே "பரன்திறமன்றிப் பல்லுலகீர் தெய்வம் மற்றில்லை" [திருவாய் 4-10-3] என்றும், "பேச நின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும் நாயகன் அவனே" [திருவாய் 4-10-4] என்றும் நம்மாழ்வார் அருளிச்செய்ததற்கு மூலமாயிருப்பது இப்பாசுரமாகும். 98.

அவ:— தொண்ணூற்றெண்பதாம் பாட்டு. (உளன் கண்டாய்) நாட்டில் பெரியவராயிருக்கிறவர்களும் தங்களுக்கேற க்ஷேத்ரஜ்ஞராயிருக்கிறபடி அறிந்திருக்கச்செய்தே ஈஶ்வரர்களாக ப்4ரமிக்கிறபடி கண்டு திருவுள்ளம் ப4யப்பட, நாம் கழுத்திலே கயிறிட்டுக்கொண்டால் அறுத்து விழ விடுகைக்கு ஒருத்தன் உண்டுகாண் என்கிறது.

---

அவதாரிகை:— இப்படி ஸர்வரக்ஷகனான ஸர்வேஶ்வரன் க்ஷீராப்3தி4 முதலான இடங்களிலே வந்து ஸந்நிஹிதனாய்த்து விலக்காதார் நெஞ்சு பெறுமளவுங்கிடாய்! நெஞ்சே! இத்தை பு3த்3தி4பண்ணு என்கிறார்.

அவ:—'அவன் ஒருவன் உளன்' என்று சொன்னால் உகக்கும் நல்ல நெஞ்சே! "பிறர்க்கு நன்மைவேணும்" என்று எப்போதும் சிந்தித்தபடியே இருக்கும் உத்தமபுருஷன்.

---

99. *அவ:—* உலகில் ஜ்ஞானம் ஶக்தி முதலானவற்றில் பெரியவர்களாயிருக்கும் உருத்திரன் முதலானோரும், தங்கள் நெஞ்சாரத் தாங்கள் ஜீவர்களே என்று அறிந்திருந்தும், தங்களையே ஈஶ்வரராகத் தாங்களும் மயங்கிப் பிறரையும் மயக்குவதைக் கண்டு, ஆழ்வாருடைய திருவுள்ளம் 'நாமும் இப்படி ஆகிவிடுவோமோ' என்று பயப்பட, 'தம் முயற்சியாலே அவனைக்கண்ட அவர்களுக்கு அப்படியாக இடமுண்டு; நம் விலக்காமையையே பற்றாகக்கொண்டு அவன் தானே முயன்று பெற்ற நாம் அப்படியாகமாட்டோம்; அப்படி ஒருகால் நாமே நம் கழுத்தில் கயிறிட்டுக்கொண்டாலும், அக்கயிற்றை அறுத்துவிட்டு நம்மைக் காப்பாற்ற அவனுளன்; இதை அறிவாயாக' என்கிறார்.

*வ்யா:— (உளன் கண்டாய்)* பல பாசுரங்களில் ப4க3வத் ஸ்வரூப ரூப கு3ண விபூ4திப் பெருமைகளையெல்லாம் பிறருக்கு உபதே3ஶித்தவர், இப்பாசுரத்தில் ஈஶ்வரஸத்3பா4வத்தை நெஞ்சுக்குச் சொல்லுகிறார் என்பது பொருந்தாது. தம்மை ரக்ஷிப்பதால் தன் உண்மை (ஸத்தை - இருப்பு) ஏற்படுகிறது என்று சொல்லலாம்படி நம்முடைய ரக்ஷணத்திலே ஊன்றியிருக்கிறானன்றோ ஸர்வேஶ்வரன் என்கிறார்.



வ்யா:— (உளன்கண்டாய்) இலனானவனை உளனென்கிறதன்று; அவனுடைய ஸத்தை நம்முடைய ரக்ஷணத்துக்கும் நம்முடைய ஸத்தை நம்முடைய விநாஶத்துக்கும். நாம் ப்ரதிபத்தி பண்ணுகிறது பிறரை அஞ்சியன்று; நம்மை அஞ்சி. பித்தத்தாலே மோஹித்துக் கழுத்திலே கயிறிட்டுக் கொண்டேனாகில் அறுத்துவிழவிடுகிடாய் என்று அறிவுடையார்க்குச் சொல்லிவைக்குமாபோலே. (நன்னெஞ்சே) எம்பெருமான் நமக்கு உளனென்று சொல்லப்பாங்காயிருக்

---

நம்முடைய ரக்ஷணத்தாலே தன் ஸத்தையாம்படி உளனாமவன் கிடாய்! நாம் உளரானவன்றோடு இலரானவன்றோடு வாசியற ஸர்வகாலத்திலும் நம்மை ரக்ஷிக்கையிலே தீ3க்ஷித்து உளனாயிருக்குமவன் கிடாய்! தான் புகுரப்புக்கால்

---

*(உளன் கண்டாய்)* நம்மை நம்மிடமே காட்டிக்கொடுத்து அழியச் செய்யாமல் ரக்ஷிப்பதற்கு ஸர்வேஶ்வரன் இருக்கிறானே! பிறரால் நமக்கு வரும் தீங்கைக் காட்டிலும், நம்மால் நமக்கு வரும் தீங்கன்றோ அதி4கமாயிருக்கிறது. பிறரைக் கண்டு அஞ்சுவதைவிட நம்மைக்கண்டன்றோ நாம் அஞ்சவேண்டியிருக்கிறது, நம்மிடம் நம்மைக் காட்டிக்கொடுக்காமலிருப்பதற்காகவன்றோ அவனையே உபாயமாகப் பற்றவேண்டியிருக்கிறது. *(கண்டாய்)* நாம் ஒருகால் ஆத்மநாஶத்தை விளைத்துக்கொள்ள முற்பட்டாலும், நம்மை ரக்ஷித்து ஸத்தை பெறும் அவனை நீ நினைப்பாயாக என்கிறார். "பித்தத்தாலே மோஹித்துக் கழுத்திலே கயிறிட்டுக்கொண்டேனாகில், அறுத்துவிழ விடுகிடாய் என்று அறிவுடையார்க்குச் சொல்லிவைக்குமாபோலே" என்பர் பெரியவாச்சான்பிள்ளை. நீர் மயங்கியபோதிலும் தெளிவாயிருக்கும் சிறப்பு எனக்குண்டோ? என்று திருவுள்ளத்துக்குக் கருத்தாக—*(நன்னெஞ்சே)* அவனே நமக்கு ரக்ஷகன் என்னும் அர்த்த2த்தை எனக்கும் உபதே3சிக்க வல்லமைபெற்றிருக்கிறாயன்றோ நீ! 'முந்துற்ற நெஞ்சே' [பெரியதிருவ-1] என்கிறபடியே ப4க3வத்3விஷயத்தில் என்னிலும் முற்பட்டு நிற்பாயன்றோ நீ! *(நன்னெஞ்சே!)* 'நம்மை

கிற நெஞ்சே! (உத்தமனித்யாதி$_3$) அவனுடைய உண்மை ஸௌஹ்ருத்தாய்க்கொண்டு. அதாவது பரஸம்ருத்$_3$த்$_4$யேக ப்ர யோஜநனுயிருக்கை. (உள்ளுவாரித்யாதி$_3$) இவன் ஒருநாள் உளன் என்றிருக்கில், பின்னை இவன் என்றும் நமக்கு உளன் என்றிருக்கும். தான் புகுரப்புக்கால் விலக்காதவர் களுடைய ஹ்ருத$_3$யம் விட்டுப்போக அறியான். (வெள்ளத் தின் இத்யாதி$_3$) திருப்பாற்கடலிலே கிடக்கிறதும் திருமலை யிலே நிற்கிறதும் தம்முடைய ஹ்ருத$_3$யத்திலே புகுருகைக்கு அவஸரம் பார்த்து என்று அறி.

அவ:— புறம்புள்ளார் கிடக்கிடீர்.

வ்யா:— (உளன்கண்டாய்) பிறர்க்கு உபதே$_3$ஶிக்கிற வர். எம்பெருமான் உளன் என்றிருக்கிறுரல்லர்; நாம் நமக்கில்லாதாப் போலே அவன் நமக்கு என்றும் உளன். (நன்னெஞ்சே) இவ்வர்த்த$_2$த்திலென்னிலும் எனக்கு உப தே$_3$ஶிக்க வல்ல நெஞ்சே. (உத்தமன்) தன் பேருக உப

---

ஆணையிட்டு விலக்காதே அத்தைப் பொருந்தி அனுஸந் தி$_4$க்குமவர்களுடைய நெஞ்சிலே ஸாத$_3$ரமாக நித்யவாஸம் பண்ணுமவன் கிடாய்! திருப்பாற்கடலிலே கண்வளர்ந் தருளினவனும், திருமலையிலே நின்றருளினவனும், கிடப்பது

---

ரக்ஷித்து ஸத்தைபெறுவான் அவன்' என்று கூறினல், இது எப்படிக்கூடும் என்று ஆக்ஷேபிக்காமல் இசைந்து உகக்கும் நன்மையை உடைய நெஞ்சே! என்கிறுராகவுமாம். ஸர்வேஶ்வரனுன அவன் பிறரை ரக்ஷித்து ஸத்தைபெறுவதென்பது கூடுமோ? எனில்: *(உத்தமன்)* அவன் புருஷோத்தமனுகை யாலே கூடும் என்கிறுர். பிறரை ஹிம்ஸிப்பதே யாத்ரையா யிருப்பவன் அத$_4$மாத$_4$மன். சுயநலத்திற்காகப் பிறரை ஹிம்ஸிப் பவன் அத$_4$மன். சுயநலத்தையும் விட்டுப் பிறரை ரக்ஷிப் பவன் மத்$_4$யமன். பிறரை ரக்ஷித்தாலொழிய உயிர்த$_4$ரிக்க மாட்டாமையாலே என்றும் பிறர்க்கு நன்மையை நினைத்த வண்ணமேயிருப்பவன் உத்தமன். நம்மை ரக்ஷித்துத் தான் உளனுயிருக்கும் தன்மை, நாம் அனுகூலராயிருக்கும் இன்று



கரிக்கை. (என்றும்) 102. "असन्नेव स भवति" (அஸந்நேவ ஸ ப$_4$வதி) ஆனவன்ரேுடு. 102. "सन्तमेनं ततो विदुः" (ஸந்தமேநம் ததோ விது$_3$:) ஆனவன்ரேுடு வாசியில்லை. (உள்ளுவார்) புகுர ஸம்வதி$_3$ப்பார். (உள்ளத்துளன்)

---

நிற்பதாய் அங்கு பண்ணின க்ருஷியின் ப$_2$லமாக நம்மு டைய ஹ்ருத$_3$யத்திலே வந்து புகுந்து "இடவகைகள் இகழ்ந்திட்டு" என்கிறபடியே அவ்விடங்களை அநாத$_3$ரித்து,

---

தானே? எனில் *(என்றும் உளன் கண்டாய்) "அஸந்நேவ ஸ ப$_4$வதி அஸத்$_3$ ப்$_3$ரஹ்மேதி வேத$_3$ சேத்'* [தை-ஆந-6] என்கிற படியே ப்$_3$ரஹ்ம ஜ்ஞானமில்லாமையாலே நாம் இல்லாத வராயிருந்தவன்ரேுடு, *"அஸ்தி ப்$_3$ரஹ்மேதி சேத்$_3$வேத$_3$ ஸந்தமேநம் ததோ விது$_3$:"* [தை-ஆந 6] என்கிறபடியே ப்$_3$ரஹ்மஜ்ஞாநமிருந்தமையாலே நாம் உளராயிருந்தவன்ரேுடு வாசியற என்றுமே நம்மை ரக்ஷிக்க உறுதிபூண்டு, அதனாலே உளனுயிருக்குமவன்கிடாய்! இந்நீர்மையுடையவன் எட்டாக் கனியாய், து$_3$ர்லப$_4$னுயிருப்பானே? எனில் *(உள்ளத்து உளன் கண்டாய்)* நம் நெஞ்சிலேயே அதிஸௌலப$_4$னுய் எழுந் தருளியிருக்கிறுன் கிடாய்! "அனந்தன்பாலும் கருடன்பாலும் ஐதுநொய்தாக வைத்து என் மனந்தனுள்ளே வந்து வைகி" [பெரியாழ்-திரு 5-4-8] "பனிக்கடலில் பள்ளிகோளைப் பழக விட்டு ஓடிவந்தென் மனக் கடலில் வாழவல்ல மாயமணாள நம்பி" [பெரியாழ்திரு 5-4-9] "வடதடமும் வைகுந்தமும் மதிள் துவராபதியும் இடவகைகள் இகழ்ந்திட்டு என்பால் இடவகை கொண்டனையே" [பெரியாழ்திரு 5-4-10] என்கிற படியே பரவ்யூஹவிப$_4$வார்ச்சா நிலைகளெல்லாம் நம்மைப்பெறு கைக்கு அவன் ஸாத$_4$நாநுஷ்ட$_2$ானம் செய்யுமிடங்களாகை யாலே நம்மைப் பெற்றபின்பு இளங்கோயில்களான அவற் றைக் கைவிட்டு, *"விஶ்வஸ்யாயதநம் மஹத்"* [தை-நா] *"நெஞ்சமே நீள்நகர்"* [திருவாய் 3-8-2] என்கிறபடியே பெருங்கோயிலான நம் உள்ளத்திலே உகப்போடு புகுந்து நித்யவாஸம்செய்து நித்யஸத்தை பெற்றிருக்கிறுன். இப்படி அவனை உள்ளத்திருத்துவதற்கு நாம் அனுஷ்டி$_2$த்த ஸாத$_4$நா நுஷ்ட$_2$ானமென்ன? எனில் *(உள்ளுவார் உள்ளத்து உளன்*

" இடவகைகளிகழ்ந்திட்டு " (வெள்ளமித்யாதி3) என்றும் உளனானமை காட்டுகிறார். "அணைப்பார் கருத்தனாவான்".99.

---

ஸாத4ரமாக நித்யவாஸம் பண்ணுமவன் என்று பு3த்3தி4 பண்ணு. 99.

---

*கண்டாய்*) தன்னை நெஞ்சிலே இருத்த இசைவார் உள்ளத்திலே இனிப் பிடித்துத் தள்ளினாலும் போகேன் என்று வாழ்கிறான் கிடாய்! தான் புகப்புக்கால் 'புகாதே!' என்று ஆணையிட்டுத் தடுக்காதவர்களுடைய நெஞ்சைவிட்டுப்போக அறியான்! இத்தால் ஜீவன்பக்கல் உள்ளது அத்3வேஷமும் ஆபி4முக்2யமுமே என்கிறது. நம் கைம்முதல் சிறியதாயிருக்க, நம்மைப் பெறுகைக்கு அவன் பெருமுயற்சி யெடுத்துக் கொள்ளுகிறான் என்கைக்கு ப்ரமாணமென்ன? எனில்: (*வெள்ளத்தினுள்ளானும் வேங்கடத்துமேயானும் உள்ளத்தினுள்ளான் என்று ஓர்*) அவனுடைய ஸாத4நாநுஷ்டா2னத்துக்கு ப்ரத்யக்ஷ ப்ரமாணமிருந்தபடி கண்டாயே! என்கிறார் (*வெள்ளத்தினுள்ளானும்*) திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனும். இது பரமபத3த்தில் இருந்தமையையும் காட்டும். (*வேங்கடத்து மேயானும்*) திருவேங்கடத்திலே பொருந்தி நின்றவனும். இது மற்ற அர்ச்சாவதாரங்களில் நின்றும், இருந்தும், நடந்தும், கிடந்தும் காட்சியளிக்கும் நிலைகளனைத்தையும் காட்டும். இப்படிப் படாதனபட்டது எதற்காகவெனில்: (*உள்ளத்தில் உள்ளான்*) ஒரு சேதனனின் நெஞ்சிலே நித்யவாஸம் செய்வதற்காகவன்றோ என்கிறார் (*உள்ளான்*) இதைப்பெற்ற பின்பு, "இடவகைகள் இகழ்ந்திட்டு" [பெரியாழ்திரு 5-4-10] என்கிறபடியே பரவ்யூஹார்ச்சாவிப4வநிலைகளையும் உபேக்ஷித்து இந்நெஞ்சில்லையேல் தனக்கு வாழ்வில்லை என்னும்படி பேருகப்போடே என்றும் இருந்தான். (*வெள்ளத்தினுள்ளான்... உள்ளான்*) என்றும் அவன் நம்மை ரக்ஷித்து உளனாயிருக்கிறபடிகளைக் காட்டுகிறாராகவுமாம். (*ஓர்*) இப்படி நம்மை ரக்ஷித்தே அவன் ஸத்தைபெறுகிறபடியை அநுஸந்தி4த்தாயாகில் நம்மையோ, பிறரையோ நினைத்து அஞ்சவேண்டா என்று கருத்து. 99.



100. **ஓரடியும் சாடுதைத்த வொண்மலர்ச் சேவடியும்**
**ஈரடியும் காணலா மென்னெஞ்சே—ஓரடியில்**
**தாயவனைக் கேசவனைத் தண்டுழாய் மாலைசேர்**
**மாயவனையே மனத்து வை.**

முதல் திருவந்தாதி முற்றிற்று.
பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

**பதவுரை:—என் நெஞ்சே**—என்னுடைய மனமே! **ஓர் அடியில் தாயவனை**—ஒரு திருவடியால் உலகம் முழுவதும் அளந்தவனாய், **கேசவனை**—கேசி என்னும் அஸுரனை அழித்தவனாய், **தண் துழாய்மாலை சேர்**—குளிர்ந்த திருத்துழாய் மாலையால் அலங்கரிக்கப்பட்டுள்ள, **மாயவனையே**—ஆஶ்சர்ய சேஷ்டிதங்களையுடைய எம்பெருமானையே, **மனத்து வை**—ஹ்ருத3யத்திலே வைப்பாயாக; (இப்படி அவனைப்பற்றினால்) **ஓர் அடியும்**—திருவுலகளந்த திருவடியையும், **சாடு உதைத்த**—சகடம் முறிந்துபோம்படி உதைத்த, **ஒண்மலர் சே அடியும்**—அழகிய புஷ்பம்போல் சிவந்த திருப்பாதமுமான, **ஈரடியும்**—இரண்டு திருவடிகளையும், **காணலாம்**—ஸாக்ஷாத்கரிக்கலாம்.

அவ:— **நூறும் பாட்டு.** (ஓரடியும்) **'பேறும் அத்தாலே, பெறுவதும் அவன் திருவடிகளை அவனாலே பெறுவது' என்கிறது.**

---

**அவதாரிகை:**—இப்படி மேல்விழுந்து நம்மை ஆத3ரிக்கிறவனைப் பெறுகைக்கு உபாயமேதென்ன, அவனே ப்ராப்யம்; அவனைப் பெறுகைக்கு ப்ராபகமும் அவனே என்று அத்4யவஸி என்று திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார்.

---

100 *அவதாரிகை:*—'இப்படி மேல் விழுந்து நம்மை விரும்புகிறவனைப் பெறுவதற்கு உபாயம் என்ன?' என்று திருவுள்ளம் கேட்க, 'அடையத்தக்க உபேயமும் அவனே; ப்ராப்யமாகிற அவனைப் பெறுகைக்கு உபாயமும் அவனே; நீ செய்ய வேண்டியது இவ்வர்த்த2த்தில் உறுதியுடன் இருப்பதேயாகும்' என்று திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார்.

வ்யா:— (ஓரடியும்) **லோகத்தை அடங்கலும் தன்ன தாக்கின திருவடிகளையும்.** (சாடித்யாதி3) ஶகடாஸுரனை **நிரஸித்த போ4க்3யமான திருவடியையும்.** (ஈரடியுங்காணலாம்) **இவ்விரண்டு திருவடிகளும் ப்ராப்யம்.** (என்னெஞ்சே) **காணவேணுமென்றிருக்கிற என்னெஞ்சே! இதுக்கு உபாயமேதென்னில்: அவன் என்கிறது.** (ஓரடி

---

உரை:— காணவேணுமென்று அபி4நிவேஶிக்கிற என்னுடைய நெஞ்சே! ஒரு திருவடியாலே ஜக3த்தையெல்லாம் அளந்துகொண்ட ஶீலஸௌலப்4யாதி3கு3ணங்களையுடையனாய், கேஶிஹந்தாவாகையாலே விரோதி4களை வேரறுக்கைக்குறுப்பான ஜ்ஞாநஶக்த்யாதி3கு3ணங்களை உடைய

---

*வ்யா:* வ்யுத்பத்திவேளையில் ப்ராப்யத்தின் சிறப்பை அறிந்தவனே உபாயத்தில் இழிவானாகையாலே பாசுரத்தில் ப்ராப்யத்தை முதலிற்சொல்லி ப்ராபகத்தைப் பின்னடிகளாலே அருளினார். அநுஷ்டா2னவேளையில் உபாயாநுஷ்டா2னத்துக்குப் பிறகே ப்ராப்யாநுப4வமாகையாலே பின்னடிகள் முதலில் விவரிக்கப்படுகின்றன. *(என் நெஞ்சே!)* அவனைக் காணவேணுமென்று ஆசைப்படுகிற நெஞ்சே! அவனைப் பெறுகைக்கு உபாயம் ஏதென்னில்: அவனே என்கிறார்—*(ஓரடியில் தாயவனை)* ஓரடியில் ப்3ரஹ்மலோகம் வரையிலுள்ள மேல் உலகங்களையெல்லாம் தாவி அளந்துகொண்டவனை. *(தாயவனை)* தோ3ஷத்தையே போ4க்3யமாகக்கொண்டு குழந்தைகளை அணைக்கும் தாய்போலே உலகினரைத் தடவிக்கொடுக்கையாலே ஸௌலப்4யம் (ஸுலப4னாயிருக்கை), ஸௌஶீல்யம் (உயர்ந்தவன் தாழ்ந்தாரோடு ஒரு நீராகக்கலந்து பரிமாறுகை), வாத்ஸல்யம் (உறவுடையாரின் குற்றத்தையும் நற்றமாகக் கொள்ளுகை) முதலான நீர்மைக்குணங்களும், ப்3ரஹ்மருத்3ராதி3கள் தலையிலும் திருவடியை வைக்கையாலே ஜ்ஞாநம், ஶக்தி முதலான மேன்மைக்குணங்களும் இவ்வொரு செயலிலே தோற்றுகின்றன. ஸர்வேஶ்வரன் உபாயமாம்போது ஆஶ்ரயணஸௌகர்யத்தைச் செய்துதரும் ஸௌஶீல்யாதி3களும், ஆஶ்ரிதரின் கார்யத்தைச் செய்துதரும் ஜ்ஞாநம், ஶக்தி முதலான



யிற்றாயவனை) ஓரடியாலே **எல்லாவற்றையும் அளந்த ஸௌலப4னை.** (கேசவனை) **விரோதி4 நிரஸநஶீலனானவனை.** (தண்டுழாய் மாலை சேர் மாயவனையே மனத்துவை) **ஸௌலப4னுமன்றிக்கே விரோதி4யைப் போக்குமவனுமன்றிக்கே இருக்கிலும் விடவொண்ணாத போ4க்3யனான மாயவனையே.**

---

னாய், ஸௌலப4னுமன்றிக்கே விரோதி4யை வளர்க்கிலும் விடவொண்ணாதபடி குளிர்ந்த திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனாய்க்கொண்டு நிரதிஶயபோ4க்3யனாய், ரக்ஷிக்குமிடத்தில் ஸஹாயாந்தரங்களை அபேக்ஷியாத ஆஶ்சர்யபூ4தனு

---

கு3ணங்களும் இவனிடமே உண்டு என்கிறார். கு3ணமிருந்தால் போதுமோ? விரோதி4கள் இவனை அடையவொண்ணாதபடி தடை செய்கின்றனவே எனில்: *(கேசவனை)* கண்ணனாயவதரித்தபோது குதிரையுருவாகி ஆயர்களை நலிந்த கேசியென்னும் அசுரனைக் கொன்றவனை. அப்படியே நம்விரோதி4களையும் அழிக்கவல்லவன் என்று கருத்து. ''ஓரடியில் தாயவனை'' என்று ஆஶ்ரயணஸௌகர்யாபாத3கமான ஸௌஶீல்யாதி3களையும், "கேசவனை" என்று விரோதி4யை வேரறுத்தமையைச் சொல்லுகையாலே அதற்கு வேண்டிய ஜ்ஞாநம் சக்தி முதலான ஆஶ்ரிதகார்யாபாத3க கு3ணங்களையும் கூறுவதாகவும் கொள்ளலாம். இவ்விரண்டுமிருந்தாலும் காணிலும் உருப்பொலாரைப்போலே காணக் கண் கூசும்படியிருப்பானோ? எனில் *(தண் துழாய் மாலைசேர்)* காணக் கண் குளிரும் துழாய் மாலையை அணிந்திருக்கும் அதிஸௌந்த3ரனன்றோ என்கிறார். முற்கூறியபடி ஜ்ஞாநஶக்தி ஸௌலப்4யாதி3 கு3ணங்களுமில்லாமல், விரோதி4களை வளர்ப்பவனேயானாலும் விடவொண்ணாதபடி குளிர்ந்த திருத்துழாய்மாலையாலே அலங்கரிக்கப்பட்டிருக்கையாலே மிகவினியவனாயன்றோ இருக்கிறான் என்கிறார். *(மாயவனையே)* உலகில் ஒரு ப்ராப்யத்தைப் பெறுகைக்கு உபாயங்கள் பல துணைக்காரணங்களை அபேக்ஷிப்பதைக் காணாநின்றோம். மிகச்சிறந்த பயனான மோக்ஷத்திற்கு உபாயமான இவனோவென்னில் ஒரு துணைக்காரணத்தையும் எதிர்பாராத ஆச்சரியபூ4தனாயிருக்கிறான் என்று கருத்து.

நாம் உன் ஸஹகாரிகளென்றிராதே காண்பதுவும் அவனையே: காட்டுவானும் அவனே. நமக்கு ப்ரதிபத்தியே உள்ளது.

(ஓரடியித்யாதி3) சாடுதைத்த ஓரடியையும் திருவுலகளந்த சேவடியையும் காணலாம். காணவொண்ணுதோ? என்றிருக்கிற என்னெஞ்சே! (தாயவனை) கீழ்ச்சொன்னவோரடி.

---

மாயிருக்கிற ஸர்வேஶ்வரனே உபாயமென்று மனஸ்ஸிலே அத்4யவஸாய புரஸ்ஸரமாக வைத்துக்கொள்ளு. இப்படி அவனே உபாயமென்று அத்4யவஸித்தால், லோகத்தை அளந்துகொண்ட ஒரு திருவடியும், ஶகடம் முறிந்து

---

மாயா ஶப்3த3ம் ஆச்சரியத்தைக் குறிக்கும். மாயவன்-ஆச்சரியமாயிருப்பவன். அப்படியாளுல், நாம் செய்யவேண்டியது ஒன்றுமில்லையோ? எனில், (*மனத்து வை*) அவனை மனத்தில் உபாயமாக இருத்துவதே நாம் செய்யவேண்டியது. உபாயமாக உறுதிகொள்வதாகிற இச்செயலும் உபாயமாகாதோ? எனில்: (*மாயவனையே மனத்துவை*) இதையும் உபாயமாகக் கொள்ளாதே என்று ஏகாரம் காட்டுகிறது. "*த்வமேவ உபாயபூ4தோ ப4வ*" "*மாமேகம் ஶரணம் வ்ரஜ*" "நாராயணனே நமக்கே பறை தருவான்" "சரணே சரண் நமக்கு" முதலான விடங்களிற்போலே. பசித்தவர்க்குச் சோறுபோடுகிறேன் என்று ஒரு தா4ர்மிகன் ஸங்கல்பித்து வைத்தால், பசி சோற்றுக்கு உபாயமாகாமல், அதி4காரிவிஶேஷணமேயாவதுபோலே, 'என்னையே உபாயமாக நினைப்பார்க்கு மோக்ஷமளிப்பேன்' என்று ப4க3வான் ஸங்கல்பித்திருக்குமிடத்தில் உபாயாத்4யவஸாயம் அதி4காரி விஶேஷணமாகுமே யொழிய உபாயமாகாது என்று கருத்து.

இத்தகைய உபாயாத்4யவஸாயத்தை (அவனே உபாயமென்னும் உறுதியை) உடையவனுக்குக் கிடைக்கும் மிகச் சிறந்த ப2லனைச் சொல்லுகின்றன முன்னடிகள்: (*ஓரடியும்*) "ஓரடியில் தாயவனை" என்றவிடத்தில் அனுஸந்தி4க்கப்பட்டதாய், திருவுலகளந்தருளி உலகனைத்தையும் தன்னதாக்கின ஒரு திருவடியையும், (*சாடுதைத்த ஒண் மலர்ச்சேவடியும்*)



(கேசவனை) சாடுதைத்த திருவடிகளை உடையவனை. திருவடிகளைத் தருவானும் விரோதி4யைப் போக்குவானும். (தண்டுழாய்) போ4க்3யதை. (மாயவன்) இவனென்று நினையாதபடி பண்ணவல்லவன். (மனத்துவை) அநுஸந்தி4. 100.

முதல் திருவந்தாதி வ்யாக்2யாநம் முற்றிற்று.
பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

விழும்படி உதைத்துத் தள்ளிப்பொகட்டதாய், அழகிய பூப்போலே அதிஸுகுமாரமான சிவந்த ஒரு திருவடியுமான இரண்டு திருவடிகளையும் ஸாக்ஷாத்கரித்து அனுப4விக்கலாம். 100.

அப்பிள்ளை அருளிச்செய்த முதல்திருவந்தாதியுரை முற்றிற்று.
ஜீயர் திருவடிகளே சரணம்.
அப்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

சாடு-சகடம், ஶகடாஸுரன் முறிந்து விழும்படி உதைத்துத் தள்ளியதாய், அழகிய பூப்போலே மென்மைமிக்க சிவந்த மற்றைத் திருவடியையும், (*ஒண்மலர்ச் சேவடியும்*) 'பூவிலும் மெல்லிய திருவடிகளைக்கொண்டு முரட்டுச் சகடாசுரனை உதைப்பதே!' என்று வயிறு பிடிக்கிருர். "சாடுதைத்த ஓரடியும் ஒண்மலர்ச் சேவடியும்" என்று கூட்டியும் பொருள் கொள்ளலாம். (*ஒண்மலர்ச் சேவடியும்*) மலரிலும் மெல்லிய திருவடிகளைக்கொண்டு காடுமேடெல்லாம் அளப்பதே! என்று வயிறெரிகிருர். (*ஒண்மலர்ச் சேவடியும்*) மென்மை, குளிர்த்தி, நாற்றம், செம்மை, "*விஷ்ணோ: பதே3 பரமே மத்4வ உத்ஸ:*" [ருக்3வேத3ம்] "*தேனேமலரும் திருப்பாதம்*" [திருவாய் 1-5-5] என்கிறபடியே மதுவொழுகும் தன்மை ஆகியவற்றில் ஒளிபொருந்திய (*வாடாத*) தாமரை மலரை ஒத்திருக்கையாலே ஒண்மலர்ச்சேவடி என்கிருர். (*ஈரடியும்*) சேர்த்தியழகிருந்தபடி. (*ஈரடியும் காணலாம்*) மிகவினியவையான இத்திருவடிகளைக் கண்டு அனுப4விக்கலாம். (*காணலாம்*) அநுப4வத்தைச் சொன்னது கைங்கர்யத்துக்கும் உபலக்ஷணம். அவனே உபாயமென்றும், அவனுடைய திருவடிகளில் கைங்கர்யமே உபேயமென்றும் ஸ்ரீவைஷ்ணவ ஸித்3தா4ந்தத்தின் பரமஸாரார்த்த2த்தை அருளிச்செய்து பிரபந்தத்தைத் தலைக்கட்டினுராயிற்று. 100.

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்திராதிபனுன
ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமிதாஸன் இயற்றிய முதல் திருவந்தாதி
வியாக்கியான விவரணம் நிறைவு பெற்றது.

## முதல் திருவந்தாதி வ்யாக்$_2$யாந ப்ரமாண அநுக்ரமணிகை

(எண்கள் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்தில் உள்ள ஶ்லோக எண்களைக் குறிக்கும்)









## முதல் திருவந்தாதி அப்பிள்ளை உரையில் உள்ள ப்ரமாணங்களின் அநுக்ரமணிகை

(பக்க எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன)



